உ
குருபாதம்

63-1

# திருவாமூர்க்
# கும்பாபிஷேக மலர்

14·7·63






★ ★

அப்பர் சுவாமிகள்

---

வெளியிடுவோர் :

திருவாமூர்க் கும்பாபிஷேகக் குழுவினர்.

# வா ழ் த் து ரை

தருமபுர ஆதீனம்,

ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

'ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே'

"சைவநெறி ஏழுலகும் பாலிக்கும் தகைமையினால்
தெய்வநெறிச் சிவம்பெருக்கும் திருவாமூர் திருவாமூர்"

உலகம் எல்லாவற்றையும் ஆக்கிக்காத்து நடாத்தும் ஒரு பெரும் பொருளாய் உள்ள வன் இறைவன். அவன் அகில அண்டங்களையும் தனது திருவருளாகிய வெளிக்குள் அடக்கி நிற்பவன். ஆயினும், அவன் தொண்டர் உள்ளத்திலே ஒடுங்கி நிற்பவன் ஆகின்றான்; என்றால், தொண்டர்களது பெருமை எத்தகையது என்பது விளங்கும். தொண்டர்களது பெருமையை இறைவனே ஆலால சுந்தரர்க்கு உணர்த்தியருளினமையைச் சேக்கிழார் பின்வருமாறு குறிக்கின்றார் :

"பெருமையால் தம்மை.யொப்பார் பேணலால் எம்மைப் பெற்றார்
ஒருமையால் உலகை வெல்வார், ஊனமேல் ஒன்றும் இல்லார்,
அருமையாம் நிலையில் நின்றார், அன்பினால் இன்பம் ஆர்வார்,
இருமையும் கடந்து நின்றார், இவரைநீ அடைவாய்"

தொண்டர்கட்கு இத்துணைப் பெருமை எதனால் அமைகின்றது? அவர்களது தொண்டின் பெருமையினாலேதான் அமைகின்றது. அதனையும் சேக்கிழார், "பாரம் ஈசன் பணியலது ஒன்றிலார்" என்று குறித்தருளினார்.

மனத்தொண்டு, வாய்த்தொண்டு, கைத்தொண்டு எனத் தொண்டு மூன்று வகைப்படும். இறைவனுக்குச் செய்யும் இத்தொண்டுகள், "திருத்தொண்டு" எனச் சிறப்பித்துக் கூறப்படும். முத் திருத் தொண்டுகளில் கைத்திருத்தொண்டு மிக்க சிறப்புடையது. மற்றைய இரு திருத்தொண்டுகளினும் அதுவே செய்தற்கரியது. அதனைச் செய்துகாட்டிய ஆசாரியர் திருநாவுக்கரசரே. அதனால் அவரைச் சேக்கிழார், "திருத்தொண்டின் நெறிவாழ வருஞானத் தவ முனிவர்" என்கின்றார்.

திருநாவுக்கரசர் சமண் சமயத்தாருடன் பாடலிபுத்திரத்திலிருந்தபோது சிவபெருமான் கொடுத்த சூலை நோயால் வருந்தி, அங்குநின்றும்போந்து, திருவதிகையில் சிவபிரானுக்குத் திருத்தொண்டு செய்திருந்த தம் தமக்கையராகிய திலகவதியாரை அடைந்து, அவரது திருவடிமேல் வீழ்ந்து வணங்கி,

"நந்தமது குலம்செய்த நற்றவத்தின் பயனனையீர்
இந்தஉடற் கொடுஞ்சூலைக்கு இடைந்தடைந்தேன் இனிமயங்காது
உய்ந்துகரை ஏறும்நெறி உரைத்தருளும்"

என வேண்டியபோது அவ்வம்மையார்,

"கோளில்பர சமயநெறிக் குழியில்விழுந்து அறியாது
மூளும்அருந் துயர்உழந்தீர் எழுந்திரீர்"

என மொழிந்து,

"கற்றை வேணியர் அருளே காணும்இது கழல்அடைந்தோர்
பற்றறுப்பார் தமைப்பணிந்து பணிசெய்வீர்"

எனப் பணித்தருளினர். அவர் குறித்த பணி, சிறப்பாகக் கைத் திருத்தொண்டேயாகும்.

"பற்றறுப்பார் தமைப்பணிந்து பணிசெய்வீர்" எனப் பணித்த அம்மையார் அப்பொழுதே தம் தம்பியாரை வீரட்டானேசுரர் திருக்கோயிலுக்கு அழைத்துச் சென்றார். செல்லும்பொழுது எவ்வாறு சென்றார்? பொழுது புலர்வதன்முன் திருவலகும், திருமெழுக்கும், தோண்டியும் கொண்டு சென்றார். அதைக்கண்ட தம்பியார், 'இவைகளே உய்ந்து கரையேறும் நெறி' என்று உணர்ந்தார். அத் திருத்தொண்டுகளின் பெருமைகளையே பின்பு நாவுக்கரசர் தமது திருப்பதிகத்தில்,

"நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும்எம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கும் இட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்தும் ஆடிச்
சங்கரா சயபோற்றி போற்றி என்றும்
அலைபுனல்சேர் செஞ்சடைஎம் ஆதி என்றும்
ஆரூரா என்றென்றே அலறு நில்லே"

என்பது முதலாகச் சிறந்தெடுத்து அருளிச்செய்தார்.

அப்பர் பெருமானது அவதாரத்தினைக் கூறும்பொழுது சேக்கிழார்,

"அலகில்கலைத் துறைதழைப்ப அருந்தவத்தோர் நெறிவாழ
உலகில்வரும் இருள்நீக்கி ஒளிவிளங்கு கதிர்போற்பின்
மலரும் மருள் நீக்கியார் வந்து அவதாரஞ் செய்தார்"

என்று கூறுகின்றார். முதலில், 'திருத்தொண்டின் நெறி' என்றதையே, பின்பு அவர் 'அருந்தவத்தோர் நெறி' என்றார்.

அலகில் கலைத்துறை தழைக்கவும், அருந்தவத்தோர் நெறி வாழவும் வந்த அருட்பேராசிரியராகிய ஆண்ட அரசு அவதாரம் செய்தருளுவதற்குரிய தவத்தை உடையதாய் இருந்தது எந்த நாடு? திருமுனைப்பாடி நாடு என்னும் நாடேயாகும். இது வழிவழிவந்த சிவபக்தியில் என்றும் குன்றாச் சைவ மன்னர்களாகிய சோழர்களுக்குரிய சோழ நாட்டிற்கும், தொண்டைநாட்டிற்கும் நடுவே விளங்குதல்பற்றி இப்பெயர் பெற்றது. தேவாரத்திருமுறையை அருளிச்செய்த மூவர் முதலிகளுள் அப்பரும் ஆலாலசுந்தரரும் ஆகிய இருவர், இந் நடு நாட்டிலே தோன்றியருளினர்கள்.

"மறந்தருதீ நெறிமாற மணிகண்டர் வாய்மைநெறி
அறந்தருநா வுக்கரசும் ஆலால சுந்தரரும்
பிறந்தருள உளதானல் நம்மளவோ பேருலகில்
சிறந்ததிரு முனைப்பாடித் திறம்பாடும் சீர்ப்பாடு"

என்கின்றார் சேக்கிழார். இன்னும் சந்தானசாரியர் நால்வருள் மெய்கண்டதேவ நாயனர், அருணந்தி சிவாசாரியார், மறைஞானசம்பந்தர் ஆகிய மூவர் அவதரித்த நாடும் இந் நடு நாடேயாகும். அதனுல், நடு நாட்டினை, 'திருவருள் நாடு' என்றே கூறலாம்.



திருக்கைலாயபரம்பரை, தருமபுர ஆதீனம் 25வது குருமகாசந்நிதானம்
கயிலைக்குருமணி ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்.

இந்த நடு நாட்டிலும் எந்த ஊர் நாவுக்கரசரது திருவவதாரத்திற்கு உரியதாய் இருக்கிறது? திருவாமூர் என்னும் சிறந்த ஊரே அதற்கு உரியதாயிருந்தது. அவ்வூருக்கு, 'திருவாமூர்' என்ற பெயர், பொதுவான ஓர் இடுகுறிப் பெயராய் இருந்துவிடவில்லை. சிறப்பான காரணத்தோடு அமைந்த பெயராகவே உள்ளது. அஃதாவது தெய்வநெறியால் சிவத்தை (மங்கலத்தை)ப் பெருக்குவதாகிய திருமிகுந்த ஊர் என்னும் காரணத்தாலேயே அவ்வூர் அப் பெயர் பெற்றதாம்.

"சைவநெறி ஏழுலகும் பாலிக்கும் தகைமையினல்
தெய்வநெறிச் சிவம்பெருக்கும் திருவாமூர் திருவாமூர்"

என்பது இதுபற்றிக் கூறும் சேக்கிழார் திருவாக்கு.

இத் திருவாமூரில் திருநாவுக்கரசர் திருவவதாரம் செய்த திருமனையின் இடம், அன்று முதல் இன்றளவும் இருந்தும், அவ்விடத்தில் அந் நாயனரது நினைவாக யாதொன்றும் இல்லாமலே இருந்தது. அதனை உள்ளத்தில் உன்னி அறநிலைய நிர்வாகத்துறை முன்னுள் ஆணையாளர் திரு. உத்தண்டராம பிள்ளை, ஐ.ஏ.எஸ்., அவர்கள் தொடங்குவிக்க, இந்நாள் ஆணையாளர் திரு. எம். எஸ். சாரங்கபாணி முதலியார், பி.ஏ.,பி.எல்., அவர்கள் எடுத்துக்கொண்ட பேரூக்கத்தினுல், திருக்கோயில்களும் சைவ ஆதீனங்களும், மெய்யன்பர் பலரும் முன்வந்து உதவிய பொருளுதவியினுல், திருநாவுக்கரசருக்கு அங்கு நூதன ஆலயம் அமையப்பெற்றது, அனைவர் உள்ளத்திற்கும் நிறைவைத் தருவது.

ஆசாரியர் அருட்டிருக் கோயிலாகிய இவ்வாலயத்தின் கும்பாபிடேகம் மிகச் சிறந்த முறையில் நடைபெறவேண்டும் என்றுகருதிய நம் கருத்தின்படி, கருத்தறிந்து முடிப்பவனுகிய இறைவனது திருவருள் கூட்டுவிக்க, மகா கும்பாபிடேகம் மிகச்சிறந்த முறையில் நடைபெற்றது. இச்சிறப்பிற்கெல்லாம் காரணமாக ஆணையாளர் திரு. சாரங்கபாணி முதலியார் அவர்கள் அமைதியாகவும், ஆர்வமுடனும் எடுத்துக்கொண்ட நன்முயற்சி பெரிதும் பாராட்டுதற்குரியது. அவர்களது ஊக்கத்திற்கும், அன்பர் பலரது உழைப்பிற்கும் துணையாக, நம் ஆதீன அடியவர் வித்வான் திரு. சோமசுந்தரத் தம்பிரான் இம் மகாகும்பாபிடேகத் தொண்டில் முன்னின்று உழைத்தமைபற்றி மக்கள் பலரும் பாராட்டுதல் கேட்டு நாம் மகிழ்ச்சியுறுகின்றோம்.

இம் மகாகும்பாபிடேகத்தை ஒட்டி இம்மலர் வெளிவருவது மிகப் பொருத்தமே. இம் மலரில் அப்பர் பெருமானது அருள்நெறியினை விளக்கும் அறிஞர்களது கட்டுரைகள் பல இடம் பெற்றுள்ளன. இம்மலரினைத் தமிழ் உலகமும், சைவ உலகமும் பெற்று, அப்பர் பெருமானது அருள் நெறியில் நின்று பயன் பெறச் செந்தமிழ்ச் சொக்கன் திருவருள் முன்னிற்பதாக.



# இறைவனே நமது நிரந்தர அம்மை அப்பன்

மதுரை ஆதீனம், ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீ ஞானசம்பந்த
தேசிக பரமாசாரிய சுவாமிகள்

உலகத்தில் மக்களாய்ப் பிறந்திருக்கிற நமக்கு, தந்தையும் தாயும் இன்றியமையாத இரு தெய்வங்கள். அதனாலேயே "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்", "தந்தை தாய்ப் பேண்" என்றாள் நமது ஔவைப் பிராட்டியார். 'முன்னறி தெய்வம்' என்றதனாலேயே 'பின்னறிய வேண்டிய தெய்வம்' இரண்டு உண்டு என்பது பெறப்படுகின்றது. அவர்கள்தான் சிவபெருமானும் அவருடைய சக்தியாகிய மகாவிஷ்ணுவும் ஆகும். அதனாலேயே நமது அப்பர் பெருமான் 'அரியல்லால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே' என்று அருளியிருக்கிறார். குழந்தையாகப் பிறந்திருக்கிற எவருக்கும் தந்தையாரும் வேண்டும், தாயாரும் வேண்டும். தந்தையின்றித் தாயும், தாயின்றித் தந்தையும் குழந்தையைப் பெறமுடியாது. குழந்தைக்குத் தந்தையும், தாயும் இரு கண்கள் போன்றவர்கள். தந்தை என்ற பெயரும், தாய் என்ற பெயரும் குழந்தைகளைப் பெற்றவர்களுக்கே உண்டு. குழந்தை பெறாதவர்களைக் கணவன் மனைவி என்று தான் சொல்லுவோம். தந்தை தாய் என்று சொல்லுகின்ற பெயர்களுமே குழந்தைப் பேற்றினாலேயே ஏற்படுகின்றன. குழந்தைகளாலேயே அவ்வாறு அழைக்கப் பெறுகின்றன. நன்றியறிதலுள்ள நல்லறிவுடைய எந்தக் குழந்தையும் தந்தை மட்டுமே வேண்டும், தாய் வேண்டாம் என்றோ அல்லது தாய் மட்டுமே வேண்டும், தந்தை வேண்டாம் என்றோ சொல்லாது. தந்தையும், தாயுமாகிய இருவரும் குழந்தைகளின் இருபெரும் நலன்களில் மிகவும் கருத்துடையவர்களாக இருப்பார்கள். தந்தை குழந்தையின் அறிவின் அபிவிருத்தியிலும், தாய் குழந்தையின் உடலின் அபிவிருத்தியிலும் கண்ணும்கருத்துமாக இருக்கிறார்கள் என்பதை யாவரும் ஒத்துக்கொள்வர். ஆகவே குழந்தைகளாகப் பிறந்த யாவரும் அவரவரது தந்தையிடத்திலும், தாயிடத்திலும் அவர்கள் இருவரும் குழந்தைகளுக்காகச் செய்து வருகின்ற உபகாரங்களைக் கருதி நன்றியுடையவர்களாகவும், அன்பு உடையவர்களாகவும் நடந்துகொள்ள வேண்டியதே நியாயமும் அறிவுடைமையுமாகும்,

குழந்தைகளைப் பெற்ற எந்தத் தந்தையும் தாயும், தங்களது விருப்பம்போல் குழந்தைகளைப் பெறமுடியவில்லை என்பதை ஒத்துக் கொள்ளுவார்கள். அதுபோலவே எந்தக் குழந்தையும் தனது விருப்பம்போல் தனது பெற்றோரைத்தேடிச் சேர்ந்துகொள்ள முடியவில்லை என்பதையும் ஒப்புக்கொண்டு தீரவேண்டும். ஆனதால் அவரவரது கன்மத்திற்கேற்ப ஆணாகவோ, பெண்ணாகவோ, எந்தத் தாய் தந்தையரிடம், எப்பொழுது எங்கு யார் யாரைப் பிறக்க வைக்க வேண்டுமோ, அவரவரை அவ்வாறு பிறக்கும்படி செய்வதும், அவரவருக்குரிய உடலைக் கொடுப்பதும், அப்பனும், அம்மையுமான ஒப்பற்ற ஆண்டவனேயாகும். இவ்வுலகிலுள்ள தந்தையும் தாயும் ஆண்டவன் கொடுத்த பிள்ளைகளை அவரிடமிருந்து பெற்றவர்களாகின்றார்கள். அதனாலேயே பெற்றோர் என்று அழைக்கப்படுகின்றனர். அவர்கள் இந்தப் பிறவிக்கு மட்டும் பாரமுள்ள ஸ்தூல உடலைக் கொடுப்பதற்கான தந்தையும், தாயும் ஆகின்றார்கள்.

நமது பெற்றோர்கள் நமது உடலிலுள்ள எந்த உறுப்பையும் உண்டுபண்ண முடியவில்லை. ஆனால் ஆண்டவனே நமக்கு எல்லாப் பிறவிகளுக்கும் உண்டான நிரந்தரத் தந்தை, தாய் ஆகின்றான். ஏனென்றால் ஆண்டவன் கொடுத்த, சொப்பனத்தில் தொழில்படுகிற சகல அவயவங்களுமுள்ள பாரமில்லாத ஆவியுடலே நமக்கு உண்மையான உடம்பு. அந்த உடல்

63-1

ஆண்டவனுல் கொடுக்கப் பெற்றிருப்பதனுல், இம் மண்ணுலகிலுள்ள ஐம்பூதங்களாலும், எந்த அணுக்குண்டாலும், எந்த ஆயுதத்தாலும் அழிக்கப்பெற முடியாதது, அந்த ஆவி உடலுக்கே நாம் பிறக்கு முன்னரே மேலுலகில், ஆண்டவனுல் பெயரிடப் பெற்றிருக்கிறது. அந்த ஆவி உடலுக்குரிய சட்டை போன்றதே நமது பாரமுள்ள ஸ்தூல சரீரம். நமது ஆவி உடலையே, சூக்ஷும சரீரம், யாதனு சரீரம், பிராணமய கோசம் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. அந்த உடல் மேலுலகில் தொடர்ந்து வாழவேண்டிய காலம் வாழ்ந்து அங்கு அழிக்கப் பெறுகின்றது. அதன்பின் அதனை இயக்கிக் கொண்டிருந்த உயிருக்கு மறுபிறவியோ, மேல்நிலையோ கடவுளால் கொடுக்கப் பெறுகின்றது. பெற்ருேரினது ஸ்தூல உடலிலிருந்து உண்டாகுமாறு ஆண்டவன் செய்திருக்கின்ற நமது பாரமுள்ள ஸ்தூல சரீரமோ இவ்வுலகில் பூமியின் சூட்டினுலோ, நெருப்பினுலோ, பிற விபத்துக்களாலோ அழிந்து விடக்கூடியதாக இருக்கிறது. ஆகவே நமக்குரிய ஸ்தூல சரீரத்தினையும், அதனுள்ளிருக்கும், சூக்கும சரீரத்தையும் கொடுத்தது என்றும் அழியாத தந்தையும், தாயுமான இறைவனேயாகும், அதனுலேயே திருஞான சம்பந்தப் பெருமான் "அம்மே, அப்பா" என்று அழுததோடு, தனக்கு ஞானப்பால் கொடுத்தது

"தோடுடைய செவியன் விடையேறி ஓர் தூவெண்மதி சூடி
காடுடைய சுடலைப் பொடி பூசியென் உள்ளம் கவர்கள்வன்
ஏடுடைய மலரான்முனை நாட்பணிந்தேத்த அருள் செய்த
பீடுடைய பிரமாபுரம் மேவிய பெம்மான் இவன்அன்றே"

என்றும் அருளியுள்ளான். மாணிக்க வாசகர் "எந்தையாய் எம்பிரான் மற்றும் யாவர்க்கும் தந்தை தாய் தம்பிரான் தனக்கு அஃதிலான்" என்றும், "அம்மையே அப்பா ஒப்பிலா மணியே" என்றும், திருநாவுக்கரசு நாயனுர் "அப்பன்நீ, அம்மை நீ" என்றும் அருளியிருக்கிருர்கள்.

ஆகவே எல்லாப் பிறவிகளுக்கும் நமக்கு நிரந்தரமாக அமைந்துள்ள அம்மையும், அப்பனுமாகிய இறைவனின் பெருங்கருணையையும், பேரருளுடைமையையும், உணர்ந்து மேன்மேலும் அவரது திருவருளுக்குப் பாத்திரர்களாகும்படியான நற்செயல்களைச் செய்து நாம் உய்வோமாக. எல்லாம் வல்ல எம்பெருமான் அதற்கு எல்லா வகையாலும் திருவருள் புரியப் பிரார்த்தித்து ஆசீர்வதிக்கின்ருேம்.



# புகழ் விளங்க வேண்டும்

ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாசாரியசுவாமிகள்,
திருவண்ணாமலை ஆதீனம், குன்றக்குடி.

(ஸ்ரீலஸ்ரீ குன்றக்குடி அடிகளார்.)

தமிழகத்தின் நாகரிகம் சமயநெறியின் அடிப்படையில் தோன்றி வளர்ந்து முழுமை நலம் பெற்றது. நம்முடைய சமயநெறி காலத்திற்குக்காலம் சிந்தனையாலும் அனுபவத்தாலும் மாறுதல் பெற்று வளர்ச்சியடைந்து வந்திருக்கிறது. மனித சமுதாயத்தில் பண்டை நாளில் எண்ணத்தொலையாத சிக்கல்கள் இருந்தது உண்டு. அவற்றையெல்லாம் சில இடங்களில் போர்முனையும் புரட்சிகளுமே தீர்த்து வைத்திருக்கின்றன. வேறு சில இடங்களில் சிக்கல்கள் தீராமலேயே சமுதாயம் சீரழிந்து போயிருக்கிறது. நம்முடைய சமுதாயத்திலோ சமயநெறி நின்று நற்றவம் புரிந்த மேலாளர்கள் சிக்கல்களுக்கு இனிய முறையில் தீர்வு கண்டுள்ளனர். சமுதாயத்தில் தோன்றிய எந்தவிதமான புதிய மாறுதல்களும் எப்படித் தோன்றின ? யாரால் தோன்றின? என்று வினா எழுப்பினால், ஏனைய நாடுகளில் போர் அல்லது புரட்சி, அரசியல் தலைவர்களின் பெயர்கள் ஆகியனவே விடையாகக்கிடைக்கும். நம்முடைய நாட்டிலோ சமயச் சான்றோர்களின் பெயரே கிடைக்கும். அண்ணல் காந்தியடிகளின் வரலாறும் இந்த நியதிக்கு விலக்கல்ல.

ஏழாம் நூற்றாண்டில் ஒரு விடிவிளக்குத் தோன்றியது. இருள் கழிந்து எழுந்தது செஞ்ஞாயிறு. அவர்தான் அப்பர் அடிகள். அப்பரடிகள் தமிழ்த் தலைவர், தலையாய மனிதர். தேனூறும் தீந்தமிழ்ப் பாடல்கள் பலவற்றைத்தந்து மகிழ்ந்த தேனீ. முற்றா இளமண மலராகிய சிவபெருமானின் திருக்கழல்களைச் சுற்றிச் சுற்றி ரீங்காரமிட்டுப் பாடிய தேனீ. அவர் பேராண்மையின் சின்னம்; அடக்கத்தின் திருவுரு; மாசில்லாத்துறவின் விளக்கம்; கருணையின் காட்சி; தொண்டின் தூய வடிவம்; சாதிச் சழக்குகளைச் சாடிச் சமரச ஞானம் காட்டியவர்; எல்லாரும் இன்புற்றிருக்க வேண்டும் என்ற இனிய நல் அருள் அன்பை நாட்டுக்கு நல்கியவர்; நன்மை பெருகும் அருள்நெறியில் இந்த நானிலத்தை அழைத்துச் சென்றவர்.

இத்தகு அப்பரடிகள் அவதரித்த திருத்தலமே திருவாமூர். தமிழர்கள் அவர் பிறந்து நடை பயின்ற புனிதமான மண்ணை இதுகாறும் போற்றாது கழித்தனர். ஆதலால் தமிழர்மீது பழி படிந்தது, சில நல் அன்பர்களின் பெரு முயற்சியால் அப்பரடிகள் பிறந்த மண்ணில் அடிகளுக்குத் திருக்கோயில் எழுந்தது. தமிழர்களின் செய்ந்நன்றியறிதற் பண்பு சற்றேறித் தெரிகிறது. அதனால் பழி துடைக்கப்பட்டது. இத்திருப்பணிக்குத் துணைநின்ற தருமையாதீன ஞான முதல்வரின் திருவுள்ளம் வாழ்த்துதற் குரியது. அறநிலையத்தை ஆட்சி நடத்தும் ஆணையர் எம். எஸ். சாரங்கபாணி முதலியாரின் ஆட்சி நலம் போற்றுதற்குரியது. செய்து முடித்த திரு. சோமசுந்தரத் தம்பிரான் செயல் நலம் உவகை தருகின்றது. உளம் மகிழ்ந்து பாராட்டுகின்றோம். பழிதுடைத்தால் போதாது—புகழ்பெற வேண்டும் ! யாருடைய புகழ் ? யாருக்குப் புகழ் ? நம்முடைய புகழ்தல், நமக்கு அல்ல. ஞாலம் விளங்க — சைவ நன்னெறி விளங்க அவதரித்தருளிய — அப்பரடிகளின் ஒப்பற்ற புகழ் விளங்க வேண்டும். அவ்வழி தமிழினத்தின் புகழ் விளங்க வேண்டும். புகழ் விளங்கி நிலைபெறச் செய்ய அப்பரடிகளின் அடிச்சுவட்டைப் பின்பற்றித் திருத்தொண்டை மேற்கொள்ளவேண்டும். அப்பரடிகள் திருத் தொண்டின் நெறிநின்ற சீராளர்; சமய நெறி பரப்பிய தகையாளர்; அவர் வழி நாம் நின்றொழுகினால் அப்பரடிகளின் புகழ் ஓங்கும். மேன்மைகொள் சைவ நீதி இந்த மேதினியில் விளங்கும் !.

---



" நல்லறங் காவலர் "

தமிழக முதலமைச்சர்

திருமிகு. M. பக்தவத்சலம் அவர்கள், B.A.,B.L.,

கனம் திரு. கே. காமராஜ்
சென்னை முதலமைச்சர்.

போர்ட் செண் ஜார்ஜ்
சென்னை, 13—8—1963

தமிழ் நாட்டில் சைவமும், தமிழும் தழைக்கப் பாடுபட்ட அடியார்களில் அப்பர் முக்கியமானவர். அவர் அவதரித்த திருவாமூரில் அவருக்குக் கோயில் கட்டியிருப்பது மிகவும் பெருமைப்படத் தக்கதாகும்.

கோயில் கும்பாபிஷேகத்தை யொட்டி வெளியிட்டுள்ள மலர் அப்பரைப் பற்றிய அரிய செய்திகளைத் தெரிவிக்கிறது. அவருடைய அருள் உள்ளத்தையும் சிவபக்தியையும் விளக்கும் பல கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. இவை பக்தர்களுக்குப் பெரிதும் பயன்படும் என்று நம்புகிறேன்.

(ஒப்பம்) காமராஜ்.

கனம் திரு. எம். பக்தவத்சலம், B.A.B.L.,
நிதி அமைச்சர்.

சென் ஜார்ஜ் கோட்டை
2—9—1963

திருநாவுக்கரசர் தமிழ் நாட்டில் தோன்றியருளிய தலை சிறந்த ''ஞானத் தவ முனிவர்''. 'நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்' என்று வீரமுழக்கம் செய்த வித்தகச் சான்றோர்.

' என் கடன் பணி செய்து கிடப்பதே' என்ற உயரிய கொள்கையைக் கடைப்பிடித்த உத்தமர். ' தயாமூல தன்மம் ' என்னும் தத்துவத்தின் வழிநின்ற தண்ணளியாளர்.

' தேசம் உய்ய வந்தவர் ' என்று சேக்கிழார் சுவாமிகள் அவரைப் புகழ்ந்து சிறப்பிக்கின்றார். ' பதிகம் ஏழெழு நூறு பகரும் மா கவியோகி ' என்று நம்பியாண்டார் நம்பிகள், திருநாவுக்கரசரைப் பெரிதும் பாராட்டிப் போற்றுகின்றார்.

திருநாவுக்கரசரின் அருமை பெருமைகளை யுணர்ந்து வியந்து, 'அப்பர் சுவாமிகள்' எனத் தமிழகம் அவரை வழிபட்டு மகிழ்ந்து வருகின்றது.

' அப்பர் சுவாமிகள் ' எனப் போற்றப்பெறும் திருநாவுக்கரசர் திருவவதாரம் செய்த சிறப்புடையதும்,

'' சைவநெறி ஏழுலகும் பாலிக்கும் தன்மையினால்
தெய்வ நெறிச் சிவம்பெருக்கும் திருஆமூர் திருவாமூர் ''

எனச் சேக்கிழார் சுவாமிகள் வாக்கினாற் புகழ்ந்து கூறப்பெற்றதும் ஆகத்திகழ்வது திருவாமூர்.

திருவதிகை என்னும் புகழ்பெற்ற சிவஸ்தலத்திற்கு அருகில் விளங்கும் இத் திருவாமூரில், ஏறத்தாழ 1300 ஆண்டுகளுக்கு முன்னர்த் திருநாவுக்கரசர் தோன்றியருளினார். ஆயினும், இதுவரையில் அங்கு அவருக்கு ஒரு தனிக்கோயில் இல்லாதிருந்தமை, ஒரு பெருங் குறையாக இருந்து வந்தது.

அன்பர்கள் பலரின் பெரு முயற்சியினால், அப்பர் சுவாமிகளுக்கு ஒரு தனித் திருக் கோயில் அங்கு அமைக்கப் பெற்று, அதற்குக் கும்பாபிஷேகமும் 14—7—63 அன்று சிறப்புற நடைபெற்றமை பெரிதும் மகிழ்ச்சியைத் தருகின்றது.

அக்கும்பாபிஷேக நிகழ்ச்சியின் நினைவாக, அறிஞர்கள் பலரின் அரிய இனிய கட்டுரைகளைக் கொண்ட ஒரு சிறந்த மலர், வெளியிடப் பெற இருப்பதும் மிகவும் மகிழ்ச்சிக் குரிய செய்தியாகும்.

அம்மலரின்கண் அப்பர் சுவாமிகளைப் பற்றிய பல நல்ல கட்டுரைகள் வெளிவரும் எனவும், அவற்றால் அப்பர் சுவாமிகளின் அருமை பெருமைகளை மக்கள் நன்கினிது அறிந்து கொண்டு மகிழ வாய்ப்பு ஏற்படும் எனவும் விரும்பி, என்னுடைய வாழ்த்துக்களை அம்மலர் வெளியீட்டிற்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

(ஒப்பம்) எம். பக்தவத்சலம்.

கனம் திரு. ஆர். வெங்கட்ராமன், M.A.,B.L.,
தொழிற்றுறை அமைச்சர்.

சென் ஜார்ஜ் கோட்டை
3—9—1963

மக்களை ஒற்றுமைப்படுத்தும் சக்திகளுள் தலைசிறந்து விளங்குவது சமயம். மக்கள் நிறை வாழ்வு வாழ வேண்டுமானல் பொருட் செல்வத்தோடு அருட் செல்வமும் பெற்று விளங்குவது அவசியம். எனவே சமயத்தின் உயர்ந்த சீலங்களையும், சமயப் பெரியார்களின் தொண்டுகளையும் விளக்கும் முயற்சிகள் வரவேற்கத் தக்கவை ஆகும்.

சைவம் தழைப்பதற்காக வாழ்ந்த திருநாவுக்கரசு சுவாமிகள் பிறந்த ஊராகிய திருவாமூரில், அவருக்கு மகா கும்பாபிஷேகம் நடத்தப்பட்டதை யொட்டி, சிறப்பு மலர் வெளிவருவது அறிந்தேன். சிறப்பு மலர்ப் பணி இனிது நிறைவேற இறை அருள் முன்னின்று உதவப் பிரார்த்திக்கின்றேன்.

(ஒப்பம்) ஆர். வெங்கட்ராமன்,

கனம் திரு. கோ. பூவராகன், B.Sc.(Hons.,)
செய்தித்துறை அமைச்சர்

செயின்ட் ஜார்ஜ் கோட்டை
சென்னை-9

30—8—1963

# தொண்டின் திருவவதாரம்

"என் கடன் பணிசெய்து கிடப்பதே" என்று வாழ்ந்த திருத்தொண்டர் திருநாவுக்கரசர். இறைவன் திருப்பணியும், மக்கள் தொண்டுமே அவருடைய உயிர் மூச்சாக இருந்தன. ஆகையினால் அவர் ஒரு சமயத்துக்கு, ஒரு நாட்டுக்கு என்று இல்லாமல் உலகம் முழுவதற்குமே உரிய அருள்மொழி அரசராக விளங்குகிறார்.

அப்பரைப் போன்ற மெய்யடியார்கள் எங்கும் பரம்பொருளையே காண்கிறார்கள். எல்லாப் பொருள்களிலும் இறைவனையும், இறைவனிடத்தில் எல்லாப் பொருள்களையும் கண்டு உள்ளம் உருகிப் பாடுகிறார்கள். இப்படிப் பட்டவர்களே இறைவனை அடைகிறார்கள் என்று நமது அற நூல்கள் சொல்லுகின்றன.

மெய்யடியார்கள் பிறர் துன்பத்தைத் தமக்கு வந்த துன்பமாக எண்ணி நைந்துருகுவார்கள். பிறர் மகிழத் தாம் இன்புறுவர். அவர்களுக்குப் பகையென்று ஒருவரும் இல்லை. இத்தகைய அருள் ஞானத் தந்தையாகிய அப்பரடிகள் உழவாரம் ஏந்தி, கோயில்களில் முளைத்திருந்த புல் முதலியவற்றைக் களைந்து, சிவத்தொண்டு புரிந்து மக்களுக்குத் தொண்டின் திறத்தை விளக்கியுள்ளார்.

நாவுக்கரசரின் நற்றொண்டு எந்த அளவுக்கு உயர்ந்தது என்பதற்கு அப்பூதி அடிகளின் வரலாறு சான்றாக விளங்குகிறது. திங்களூரில் வாழ்ந்த அப்பூதி அடிகள் அப்பர் பால் நீங்கா அன்புடையவராய், அவரது திருநாமமே தமக்கு வீடு நல்கும் பெரு மந்திரமாகக் கொண்டு ஒழுகி வந்த சீலர். தம்முடைய பொருள்களுக்கும் புதல்வர்க்கும், தாம் ஏற்படுத்திய அறச்சாலை, குளம், கிணறு, தண்ணீர்ப் பந்தல் முதலியவற்றிற்கும் அவர் நாவுக்கரசரின் நாமத்தையே சூட்டியிருந்தார்.

ஒரு சமயம் அப்பூதி அடிகளின் தண்ணீர்ப் பந்தலைக் காணவந்த அப்பர், "அடியார்களுக்கு என்று நீர் வைத்த தண்ணீர்ப் பந்தலில் உம்முடைய பெயரை எழுதாமல் வேறொரு பெயரை எழுதவேண்டிய காரணம் என்ன?" என்று கேட்டார்.

அப்பூதி அடிகள் அப்பரை இன்னார் என்று அறிந்தார் அல்லர். ஒரு சிவனடியார் நாவுக்கரசர் பெயரை 'வேறொரு பேர்' என்று குறிப்பிட்டது அவரை வெகுவாக வாட்டிற்று. "மன்னவனும் சமணரும் சேர்ந்து செய்த சூழ்ச்சியைத் தம் திருத்தொண்டால் வென்றவருடைய திருப்பெயரா வேறொரு பெயர்?" என வெகுண்டு கேட்டார்:

"திருத்தொண்டின் உறைப்பாலே வென்றவர் தம்
திருப்பேரோ வேறொருபேர் என வெகுள்வார்!"

தமது தொண்டின் மகிமையால் ஆண்டவன் அருள்பெற்று, அப்பர் தமக்கு நேர்ந்த இடுக்கண்களை வென்று மேம்பட்ட நிலையினை இந்த நிகழ்ச்சியில் காண்கிறோம்.

இது மட்டுமல்ல. இறைவனை இடைவிடாது நினைந்துருகிப் பாடி வாழ்ந்த அப்பர் பெருமான், அளவிடற்கரிய அற்புதங்கள் பலவற்றைச் சாதித்துள்ளார். இவை நமக்கெல்லாம் அரிய காரியங்களாகத் தோன்றிய போதிலும், நாவுக்கரசைப் போன்று இறையருள் பெற்ற

அடியார்களுக்கு எளிய செயல்களே யாகும். வாகீசரின் நெஞ்சில் எம்பெருமான் இடைவிடாது குடிகொண்டிருந்த காரணத்தினுல், அவர் இத்தகைய அற்புதங்களை நிகழ்த்தினுர். அத்துடன் யாருக்கும் அஞ்சாத மனவுறுதியையும் அவர் படைத்திருந்தார். தோன்ருத் துணையாக இறைவனின் அருள் இருக்கும்போது எவருக்கும் அஞ்சிப் பணிந்துபோக வேண்டியது இல்லையல்லவா ?

நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலை இல்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோம் அல்லோம்
இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை "

என்று அப்பர் பெருமான் இறும்பூது எய்துகின்ருர்.

நாவுக்கரசர் சைவ சமய உண்மைகளாகிய பதி, பசு, பாசம் என்னும் முப்பொருளையும் சிறந்த முறையில் விளக்கியுள்ளார். உறுதியான அன்பு இருந்தால்தான் நாம் இறைவனை அடைய முடியும். அந்த அன்பும் அளவு கடந்து ததும்ப வேண்டும். நாயக நாயகிபோல் அன்பு வரை கடந்திருக்க வேண்டும் என்பதே வாகீசரின் குறிக்கோள். இறைவன்பால் திடமான அன்பும் தளராத பிடிப்பும் மட்டும் இருந்துவிட்டால் போதும். நாம் யாதொன்றுக்கும் அஞ்சத் தேவையில்லை. தீங்கு நேர்ந்தாலும் கலங்க வேண்டியதில்லை. நம்மைக் காத்து அருள் சுரக்கும் பொறுப்பை ஆண்டவன் ஏற்றுக் கொள்ளுகிருன். "கல்லில் கட்டிக் கடலில் போட்டாலும் இறைவன் துணையாக நிற்கிருன்" என்று பெருமிதத்தோடு பாடுகிருர் அப்பர் பெருமான் :

"கற்றுணைப் பூட்டிஓர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை ஆவது நமச்சி வாயவே."

ஆசையும் ஆணவமுந்தான் மனித இனத்தின் வேர்ப் புழுக்கள். இவை மக்களை அந்தகாரத்தில் அழுத்தி என்றும் ஈடேருதவாறு தடையாக நிற்கின்றன. ஆண்டவனின் அருள்பெற்ற அடியார்கள் இந்த உண்மையைத் தெளிவாகப் புரிந்து கொண்டவர்களாக, அவற்றை அறவே ஒழித்துக் கட்டப் பாடுபட்டு அதில் வெற்றியும் பெறுகிருர்கள். மண்ணுசை, பெண்ணுசை, பொன்னுசை ஆகிய மாயைகள் அவர்கள்பால் வலுவிழந்து போகின்றன, இடையருத பக்தியின் மூலம் அடியார்கள், இவற்ருல் விளையக்கூடிய அழிவிலிருந்து தங்களைக் காத்துக் கொள்ளுகிருர்கள்.

அப்பர் ஒரு சமயம் கோயில் திருமுன்றில் உழவாரப் பணி செய்து கொண்டிருக்கும் பொழுது, உழவாரம் நுழைந்த இடமெல்லாம் பொன்னேடு நவமணிகள் பொலிந்தன. ஆனுல் அடிகள் வேறுபாடு ஒன்றும் காணவில்லை. அவருக்குப் புல்லும் கல்லும், பொன்னும் மணியும் ஒன்றுதான்.

'தன்னிலையில் நிற்போன் (ஜீவன்முக்தன்) ஓட்டையும் கல்லையும் பொன்னையும் நிகராகக் காண்பான்' என்று பகவத் கீதை கூறுகிறது. அப்பர் பெருமான், எம்பெருமான் அடியராக இல்லாதவர்களின் செல்வச் செழிப்பை மதிக்க மாட்டோம் என்றும், தொழுநோய் கொண்ட புலையராக இருந்தாலும் அவர்கள் ஆண்டவன் அடியாராக விளங்கினுல் அவர்தாம் தாம் வணங்கும் கடவுளர் என்றும் முழங்குகின்ருர் :

"சங்கநிதி பதுமநிதி இரண்டும் தந்து
தரணியொடு வான்ஆளத் தருவ ரேனும்
மங்குவார் அவர்செல்வம் மதிப்போம் அல்லோம்
மாதேவர்க்கு ஏகாந்தர் அல்ல ராகில்

அங்கம்எல்லாம் குறைந்துஅழுகு தொழுநோயராய்
ஆவுரித்துத் தின்று உழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க்கு அன்பராகில்
அவர்கண்டீர் யாம்வணங்கும் கடவுளாரே.''

திருநாவுக்கரசர் தலைசிறந்த தொண்டராகத் தூய வாழ்வு வாழ்ந்த காரணத்தினுல், இறைவனின் இணையடிநிழலில் ஒன்றியிருந்து, அந்த அனுபவத்தில் ஆத்ம சுகத்தைக் காணும் பேறு அவருக்கு எளிதில் கிட்டியது. வீணையும் மதியமும் தென்றலும் இளவேனிலும் பொய் கையும் நமக்கு எத்தகைய இன்பத்தைக்கொடுக்குமோ, அத்தகைய இன்பத்தை இறைவனின் இணையடி நிழல் தமக்கு அளிப்பதாகக் கூறுகிருர் அப்பர் பெருமான் :

'' மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்குஇள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே. ''

நாவுக்கரசரும் ஞானசம்பந்தரும் சம காலத்தவர் ; ஏழாம் நூற்ருண்டில் சைவ எழுச்சிக்குக் காரணமாக இருந்த திருத்தொண்டர்கள். சம்பந்தரைக் காட்டிலும் வாகீசர் வயதில் மிகவும் மூத்தவர். சீகாழியில் அவரால் 'அப்பரே' என அழைக்கப்பெற்ற பெருந்தகை. அப்படியிருக்க, திருப்பூந்துருத்தியில் தமது வருகையை அறிவிக்காமல், ஒருவரும் அறியாதபடி சென்று, சம்பந்தரின் சிவிகை சுமப்பாரோடு தாமும் சேர்ந்து கொண்டார் என்ருல், அப்பர் பெருமானின் தொண்டுள்ளத்தையும் ஈசன் பக்தியையும் என்ன சொல்லிப் புகழ முடியும்? ' தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே '.

(ஒப்பம்) கோ. பூவராகன்.





திருமிகு. M. S. சாரங்கபாணி முதலியார் அவர்கள், B.A., B.L.,
அறநிலைய ஆணையர், சென்னை.

உயர் திரு. மா. சே. சாரங்கபாணி முதலியார் B.A., B.L.,
அறநிலைய ஆணையர்.

சென்னை.

14-8-63.

திருவாமூர்த் திருநாவுக்கரசு சுவாமிகள் ஆலயத்திருப்பணி இனிது நிறைவு பெற்றதைக் குறித்துச் சைவ அன்பர்கள் பெரிதும் மகிழ்வார்கள் என்பதில் ஐயமில்லை. இத்திருக்கோயில், நாவுக்கரசு சுவாமிகள் திரு அவதாரம் செய்த புனிதத் தலத்திலேயே அமைக்கப் பட்டிருக்கின்றது. இவ்வாலயத்திருப்பணி சில ஆண்டுகளாகப் பெரியார் பலருடைய பெருமுயற்சியினுல் நிறைவு எய்தியிருக்கின்றது. குறிப்பாக முன்னுள் ஆணையர் திரு அ. உத்தண்டராம பிள்ளை அவர்களுடைய பெருமுயற்சியும், தருமை ஆதீன மகா சன்னிதானம் அவர்களின் பெருமுயற்சியும், அவர்கள் ஆதீனத் தம்பிரான் சுவாமிகள் ஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் அவர்களுடைய பெருமுயற்சியும், அப்பூதி அடிகளைப் போன்று அப்பர் சுவாமிகளிடம் அளவிலாப் பற்றும் பக்தியும் கொண்ட திருநெல்வேலி எஸ். எஸ். அருணுசலம் பிள்ளை அவர்களுடைய பெருமுயற்சியும் பாராட்டுதற்கு உரியன. ஏனைய மடாலயங்களும் தேவாலயங்களும் இப்பணியில் பாராட்டத் தக்க முறையில் பங்கு கொண்டிருக்கின்றன. இவ்வாலயம் உருப் பெற்றதோடு அமையாமல், இவ்வூரிலிருக்கும் சிவாலயமும் நல்ல முறையில் திருப்பணி செய்யப்பட்டதோடு, திருவாமூர்க் கிராமமே பல வளங்களை இத்திருப்பணி மூலமாகப் பெற்றிருக்கின்றது. இவ்வூர் நன்மக்கள் பாராட்டத் தக்க முறையில் பணிபுரிந்தனர். சைவ சமயத்திற்கு அருந்தொண்டு புரிந்த சமய குரவராகிய அப்பர் சுவாமிகளின் திருப்பணி நற்பணியாகத் திகழ்ந்திருக்கிறது. இதனைச் சார்ந்து கும்பாபிஷேக மலர் ஒன்று வெளியிட இருப்பது எல்லோருடைய பாராட்டுதலுக்கும் உரியது. இப்பணியிலும் இடைவிடாது முயற்சி செய்து வரும் ஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமி அவர்களைப் பெரிதும் பாராட்டுகின்றேன். இம்மலரை எல்லோரும் வாங்கிப் படித்து அப்பர் பெருமானுடைய அருளுக்குப் பாத்திரர் ஆகும்படி சைவ மக்களைப் பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன்.

(ஒப்பம்) மா. சே. சாரங்கபாணி.

உயர் திரு. அ. உத்தண்டராமன், B.A.B.L.,I.A.S.,
முன்னாள் அறநிலைய ஆணையர்

சென்னை
30—8—1963

" எண்ணுகேன் என்சொல்லி எண்ணுகேனே எம்பெருமான் திருவடியே எண்ணினல்லால்,
கண்ணிலேன் மற்றோர் களைகணில்லேன் கழலடியே கைதொழுது காணினல்லால்,
ஒண்ணுளே ஒன்பது வாசல்வைத்தாய் ஒக்கஅடைக்கும் போதுணர மாட்டேன்,
புண்ணியா உன்னடிக்கே போது கின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே "

என்று தொடங்கும் பதிகத்தைப் பாடித் திருப்புகலூரில் தாமே வேண்டி, இறைவன் திருவடி நிழலை யடைந்த திருநாவுக்கரசு சுவாமிகள், சமய குரவர் நால்வருள் 'தாசமார்க்கம்' அல்லது ஆண்டான் அடிமை உறவுடன் இறையன்பு செலுத்தி, இறைபணி செய்து மக்களுக்கு வழி காட்டிய பெருந்தகையார். அவர் அவதரித்த தலம் திருவாமூர். தென் ஆற்காடு மாவட்டத் தில் பண்ருட்டிக்கருகே ஆறு மைல் தொலைவில் உள்ளது. 'சைவநெறி ஏழுலகும் பாலிக்கும் தன்மையினால் தெய்வநெறிச் சிவம் பெருக்கும் திருஆமூர்' என்று சேக்கிழார் பெருமானால் புகழப்பெற்ற இத் தலத்தில் அப்பர் சுவாமிகள் அவதரித்த இடத்தில் திருக்கோயில் அமைக்கப் பெற்று 14—7—63ல் குடமுழுக்கு விழாவும் சிறப்பாக நடைபெற்றது. இதற்கு உதவி புரிந்த எல்லா மக்களும் அரசாங்கமும் திருக்கோயில்களும் திருமடங்களும், சைவ மக்களின் நன்றி யறிதலுக்கும் பாராட்டுக்கும் உரியவர்களே.

மேல்நாடுகளில் அந்நாட்டுப் பெருமக்கள் தோன்றி வாழ்ந்த இடங்களையும் அவர்கள் வாழ்க்கை சம்பந்தப்பட்ட இடங்களையும் பொருள்களையும் பாதுகாத்து, நினைவு நிலையங்கள் நிறுவி, அவர்கள் நினைவை வளர்த்துவரும் பண்பாடு சிறந்து விளங்கக் காண்கிறோம். தமிழகத் தில் மாணிக்கவாசகர் அவதரித்த திருவாதவூர்த் தலத்தில் அவருக்குத் தனிக்கோயில் அமைக் கப்பட்டுள்ளது. திருவாதவூரில் உள்ள திருக்கோயில் குடமுழுக்கு விழாவும் மூன்றாண்டு களுக்கு முன் நடைபெற்றது. திருஞான சம்பந்தர் அவதரித்த சீர்காழிப்பதியில் திருக்கோயி லுக்குள்ளேயே தனிக் கோயில் உள்ளது. அவர் அவதரித்த இல்லம் இன்னும் திருமடமாக்கப் படவில்லை. இறைவன் அருளாலும் தருமை ஆதீனம் முயற்சியாலும் விரைவிலேயே அப் புனிதப் பணியும் நிறைவெய்தும் என்று நம்புகிறேன். அப்பர் பெருமான் அவதாரத்தலத்தில் நல்லதோர் திருக்கோயில் தோன்றியுள்ளது. திருவாமூரை யடுத்து ஆறுவது மைலில் உள்ள திருநாவலூரில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவவதாரம் செய்தார். அத் தலத்தில் உள்ள திருக்கோயிலில் சுந்தரர் பரவைநாச்சியார் சங்கிலிநாச்சியாருக்குத் தனிக் கோயில் அமைக் கப்பட்டுள்ளது. அவர் அவதரித்த இடத்தில் இருந்த திருமடம் சிதைவுற்றிருந்தது. இப்போது அத் திருமடம் புதுப்பிக்கப்படவும் திருக்கோயில் திருப்பணி செய்யவும் அரசாங்க உதவி யுடனும் பெருங் கோயில்கள் திருமடங்கள் சைவப் பெருமக்கள் துணைகொண்டும் சிவாச்சாரி யர்களை மிகுதியாகக் கொண்ட திருப்பணிக் குழு அமைக்கப்பட்டுள்ளது. ஆத்திகப் பெரு மக்கள் ஆதரவால் இப்பெரும் சிவ புண்ணியத் திருப்பணியும் நல்லமுறையில் விரைவிலேயே முற்றுப் பெறுமென்று நம்புகிறேன்.

அப்பர் பெருமான் அவதரித்த இடத்தில் திருக்கோயில் எழுப்பியதோடு அமைந்தால் போதாது. திருவாமூரிலுள்ள திரிபுரசுந்தரி சமேத பசுபதீசுரர் திருக்கோயிலுடன் அப்பர் கோயிலும் இணைக்கப் பெற்று நித்திய நைமித்திய பூசைகள் நடைபெற வகை செய்வதுடன் திலகவதியார் நூல் நிலையம், அப்பர் திருமுறைப் பாடசாலை, அப்பர் உயர்நிலைப்பள்ளி, சமயப் பயிற்சி நிலையம் முதலியன அமைக்கப்பட வேணடும். இதற்கான திட்டம் தருமை ஆதீன ஆதரவுடன் வகுக்கப்பட்டுள்ள செய்தி, சைவப் பெருமக்களுக்குப் பெருமளவில் ஊக்கம் தருவ தாகும். சமயப் பற்றுடைய எல்லா அன்பர்களும் இயன்ற அளவு மனமுவந்து உதவுதல் பெருஞ் சிவபுண்ணியச் செயலாகும்.

(ஒப்பம்) அ. உத்தண்டராமன்

உயர் திரு. D. இராமலிங்க ரெட்டியார்,
எம்.ஏ.,பி.எல்.,
அறநிலையத் துணை ஆணையர்.

இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை,
சென்னை-34.

திருநாவுக்கரசர் தமிழ்நாட்டின் தலைசிறந்த ஒரு பெரிய ஞானி. சிறந்த பக்தர். ஒப்புயர்வற்ற சமயப் பெரியார். சைவ சமய ஆசாரியர்கள் நால்வர்களுள் ஒருவர். 'தேவாரம்' என்னும் சிறந்த தெய்வீகப் பாடல்களை அருளிச்செய்த அருட் பெருங்கவிஞர் : தமிழ் நாட்டுச் சமய வளர்ச்சி பற்றிய சரித் திரத்தில், அவர் மிகவும் முக்கியத்துவம் பெற்று விளங்குகிறார்.

அத்தகைய அருட்பெருஞ் சான்றோர் ஆகிய திருநாவுக் கரசர் என்னும் அப்பர் சுவாமிகள், திருவவதாரம் செய்தருளிய தலம் திருவாமூர் என்பது ஆகும்.

இது தென்னார்க்காடு மாவட்டத்தில், கடலூர் வட்டத்தில் திருவதிகை என்னும் புகழ் பெற்ற தலத்திற்கு அருகிலுள்ளது.

இத் திருவாமூரில் புகழனார் என்னும் தந்தைக்கும் மாதினியார் என்னும் தாயாருக்கும் மைந்தராக, திலகவதியார் என்னும் தமக்கையின் பின், அப்பர் சுவாமிகள் சுமார் 1,300 ஆண்டுகளுக்கு முன்பு தோன்றியருளினார்.

அன்பர்கள் பலரின் முயற்சியினாலும், தருமபுர ஆதீனத் தின் சிறந்த ஆதரவினாலும், அப்பர் சுவாமிகள் திருவவதாரம் செய்த அதே இடத்தில் ஒரு தனிக்கோயில் அமைக்கப்பட்டு, மகா கும்பாபிஷேகமும் சமீபத்தில் மிகச் சிறப்புற நடை பெற்றது.

அக் கும்பாபிஷேக விழாவின் நினைவாகப் பல அறிஞர் களைக் கொண்டு அரிய பல ஆராய்ச்சிக் கட்டுரைகள் அடங் கிய ஒரு சிறந்த மலர் வெளிவர இருப்பது அறிந்து மிகவும் மகிழ்ச்சியடைகிறேன்.

மலர் சிறப்புற அமைவதாக.

(ஒப்பம்) D. இராமலிங்க ரெட்டியார்.

# ஞானக்கொழுந்து

இசையரசு, உயர்திரு. எம். எம். தண்டபாணி தேசிகர்,
இசைத் துறைத் தலைவர், அண்ணுமலைப் பல்கலைக் கழகம்.

இராகம்—ஏமவதி ] [ தாளம்—ஆதி

(பல்லவி)

நாவுக்கரசனை ஞானக் கொழுந்தினை
நாவாரவே வாழ்த்தி நலம்பெறுவோம் திரு (நாவுக்கரசனை,

(அநுபல்லவி)

பாவுக்கரசனும் பண்புள்ள தமிழனும்
பாவாணர் போற்றும்திருத் தேவாரந்தனைத் தந்த (நாவுக்கரசனை,

(சரணம்)

தாண்டக வேந்தனும் தண்தமிழ் மீதன்பு
பூண்ட பெருமையைப் புகலவுங் கூடுமோ

வேண்டும் நல்வாழ்வினை விரும்பியன்றே தரும்
ஆண்ட பெருந்தகையான் ஐயனருளடைந்த (நாவுக்கரசனை,

---

நாமார்க்குங் குடியல்லோம் நமனையஞ்சோமென
நவின்ற திருமறையாம் நல்லோர் வணங்குந் தமிழ்ப்
பாமாலையே புனைந்த பாவலனை எந்நாளும்
பரவிப்பணிந்து போற்றிப் பண்புடன் வாழவே, (நாவுக்கரசனை,

---

இந்தவுலகினை இயக்கும் இறைவனை
எந்தஉருவிலும் எங்கணும் கண்டவன்

நந்தமிழ் நாட்டினில் பைந்தமிழிசையுடன்
செந்தமிழ்ப் பாடலைச் செம்மையுடன்தந்த (நாவுக்கரசனை.)

# திருவாமூர் ஸ்ரீ திருநாவுக்கரசு நாயனர்
# மகா கும்பாபிஷேக மலர்.

சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும்நஞ் சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும்—முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே மாமறைநூல் தானெங்கே
எந்தைபிரான் ஐந்தெழுத் தெங்கே.

—சிவானந்தமாலை.

## முகவுரை

வேதநெறியும் சைவ ஒளியும் தமிழ்ப்பண்பும் பொதுவாக இந்தியப் பெரு நாட்டிலும் சிறப்பாகத் தமிழ் நாட்டிலும் சிறந்து விளங்கக் காரணமாய் இருந்தவர்கள் சைவசமய ஆசிரியர் நால்வரும் ஆவர். அவர்களுள் திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும் மிக முக்கிய மானவர்கள். திருஞானசம்பந்தர். கி.பி. ஏழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பாண்டிய நாட்டில் பரவியிருந்த சமண இருளை அகற்றிச் சைவ ஒளியைப் பெருக்கியவர். அதே காலத்தில் திருநாவுக்கரசர் தமிழகத்தின் வட எல்லையில் பரவியிருந்த சமண இருளை அகற்றிச் சைவ ஒளியைப் பெருக்கியவர். இவர்களது திருவருள் முயற்சியால் தான் இன்றுள்ள நிலையிலாவது சைவத்தையும் தமிழ்ப் பண்பையும் நம்மால் காண முடிகிறது. இவர்களது தொண்டின் பெருமையை உணரவும், போற்றிப் பெருமையடையவும், அவர்கள் அவதாரம் செய்த மணியில் நினைவுச் சின்னமாகத் திருக்கோயில் எடுத்துத் திரு உருவம் அமைத்து வழிபடவேண்டியது தமிழர்களின், சைவர்களின் தலையாய கடமையாகும்.

இம் முறையில், திருநாவுக்கரசர் அவதரித்த தலமாகிய தெய்வ நெறிச் சிவம் பெருக்கும் திருவாமூரில், சென்னை மாநில இந்துமத அறநிலைய நிர்வாக இலாகாவின் பேருதவியாலும், தமிழகத் திருக்கோயில்கள்—சைவ ஆதீனங்கள் இவற்றின் அருட்கொடையாலும், சைவப் பெருமக்களின் நன்கொடையாலும், உள்ளூர் வாசிகளின் ஒத்துழைப்பாலும் அப்பர் பெருமானுக்கு (திருநாவுக்கரசருக்கு)த் திருப்பணிக் குழுவின் மூலமாகச் சிறந்த முறையில் திருக்கோயில் எடுக்கப் பெற்றது. மகா கும்பாபிஷேகக் குழுவினரால் திருநாவுக்கரசு நாயனர் கோயில், ஸ்ரீ திரிபுர சுந்தரி அம்பாள் சமேத ஸ்ரீ பசுபதீஸ்வரர் கோயில் முதலிய வற்றின் விமானங்களுக்கு வர்ணம் வைத்தல் முதலிய திருப்பணிகள் செய்விக்கப்பெற்று, 14-7-63 தேதியில் மிகச்சிறந்த முறையில் வேத சிவாகம முறைப்படி (குடமுழுக்கு) மகா கும்பாபிஷேகம் நடத்தப் பெற்றது. திருக்கோயில் திருப்பணிக்கும், கும்பாபிஷேகம், மண்டலாபிஷேகம் முதலிய வற்றிற்கும் அன்பர்கள் வழங்கிய நன்கொடை விபரமும், செலவினங்களின் விபரமும், இம் மலரின் பிற்பகுதியில் சேர்க்கப் பட்டுள்ளன.

மகா கும்பாபிஷேகம் சிறந்த முறையில் நடந்தேறப் பெருமளவில் பொருளுதவி புரிந்தும், ஆதீனக் காரியஸ்தர்களை அனுப்பியும், இன்னும் பல்லாற்றுலும் உதவி புரிந்து கும்பாபிஷேகத்தை முன்னின்று நடத்தி அருளிய தருமை ஆதீனம் 25-வது குருமகா சந்நிதானம் கயிலைக் குருமணி ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞான சம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களுக்கு, நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

திருக்கோயில் திருப்பணியும், குடமுழுக்கு விழாவும் சிறப்பாக நடைபெறுவதற்குப் பலவகையிலும் உதவி புரிந்த தமிழக முன்னுள் முதலமைச்சர் திரு. K. காமராஜ் அவர்களுக்கும், இந்நாள் முதலமைச்சரும், அறநிலைய அமைச்சருமாகிய 'நல்லறங்காவலர்' திரு. M. பக்தவத்சலம், B.A.,B.L., அவர்களுக்கும், நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

இத் திருப்பணி ஆரம்பிப்பதற்குக் காரணமாய் இருந்து, சர்க்கார் மான்யத் தொகை கிடைப்பதற்கும் உதவி புரிந்த, சென்னை மாநில இந்துமத அறநிலைய நிர்வாக இலாகா முன்னாள் ஆணையர் திரு. A. உத்தண்டராமபிள்ளை, I.A.S., அவர்களுக்கும், திருப்பணி செவ்வனே முடிவு பெறவும், குடமுழுக்குவிழா சிறந்த முறையில் நடந்தேறவும், சர்க்கார் மான்யத் தொகையாகவும், பல ஆலயங்களின் நிதிகளில் இருந்து பெருவாரியான தொகைகள் கிடைக்கவும் உதவி புரிந்ததுடன், கும்பாபிஷேகத்தை முன்னின்று வெகு சிறப்பாக நடத்திக் கொடுத்த இந்துமத அறநிலைய நிர்வாக இலாகா இந்நாள் ஆணையர் திரு. M. S. சாரங்கபாணி முதலியார், B.A.,B.L., அவர்களுக்கும், நன்றி கலந்த வணக்கத்தையும் பாராட்டுதலையும் தெரிவித்துக் கொள்கின்றோம்.

கயிலைக் குருமகா சந்நிதானம் அவர்களின் அருளாணையின் வண்ணம் திருக்கோயில்களின் திருப்பணியும் கும்பாபிஷேகமும் நடந்தேறுவதற்குப் பல்லாற்றானும் உதவி புரிந்து முன்னின்று நடத்திக் கொடுத்த தருமை ஆதீனம் ஸ்ரீமத். வித்வான் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்களுக்கும், மனமுவந்த நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

மேலும் கும்பாபிஷேகம் சிறப்புற நடக்க உதவி புரிந்த சென்னை இந்துமத அறநிலைய நிர்வாக இலாகா துணை ஆணையர் திரு. D. இராமலிங்க ரெட்டியார், M.A.,B.L., அவர்களுக்கும், உதவி ஆணையர் திரு. D. மாதவன் பிள்ளை, B.A.,B.L., அவர்களுக்கும், மற்றும் இலாகா அலுவலர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

இப் புனிதப் பணிக்கு நன்கொடை வழங்கிய சைவ ஆதீன மகா சந்நிதானங்கள், ஆலய அறங்காவலர்கள், சைவப் பெருமக்கள், திருநாவுக்கரசு நாயனார் திருக்கோயில் அமைக்கப் பட்டுள்ள அவதார மனையை, நன்கொடையாக வழங்கிய அன்பர்கள் ஆகியவர்களுக்கும், திருப்பணி செவ்வனே முடிவு பெறத் தொண்டாற்றிய திருப்பணிக் குழுவினருக்கும், கும்பாபிஷேகம் சிறப்புற நடக்கத் தொண்டாற்றிய கும்பாபிஷேகக் குழுவினருக்கும், ஏனைய அன்பர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

மேலும், இக் கும்பாபிஷேக விழாவின் அங்கமாக, அப்பர் பெருமானின் அருட் கருத்துக்களைத் தாங்கி வரும் இம் மலருக்குக் கட்டுரைகள் எழுதியுள்ள அறிஞர் கட்கும், ஆசியுரை வாழ்த்துரை வழங்கிய பெரியோர் கட்கும்; கட்டுரைகளை அறிஞர்களிடமிருந்து பெரிதும் முயன்று பெற்றுத் தொகுத்துக் கொடுத்த "திருவதிகை அப்பர் இல்லத் தலைவர்" சைவப் பேரறிஞர் திரு. ரா. ஷண்முக சுந்தரஞ் செட்டியார் அவர்களுக்கும்; ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் விரும்பிப் பணித்தருளியபடி, இக் கட்டுரைகளை ஒப்பு நோக்கியும், செப்பனிட்டும், அச்சுப் பிழைகள் நேராமல் திருத்திக் கொடுத்தும் உதவிகள் புரிந்த "திருக்கோயில்" ஆசிரியர் திரு. N. R. முருகவேள், M.A.,M.O.L., அவர்களுக்கும்; மலரைச் சிறந்த முறையில் அச்சிட்டுக் கொடுத்த சென்னை, தி யுனைடெட் பிரிண்டர்ஸ், அவர்களுக்கும்எங்கள் நன்றி பெரிதும் உரியது ஆகும்.

இம்மலர் அப்பர் பெருமான் குரு பூஜை விழா வாகிய இப்புனித நன்னாளில், அப் பெருமானின் திருவடிகளில் சமர்ப்பிக்கப் படுகின்றது. அன்பர்கள் பெற்றுப் பயன் அடைவார்களாக.

*திருவாரூர்,*
*6-5-1964.*

இங்ஙனம் :
**கும்பாபிஷேகக் குழுவினர்.**

# திருவாமூர் திருநாவுக்கரசு நாயனூர் திருப்பணிக் கமிட்டி அங்கத்தினர்கள்



முதல் வரிசை இடமிருந்து வலம் :

(1) திரு. C. பட்டாபிராம ரெட்டியார் (2 திரு. V. வெங்கிடுகிருஷ்ண ரெட்டியார், செயலாளர் (3) திரு. C. வெங்கிடுசாமி ரெட்டியார் (4) திரு. K. ராஜாராம் ரெட்டியார், துணைத்தலைவர் (5) திரு. R. நாராயண ரெட்டியார் (6) திரு. N. வீரப்ப பிள்ளை (தலைவர்) (7) திரு. S. திருநாவுக்கரசு பிள்ளை (8) திரு. R. தெய்வநாயக ரெட்டியார்.

இரண்டாவது வரிசை இடமிருந்துவலம் :

(1) திரு. A. K. இராமசாமி ரெட்டியார் (2) திரு. N. சுப்பிரமணிய பிள்ளை (3) திரு. N. நாராயண பிள்ளை, பொக்கிஷதார் (4) திரு. T. V. வெங்கிடுசாமி ரெட்டியார் (5) திரு. A. அரிகிருஷ்ணபடையாச்சி (6) திரு. A. இராமமூர்த்தி ரெட்டியார் (7) திரு. K. M. பெரிய தம்பி பிள்ளை, செயலாளர்

## திருவாமூர், ஸ்ரீ திருநாவுக்கரசு நாயனுர் திருக்கோயில் திருப்பணிக் குழுவினர்கள்.

——:x:——

1. தலைவர் :—

திரு. A. N. வீரப்பிள்ளை, இலந்தம்பட்டு.

2. உபதலைவர் :—

திரு. K. இராஜாராம் ரெட்டியார், திருவாமூர்.

3. செயலாளர்கள் :—

திரு. K. M. பெரிய தம்பி பிள்ளை, கள்ளக்குரிச்சி.

,, V. வெங்கிடு கிருஷ்ணு ரெட்டியார், திருவாமூர்.

4. பொக்கிஷதார் :—

திரு. N. நாராயணபிள்ளை, ஏரிப்பாளையம்.

5. அங்கத்தினர்கள் :—

திரு. A. அரிகிருஷ்ணபடையாச்சி, திருவாமூர்.

,, C. வெங்கிடுசாமி ரெட்டியார், ,,

,, C. பட்டாபி ரெட்டியார், ,,

,, R. நாராயண ரெட்டியார், ,,

,, A. இராமமூர்த்தி ரெட்டியார், ,,

,, T. P. வெங்கிடுசாமி ரெட்டியார் ,,

,, S. திருநாவுக்கரசு பிள்ளை, ஏரிப்பாளையம்.

,, N. சுப்பிரமணியம் பிள்ளை, ,,

,, R. கோவிந்தசாமி பிள்ளை, கள்ளக்குரிச்சி

## திருவாமூர் திருநாவுக்கரசு நாயனர் திருக்கோயில் மகாகும்பாபிஷேகக் குழுவினர்.

——:x:——

1. தலைவர் :—

திரு. S. S. அருணசலம் பிள்ளை, திருநெல்வேலி.

2. உபதலைவர்கள் :—

திரு. R. நாராயண ரெட்டியார், திருவாமூர்.
,, A. அரிகிருஷ்ண ரெட்டியார், ,,
,, A. N. வீரப்பிள்ளை, இலந்தப்பட்டு.
,, N. நாராயண பிள்ளை, ஏரிப்பாளையம்.

3. செயலாளர் & பொக்கிஷதார் :—

திரு. K. நடராஜன், நிர்வாக அதிகாரி, ஸ்ரீ திருமாகறலீஸ்வரர் தேவஸ்தானம், மாகறல்.

4. அங்கத்தினர்கள் :—

திரு. I. A. சிதம்பரம்பிள்ளை, M.L.C. இலஞ்சி.
திரு. V. V. C. R. முருகேச முதலியார், (Managing Trustee, ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமி தேவஸ்தானம், பழனி.)
,, O. R. M. மெய்யப்பச் செட்டியார், தமிழ் வள்ளல், தேவகோட்டை.
,, G. வரதராஜப் பிள்ளை, திருச்சி.
,, H. தாண்டவராய பிள்ளை, கோவத்தகுடி.
,, P. T. சிங்காரஞ் செட்டியார், கும்பகோணம்.
,, M. D. தியாகராஜபிள்ளை, M.L A. கொறடாச்சேரி.
,, M. இராமலிங்கம் பிள்ளை, சின்னப்பண்ணை மன்னர்குடி.
,, A. N. இராமலிங்கம் செட்டியார், பண்ருட்டி,
,, V. T. இளையாப்பிள்ளை நாட்டார், வடக்கனந்தல்.
,, C. R. சதாசிவ முதலியார், கோவை.
,, R. கோவிந்தசாமி பிள்ளை, கள்ளக்குரிச்சி.
,, S. சேனபதி முதலியார், பாண்டி.
,, சென்னியப்ப முதலீயார், பாரதிமில்ஸ் உரிமையாளர், பாண்டி.
,, N. நாராயண பிள்ளை, ஏரிப்பாளையம்.
,, R. தெய்வநாயக ரெட்டியார் டிரஸ்டி, திருவாமூர்.
,, A. அரிகிருஷ்ண படையாச்சி ,,
,, V. வெங்கிடு கிருஷ்ண ரெட்டியார், ,,
,, A. இராமமூர்த்தி ரெட்டியார், ,,
,, C. வெங்கிடுசாமி ரெட்டியார், ,,
,, M. அச்வத்தராம ரெட்டியார், மணந்தவிழ்ந்த புத்தூர்.
,, மாசிலாமணி முதலியார், மைலாப்பூர், சென்னை.
,, மணலி. இராமகிருஷ்ண முதலியார், சென்னை.
,, K. M. பெரிய தம்பி பிள்ளை, கள்ளக்குரிச்சி.
திருமதி V. ஜெயலக்ஷிமி அம்மாள், காட்டரண்பாக்கம்.
திரு. பொன் கோவிந்தசாமி பிள்ளை, திருப்பாதிரிப் புலியூர்.
,, சக்கரபாணி நாயுடு, சோமாசிப்பாளையம்.

## திருவாமூர் திருநாவுக்கரசு நாயனார் கும்பாபிஷேகக் கமிட்டி அங்கத்தினர்கள்.



முதல்வரிசை இடமிருந்துவலம் :

(1) திரு. V. வெங்கட கிருஷ்ண ரெட்டியார் (2) திரு. C. வெங்கிடுசாமி ரெட்டியார் (3) திரு. K. இராஜாராம் ரெட்டியார்
(4) திரு. K. நடராஜன் (நிர்வாக அதிகாரி) செயலாளர் & பொருளாளர் (5) திரு. I. A. சிதம்பரம்பிள்ளை, M.L.C. இலஞ்சி
(6) திரு. R. நாராயண ரெட்டியார் (7) திரு. C. பட்டாபிராம ரெட்டியார் (8) திரு. சென்னியப்ப முதலியார் புதுவை.

இரண்டாவது வரிசை இடமிருந்து வலம் :

(1) திரு. R. தெய்வநாயக ரெட்டியார் (2) திரு. M. நாராயணபிள்ளை (3) திரு. A. அரிகிருஷ்ண படையாச்சி
(4) திரு. A. இராமமூர்த்தி ரெட்டியார் (5) திரு. N. வீரப்பபிள்ளை (6) திரு. K. M. பெரியதம்பி பிள்ளை.








# அப்பர் சுவாமிகளது சரித்திர ஆராய்ச்சிக் கல்வெட்டுக் குறிப்புகள்

கோவைக்கிழார் சைவத் திருவாளர் இராவ்பகதூர் :
திரு. C. M. இராமச்சந்திரஞ் செட்டியார், B.A., B.L., F.R.G.S., அவர்கள்

திருத்தொண்டர் புராணத்தில் அப்பர் சுவாமிகளுடைய வயது குறிக்கப்படாமலிருந்த போதிலும் அவர் முதிர்ந்த வயதினரென அறிகிறோம். சமயாச்சாரியர்களின் வயதை அறிவிக்கும் ஒரு (காலக்குறிப்பு) வெண்பாவின் படி அவருக்கு எண்பத்தொரு ஆண்டுகள் உலக வாழ்வாகும். திருஞானசம்பந்தருக்கோ பதினாறு வயது எனக் குறிக்கப்பட்டிருக்கின்றது. இருவரும் ஒரு காலத்தவர்கள் என்பது உறுதியாகின்றபடியால் அப்பர் சுவாமிகளின் இறுதிக்காலத்தில் சம்பந்தர் இருந்திருக்கவேண்டும். இவ்விரு பெருமக்களுடைய வாக்குகளில் இருந்தாவது, இவர்களுடைய சரித்திரங்களைக் கூறும் சேக்கிழார் பெருமான் வாக்கிலிருந்தாவது, இவர்கள் காலத்திலிருந்த அரசர்களது வழங்கிய பேர்களோ, அவர்களது காலவரையறையோ கண்டுபிடிக்க இயலாது. திருஞானசம்பந்தர் காலத்துப் பாண்டியன் கூன்பாண்டியனெனவும், பின்னர் அவரே, நின்ற சீர் நெடுமாறர் என்ற பெயரைக் கொண்டவர் எனவும் அறிகின்றோம். இதைத்தவிர வேறு அரசர்களுடைய பெயர்கள் ஒன்றும் கிடைக்கவில்லை. ஆகவே கல்வெட்டுக் காலத்தையறிய வேண்டியிருக்கிறது.

கால ஆராய்ச்சியில் முதன் முதலில் ஈடுபட்ட ஆசிரியர் P. சுந்தரம் பிள்ளையவர்கள் திருஞானசம்பந்தரைத் 'திராவிடசிசு' என்று சங்கரர் தமது சௌந்தர்ய லகரியில் குறிப்பிட்டதாலும், காஞ்சியில் கி.பி. 550-இல் இராஜசிம்மப் பல்லவன் கட்டிய கைலாசநாதர் ஆலயத்தைப்பற்றி அப்பர் பாடியிருத்தலாலும், சாளுக்கிய அரசன் புலிகேசியினுடைய தலைநகராகிய வாதாபி நகரத்தைப் பல்லவ அரசனது படைத்தலைவரான பரஞ்சோதியார் என்ற சிறுத்தொண்டர் துகளாக்கியதைச் சேக்கிழார் எடுத்துக் கூறியதாலும் இவ்விரு பெருமக்களுடைய காலம் ஆறும் நூற்றுண்டின் பிற்பகுதியும் ஏழாம் நூற்றுண்டின் முற்பகுதியுமென, ஆராய்ந்திருக்கிறார்கள். இவ்வாராய்ச்சியையும், பின்னர்ப் பல புலவர்கள் செய்த ஆராய்ச்சியினையும் துணைகொண்டு அப்பர் சுவாமிகள் கி.பி. 574க்கும் 655க்குமிடையில் வாழ்ந்திருக்க வேண்டுமென்று கருதப்படுகிறது.

பல்லவர்களுடைய வம்சாவளியிலிருந்து மகேந்திரவர்ம அரசன் 600 முதல் கி.பி. 625 வரை அரசாண்டான் என்பதும், அவன் மகன் நரசிம்மவர்வன் 625 முதல் 660க்குப் பிந்தியும் ஆண்டான், என்பதும் (சமண ஆதிக்கம்) அறியப்படுகின்றன. 640-இல் இந்தியாவிற்கு வந்த யுவான்சுவாங் என்ற சீனயாத்ரிகன், தான் பல்லவர்களது தலை நகரான காஞ்சியில் சில நாள் தங்கியிருந்தான் என்றும், அங்கே புத்தர்களுடைய பள்ளிகள் நூற்றுக்கு மேல் இருந்தன வென்றும், பௌத்த, சமண சந்நியாசிகள் ஆயிரக்கணக்கில் இருந்தார்களென்றும் எழுதியிருக்கிறான். அவன் காஞ்சிக்கு வருவதற்கு முன் கானேச் நகரத்தில் அரசாண்ட ஸ்ரீ ஹர்ஷனிடமிருந்து வந்தான். அதற்கு இருநூறு ஆண்டுகளுக்கு முன்னர் வந்த பாஹியான் என்ற சீனயாத்ரிகன் காலத்தில் பௌத்த சமணமதங்கள் மேலும் சிறந்திருந்தன. அப்பர் திருஞான சம்பந்தர் இவர்களது பிரசாரத்தினால் அம்மதங்களின் செல்வாக்குக் குறைந்து விட்டது என்பது சரித்திரங்களால் அறியப்படும் உண்மை.

அப்பரால் சைவ சமயத்திற்குத் திருப்பிக் கொண்டு வரப்பட்ட அரசன் திருவதிகையில் குணபர வீச்சரம் என்னும் சிவாலயத்தைக் கட்டினதாகப் பெரியபுராணம் கூறுகிறது.

பல்லவர் : குணபர வீச்சரம்

அவ்வாலயத்தின் பெயர் குணபரேசுரம். குணபரேச்சரம் என்பதுமாம். குணபரன் என்ற பெயர் மகேந்திரவர்மப் பல்லவனுடைய ஒரு சிறப்புப்பெயர். இவ்வரசனே திருச்சிராப் பள்ளி மலைக்குகை மண்டபத்தைக் குடைந்தெடுப்பித்தவன். இவன் காலத்துக் கல்வெட்டு ஒன்று அந்தக்குகை மண்டபத்தில் ஒருதூணில் அடியிற் கண்டபடி (திருச்சிராப்பள்ளி கோயிலில்) காணப்படுகிறது.

"குணபர நாமாணிராஜன்யனேன
லிங்கேன லிங்கினிக் ஞானம்
ப்ரததாஞ் சிராய லோகே
விபக்ஷங்ருத்தே பரர் வருத்தம்"

இவ்வடமொழி சுலோகத்தின் பொருளாவது "இலிங்கத்தை வழிபடும் குணபரன் என்னும் பெயரோடுகூடிய அரசன் இந்த இலிங்கத்தினால் (பெற்ற) விபக்ஷவிருத்தியிலிருந்து திரும்பிய ஞானம் உலகத்தில் நீண்டகாலம் நிலைநிற்பதாக" என்பதாம். இதில்கண்ட விபக்ஷவிருத்தி என்பது சமண மதமாகும். ஆகவே குணபரன் என்ற அரசன் சமணனாயிருந்து அதை விட்டுச் சைவனானதை இது குறிக்கிறது. இந்த, மதமாற்றமானது அப்பர் சுவாமிகள் காரணமாக அவ்வரசனுக்குக் கிடைத்தது. இந்தக் கல்வெட்டு அப்பரது ஜீவ காலத்திலேயே ஏற்பட்டதென்பதைக் கவனிக்கவேண்டும். மற்றொரு தூணிலும் ஒரு கல்வெட்டு அதே குணபரனைக் குறிக்கிறது. இவை இரண்டும் தென்னிந்திய சாசனங்கள் என்ற அரசாங்க வெளியீடு புஸ்தகம் பக்கம்—29, 30-ல் பதிப்பிக்கப் பட்டிருக்கின்றன. இந்த சுலோகங்களினால் இவ்வரசன் திருச்சிக் கோட்டையில் ஒரு சிவாலயம் கட்டி அதில் ஒரு இலிங்கமும் தன் உருவச் சிலையும் வைத்திருந்ததாகக் கண்டிருக்கிறது. மேலும், இந்தக் குணபரன்தான் மகேந்திரவர்மன் என்னும் பல்லவ அரசன் என்ற செங்கற்பட்டு சில்லா வல்லத்தில் உள்ள ஒரு குகைக் கோயில் சாசனத்தினால் தெரிகிறது. அக் கல்வெட்டு இது:—

"பகாப்பிடுகு லலிதாங்குரன் சத்துரு
மல்லன் குணபரன்
மயேந்திரப் போத்தரசரு அடியான்
வயந்தப்பிரி அரசரு மகன் கந்தசேனன்
செய்வித்த தேவ குலம்."

இதனால் மகேந்திரப் போத்தரசனுடைய பட்டப்பிருதுகள்:—பகாப்பிடுகு, லலிதாங்குரன், சத்துருமல்லன், குணபரன் என்பவை என்று தெரிகின்றது. இக் காரணங்களைக் கொண்டுதான் அப்பரது பெருமை கண்டு மகேந்திரவர்மன் சைவனாகிக் குணபரேச்சரம் என்ற ஆலயத்தைத் திருவதிகையில் கட்டியிருக்கலாமென்று ஊகிக்கிறார்கள்.

சோழர்கள்

மகேந்திரவர்மப் பல்லவனுக்குப் பின் இரண்டு மூன்று நூற்றாண்டுகளில் பல்லவருடைய ஆட்சியின் செல்வாக்குக் குறையச் சோழர்கள் தலை நிமிர ஆரம்பித்தனர். அவர்களால் தமிழரது நாகரீகமும், சைவ சமயமும்

முன்னேற்றம் அடைந்தன. பிற நாட்டார் வியக்கும்படியான பெரிய ஆலயங்களை எடுப்பித்தார்கள்; சிற்பவேலை முதிர்ச்சியடைந்தது. தமிழர் செல்வாக்கு கடல் கடந்தும் சென்றது. பல்லவர்காலத்தில் குகைக் கோயில்களும் அவைகளின் ஓவியங்களுமே சிறந்திருந்தன. அதற்குக் காரணம் சமணர் ஆதிக்கமாகும். சோழர்களது காலத்தில் செதுக்கின கல்லால் எடுப்பித்த கோயில்களும் கற்சிற்பங்களும் மேம்பாடடைந்தன. இவை சைவக்கலையின் முதிர்ச்சியாகும். சோழர்கள் சைவசமயாசாரியர்களுடைய பதிகங்களைச் சேகரித்து ஆலயங்களில் ஓதும்படி செய்தார்கள். நாயன்மார்களின் திருவுருவங்களை ஆலயங்களில் தாபித்தார்கள். அவற்றின் வழிபாட்டிற்கு வேண்டிய தான தருமங்களையும் செய்தார்கள். இவ்வித திருப்பணிகளில் சிறப்பு வாய்ந்தது தஞ்சை இராசராசேச்சுவரத்தில் காண்பதேயாகும். இவ்வற்புதமான ஆலயத்தை எடுப்பித்தவர் முதல் இராசராச சோழ அரசர் (கி. பி. 985—1013) என்ற மன்னர் பெருமான். இப் பெரும் மன்னருக்குச் சிவபாத சேகரர் என்ற பெயரும் உண்டு. அப்பெரிய ஆலயத்தில் இவர் ஆடவல்லான் மூர்த்தியைத் தாபித்து, நாயன்மார்களின் உருவங்களையும் நிலை நிறுத்தினர். இவ்வரசரது ஆணைப்படி இவ்வரிய திருப்பணிகளைச் செய்தவர் இவ்வாலயத்து மேற்பார்வை பார்த்துவந்த பொய்கை நாட்டுத் தலைவரான ஆதித்த சூரியன் என்ற தென்னவன் மூவேந்தவேளான் என்ற பிரபு. இவர் கி. பி. 1013—14-இல் திருஞானசம்பந்தஅடிகள், திருநாவுக்கரையர், நம்பி ஆரூரனர், நங்கை பரவையார் முதலான அடியார்களின் திருவுருவங்களை இக்கோயிலில் பிரதிட்டை செய்தார். அக்கல் வெட்டானது (S. I. I. vol. II No. 38) "ஸ்வஸ்தி ஸ்ரீ உடையார், ஸ்ரீ ராஜராஜீசுரம், உடையார்க்கு ஸ்ரீ காரியம் செய்கின்ற பொய்கை நாடு, கிழவன் ஆதித்தன் சூரியனை, தென்னவன் மூவேந்த வேளான் ஸ்ரீ ராஜராஜீசுரம் உடையார் கோவிலில் யாண்டு இருபத்தொன்பதாவதுவரை எழுந்தருளுவித்த செப்புப் பிரதிமங்கள்.

உடையார் கோயிலில் முழத்தால் அளந்தும் ரத்னங்கள் சரடு நீக்கித் தக்ஷிண மேரு விடங்கன் என்னும் கல்லால் நிறை எடுத்தும் பொன் ஆடவல்லான் என்னும் கல்லால் நிறை எடுத்தும் கல்லால் வெட்டினபடி:

பாதாதிகேசம் இருபத்து இருவிரலே இரண்டு தொரை உசரத்து இரண்டு திருக்கை உடையவராகக் கனமாக எழுந்தருளுவித்த திருநாவுக்கரையர் ப்ரதிமம் ஒன்று. இவர் எழுந்தருளி நின்ற விரவிரலே ஆறுதொரை உசரத்து பத்மம் ஒன்று, இதனோடுங் கூடச் செய்த எண்விரலே, ஆறுதொரைச் சமசதுரத்து நால்விரல் உசரத்து ஒன்று.

1014-ம் ஆண்டில் சமயாசாரியார் மூவர்க்கும் பெரிய பெருமாளுக்கும் பலதானங்களைச் செய்தது (Vol. II No. 41 இல்) அடியிற்கண்ட கல்வெட்டில் கண்டிருக்கிறது.

"ஸ்வஸ்தி ஸ்ரீ உடையார் ஸ்ரீ ராஜ ராஜீஸ்வர முடையார்க்கு ஸ்ரீ கார்யம் செய்கின்ற பொய்கை நாடு கிழவன் ஆதித்தன் சூர்யனை தென்னவன் மூவேந்த வேளான் தான் எழுந்தளுவித்த நம்பி யாரூரனர்க்கும், திருஞான சம்பந்தடிகளுக்கும், திருநாவுக்கரையதேவர்க்கும் உடையார் ஸ்ரீ ராஜேந்திர சோழதேவர்க்கு யாண்டு மூன்ருவதுவரை குடுத்த தாரநிலை விளக்கு ஒன்று இருப்பு நாராசம் உட்பட நிரை நாற்பத்தெட்டுவரை இவனே தான் எழுந்தருளுவித்த பெரிய பெருமாளுக்குக் குடுத்த தாரநிலை விளக்கு ஒன்று இருப்பு நாராசம் உட்படநிறை நூற்றிருபதின் பலம் வெண்கல மடல் ஒன்று நிறை நாற்பலம்."*

மேலும் இராஜராசேச்சுரர் ஆலயத்தில் திருப்பதிகம் (திருப்பதியம்) பாடுவதற்கு 48 பேருக்கு ஏற்பாடுகள் செய்த ஒரு திருப்பணியைக் (Vol. II N 65) கல்வெட்டில் காண்கிறேம். ஆகவே இராசராசர் காலத்தில் திருமுறைகள் சேகரிக்கப்பட்டு (நம்பியாண்டார் நம்பிகளால்) கோயில்களில் அவை வழங்கப் பெற்று வந்தன என அறிகிறேம். அப்பதிகங்களில் அப்பர் பதிகங்களும் உண்டு என அறிய வேண்டும். அது "இராசகேசரி வர்மரான இராசராச தேவர்க்கு யாண்டு இருபத்தொன்பதாவதுவரை உடையார் ஸ்ரீ ராஜராஜேசுவரர்

* இக்கல்வெட்டில் பெரிய பெருமாள் என்றது இராசராசனையே குறிக்கின்றது. உரோமானிய சக்கரவர்த்திகளைப் போலவே சோழ மன்னர்களும் தங்கள் பிரதிபிம்பங்களை ஆலயங்களில் வைத்துப் பூசை செய்ய ஏற்பாடு செய்தனராம்.

உடையார்க்குத் திருப்பதியம் விண்ணப்பம் செய்ய உடையார் ஸ்ரீ ராஜராஜதேவர் குடுத்த பிடாரர்கள் நாற்பத்தெண்மரும் 'இவர்களிலே நிலையாக உடுக்கை வாசிப்பான் ஒருவனும்...'' என அக்கல்வெட்டுக் கூறுகிறது. இக்கல் வெட்டுகள் இராஜராஜன் I, இராஜேந்திரன் காலத்தன. இவை இவர்கள் காலத்தில் அப்ப ருடைய பெருமை எது காறும் விளங்கியிருந் தது என்பதைக் காட்டும்.

## தலங்களிற் கண்டவை

இனி, அப்பர் சுவாமிகளுடைய வாழ் நாளிலே அவருடைய திருவடிபட்டுச் சிறந்து விளங்குகின்ற புனிதத் தலங்களில் எத்தலங் களில் அவரைப் பற்றிய கல்வெட்டுச் சான்றுகள் கிடைத் திருக்கின்றன என எடுத்துக் கூறு வோம்.

அவர் திருவவதாரம் செய்த தலமாகிய திருமுனைப்பாடி நாட்டுத் திருவாமூரில் பசுபதீ சுவரர் கோயிலில் மேற்குச் சுவரிலும் தெற்குச் சுவரிலுமுள்ள இராசகேசரிவர்மன் குலோத் துங்க சோழன் 31-வது ஆண்டு கல்வெட்டு (137—1933-34) ஒன்றில் இரவீசுர முடையார் கோயிலில் தாபித்திருக்கும் திருநாவுக்கரைய தேவர்க்குப் படித்தரத்திற்கும் நுந்தா விளக்குக் குமாக ஒரு வேலி நிலத்தைக் கங்கை கொண்ட சோழ வளநாட்டுத் திருமுனைப்பாடி நாட்டுக் கீழாமூர், நாட்டுத் திருவாமூர் ஊரார் விற்று, அத்திருப்பணிகளுக்கு வேண்டிய நெல் முதலிய வைகளைத்தருவதாக ஒப்புக்கொண்ட அவ்வால யத்து இரு சிவப்பிராமணர்கள் வசம் அந் நிலத்தை விட்டதாகக் கண்டிருக்கிறது. இக்கல் வெட்டு, ''புகழ்மாது'' என்ற தொடக்கத்து மெய்க்கீர்த்தி உடையதாகையால் இது குலோத் துங்கன் I காலத்தது என்றும், தானம் விட்ட ஆண்டு கி. பி. 1101 எனவும் அறியலாம்.

மேலும் திருவாமூருக்கு அருகில் இரண்டு பர்லாங்கு தூரத்திலுள்ள ஓர் இலுப்பைத் தோப் பில் உள்ள ஒரு பலகைக் கல்வெட்டில் (139/ 1933-34) முத்து ரெட்டியார் என்பவர் சிறு மாமரங்கள் கொண்ட 3 காணித் தோப்பு ஒன்றை அவ்வாலயத்துச் சுவாமிக்கும், அப்பர் சுவாமிகளுக்குமாக விளக்குகள் வைப்பதற் காக விட்ட செய்தி கூறப்பட்டுள்ளது. அதன் எழுத்து தற்கால எழுத்து.

தமது தமக்கையரால் சைவ சமயத்திற்கு மீட்கப் பெற்றுச் சூலை நோய் நீங்கித் திரு வருள் பெற்ற புனிதத் தலமாகிய திருவதிகை வீரட்டானத்தில் அப்பருக்குத் தனி ஆலயம் இருக்கின்றது. அதில் கல்வெட்டுக்கள் இருக் கின்றன. அவற்றுள் ''புகழ்மாது விளங்க'' என்ற தொடக்கத்துக் குலோத்துங்கன் I காலத்துக் கல்வெட்டும் இருப்பதால் அவ்வால யம் அக்காலத்திற்கு முந்தியே ஏற்பட்டிருக்க வேண்டும். மேலும் அவ்வரசன் 44-ம் ஆண்டில் வாகீசர் மடத்திற்கு நிலதானம் செய்ததாகக் (49/1903) கல்வெட்டுக் கூறுகிறது. அதே அரசனது 48-ம் ஆண்டில் (382/1925) ''புகழ் மாது விளங்க'' என்னும் தொடக்கத்துக் கல் வெட்டில் (கி. பி. 1118-இல்) அரும்பாக்கத்துப் பொன்னம்பாலக் கூத்தனது 4800 குழி புன்செய் நிலத்தை நன்செய் ஆக்கி அதிராச மாங்கலிய புறத்துக் குடிகள் திருவதிகை ஆலயத்தைச் சேர்ந்த திருநாவுக்கரசர் தேவர் மடத்தில் அன்னதானம் செய்வதற்காகத் தந்தார்கள் என்று கூறப்பட்டுள்ளது. மேலும் மற்ரெரு கல்வெட்டு (403/21) திரு வீரட்டானருக்குச் சேர்ந்த நிலத்தில் பிடாரி கோவிலுக்கு வடக் கில் இருந்த காட்டை அழித்துத் திருநாவுக் கரசன் திருவீதி என்ற பெயரிட்டு அதில் கைக் கோளர், வாணியர், அங்காடியர் முதலியவர் களைக் குடியேற்றி அவர்கள் செலுத்தவேண்டிய வரியை நிர்ணயித்ததாகத் தெரிகிறது. இக்கல் வெட்டின் எழுத்து பிற்காலத்தது. மற்றும் திரி புர சங்கார மூர்த்தியின் எதிரில் உள்ள இரு தூண்களில் காலிங்கன், நரலோக வீரன், கருணாகரத் தொண்டைமான் முதலிய பெயர் களைக் கொண்ட ஒரு போர்த் தலைவன் ஆல யத்துக்குச் செய்த திருப்பணிகள் 25 வெண் பாக்களில் அழகாக விவரிக்கப்பட்டுள்ளன. (369/1921) அவற்றில் 22-வது வெண்பா,

"ஈசன் அதிகையில்வா கீசன் எழுந்தருள
மாசில்பெருங் கோயில் வகுத்தமைத்தான்-பூசல்
விளைவித்த வேளுடும் வெற்பனைத்தும் செந்தீ
வளைவித்தான் தொண்டையர் மன்."

அப்பருடைய கோயிலைக் கருணாகரத் தொண்டைமான் கட்டினதாகக் கூறுகிறது. இவனே கலிங்கத்தை வென்ற தளபதி போ லும். ஆகவே குலோத்துங்கன் I (1070-1148) காலம் எனலாம். (கலிங்கத்துப் பரணி காண்க

திருவாரூர்த் தியாகராயர் சந்நிதியில் உள்ள ஒரு கல்வெட்டில் (73/90) அநபாயன் (குலோத்துங்கன் II) 7-ம் ஆண்டில் மூவர் களுடைய உருவங்களையும் தாபித்து அவை களுக்குத் தானம் செய்ததாகக் கண்டிருக் கிறது. அப்பருடைய பெயரை வடமொழி யில் 'வாக்கதிபதி' என்று குறிக்கப் பட்டிருக்கின்றது. இவ்வரசரே சேக்கிழார் பெருமானைத் திருத்தொண்டர் புராணம் பாடச் சொன்னவர்.

அப்பர் சுவாமிகள் இறைவரது திருவடிப் பேறு எய்திய தலமாகிய திருப்புகலூரில் அப்ப ருடைய திருக்கோயில் ஒன்று சுற்றுப்பிராகாரத் தில் இருக்கிறது. இம்மூர்த்திக்கு முதல் இராச ராசன் (985-1012) காலத்திலே நித்ய பூசைக்கு நிபந்தம் ஏற்பட்ட செய்தியை ஒரு கல்வெட்டுத் தெரிவிக்கிறது. மற்றொரு கல் வெட்டில் "குளிச் செழுந்த நாயனூர்" என்ற குறிப்புக் காணப்படுகிறது.

இந்நாயனூர் திருநாவுக்கரசராக இருக்க வேண்டும். கயிலையில் ஒரு தடாகத்தில் மூழ் கித் திருவையாற்றில் ஒரு திருக்குளத்தில் இந் நாயனூர் எழுந்த ஒரு அற்புதத்தை இக்கல் வெட்டு இவ்வாறு குறிக்கிறது. மேலும் இத் தலத்தில் அவதரித்த முருக நாயனூர் அப்பர் காலத்திலேயே புட்பத் திருத்தொண்டு செய்து முத்தி பெற்றவர். இவர் பேரால் "நம்பி முரு கன்திருமடம்" என்ற ஒரு மடம் இருந்ததாக ஒரு கல் வெட்டுக் கூறுகிறது. இன்னும் அக் காலத்திலே இருந்த திருநீலகண்ட யாழ்ப் பாண நாயனுரைத் "தருமபுரத்து நாயனூர்", "யாழ்மூரி நாயனூர்" எனவும், திருநீலநக்க நாயனுரை "நக்க நாயனூர்" எனவும் இக் காலத்துக் கல்வெட்டுக்கள் குறிக்கின்றன. இவ் வூர் ஆலயத்தில் அப்பர் சுவாமிகளுக்குச் சித்தி ரைச் சதயத்தை ஓட்டிப் பத்து நாட்களும் வைகாசி மாதத்திலும், திருவிழாக்கள் நடந்து வருகின்றன. இவ்விரண்டு திருவிழாக்களும் இம்மாதங்களில் நடைபெற்றதை ஒரு கல் வெட்டுக் குறிக்கிறது. மற்றொரு கல் வெட்டில் திருப்பதிகம் விண்ணப்பம் செய் வார்க்கு (ஓதுவார்க்கு) காணி கொடுத்த நிபந்த விபரம் காணப் படுகிறது. இக்கோயி லில் திருநாவுக்கரைய தேவருக்கு நிவேதனம் செய்யப்படும் பிரசாதத்தைச் சிவயோகிகளும் அபூர்விகளுமே பெற வேண்டுமென்றும் இவர் களுக்கெனக் குளக்கரையில் ஒரு மடம் ஏற்பட் டிருந்ததென்றும் ஒரு கல் வெட்டுக் கூறுகிறது.

## தொகுப்பு I நாயனூரது பெயர்கள்

அப்பர் சுவாமிகளைப் பற்றிய கல்வெட்டு களிற் காணும் விவரங்களைப் பாகு படுத்தி எழுதினுல் அடியிற்கண்ட செய்திகள்அறிய லாம்.

1. திருநாவுக்கரசர் — 402/08 திருவீழிமலை
2. திருநாவுக்கரையன்—330/10 திருமயானம்
3. திருநாவுக்கரசுதேவர்—121/04 தீர்த்தநகிரி
   ,, —316/09 திருக்கச்சூர்
   ,, —556/06 அகத்திய கொண்ட
   ,, —117/08 திருப்புத்தூர்
4. திருநாவுக்கரசு நாயனூர்—186/08 கோவி லூர்
5. திருநாவுடைய பிள்ளையார்—294/1911 சூலமங்கலம்
6. வாகீசர் — 49/03 திருவதிகை

ஆகவே சோழர் காலத்திலே திருநாவுக் கரசு, வாகீசர் என்ற இரு பெயர்களே வழிவழி வந்தன. பிள்ளைத் திருநாமமாகிய 'மருணீக்கி யார்' என்பதும், அதிகமா யழைக்கும் பெய ராகிய 'அப்பர்' என்பதும் சோழர் காலத்தில் வழங்கவில்லை போலும்.

## II நாயனூரது கோயில்களும் அவைகளைத் தாபித்த காலமும் தானங்களும்

(1) தஞ்சை ராசராசேச்சுரம் உடையார்; கி. பி. 1014. இராசராசர் 29-ம் ஆண்டு அப்பர் முதலியவர்களின் உருவங்களைத் தாபித்ததும் தானம் செய்ததும் (98/1888)

(2) தஞ்சை ஷ கி. பி. 1017 இராஜேந் திரன் 3-ம் ஆண்டு அப்பர் முதலிய 4 உருவங் களும்—இரண்டு திருவிளக்குகளும் பெரிய மடல் ஒன்றும்.

(3) திருவலஞ்சுழி; 115 மார்ச் 21-2 ராஜ ராஜன் II 12 ஆண்டு. திருநாவுக்கரசு தேவர் கண்ணப்பர் வரதநார் உருவத் தாபனம் பூதா னம் (528/02)

(4) திருக்கச்சூர்; அஞ்சனாக்ஷியம்மை ஆலயம்(11780—216)குலோத்துங்கள் III திருநாவுக்கரசு தேவர் உருவத்தாபனம்(316/1909)

(5) சித்தூர்; அகத்தியர் கொண்டா 1192 வீரராஜேந்திரன் (குலோத்துங்கன் III) இராச உத்தம சோழ நங்கை என்ற செல்வ நங்கை; திருநாவுக்கரசு தேவரைத் தாபித்தது (559—1906).

(6) கோவிலூர்; (திருவுசாத்தானம்) மந்திர புரீசுரர் 1255 கி.பி. இராஜேந்திரன் III 10 ஆ. பிள்ளையார் நாயனுர் (சம்பந்தர்), திருநாவுக்கரசு நாயனுர் இவர்கள் கோயிலுக்குப் பூதானம் (186—1908)

(7) சேரமாதேவி; அப்பர் ஆலயம் 1267 ஜடாவர்மன் வீரபாண்டியன் 14 ஆண்டு (185, 186, 187/95)

(8) தீர்த்தநகிரி; (திருத்தினை நகர்) 1271 மாத வர்மன் வீரபாண்டியன், திருநாவுக்கரசு தேவர் திருவிழா முதல் 12 திருவிழாக்களுக்கு வரி தானம். இங்கே நால்வர் உருவங்களும் சிறந்தவை (121/04)

(9) திருப்புத்தூர்; 1295 விக்கிரம பாண்டியன் 12 ஆண்டு திருநாவுக்கரசு தேவர் உருவத்தை ஒரு தேவரையன் தாபித்தது.

(10) சூலமங்கலம்; இருந்தீவன கேசர் 1396 ஜடாவர்மன் பராக்கிரம பாண்டியன் 12. ஆ. தான விநோத நல்லூர் திருநாவுடைய பிள்ளையார் உருவைத் தாபித்தது. (294-11)

### அப்பர் சுவாமிகளுடைய உருவச்சிலை நாட்டின அரசர்களின் விவரமும் காலமும்

| அரசர் | காலம் | கல்வெட்டு |
|---|---|---|
| இராஜராசர் I | 985-1013 | 1 |
| இராஜேந்திரர் | 1013-1045 | 1 |
| இராஜராஜர் II | 1146-1178 | 1 |
| குலோத்துங்கர் III | 1178-1216 | 2 |
| இராஜேந்திரன் III | 1245-1267 | 1 |
| ஜடாவீரபாண்டியன் | 1253 | 1 |
| மாற-வீரபாண்டியன் | 1262 | 1 |
| விக்ரமபாண்டியன் | 1283 | 1 |
| ஜடாபராக்கிரமன் | 1184 | 1 |

ஆக சோழர்-5—பாண்டியர்-4

அப்பருக்குப் பிறகு (600) இராசராசர் வரை ஆறு நூற்றுண்டுகள் கல்வெட்டுகள் இல்லை. 1300க்குப் பிறகு, 6 நூற்றுண்டுகள் இல்லை. அதாவது விஜய நகரத்தின் நாயக்கர்கள் முகம்மதியர்கள் இவர்கள் காலத்தில் தாபிதம் இல்லை.

### III நாயனரது திருமடங்கள்

(1) திருச்சி—திருப்பராய்த் துறை ஆதி மூலேசுவரர் முன் மண்டபச் சுவர் கி. பி. 1007 இராசராச சோழர் 1-22 ஆண்டு ஆலயத்திற் கருகில் அமைக்கப் பெற்ற திருநாவுக்கரசு தேவன் மடத்தில் மகேசுரர்களுக்கு அன்னமிட நிலதானம். (644 திருச்சி)

(2) தஞ்சை—திருவீழிமிழலை. வீழிநாத சுவாமி முதல் பிராகாரம் வடசுவர் கி. பி. 1017 இராஜேந்திர சோழன் 2-ம் ஆண்டு திருநாவுக்கரசு மடத்துக்குச் சொந்தமான நில அட்டவணை (தஞ்சை-843)

(3) தென் ஆற்காடு—திருவதிகை வீரட்டானம் முதல் பிராகாரம் தென் சுவர் கி. பி. 1114 குலோத்துங்கன் I-6-ம் ஆண்டு வாகீசர் மடத்துக்குத் தானம் (தெ-ஆ-311)

(4) செங்கற்பட்டு — *வேளச்சேரி.. கர்ப்பக்கிரகம் வடசுவர் 1200 கி. பி. குலோத்துங்கன் III திருவான்மியூர்த் திருநாவுக்கரசு மடத்திற்குச் சேதி நாயனுர் பூதானம் (செங் 1131)

(5) தஞ்சை — குறுக்கை வீரட்டானர் முன் மண்டபத்துத் தென் சுவர் கி. பி. 1207. குலோத்துங்கன்III-29-ஆண்டு-திருநாவுக்கரசு திருக்குகை கட்டுவதற்கும் அக்குகை மூலமும் ...உணவளிக்க வைகாசித் திருநாளுக்கு வரும் மகேசுரர்களுக்கு உணவளிக்கவும் ஆலயத்தில் திருத்தாண்டகம் ஓதுதற்கும் நெல்தானம். (தஞ்—219/17)

(6) மதுரை—பூதக்குடி; அப்பர் சத்திரத்தில் ஒரு தாமிரசாசனம் இங்கு ஒரு மடம் இருந்தது குறிக்கும் (மது-1413)

பெரிய புராணத்துள் கண்டமடங்கள் இருந்த திங்களூர், அப்பர் மடம், திருப்பூந்துருத்தி, புகலூர், திருநல்லூர் மடங்கள்: இவை என்ன ஆயின? திருப்பூந்துருத்தியில் அப்பர் மடத்தைச் (இடிந்தது) செவ்வாய்க்கிழமை மடம் என்கிறுர்கள். ★

* 4-ல் சொன்ன வேளச்சேரிக்கு ஜின சிந்தாமணி சதுர் வேதி மங்கலம் என்றது பழைய பெயர். ஆகவே அங்கே முன் காலத்தில் சமணர் இருந்திருக்கின்றனர்.

# திருநாவுக்கரசர் தேவாரம்

திரு. கா. இராமநாதன், B.A.,B.L., கோலாலம்பூர், மலேயா

திருநாவுக்கரசரது தேவாரம் பல உண்மைகளை வரையறுத்து விளக்குவதாய், தண் என்ற ஒழுக்கமுடையதாய், இனிய எளிய சொல் நடையுடையதாய், சிவானு பூதிச் செல்வம் நிறைந்ததாய், மனத்தில் பதிவதாய் விளங்குகிறது. இறைவனை " ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே " என்று முன்னிலையிலும், " வானவன் காண்-வானவர்க்கும் மேலானுன்காண் " " தூண்டுசுடரணைய சோதி கண்டாய் " என்று படர்க்கையிலும் அவன் அருளை நைந்து நைந்து பாடுகிறார்.

நால்வரிலும் நாவுக்கரசரே முன்பிருந்தவர். நாவுக்கரசரும் ஞானசம்பந்தரும் ஒரே காலத்தில் இருந்தவர்களாயினும் நாவுக்கரசர் வயதில் முதிர்ந்திருந்தார். ஞானசம்பந்தர் பால் மணம் மாருத பாலராக இருந்தார்.

இந்த நால்வரில் அதிகப்பாட்டுக்கள் பாடியது அப்பர் பெருமானே. சுந்தரர் நின்றியூர்ப் பதிகத்தில் " இணைகொள் ஏழெழு நூறிரும் பனுவல் ஈந்தவன் திரு நாவினுக்கு அரையன் " என்பதாலும் நம்பியாண்டார் நம்பிகள் திருநாவுக்கரசர் திரு வேகாதசமாலை என்னும் நூலில், "பதிகம் ஏழெழு நூறு பகருமாகவியோகி பரசு நாவரசான பரம காரணவீசன் " என்பதாலும் திருநாவுக்கரசர் பாடிய பாடல் (49000) நாற்பத் தொன்பதினாயிரம் என்பர். சம்பந்தப் பெருமான் பாடியபாடல்கள் (16000) பதினாருயிரம். சுந்தரர் பாடிய பாடல்களும் மாணிக்க வாசகர் பாடியபாடல்களும் மிகக்குறைவு. ஆனால் அப்பர் பெருமான் பாடிய பாடல்களுள் கிடைத்தவை (32) முந்நூற்று இருபத்தொரு பதிகங்கள் என்று திருமுறை கண்ட புராணத்தில் " நண்புற்ற நாவரசர் முந்நூற்றேழ் மூன்றினால் " என்று கூறியதி லிருந்து அறிகிறோம்.

அப்பர் பெருமான் பாடியதலங்கள் இப்பொழுது கிடைக்கும் பதிகங்களில் (126) நூற்று இருபத்தி ஆறு. அவர்கள் பாடிய க்ஷேத்திரக் கோவையிலும் அடைவு திருத்தாண்டகத்திலும் பல தலங்களைப் பற்றிக் கூறுவதைக் காண்கின்றோம்.

நாவுக்கரசர் பாடிய குறுந்தொகையும் திருத்தொண்டகமும் அவருக்குத் தனிப் பெருமையைத் தருகின்றன. தாண்டகத்தின் அழகையும் உருக்கத்தையும் பாராட்டி அப்பர் பெருமானுக்குத் "தாண்டகவேந்தர் " என்றும் " தாண்டகச் சதுரர் " என்றும் போற்றுவாராயினர்.

தேவாரம் என்ற பெயர் அப்பர் பெருமான் பாட்டிற்கே உரியது. வழிபாட்டிற்கு அவர் பாடல்களையே முதலில் கோயிலில் மேற்கொண்டிருக்கவேண்டும். ஞானசம்பந்தர் பாட்டிற்குத் திருக்கடைக்காப்பு என்றும் சுந்தரர் பாட்டிற்கு திருப்பாட்டு என்றும் பலகாலம் ஆக வழங்கி வந்தது. பின்னர் 16ஆம் நூற்றுண்டில் மூவர் பாடலுக்குமே தேவாரம் என்ற பெயர் வழங்குவ தாயிற்று.

அப்பர் அருளிய தேவார மாகிய 4,5,6- வது திருமுறைகளில் பலவித மான பாடல்வகைகளைக் காண்கின்ரேம். "திருநேரிசை" "திருவிருத்தம்" "குறுந்தொகை" "திருத்தாண்டகம்" முதலியன. 5ஆம் திருமுறை முழுதும் திருக்குறுந்தொகை. 6ஆவது திருமுறை முழுதும் திருத்தாண்டகம். திருவாரூர்ப் பழமொழிப் பதிகத்தின் ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் ஏனைய பிறபாடல் களிலும் பல பழமொழிகளை வைத்துப் பாடியிருப்பதும் பல பாடல்கள் அகப் பொருள் துறையில் அழகு ததும்பப் பாடி யிருப்பதும் படித்துச் சுவைக்கத்தக்கன.

நாவுக்கரசர் தான் இறைவனை அடையவேண்டும் என்ற எண்ணத் தோடு மட்டும் நில்லாமல் பலரும் நல் வழிப்பட வேண்டும் என்ற எண்ணத்தை மனத்தில் கொண்டு மக்களுக்கு நேர்முக மாகவும் மறை முகமாகவும் பலபாட் டுக்களை அழுத்தமாகக் கூறி இருக்கிருர். தன்நெஞ்சுக்கே சொல்வதாக அமைந்த பாட்டுக்களும் பிறருக்குப் போதனை செய்ய எழுந்த பாட்டுக்களே.

"நிலைபெறு மாறெண்ணு தியேல் நெஞ்சே நீவா நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப், புலர்வதன் முன் அல கிட்டு மெழுக்குமிட்டுப் பூமாலை புனைந் தேத்திப் புகழ்ந்து பாடித், தலையாரக்கும் பிட்டுக் கூத்து மாடிச் சங்கரா சய போற்றி யென்றும், அலைபுனல் சேர் செஞ்சடை எம் ஆதீயென்றும் ஆரூரா என்றென்றே அலருநில்லே"

மனிதர்கள் நல்ல பொருளை அனுப விக்கும் திறத்தை அறவே இழந்து விட்டனர் என்று வருந்திக் கூறுகிருர்.

"மனிதர்காள் இங்கே வம்மொன்று சொல்லுகேன், கனிதந்தாற் கனியுண் ணவும் வல்லிரே, புனிதன் பொற்கழல் ஈசனெனுங்கனி, இனிது சாலவும் ஏசற்ற வர்கட்கே"

வெறும் சொற்போரில் ஆவது ஒன்று மில்லை என்று மக்களுக்கு எடுத்து உரைக் கிருர்.

"வாது செய்து மயங்கும் மனத்தராய்,
ஏது சொல்லு வீராகிலும் ஏழைகாள்,
யாதோர் தேவரெனப் படுவார்க்கெலாம்,
மாதேவன்னலால் தேவர் மற்றில்
லையே"

அவர் எடுத்துக்காட்டும் பல உவமை களால் அவர் விஷயங்களை விளக்குவது மிகவும் மனதில் பதிவதாய் இருக்கிறது. "காயமே கோயிலாக" என்பதும், "மெய்ம்மையாம் உழவைச் செய்து" என்பதும் "கூவல் ஆமையையும் குரை கடல் ஆமையையும்" பற்றிக் கூறுவதும், "மனமெனும் தோணி" யைப்பற்றிக் கூறுவதும், "மெய்யுளே விளக்கை ஏற்று வது" பற்றிக் கூறுவதும் உடம்பை ஒரு வீடாகவும் ஒரு முழக்குட்டமாகவும் வர் ணிப்பதும் மிகஇன்பத்தைத் தருகின்றன.

ஞானசம்பந்தர் தன்னைப் பாடுவார் என்றும்,சுந்தரர் பொன்னுக்குப் பாடுவார் என்றும், அப்பர் பெருமான் ஆண்ட வனையே பாடுவார் என்றும் சொல்வ துண்டு. அரசர் ஆண்டவனைச் சுவைத் துச் சுவைத்துப் பாடியுள்ளார். "எனக்கு என்றும் இனியானை" என்றும், "என் னிலும் இனியான்" என்றும் "எப்போதும் இனியான்" என்றும் அவர் அண்ணலைப் பற்றிக் கூறுவது அவர் ருசிக்கும் எல்லை யைக் காட்டுகிறது. "தித்திக்கும் தேனைப் பாலைத் தீங்கரும் பின் இன் சுவையை" "கனியிலும் கட்டி பட்ட கரும்பினும் — இனியன்" "பழமாகிச் சுவையாகிப் பயக்கின்ருன் காண்"

"எம்மானே என்னுள்ளத்துள்ளே யூறும் அத்தேனை யமுதத்தை ஆவின் பாலை அண்ணிக்குந் தீங்கரும்பை" என்பன அவர் இறைவன்பால் பெற்ற சுவையை விவரிக்கின்றன. சிவபெருமான் "கண்ணுக்கினியான்"என்பதைத்"திகழொளி" "வானோர் செழுஞ்சுடர்" "மணிக்குன்று" " மரகதம் " "வான் பவளக் கொழுந்தை முத்தை வளரொளியை வயிரத்தை மாசொன்றில்லாப் பொன்னுருவை " என்பன போன்ற சொற்றொடர்கள் காட்டுகின்றன. பெருமானை எல்லாவிதத்தாலும் அனுபவித் துள்ளார் அப்பர் பெருமான்.

" பனிமலர்க்குழல் பாவை நல்லாரினும், தனிமுடிகவித்து ஆளும் அரசினும், இனியன் தன் அடைந்தார்க்கு இடை மருதனே" "மாசில் வீணையும், மாலை மதியமும்,வீசுதென்றலும், வீங்கிள வேனிலும், மூசுவண்டறை பொய்கையும் போன்றதே, ஈசன் எந்தை இணையடி நீழலே" அப்பர் பெருமான் ஆண்டவனை அனுபவித்து அந்த அனுபவத்தைஉலகப் பொருளில் பொறிபெறும் இன்பத்தோடு ஒப்பிட்டுக் காட்டுகிறார். ஆண்டவனிடம் இருந்து பெறும் இன்பம் அவைகளிலும் மேம்பட்டது எனவும் விளக்குகிறார்.

ஞானசம்பந்தப் பெருமானது நடை மிடுக்குடையது. அந்த மிடுக்கை அப்பர் தேவாரத்தில் காணமுடியாது. மற்றமூவர் பாட்டிலும் காணக் கூடிய கசிவு ஞானசம்பந்தர் தேவாரத்தில் காணமுடியாது. ஞானசம்பந்தர் உலகினருக்கு உபதேசம் செய்யும் பாடல்கள் மிக அருமை. தன்னைக் குறை கூறும் பாடல் அதனினும் அருமை. ஞானசம்பந்தர் பாடலில் காணும் பெருமிதத்தையும் மாணிக்கவாசகர் பாடலில் காணும் கனிவையும் ஒருங்கு அப்பர் திருமுறைகளிலும் காணலாம். அப்பர் தேவாரம் என்றும் எவர்க்கும் ஆண்டவனைப் போல இனிக்கும்.



# அப்பர் கூறும் வரலாற்றுச் செய்திகள்

திரு. டாக்டர் மா. இராசமாணிக்கனுர்,
தமிழ்த்துணைப் பேராசிரியர், சென்னைப் பல்கலைக் கழகம்

## முன்னுரை

அப்பர் என்ற திருநாவுக்கரசர் பல்லவ அரசனை முதலாம் மகேந்திரவர்மன் காலத்தவர். அம்மன்னன் காலம் ஏறத்தாழக் கி. பி. 600—630. மகேந்திரவர்மன் முதலில் சமணனாய் இருந்து பின்பு சைவனானன் என்பது பெரிய புராணச் செய்தியாகும். இஃது உண்மை என்பதை அவனது திருச்சிராப்பள்ளிக் குடைவரைக் கோவில் கல்வெட்டுக் கூறுகிறது1. மகேந்திரவர்மன் சிறந்த வடமொழிப் புலவன்; இசைக் கலையிலும் நடனக் கலையிலும் சிறந்தவன்; ஓவியக்கலையிலும் சிற்பக்கலையிலும் வல்லவன்; அவற்றில் மிகுந்த பற்றுடையவன். அவனது இசைபற்றிய பேரறிவினைக் குடுமியான் மலையிலுள்ள இசையைப் பற்றிய பெரிய கல்வெட்டு இனிதின் உணர்த்தும்.2 அப்பெருமகன் நுண்கலைகளுள் வல்லனாய் இருந்தது போலவே போர்க்கலையிலும் சிறந்து விளங்கினான். எனவே, அவன் காலத்தில் வாழ்ந்த திருநாவுக்கரசர் பாடல்களில் இசை நடனம் பற்றிய செய்திகள் மிகுதியாகக் காணப்படுவதில் வியப்பில்லை அல்லவா?

இங்கு அவர் பாடல்களிலுள்ள சில செய்திகள் அக்கால வரலாற்று உண்மைகளே ஆகும் என்பதை இங்கு அறிவது நல்லது.

## காஞ்சியும் கல்வியும்

காஞ்சியில் திருமேற்றளி என்பது ஒரு சிவன் கோவில். திருநாவுக்கரசர் அக்கோவிலில் சென்று இறைவனை வழிபட்டுப் பதிகம் பாடினார். அவர் அப்பதிகத்தில் எட்டாம் பாடலில்,

"கல்வியைக் கரையி லாத காஞ்சிமா நகர்"

என்று தம் காலத்தில் காஞ்சி மாநகர் கல்வித் துறையில் சிறந்து விளங்கினமையைப் பாராட்டியுள்ளார். இஃது உண்மையா என்பதை வரலாறு கொண்டு ஆராய்தல் நலம் பயக்கும்.

பல்லவர் தமிழர் அல்லர். அவர்கள் ஏறத்தாழக் கி. பி. 300 இல் காஞ்சியைத் தலைநகராகக் கொண்ட தொண்டை நாட்டைக் கைப்பற்றி ஆளத் தொடங்கினர். அவர்கள் முதலில் பிராகிருத மொழியையும் வடமொழியையும் ஆதரித்தனர். அவர்கள் விடுத்த பட்டயங்கள் இவ்விரு மொழிகளிலேயே உள்ளன. அவர்கள் தங்கள் தலைநகரான காஞ்சியில் வடமொழிக் கல்லூரி (கடிகை) ஒன்றை நிறுவினர். வடமொழி வேதங்கள் முதலிய நூல்களைக் கற்பிக்கவும் அவைபற்றிய ஆராய்ச்சி அறிவைப் பெறவும் அக்கல்லூரி பயன்பட்டது. கதம்ப அரசைத் தோற்றுவித்த மயூர சர்மன் (கி. பி. 345—370) என்ற கன்னட நாட்டு மறையவன் தன் ஆசிரியனான வீரசர்மன் என்பவனுடன் காஞ்சிக் கடிகையில் உயர் கல்வியைப் பெற வந்தான் என்று அவன் பெயரனான காகுத்த வர்மனின் தாளகுண்டா தூண் கல்வெட்டுக் கூறுகின்றது3. மயூர சர்மனுடைய ஆசிரியனும் தன் மாணவனுடன் அங்குக் கல்விகற்க வந்தான் எனின், அவ் வடமொழிக் கல்லூரியின் கண் உயரிய கல்வி கற்பிக்கப்பட்டது என்பது வெளிப்படையாகும். அக் கல்லூரியைப் பல்லவ மன்னர் தம் உயிரினும் மேலாகப் பாதுகாத்து வந்தனர். அக்கடிகை மறையவர், மன்னர் மரபினர், வணிகர் ஆகிய இரு பிறப்பினரே கல்வி கற்க உரியதாகும்.4

1 South Indian Inscriptions, Vol. I, No. 33
2 Epigraphia Indica, Vol 12, pp. 227—232
3 Ibid. Vol. 8, p. 24.
4 Dr. Minakshi, Administration & Social Life under the Pallavas. pp. 186—194.

காஞ்சியில் இருந்த பௌத்த துறவிகள் சிறந்த கல்வி கற்றவர்கள். திக்நாகர், தர்ம பாலர், போதிதருமர் என்ற பௌத்தப் பேராசிரி யர்கள் காஞ்சியில் பிறந்து வளர்ந்தவராவர். இம்மூவரும் அக்காலப் பௌத்த உலகில் பெரும் பெயர் பெற்றவர்கள். திக்நாகர் வட இந்தியாவில் பௌத்தத்தைப் பரப்பின பெரியார்; நாலந்தாப் பல்கலைக் கழகத்தில் பல வாதங்களை நிகழ்த்தி வென்றவர். அவர் மாணவரான தர்மபாலர் அப் பல்கலைக்கழகத் தலைவரா யிருந்தவர். அவர் பல நூல்கட்கு உரை வரைந்தவர்; வடமொழி நூல்கள் பலவற்றையும் எழுதியவர். அப்பர் காலத்தில் காஞ்சியை நேரில் கண்ட யுவான் சுவாங்கு என்ற சீன வழிப்போக்கன் காஞ்சி யில் பௌத்த துறவிகள் இருந்தமையைக் குறித்துள்ளான். அத்துறவிகள் பிராகிருதம், வடமொழி ஆகிய இரண்டிலும் வல்லவர்கள்.

இன்று காஞ்சியிலுள்ள திருப்பருத்திக் குன்றம் என்னும் பகுதி சமண காஞ்சி என அன்று பெயர்பெற்றது. அங்குப் புகழ்பெற்ற சமண முனிவர்கள் வாழ்ந்தனர்.

இங்ஙனம் பல சமயத்தவரும் கலந்து வாழ்ந்த பதி ஆகையால் காஞ்சி மாநகர் கல்வி யில் கரையில்லாது இருந்தது என்பது வர லாற்று உண்மையாகும். அதனால் அக்கல்விப் பெருக்கினை நேரில் கண்டு களிப்படைந்த திருநாவுக்கரசர் அந்நகரைக், "கல்வியைக் கரையிலாத காஞ்சிமா நகர்" எனப் பாராட்டி னார்.

## உண்ணா நோன்பு

சங்க காலச் சோழர்க்கு உறையூர் தலை நகராய் இருந்தது. பல்லவர் காலச் சோழர்க்கு (கி. பி. 300-900)க் கும்பகோணத்தை அடுத் துள்ள பழையாறை கோநகரமாய் விளங்கியது. அப்பழையாறைச் சிவன் கோவிலில் இருந்த லிங்கம் சமணரால் மறைக்கப் பட்டது. அங்குச் சமணரது தொல்லை நீங்கும் வரையில் அப்பர் உண்ணா நோன்பினை மேற்கொண்டு அத்தலத் திலேயே இருந்தார் என்று பெரியபுராணம் பேசுகிறது. 5

திருநாவுக்கரசர் பல ஆண்டுகள் சமண முனிவராயிருந்தவர்; சமண நூல்களைக் கற்று வாதம் புரிவதில் திறமை பெற்றுத் தருமசேனர் எனப்பட்டமும் பெற்றவர்; ஆடையற்ற திகம்பர சமணராய் அலைந்தவர். 6 உண்ணா நோன்பை மேற்கொண்டு உயிர் விடுதல் சமண முனி வர் மேற்கொண்டிருந்த பழக்கமாகும். சமண முனிவர் பலர் இந்நோன்பை மேற்கொண்டு உயிர் துறந்தனர் என்பதைச் சிரவண பெள் குளத்துக் கல்வெட்டுக்கள் பல உணர்த்து கின்றன. இது வடமொழியில் 'சல்லேகனம்' என்றும், தமிழில் 'வடக்கிருத்தல்' என்றும் கூறப்படும். "வருத்தம், தள்ளாமை, தீராத நோய் இவற்றுல் பீடிக்கப்படும்போது சமண முனிவர் உண்ணா நோன்பினை மேற்கொள்வர்; படிப்படியாக உணவை விடுத்து நீர் உணவை மேற்கொள்வர். பின்னர் அதனையும் விடுத்து வெந்நீரைப் பருகுவர்; பின்பு அதனையும் விடுத்து இறக்கும் வரையில் பட்டினி கிடப்பர். இது சமந்தப் பத்திரர் என்ற சமண ஆசிரியர் எழுதிய இரத்தின கண்டரகம் என்னும் நூலில் கூறப்பட்டுள்ளது. 7

இத்தகைய உண்ணா நோன்பினை அப்பர் மேற்கொண்டார், பழையாறையிலிருந்த சோழ மன்னன் இதனைக் கேள்வியுற்றுச் சமணரை விரட்டிச் சிவன் கோவிலை வழிபாட்டுக் குரிய தாக்கினுன், அப்பர் தமது உண்ணா நோன் பினைக் கைவிட்டார் என்பது வரலாறு. 8

---

5 திருநாவுக்கரசர் புராணம், செ. 294-296.

6 "காவிசேர் கண்மடவார் கண்டோடிக் கதவடைக்குங் கள்வனேன்"—4-5-8.

7 M. V. Krishna Rao, Gangas of Talkad, pp. 206-209

8 திருநாவுக்கரசர் புராணம், செ. 297-299.





# சிவபெருமான் சிரிக்கின்ருர்

அருண்மொழியரசு, திருமுருக. கிருபானந்தவாரியார் அவர்கள்.

சிரிப்பு பல சந்தர்ப்பங்களில் வரும். ஏதாவது ஒரு அதிசயத்தைக் கண்டால் சிரிப்பு வரும். கோபம் அதிகம் வந்தாலும் சிரிப்பு வரும். சில சமயத்தில் துக்கத்திலும் சிரிப்பு வரும். ஏளனமாகச் சிரிப்பதும் உண்டு. இவைகள் யாவுமின்றித் தன்னை யாராவது ஒருவன் ஏமாற்றுவான் எனின் அவனைக்கண்டு ஒரு அறிஞன் சிரிப்பான். "தம்பி! நீ என்னையே வந்து ஏமாற்றுகின்றனையா? ஆ! நீ எங்கே? நான் எங்கே? உனக்கு எளிதில் நான் ஏமாறுகின்றவனு? சுற்றி வளைத்துச் சொம்புக்கு நாமம் போடுவது போல் நீ அவரை ஏமாற்றி, இவரை ஏமாற்றி, முடிவில் என்னையே ஏமாற்ற வந்து விட்டாயே? பேஷ்" என்று கூறிச் சிரிப்பான்.

ஆண்டவன் அகிலாண்டகோடி பிரமாண்ட நாயகன். அவன் அடி பாதாளம் ஏழுக்கும் அப்பால் உள்ளது. அவன் முடி அண்டங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டது. மாலும் அயனுந்தேடி அறிய முடியாத அடி முடிகளை யுடையவன். அண்ட கோடிகள் அனைத்தும் அவன் திருமேனியிலே அடங்கி நிற்கும் விசுவரூபன். "ஏழண்டத்தப் பாலான்" என்கின்ருர் அப்பர்.

ஆனல் அத்துணைப் பெரிய வடிவுடைய பெருமாள் தன்னை நினைந்து அன்பினுல் என்புருக-அன்பு பெருக-குழைந்து சிந்திப்பவர் சிந்தையிலே—அந்தச் சுருங்கிய இடத்தில் மெல்ல வளைந்து நுழைந்து வந்து வீற்றிருப்பான்.

"நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும் பொன்னர் சடைப்
புண்ணியன்"

அன்புக்கு இறைவன் கட்டுப்படுகிருன். இதய மாகிய குடிலையிலே நுழைந்து விடுகின்ருன்.

ஆகவே இறைவனை யடைவதற்கு மிக எளிதான வழி உள்ளம் உருகி நினைப்பதுவே யாகும். அவனை நினைக்கும்போது மனம் உருக வேண்டும். உருகியதற்கு அடையாளம் கண்ணீர் பெருக வேண்டும்.

"அன்பிற்கும் உண்டோ
அடைக்குந் தாழ்—ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்."

என்பது திருக்குறள். ஆகவேதான்,

"மலர்ப்பதத்தினில் உருகவும் இனியருள் புரிவாயே", "முருகன் குமரன் குகன் என்று மொழிந்து உருகுஞ் செயல் தந்து உணர்வு என்று அருள்வாய்" என்று அருணகிரிநாதர் ஆண்டவனை வேண்டுகின்ருர். உருகிய தங்கத்தில் ரத்தினக் கல் பதிவது போல் உருகிய உள்ளத்துள் இறைவனது மணிச் சேவடி பதியும்.

இங்கனம் உருகுந் தன்மையின்றிப் பலர் பிறர் மெச்சுவதற்காகவும், தான் செய்யும் மறச் செயலை மறைக்கும் பொருட்டும், சிவ லிங்கத்தை வைத்து அல்லது ஒரு திருவுருவத்தை வைத்து நீர் வார்த்துப் பூவையிட்டு வணங்குவது போலப் பொய்மையாக நடிப்பர்; அவர்களைக் கண்டு திரிபுராதிகளின் முன் சிரித்த சிவபெருமான் மெல்லத் தமது பவள வாய் திறந்து சிரிக்கின்ருர்.

ஏன்? அவர் தலையில் கங்கா நதி விளங்குகிறது. விண்ணிற்கு அடங்காமல் வெற்புக்கு அடங்காமல் மண்ணுக்கு அடங்காமல் வந்த கங்கையை—நில்லாத நீர் வெள்ளத்தைத் தலையிலே முடிந்தவர். அப் பெருமானுக்கு ஒரு சொம்புத் தண்ணீரை விடுத்தால் அவர் மகிழ்வாரா? மகிழ்வார்! எப்படி மகிழ்வார்? தண்

ணீரோடு கண்ணீரும் சேர்ந்து காதலாகிக் கசிந்து கண்ணீர் சொரிந்தால் அப்பெருமான் மகிழ்வான். "நறுங் கொன்றைப் போதில் உள்ளான்" என்கிருர் அப்பர். கற்பக மலர்களால் சனகாதி மாமுனிவர்கள் அவரைப் பூசிக்கின்ருர்கள். அத்தகைய பரமபதியை ஏதோ சில மலரால் அர்ச்சித்தால் அவன் அருள்பாலிக்கிருன். ஆனல் அன்பு இன்றி வெறும் டம்பமாகப் பூவை யெடுத்து இட்டால் அத் தேவ தேவன் அவர்களை நோக்கிச் சிரிக்கின்ருன்.

"அப்பனே உலகத்தில் உள்ளவர்களை ஏமாற்றுவதுபோல் என்னையும் பொய்மையாகப் பூவும் நீருங் கொண்டு ஏமாற்றப் பார்க்கின்ருய். இவற்றை மெய்ம்மையாக அன்போடு கொடு. நான் ஏற்றுக் கொள்வேன். ஒரு உத்திரணி தண்ணீர் வார்த்து ஒரு பச்சிலையிடு. போதும். ஆனல் அகங்குழைந்து அன்போடு கொடு. உனது தீவினைகளைப் பூஜை யென்ற போர்வையில் மறைக்கும் பொருட்டுச் செய்யாதே! என்று கூறிச் சிரிக்கின்ருர் சிவபெருமான்.

"பொக்கம் மிக்கவர் பூவும் நீருங்கண்டு
நக்கு நிற்பன் அவர்தமை நாணியே"

இது அப்பர் திருவாக்கு.

இறைவனை யடைவதற்கு, இறைவன் அருளைப் பெறுவதற்குப் பூவும் நீருந் தான் சிறந்த சாதனம்.

"ஏ நெஞ்சே! நெடுங்காலம் வாழ்வோம் என்று எண்ணற்க. சாகின்ற நாளும் வாழ் நாளும் அறிய ஒண்ணுதது. எந்தக் கணத்தில் மரணம் வருமோ அறியோம். மரணம் வருமுன் இறைவன் சரணம் அடைதல் வேண்டும். ஆதலினல் அச்சரணத்தில் மலரிட்டு அர்ச்சனை செய். தலையினல் நிரம்பவும் பூக்களைச் சுமந்து கொண்டு கோயிலுக்குப் போ; அவன் புகழையும் திருநாமங்களையும் காதாரக் கேள்; நாவார அவன் நாமங்களை நவில். அப்படிச் செய்தால் நீ கடைத்தேறலாம் என்று தன் நெஞ்சை நோக்கிக் கூறுகின்ருர் திருஞான சம்பந்தர்.

நீ நாளும் நன்னெஞ்சே
நினைகண்டாய்: யாரறிவார்
சாநாளும் வாழ்நாளும்
சாய்க்காட்டெம் பெருமாற்கே
பூ நாளும் தலைசுமப்பப்
புகழ் நாமஞ் செவிகேட்ப
நாநாளும் நவின்றேத்தப்
பெறலாமே நல்வினையே

'புண்ணியஞ் செய்வார்க்குப்
பூவுண்டு நீருண்டு
அண்ணல் அதுகண்
டருள் புரியாநிற்கும்
எண்ணிலி பாவிகள்
எம்மிறை யீசனை
நண்ணறியாமல் நழுவுகின்ருரே.'

என்கின்ருர் திருமூல நாயனர். ஆனபடியால் இறைவன் திருவடியில் அன்போடு அகங் குழைந்து நீர் வார்த்து மலரிட்டு வணங்குதல் வேண்டும். அங்கனம் வழிபடாதார் வீணே அழிந்து மண்ணுய்ப் போகின்ருர்கள்.

'............பல் பச்சிலையால்
எண்ணுண்டு சாத்த எதிர்நிற்க
ஈசன் இருக்கையிலே
மண்ணுண்டு போகுதையோ
கெடுவீர் இந்தமானிடமே'

என்று மலரிட்டு வணங்காதாரைக் கண்டு இரங்குகின்ருர் பட்டினத்து சுவாமிகள்.

இறைவன் வாக்கும் மனமும் கடந்தவன். அடியவர் பொருட்டு நாம் வணங்கும் மூர்த்தங்களில் எழுந்தருளுகின்ருன். இங்கு அன்புடன் இட்ட மலர்களையும் நீரையும் ஏற்று அருள் புரிகின்ருன்.

அன்போடு மலர்களால் அர்ச்சிக்க வேண்டும். அர்ச்சனைக்கு உயிர் அன்பு.

"அப்படிபத்தி பழுத்த
மனத்தினர் அர்ச்சனை
மெச்சிய செச்சை மணிப்புயன்"

என்பது அருணகிரிநாதரின் திருவாக்கு.

இத்தகைய பக்தியின்றி — சீலமின்றி — செம்மையின்றி — திருவருள் தாகமின்றி — பொய்மையாகப் பூவும் நீரும் இட்டுப் பூசை செய்வார்போல் நடிப்பவர்களைக் கண்டு சிவ பெருமான் சிரிக்கின்ருன். இப்படி நமக்கு அறிவிக்கின்ருர் திருநாவுக்கரசு சுவாமிகள்.

நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும் பொன்ஞர் சடைப் புண்ணியன்
பொக்கம்மிக்கவர் பூவும் நீருங் கண்டு
நக்கு நிற்பன் அவர்தம்மை நாணியே

என்று அழகாகப் பாடுகின்ருர். ஆதலினல் கடைத்தேற வேண்டும் என்ற கருத்துடையவர்கள் பொய்ம்மையை விடுத்து உத்தமமான உள்ளமுடன் பக்தியுடன் சித்தம் வைத்து நீர் வார்த்து மலரிட்டு வழிபாடுவார்களாக. ★

# மூர்க்கர் ஐவர்

திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள், M.A.
ஆசிரியர் : "கலைமகள்"

மனிதனுக்கும், விலங்குக்கும் இதயமும் வயிறும் இருக்கின்றன. மூளையும் உண்டு. ஆனால் மனிதன் மூளை சிறப்புடையது. பகுத்தறிவில் வல்லவன் என்று சொல்கிறோம். அவனுடைய இதயம் உணர்ச்சி நிரம்பி வரவர உயர்ந்து செல்லும்வண்ணம் இருக்கிறது. ஆனால் அவனுடைய வயிறோ விலங்குகளினின்றும் மாறுபட்டதாகத் தோன்றவில்லை. விலங்குக்குப் பசி வந்தால் உணவின் மேலே சிந்தை செல்கிறது. மனிதனுக்கும் அப்படித்தான். அவன் இதயத்தில் தோன்றுகிற உணர்ச்சியும், மூளையில் தோன்றுகிற அறிவுக் கூர்மையும் பசி வந்தால் பறந்து போகின்றன. மானம் முதலிய பத்தும் பசி வந்தால் பறந்து போகும் என்ற பாட்டை ஆயிரம் தடவை கேட்டு இருக்கிறோம்; சொல்லியும் இருக்கிறோம். மூளையுடையவனும், இதயம் உடையவனும் வயிற்றுப் பெருமானுக்கு அடிமையாகிறார்கள். மற்ற மற்றக் காரியங்களைச் செய்தாலும், செய்யாவிட்டாலும் வயிற்றை நிரப்புவதற்கு ஏதாவது முயற்சியை அவசியம் செய்ய வேண்டியிருக்கிறது. நியாயமான முறையோ அநியாயமான முறையோ எதையாவது செய்து இந்தப் பண்டியை நிரப்புவதற்கு உண்டியைத் தேட வேண்டியிருக்கிறது. ஒரு வகையில் மக்கள் செய்யும் முயற்சியை எல்லாம் தொகுத்து அவற்றுக்குரிய மூல காரணத்தையும் ஆராய்ந்து வரிசைப்படுத்திப் பார்த்தால் எல்லோருமே வயிற்றுப் பெருமானுக்காகத்தான் உழைக்கிறார்கள் என்று சொல்லிவிடலாம். இதைப் பழம்பாட்டு ஒன்று வெளிப்படையாகவே சொல்கிறது.

"போற்றியோ போற்றியோ
என்று புதுச்செல்வம்
தோற்றியார் கண்எல்லாம்
தொண்டேபோல்—ஆற்றப்
பயிற்றிப் பயிற்றிப் பல
உரைப்ப தெல்லாம்
வயிற்றுப் பெருமான் பொருட்டு."

என்பது அந்தப் பாட்டு. இறைவனைக் கும்பிடுவதுகூடப் பிரசாதத்திற்காக என்பதை நாம் பலவிடங்களில் பார்க்கிறோம். "சுவாமிக்கு நல்ல நிவேதனம் வைத்திருக்கிறாயா?" என்று கேட்டுக் கொண்டே கோயிலுக்குள் போகிறோம். கடவுளைவிட நிவேதனம்தான் முக்கியம். ஏனென்றால், கடவுள் நம் வயிற்றை நிரப்புவது இல்லை; நிவேதனம்தான் நிரப்புகிறது. ஆயிரம் விதங்களாக நிவேதனம் அமைத்துப் பூசை புரிவது எல்லாம் அந்த நிவேதனத்தைக் கடைசியில் வயிற்றுச் சாமிக்குப் போடுவதற்காகத்தான்.

இந்த வயிறு என்னும் தூராக் குழி எந்தக் காலத்திலும் நிறைவு பெறுவது இல்லை. சில நேரம் நிரம்பிவிட்டதுபோல ஏமாற்றுகிறது. ஆனால் மறு வேளையிலேயே உண்டியைக் கொண்டுவா, கொண்டுவா என்று கேட்கிறது. ஆற்றின் நடுவில் மணல் மேட்டை எழுப்பி அதைத் திருப்பிவிடலாம். நடுவிலே அணையும் கட்டி நீரின் ஓட்டத்தைத் திருப்பலாம். ஏரிகளையும், குளத்தையும், மண்ணையும் கல்லையும் போட்டுத் தூர்த்துவிடலாம். ஆனால் கடலை யாராவது தூர்க்க முடியுமா? ஏதோ ஓர் ஓரத்தைத் தூர்த்ததாகப் பெயர் பண்ணலாமே தவிரக் கடல் முழுவதையும் தூர்ப்பதற்கு யார் இருக்கிறார்கள்? இந்த வயிறும் ஒருவகையில் கடலைப் போலத்தான் இருக்கிறது. ஒருவேளை உண்ட மாத்திரத்தில் நாம் திருப்திப்பட்டது போல் ஏப்பம்விடலாம்; மறுபடியும் பசி ஏப்பம் விடுகிற தருணம் நெடுந்தூரத்தில் இல்லை. வேளைக்குவேளை இந்தக் குழியை அடைத்துக் கொண்டிருக்கிறோம். சின்னக் குழந்தை முதல்

கிழவன் வரைக்கும் இந்த வேலையை நிறுத்துவது கிடையாது. மற்றவற்றை நம்முடைய மனம் போல நிறுத்தலாம்; நடத்தலாம். காலைப் பயன்படுத்தலாம். இல்லையானல் ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கலாம். கையை ஆட்டாமல் வைத்திருக்கலாம். உடம்பை அசைக்காமல் அமர்ந்திருக்கலாம். ஆனல் வயிற்றை நிரப்பாமல் வாழ முடியாது.

இதை உலக அநுபவத்தில் சிறந்த அப்பர் சுவாமிகள் எண்ணிப் பார்க்கிருர். சாப்பிடுவதற்கு மனிதன் எத்தனை தொல்லைப்பட வேண்டியிருக்கிறது என்பதையும் எண்ணுகிருர். பொய், புனைசுருட்டு, பொய், வஞ்சனை, பிறருடைய பொருளை வெளவுதல் முதலிய பல வகையான தீங்குகள் எல்லாம் சோற்றைச் சம்பாதிப்பதற்கும், மற்றவரைவிட நன்ருகச் சாப்பிட்டுத் தூங்குவதற்கும் மனிதன் செய்து கொண்டிருக்கிருன். 'வயிறு இல்லாவிட்டால் அதனல் விளைகின்ற துன்பங்களும் இல்லாமல் போய்விடும் போலும்!' என்ற எண்ணம் திருநாவுக்கரசருக்கு வருகிறது. இந்த மனித வாழ்க்கையே கெட்டுப் போவதற்கு மூல காரணம் இந்த வயிறுதான் என்று தீர்மானிக்கிருர். பேயைக் கட்டிக் கொண்டது போலவும், பாம்போடு ஓரிடத்தில் குடியிருந்தாற் போலவும், இந்த வயிற்ரோடு வாழ வேண்டியிருக்கிறது. மிக மிக ஆழமான கடலைப்போல எத்தனை போட்டாலும் நிரம்பாமல் இருக்கிற குழி இது. இதை இறைவன் இந்த உடம்பிலே சேர்த்து வைத்திருக்கிருன். மனிதன் இறைவனை வணங்கி நல்ல எண்ணங்களையும், நல்ல பேச்சுக்களையும், நல்ல செயல்களையும் மேற்கொள்ளாமல் மாறுபடுவதற்குக் காரணமே இந்தப் பேய் வயிறு என்று தோற்றுகிறது. இதனைப் பார்க்கும் போதெல்லாம் அப்பர் சுவாமிகளுக்கு வருத்தம் உண்டாகிறது.

"எம்பெருமானே, மனிதர்களுடைய வாழ்க்கை இந்தப் பாழும் குழியினல் கெட்டுப் போகிறதே! இதைப் பார்க்கும் போதெல்லாம் எனக்குத் துக்கம் துக்கமாக வருகிறது" என்று இறைவனைப் பார்த்துப் புலம்புகிருர்.

திருவாரூரில் வன்மீகி நாதர் மூலமூர்த்தியாகி எழுந்தருளியிருக்கிருர். அவர் இருக்கும் இடம் மூலஸ்தானம். அதைத் தமிழில் மூலட்டானம் என்றும் மூலட்டம் என்றும் கூறுவர். மூலட்டத்தில் உள்ளவர் மூலட்டனுர். அவரை விளித்து இதைச் சொல்லுகிருர்.

**ஆரூர் மூலட்ட னீரே!**

என்று விலாசம் போட்டுப் புலம்புகிருர். 'மிக்க ஆழமான குழியாகிய கடலை யார் தூர்க்க முடியும்? இந்த வயிறும் கடல் போலத்தான் இருக்கிறது. இதனல் மனித வாழ்க்கை கெடுகிறது. இதைப் பார்க்குந்தோறும் துன்புறுகிறேன்.' என்று ஆரம்பிக்கிருர்.

**படுகுழிப் பவ்வத் தன்ன**
**பண்டியைப் பெய்த வாற்ருல்**
**கெடுவதிம் மனிதர் வாழ்க்கை;**
**காண்டொறுங் கேதுகின்றேன்.**

பொதுவாக மனிதருடைய வாழ்க்கையைப் பற்றிச் சொன்னுலும் இது அவரும் அனுபவித்ததுதானே! அவர் நம்மைப்போல் வயிற்றுக்கு அடிமையானதில்லை. இருந்தாலும் பசி வரும் போது உணவை நினைக்க வேண்டியே நேருகிறது. அதனல் இப்படி வருந்துகிருர்.

வயிற்றுக்கு வாயிலாக இருப்பது வாய். அதில் அவை உணரும் கருவியாக இருப்பது நாக்கு. ஏதோ பசித்தால் வயிற்றிலே போட்டு அடைத்துக் கொள்ளலாம் என்று நினைத்தால் இந்த நாக்குக் குறுக்கே நிற்கிறது. வெறும் பசியை மாத்திரம் எண்ணுமல் பலவகை ருசியை எண்ண வேண்டியிருக்கிறது. மனிதன் வயிற்றுப் பாட்டைத் தீர்ப்பதற்கு மற்ற விலங்குகளிலிருந்து இந்தத் திறத்தில் வேறுபடுகிருன். விலங்கு பசியை உணருகிறது. உண்ணுகிறது. "இது நன்ருக இருக்கிறது. சுவையாக இருக்கிறது" என்று சொல்வது இல்லை. நாமோ உணவைச் சுவைக்கிருேம்; குறை கூறுகிருேம்; பாராட்டுகிருேம். வயிறு நிறையச் சோறு விழவேண்டும் என்பதைவிட, வாய்க்குச் சுவையாக உணவு வேண்டுமென்பதில் நாம் அதிகக் கவனமாக இருக்கிருேம். பசியைப் போக்குவதற்கு உண்டியின் அளவு உதவுகிறது ருசியைக் கூட்டுவதற்கும் உண்டியின் தரம் உதவுகிறது. விலங்கினத்தைப்போல வெறும் வயிறு மாத்திரம் நாம் வைத்திருந்தால் ஏதோ ஓரளவு அதை நிரப்பிக்கொள்ளலாம். அந்தப் பேய் போதாது என்று அதனேடு சேர்ந்த இந்தக் குட்டிப் பேயாகிய சுவையறியும்

நாக்கையும் இறைவன் வைத்திருக்கிறன். நாக்குத்தான் ரசனேந்திரியம்; அதாவது சுவையை உணரும் கருவி. நாக்குக்குச் சுவையான பொருள்களைத் தேடி அலைகிறன் மனிதன். விருப்பு வெறுப்பு, கோபதாபங்கள் எல்லாம் அதனால் உண்டாகின்றன.

அப்பர் சுவாமிகள் வயிற்றேடு நாக்கையும் ஒருசேர நினைத்துப் பார்த்தார். அப்பால் நாக்கோடு இனமாக உள்ள வேறு நான்கு பேர்களுடைய நினைவும் வந்தது. நாக்கு என்பது பஞ்சேந்திரியங்களில் ஒன்று. சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்து உணர்வுகளையும் உணர்வதற்கு நம்முடைய உடலில் ஐந்து கருவிகள் இருக்கின்றன. அவற்றை ஐம்பொறிகள் என்று சொல்கிறர்கள். மெய், வாய், விழி, நாசி, செவி என்னும் ஐந்துறுப்பும் ஐந்து வகையாக நுகர்ச்சிகளை நுகர்கின்றன. இந்த உலகத்திலுள்ள பொருள்கள் எல்லாவற்றையும் இந்த ஐந்து வாயில்களால் நாம் நுகர்கிறேம். இன்பத்தையும், துன்பத்தையும் மனம் உணர்கிறது. அது இந்த ஐம்பொறிகளையும் வாயிலாகக் கொண்டே பிரபஞ்சத்தை அநுபவிக்கிறது. நாக்கு ஆகிய ஒன்று மாத்திரமா நமக்குத் தடையாக இருக்கிறது. அதையும் உள்ளிட்ட ஐவருமே நமக்கு ஆசையை உண்டாக்குகிறர்கள். காதினலே பலவற்றைக் கேட்கிறேம். இனிமேல் கேட்க வேண்டியது இல்லையென்ற திருப்தி நமக்கு உண்டாவதில்லை. பரிச இந்திரியத்தினல் பல இன்ப அநுபவங்களை நுகர்கிறேம். இதனேடு இதற்கு முற்றுப் புள்ளி அமையட்டும் என்று நாம் விடுவதில்லை. நாக்கினல் நுகரும் சுவைக்கும் எல்லையே இல்லை. மூக்கினல் மோந்து பார்க்கிறேம். மனந்தரும் பொருளுக்கும் வரையறை கட்டுவதற்கு நாம் துணிவது இல்லை. இப்படி ஐந்து இந்திரியங்களாலும் நுகரும் நுகர்ச்சிக்கு நாம் என்றும் எல்லை கட்டுவது கிடையாது.

ஓரிடத்தில் தீ மூண்டு கொண்டிருந்தது. அதற்குப் பக்கத்தில் இரண்டு தகரப் பாத்திரங்களில் தண்ணீரைப் போன்ற பொருள்கள் நிரப்பி வைத்திருந்தார்கள். ஒரு டின்னில் தண்ணீர், மற்ருெரு டின்னில் மண் எண்ணெய் இருந்தன. மண் எண்ணெயின் திறன் தெரியாத ஒரு பேதை நெருப்பை அவிக்கவேண்டுமென்று எண்ணி அதைத் தண்ணீர் என்று நினைத்து நெருப்பில் கொட்டிவிடுகிறன். அதனல் நெருப்பு அவியுமா? நெருப்புச் சுடர் விட்டு வளரும். அதுபோல் நம்முடைய இந்திரியங்களை அடக்க வேண்டுமானல் அவற்றுக்குரிய உணர்வுகளாகிய அனுபவங்களை அளித்து அடக்க முடியாது. அந்த அனுபவத்தால் அவற்றின் ஆசை மேலும் மேலும் வளர்கிறதேயன்றிச் சுருங்குவது இல்லை. அவற்றை அடக்குவதற்கு ஞானமும், பக்தியும் துணை செய்ய வேண்டுமேயன்றி அனுபவித்து அடக்கி விடலாம் என்பது நடவாத காரியம்.

"கைவாய் கதிர்வேல் முருகன் கழல்பெற்று
உய்வாய் மனனே ஒழிவாய் ஒழிவாய்
மெய்வாய் விழி நாசியொடும் செவியாம்
ஐவாய் வழிசெல்லும் அவாவினையே."

என்று அருணகிரியார் உபதேசம் செய்கிறர்.

இந்த ஐந்து பேர்களும் நம் உள்ளே இருந்து நம்மை முடுக்குகிறர்கள். தமக்கு இரையாக உள்ள பொருள்களின் மேல் முடுகுகிறர்கள். எத்தனை சொன்னலும் தாம் பெற வேண்டிய அனுபவத்தைவிட்டு அவர்கள் விலகுவது இல்லை. பற்றினதையே பற்றிக் கொண்டு ஒரே மூர்க்கத்தனத்துடன் இருக்கிறர்கள். நேற்றுத்தான் உண்டோமே, இன்று சுவை பார்க்காமல் உண்போம் என்று நாக்கு நினைக்கிறது இல்லை. நேற்றுத்தான் இந்த மணத்தை நுகர்ந்தோமே, இன்று அத்தனை ஆசை வேண்டியதில்லையென்று மூக்கு எண்ணுவது இல்லை. இப்படியே எல்லா இந்திரியங்களும் ஒரு நாளைக்கு ஒருநாள் ஆசையை வளர்த்துக்கொண்டு, தாம் பெறவேண்டிய பொருள்களை மிகுதியாகப் பெறவேண்டும் என்று ஆசைப்படுகின்றனவே யொழியத் திருப்தி பெறுவது இல்லை. வயிற்றை மாத்திரம் தூராக்குழி என்றுநினைக்கிறேம். உண்மையைச் சொல்லப் போனல் ஐம்பொறிகளும் தூராக் குழிகளேயாகும்.

தாம் அனுபவிக்கின்ற அனுபவங்கள் நிறைவு பெருமலே மக்கள் இறந்துவிடுகிறர்கள். ஒரு பிள்ளைக்குத் தாம் விரும்பும் பொருள் கிடைக்காமல் இருக்குமானல் அதனிடம் கருணையுடைய தாய் தந்தையர்கள் அந்தப் பொருளை அவனுக்குக் கொடுப்பார்கள். அதுபோல், பொறிகளால் நுகரும் இன்பம் நிறை

வாகத் தமக்குக் கிடைக்கவில்லையே என்று மக்கள் இறந்துபடும்போது ஆண்டவன், "ஐயோ பாவம்! இவர்கள் மறுபடியும் பிறந்து அநுபவ நிறைவு பெறட்டும் என்று மீட்டும் பிறப்பிக்கிறான். அது அவனுடைய கருணைச் செயலாகும். ஆனால் எத்தனை பிறவி எடுத்தாலும் உயிர்களுக்கு ஐந்து பொறிகளால் நுகரும் அநுபவத்தில் நிறைவு ஏற்படுவதில்லை. ஒரு பிறவிக்கு ஒரு பிறவி ஆசை என்கிறதே யொழியக் குறைவது இல்லை. பற்றினதையே பற்றி ஒரே முரட்டுப் பிடிவாதமாக, அநுபவிக்கும் பொருள்களில் ஈடுபட்டுக் கிடக்கின்றன இந்தஐந்து பொறிகளும்.

அறிவும், இதயமும் கொண்டு வாழ்கின்ற மனிதனை நேர் வழியில் செல்லவொட்டாமல் இந்த ஐந்து பேர்களும் தடுக்கிறார்கள். அவர்களுக்கு அடிமையாகவேஇந்த உடம்போடுநாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். நமக்கு என்றும் தனிச் சுதந்திரம் இல்லாமல் அவர்கள் தம்முடைய போக்கிலே நம்மை இழுக்கிறார்கள். ஒருவர் இருவர் அல்ல. ஐந்து பேர்கள் இழுக்கிறார்கள். அந்த இழுப்புக்கு நடுவில் நாம் ஒருமைமனம் கொள்வது எப்படி? இறைவனை வாழ்த்துவது எப்படி? அமைதி பெறுவது எப்படி?

"ஓர ஒட்டார் ஒன்றை உன்ன
ஒட்டார் மலர்இட்டு உனதாள்
சேரஒட் டார்ஐவர்;
செய்வதென் யான்?"

என்று அருணகிரிநாதர் சொல்கிறார்.

இவ்வாறு மனிதன் வயிறால் படுகிற பாடு போதாது என்று ஐந்து இந்திரியங்களாலும் மிக்க துன்பத்தை அடைகிறான். ஐம்பெரும் பாதகர்கள் என்று சொல்வது வழக்கம். நமக்கு இந்த ஐந்து இந்திரியங்களும் ஐம்பெரும் பாதகர்களாக உடன் இருந்து துன்புறுத்துகிறார்கள். அவர்களோடு ஒட்டி நாம் வாழ்வது நடவாத காரியம். அவர்களால் அடக்கப்பட்டு, அவர்களுக்கு அடிமைகளாக நாம் வாழ்கிறோம். அவர்கள் நமக்கு அடிமைகளாக மாறினால்தான் இன்பம் உண்டாகும். இந்தக் கருத்தைத் திருமூலர் அழகாகச் சொல்கிறார்.

ஒரு பிராமணனுடைய வீட்டில் ஐந்து மாடுகள் இருந்தனவாம், நல்ல பால் கறக்கக் கூடிய மாடுகள்தாம். ஆனால் அந்த மாடுகள் வெறி கொண்டிருந்தன. அவற்றை அடக்குவார் யாரும் இல்லை. மனம் போன போக்கில் வெறி கொண்டு அலைந்தன. ஊராருடைய வயல்களில் மேய்ந்து அழித்தன. அவற்றை அடக்கி மேய்ப்பதற்கு யாரும் இல்லாமையினால் அவை வெறித்துத்திரிந்தன. மாடுகளைப்பெற்ற அந்தணனுக்கு அவற்றால் ஒரு பயன் இல்லாவிட்டாலும், தீங்கு இல்லாமலாவது இருக்கக் கூடாதா? "உங்கள் மாடு இன்று என் வயலை அழித்தது; அவன் வயலை அழித்தது" என்று ஊரார் அவனோடு சண்டைக்கு வந்து கொண்டிருந்தார்கள். இப்படிப் பிறர் வந்து கூறும் திட்டுக்களையும், குறைகளையும் கேட்டுக் கேட்டு அவனுக்கே சலித்துப் போய் விட்டது. இந்த நிலையில், "ஐயோ நான் என்ன செய்வேன்?" என்று வருந்தினான். நல்ல வேளையாக அவனுக்குக் கெட்டிக்காரப் பையன் ஒருவன் கிடைத்தான். அவன் பசுமாடுகளை அடக்கிமேய்க்கும் ஆற்றல் பெற்றவன். அந்த ஐந்து மாடுகளையும் சரியான நேரத்தில் வரையறையாகப் புல் மேயச் செய்து, தண்ணீர் காட்டி, அவற்றின் கொண்டித்தனத்தை அடக்கினான். அப்புறம் பால் கறந்தான். எத்தனை பால் கிடைத்தது தெரியுமா? முன்பெல்லாம் ஒரு சொட்டுப் பாலைப் பெற்று அறியாத அந்தணன் இப்போது நிரம்பப் பாலைப் பெற்றான். இப்படி ஒரு கதையைத் திருமூலர் சொல்கிறார்.

"பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு;
மேய்ப்பாரும் இன்றி வெறித்துத் திரிவன;
மேய்ப்பாரும் உண்டாய் வெறியும் அடங்கினல்
பார்ப்பான் பசுஐந்தும் பாலாச் சொரியுமே."

இந்தக் கதை ஓர் உள்ளுறையைக் கொண்டது. அந்தணன் தான் மனிதன். மனிதன் தன் உடம்பாகிய வீட்டில் ஐந்து இந்திரியங்களாகிய மாடுகளை வைத்திருக்கிறான். ஐந்து இந்திரியங்களும்இறைவனோடு சம்பந்தமான செயல்களைச் செய்து பக்தியையும், அருள் அநுபவத்தையும் பெறுவதற்குக் கருவிகளாக இருக்கவேண்டும். ஆனால் அப்படி இல்லாமல் பிரபஞ்ச வாழ்க்கையில் ஈடுபட்டுத் தம் போக்குப்படியே போகின்றன. அதனால் அறிவு கலங்குகிறது. மனம் ஒருமைப்பாடு அடைவது இல்லை. மேலும் பிறவி வருவதற்குரிய காரியங்களைச் செய்கிறான். இவ்வாறு அந்த ஐந்து இந்திரியங்

களும் அவனுக்குப் பகைகளாக முடிகின்றன. அப்படியின்றி அறிவு என்ற ஒன்று துணையாக வந்தால் ஐந்து இந்திரியங்களையும் அடக்கும் முறை மனிதனுக்குக் கைவரும். அவற்றை எந்த இந்திரியங்கள் மனிதனுக்குத் தீங்கைச் செய்தனவோ அவையே அவனுக்கு நல்லவை களாக நின்று இறைவன்மாட்டு அவன் செயல் களைச் செலுத்தி நன்மை உண்டாக்கும். இதைத்தான் இந்தப் பாட்டு உள்ளுறையாகக் கொண்டுள்ளது.

அடங்காத மாடுகள் போன்ற ஐந்து இந்திரியங்களால் மனிதனுக்கு மேலும் மேலும் துன்பமே உண்டாகிறது. அந்த நிலையில் துயரமுற்று அருணகிரியார் சொன்னதை முன்பு பார்த்தோம். அப்பர் சுவாமிகள் அதைத் தான் சொல்கிறார்.

"எம்பெருமானே, என்னுள் இருந்துஐந்து பேர் தமக்குரிய பிரபஞ்ச அநுபவத்திலே மிக்க வேகமாகச் செல்கிறார்கள். நான் எத்தனை தடுத்தும் அவர்கள் செயல் நிற்பது இல்லை. மகா மூர்க்கர்களாக இருக்கிறார்கள். எத்தனை பெற்றாலும் திருப்தி அடைவதே இல்லை. இந்த ஐந்து பேர்களும் தங்கள் தங்களுடைய உண வாகிய பொருள்களிலேயே ஈடுபட்டு வேறு எதுவும் நினையாமல் செய்கிறார்கள். இவர் களோடு வாழ்வது என்பது முடியாத காரியம். நான் உனக்கு அடிமையானவன். இந்த ஐந்து பேர்களுக்கு அடிமையாக இருக்க முடியாது. இந்த ஐவரும் என்னைத் தங்களுக்கு அடிமை யாக்க முற்படுகிறார்கள். அப்படி வாழ்வது எனக்குப் பொருத்தமாக இல்லை. என்னால் வாழ முடியாது. நான் உன்னுடைய அடியானாக வாழ விரும்புகிறேன்" என்று முறையிடுகிறார்,

முடுகுவர் இருந்துள் ஐவர்; மூர்க்கரே; இவர்க ளோடும்
அடியனேன் வாழ மாட்டேன்.

"ஐந்து பேர் இருந்தாலும் ஒருவாறு இவர்களை நல்வழிப்படுத்தி நமக்கு நன்மை செய்யலாமென்று பார்த்தேன். ஆனால் அவர் கள் மகா மூர்க்கர்களாகக் கொண்டதே கோலம், கண்டதே காட்சியாகப் பற்றிக் கொண்டு விடாமல் இருக்கிறார்கள். இவர் களோடு வாழ மாட்டேன்" என்றார்.

வயிற்றுக்குச் சோறு உண்ணுவதும், ஐந்து இந்திரியங்களுக்குரிய அநுபவங்களைக் கொடுப்பதுமாகிய இவற்றால் வாழ்நாளைப் போக்கினால் நாம் வயிற்றுக்கும், இந்திரியங் களுக்கும் அடிமையாக நேர்ந்து விடும். அப்படியின்றி இறைவனுக்கு அடியனாக வாழ வேண்டுமானால் இந்த ஐவர்க்கும் அடிமைப் படக் கூடாது.

ஐவர்க்கு அடிமைப்படாமல் வாழ்வதற்கு வழி எது? நம்முடைய முயற்சியினால் அது எளிதில் கை கூடாது. இறைவனுடைய திரு வருள் துணை கொண்டு ஐவர்க்கும் அடிமை யாகாமல் வாழ முடியும். வேறு வகையில் சொன்னால், இறைவனுக்கு அடிமைப்பட்டு விட்டால் அப்பால் பிறவற்றுக்கு அடிமைப்படும் நிலை மாறி விடும். இதைத்தான் திரு நாவுக்கரசர் இந்தப் பாட்டில் குறிப்பாகத் தெரி விக்கிறார்.

படுகுழிப் பவ்வத் தன்ன
பண்டியைப் பெய்த வாற்றால்
கெடுவதிம் மனிதர் வாழ்க்கை
காண்டொறும் கேது கின்றேன்;
முடுகுவர் இருந்துள் ஐவர்
மூர்க்கரே; இவர்க ளோடும்
அடியனேன் வாழ மாட்டேன்,
ஆரூர்மூ லட்ட னீரே.

[படுகுழி - மிக்க ஆழமான குழி, பவ்வம் - கடல், பண்டி - வயிறு, பெய்தல் - வைத்தல், கேதுகின்றேன் — துன்புறுகிறேன்; கேதம் என்னும் வடசொல்லிலிருந்து வினையை உண் டாக்கிக் கொண்டார். மூலட்டனர் என்னும் சொல் மூலட்டனீர் என்னும் விளியேற்றது.

இது அப்பர் சுவாமிகள் திருவாய் மலர்ந் தருளிய திரு ஆரூர்த் திருநேரிசையில் ஒரு பாட்டு.



# SAINT APPAR'S

## SACRED THEVARAM

Thiru. K. M. B. TIRUVACHAKAMANI, B.A.B.L.

The sacred, authenticated and inspired hymnology of Saivism has been sung by various Nainmars or canonised saints of the Saiva Calendar. Of these authors Saints Gnanasambandar, Navukkarasar and Sundaramurthi form an integral triad and a class by themselves and their compositions are of a similar nature and form and they are collectively called the Thevaram. They are all first class musical pieces sung in a variety of Pans or tunes. They are otherwise known as Adangan Murai (அடங்கன் முறை). While all the compositions had been codified by Saint Nambi Andar Nambi in the beginning of the eleventh century into the "Twelve Tirumurais" (பன்னிரு திருமுறை), all the poems and songs of the Trinity of Nainmars mentioned above had been placed in the first 7 Tirumurais or Parts. And among these 7 Parts, the compositions of Gnanasambandar constitute the first 3 parts, those of Appar or Navukkarasar form the next 3 parts, while the residuary seventh part contains the songs of Sundaramurthi Nayanar. Thus the sacred songs of St. Appar which we are briefly considering in this article are found in Tirumurais numbering 4, 5 and 6 of the code of Twelve Tirumurais.

The fourth Tirumurai contains 113 decads with 1070 stanzas; the fifth consists of 100 decads with 1075 stanzas and the sixth has 99 decads with 981 stanzas. Thus, 312 decads with 3066 stanzas are the entire works now extant of St. Appar. These alone have been vouchsafed unto us from out of the thousands of compositions sung by him. The fourth Tirumurai or the first section of St. Appar's works has three kinds of metrical pieces; they are (1) the musical songs or Pans (பண்), poems of five feet in each line called Tirunerisai (திருநேரிசை) and (3) poems of five feet but of a different metre i.e கட்டளைக் கலித்துறை called Tiruviruttham (திரு விருத்தம்). The fifth Tirumurai consists exclusively of a kind of poem of four feet called Tirukkurunthogai (திருக் குறுந்தொகை) while the sixth Tirumurai contains poems of 8 feet called Tiruthandakam (திருத்தாண்டகம்).

Regarding the respective contents and nature of these three parts, the first part may be said to consist of poems of literary finesse and poetic beauties, the second part may be said to have didactic poems and direct appeals to mankind and the third part may be described as being full of the nature of God, His ways of gracing the souls and the innumerable legends and Puranic stories about Him.

In these days of secessationist politics and separatist tendencies as well as racial discriminations and linguistic rivalries, the unifying influence and the integrating theory of Saint Appar will be not only warmly welcomed but also highly refreshing.

Regarding Siva, he sings :

(1) 'The glorious one of Tamilian race and Aryans too" (செந்தமிழோடாரியனைச் சீரியானை)

(2) Behold He is an Aryan! Behold He is a Tamilian (ஆரியன் கண்டாய், தமிழன் கண்டாய்).

Regarding Siva's attachment to the languages, he says

(1) "Behold He has become the three Kinds of Tamil and Vedas four!"

(முத்தமிழும் நான்மறையும் ஆனான்கண் டாய்)

(2) "Behold He is the one who hath become the Northern lore of Sanskrit and the Southern Tamil and the Vedas four"

(வடமொழியும் தென்தமிழும் மறைகள் நான்கும் ஆனவன்காண்)

(3) "He is the One Who hath become Sanskrit, Tamil and music's hum"

(ஆரியம் தமிழோடிசை யானவன்.).

Saint Appar's balanced and blissful vision of God is equally illuminating and integral. He has seen, he swears, the twin forms of Siva and Vishnu in one and the same figure and this delightful and authentic picture of unity in diversity or Abheda Drishti is a powerful weapon of propaganda in the hands of those modern group of progressive Hindus who wish to establish a stronger religion of sectless integration.

Says Saint Appar :

(1) "O Thou of Neithanam ; Thou art pleased with Vishnu Who is Thy Half!"

(மாலொருபாகமாக மகிழ்ந்த நெய்த்தானனுரே)

(2) "He has placed the Mayan of earthy food,

Within His frame as His own Partner good."

(மண்ணினையுண்டமாயன் தன்னையோர் பாகம் கொண்டார்)

(3) And by identifying Vishnu with Sivan's Sakti, St. Appar has sought to draw into this religious integration the Sakta School of worshippor's too!

"None but Hari is Mistress true

Unto our Sire of Ayyaru"

(அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாறனுர்க்கே.)

The catholicity of outlook as well as the comprehensive sweep of knowledge possessed by the ripe old sage, St. Appar did not stop with his throwing a bridge over Saivism, Vaishnavism and Saktaism alone. His mind was big enough and his heart was broad enough to meet in the various other numberless creeds and crowds also which cumber this land.

About them he says as follows :

(1) "Behold, He is the Lord of all the six-fold creeds on earth.

(சமயம் அவை ஆறினுக்கும் தலைவன்தான் காண்)

(2) "He's indeed the Direction Who everywhere doth stand, To all His diverse bondsmen as their creeds of six-fold brand."

(தொண்டர்க்கு அங்கங்கே அறு சமயமாகி நின்ற திக்கினை)

(3) "He's the flame-like One Who stands Even as the six creeds' forms."

(சமயங்கள் ஆறின் உருவாகி நின்ற தழலோன்)

(4) "The pair of sacred feet of Innumbar's own Lord, Have the greatness of quite clarifying the minds of those, Who do follow all the six-fold creed, Respectively ; they have too the grace to uplift well, And place such cultured souls on proper path."

(அறு சமயத்தவரவரைத் தேற்றும் தகையன தேறிய தொண்டரைச்
செந்நெறிக்கே ஏற்றும் தகையன இன்னம்பரான்றன் இணையடியே.)

(5) "Even if the narrow-minded ones should form a creed And pray with anger, that will please our Lord."

(விரிவிலா அறிவினர்கள் வேறொரு சமயம் செய்து எரிவினுற் சொன்னுரேனும் எம்பிராற் கேற்ற தாகும்).

In unison with such limitless sympathies and liberal notions, St. Appar's views on most

of the socio—religious problems of today are uniquely progressive, courageous and even unorthodox.

1. O, ye the mean who mouth Shastras galore!

With all your gotras and your stocks of yore.

What could indeed you achieve here on earth?

If only ye could perceive Siva's worth
And worship Him, within a moment too
Ye will be graced by the Lord of Marperu!
(சாத்திரம் பல பேசும் சழக்கர்காள் ......)

In one word St. Appar disapproves of the mere external shows and symbols bereft of interior love and devotion. And when even the so-called inferior castmen bear real love towords God, He rushes to grace and uplift them, says Appar.

In the same spirit, St. Appar condemns the discriminating ways and differentiating attitudes adopted by some hypocritical Saducees and Pharisees in Saivism who dishonour and insult the 'low-caste' bhaktas though they too adorn their bodies with the holy ashes and Rudraksha beads. Lord Siva will never appar in the hearts of such spiritual Rakshasas, says St. Appar.

Like all the true spiritual and enlightened souls, St. Appar too had realised the ultity as well as the limitations of ceremonials and sanctifying observances, When once you begin to shed tears at the mere mention of the name of Hari or Hara, all samskaras fall out and you need observe the Sandyas etc, no more, says Sri Ramakrishna.

The same truth had been more picturesquely preached by our beloved Tamil saint Appar about thousand three hundred years before.

"He's the Lord Who would not fall foul of

But, Who would forbear with His grace the ways

Of tabooed life of such of His bondsmen

As ever revel in bliss and rapture great

With streams of love-born tears which won't abate!"

Regarding God Siva and His form and visibility etc. St. Appar says that "He is sans-equal, He is not one, He belongs to no one place, He is sans comparison." Yet, whatever form He now and again chooses to assume out of His grace, no one can hope to perceive except through the eyes of His grace furnished by him.

Regarding Lord Siva, St. Appar says that "He is not only the latest and freshest but also the most ancient". St. Manickavachaker too has said the same thing. Again, as Manickavachakar has also said, St. Appar sings that "Siva has perceived everything without seeing, and has become the subtlest without shrinking or dwindling." In the word Om the component letters of A, U, and M are mystically representative of Brahmma, Vishnu and Rudra. While pronouncing the word there is an extra half a matra of sound—a prolongation of 'M'. And Lord Siva the Fourth or Turiyam is said to be represented by this unseen but half a matra's sound in the word 'Om'. And St. Appar refers to this Siddhantic truth by calling the feet of Siva as "the feet which resides in half a matra's sound."

Again Lord Siva being half male and half female Siva — Sakti, the right foot of the Siva portion and the left foot of the Sakti portion are said to be not of equal length or size. Naturally, the feminine foot is smaller than the masculine. And St. Appar refers to this truth in his Tiruthandakam as follows. "the pair of feet the form of one not being on all fours with the form of the other". And another poet has utilised this singular

mystic truth to glorify the couplet of Tirukkural by comparing its feet with both the feet of Siva, because they are of unequal length like the latter.

The Rig Veda says that Brahman has become this universe only to the extent of one fourth of its whole and that three—fourths of Itself is beyond this universe, untouched and unaffected by it. This truth is perhaps reiterated in a different way by the Saiva Siddhantins through their definition of God according to which Siva is at once "identical with, together with and separate from the universe." And St. Appar has this great doctrine in his mind when he declares in a Tiruthandakam that "Siva is beyond the yonder which is yonder than the beyond" (அப்பாலைக் கப்பாலைக் கப்பாலானை). In another Tiruthandakam he refers to God's transcendent and immanent aspects in these words: "He who is beyond this universe and within it too." (அப்பாலை அண்டத்துக் கப்பாலானை)

In many places St. Appar describes Lord Siva as being ever—ready to do the behests of melting—hearted devotees of whose needs He is fully aware. Elsewhere he sings that Siva is fond and in the habit of "destroying the mental anxieties and miseries of his devotees and of sublimating the stock of and blessing such of His serfs as may be wallowing in the society devoid of all social worth and that His inherent nature of commisserating grace and mercy is responsible for such acts of His." There is, however, one Kind of autobiographical reference by him repeated many times in his songs and it is not quite clear to us. He says: "He has enslaved me by means of a documentary evidence." With reference to Saint Sundarar it is clear but not with reference to St. Appar.

One of his best pieces of mystical description of the way the soul becomes the slave of of Lord Siva is contained in a Thandagam of Tiruvarur. Herein the soul is pictured as the beloved virgin and God as her lover. "She had well heard of His name before and heard described that Murthi's form. Again she heard of His Arur and, 'gain she, 'came love—mad for Him. That day itself she left parents and gave up worldly conduct—code, Forgot herself, got changed in name and got at Her own Lord's feet merged."

The change effected in a maid's name is that she Kamala becomes after her marriage Mrs. Ramaswamy. Similarly the change effected in the case of a soul is that சீவன் (soul) becomes after realisation, சிவன் (Siva).



# தவப் பெருந் தேவு செய்தார்

திரு. கே. எம். வேங்கடராமையா, M.A.,B.O.L. திருப்பனந்தாள்.

### அன்றொரு நாள்

ஏழாம் நூற்றாண்டின் இடைப்பகுதி—திருச் சாய்க்காடு திருச்சாய்க் காட்டினி துறையுஞ் செல்வர் திருக்கோயிலில்—பூசுநீறு போல் உள்ளும் புனிதர்கள்—ஈர அன்பினர் யாதும் குறைவிலார்—கைத்திருத் தொண்டு செய் கடப்பாட்டினர்—பாரம் ஈசன் பணியல தொன் றிலார்—பலர் குழுமினர். நிரந்த நீற்றொளியால் நிறை தூய்மையால், அஞ்செழுத்து ஓசை பொலிதலால் பாற்கடல் போன்ற காட்சி! ஞானத்தவ முனிவர் திருநாவுக்கரசர் எழுந் தருளுகின்றார்—நாவார நம்பனையே பாடப் பெற்றோம் என்ற பெருமித நடை—கந்தை மிகையாம் கருத்து—கையுழவாரப் படை—வடி விற் பொலி திருநீற்றுத் தோற்றம்—ஹரஹர முழக்கம்—யாவரும் பூமழை பொழிகின்றனர்—நாவரசர் பாமழை பொழிகிறார்! ஒரு பாடல்—கண்ணப்பருடைய தொண்டு—

குவப் பெருந் தடக்கை வேடன்
 கொடுஞ்சிலை இறைச்சிப் பாரம்
துவர்ப்பெருஞ் செருப்பால் நீக்கித்
 தூயவாய்க் கலசம் ஆட்ட
உவப்பெருங் குருதி சோர
 ஒருகணை இடந்தங் கப்பத்
தவப்பெருந் தேவு செய்தார்
 சாய்க்காடு மேவி னாரே

### பின்னொரு நாள்

பதின் மூன்றும் நூற்றாண்டின் இடைப்பகுதி —திருச்சாய்க்காடு—திருக்காளத்தி ஆண்டார் என்ற ஒரு மெய்யன்பர்—திருமுறைகள் பாடியும் கேட்டும் மகிழ்பவர்—முத்திறத்தார் ஈசன் முதல் திறத்தைப்பாடிய திருநெறிய தெய்வத் தமிழைப் பாடுகிறார், ஒரு அன்பர்—

குவப்பெருந் தடக்கை வேடன்
 கொடுஞ்சிலை இறைச்சிப் பாரம்
துவர்ப்பெருஞ் செருப்பால் நீக்கித்
 தூயவாய்க் கலசம் ஆட்ட
உவப்பெருங் குருதி சோர
 ஒருகணை யிடந்தங் கப்பத்
தவப்பெருந் தேவு செய்தார்
 சாய்க்காடு மேவி னாரே.

இத்திரு நேரிசையைத் திருக்காளத்தி ஆண் டார் பரவசமாகக் கேட்டுக் கொண்டிருந்தார்—திடீரெனக் குதித்தெழுந்தார் — தவப்பெருந் தேவு செய்தார் — தவப் பெருந் தேவு செய்தார் என்று பலமுறை கூறினார்—மகிழ்ந்தார்—திருக் கோயில் வழிபாடு முடித்துக் கொண்டார்—வீடு அடைந்தார்.

### மறு ஆண்டு

இறைவன் திருவருளால் திருக்காளத்தி ஆண்டார்க்கு ஒரு ஆண் மகவு பிறந்தது—ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர் பலர் குழுமினர். அவ்வாண் மகவுக்குத் தவப் பெருந்தேவு செய்தான் என்று பெயரிட்டனர். திருக்காளத்தி ஆண்டார் அடைந்த மகிழ்ச் சிக்கு அளவில்லை. இக்குழந்தை சிவக் கொழுந் தென வளர்ந்தது.

### சில ஆண்டுகட்குப் பின்

கண்ணப்பரைத் தவப்பெருந் தேவு செய்த பெம்மானாகிய காளத்தி நாதரைக் கண்டு கும் பிடத் திருக்காளத்திக்குச் சென்றார், காளத்தி ஆண்டார்; சென்றவர் அங்கேயே தங்கினார்—சிவத்தொண்டு பூண்டு 'பூணியாய்ப் பணி செய்' என்றவாறு பணி செய்து வரலாயினர். தவப் பெருந் தேவு செய்தாரும் திருக்காளத்தி யில் திருக்கோயில் அலுவல் செய்து வரலானார்.

## சகர யாண்டு 1242

திருக்காளத்தி — திருமணிக் கெங்கை யுடைய நாயனுர் கோயில்—திருமணிக்கெங் கைச் சீயன் என்ற அதிகாரி அவ்வூரிலுள்ள சில நிலங்களின் உரிமைகளை மாற்றியமைக் கிருர்—இந்தச் சாஸனத்தில் (A. R. No 198 of 1903) பலரும் கையொப்ப மிடுகிருர்கள். அவர்களுள் ஒருவர் திருக்காளத்தி ஆண்டார் **தவப்பெருந் தேவு செய்தார்.** இதே நாளில் இன்னெரு தரும சாஸனமும் எழுதப் பெறு கின்றது. திருக்காளத்தி—திருமணிக்கெங்கை யுடைய நாயனுர் கோயில் வடக்குத் திருவீதி —தெற்கடையப் பாதியில் **தவப்பெருந் தேவு செய்தார்க்கு** உரிய நிலம்—பணம் நாற்பத் தொன்பதுக்கு விலைக்குக் கொண்டது—இன் னும் சில நிலங்களையும் திருநாமத்துக் காணி யாகத் திருமணிக் கெங்கைச் சீயனுர் விலைக்குக் கொண்டார். (A. R. No. 199 of 1903)

## முடிப்புரை

எனவே, திருநாவுக்கரசர் திருச்சாய்க் காட்டுத் திருநேரிசையில் திருக்கண்ணப்பர் வரலாற்றைப் பாட, அதிற் கண்ட தவப் பெருந் தேவு செய்தார் என்ற சொற்றெடரை ஒரு அன் பர் தன் மகற்கு இட்டார் என்றும், இப் பெயர் 13-ம் நூற்ருண்டில் திருக்காளத்தித் திருக் கோயில் சாஸனங்களிற் காணப்படுகின்றன என்றும், திருமுறைச் சொற்றெடர்களை மக் கட்கு இடும் பழக்கம் முன்னுளில் மிக்கிருந்த மைக்கு இதுவும் ஒரு சான்ருகும் என்றும், சைவராவார் இந்த முறையை மீண்டும் வழக் காருக் கொள்ளுதல் தகும் என்றும் அறியலாம்.



இடையருப் பேரன்பும் மழைவாரும்
இணைவிழியும் உழவா ரத்திண்

படையருத் திருக்கரமும் சிவபெருமான்
திருவடிக்கே பதித்த நெஞ்சும்

நடையருப் பெருந்துறவும் வாகீசப்
பெருந்தகைதன் ஞானப் பாடல்

தொடையருச் செவ்வாயும் சிவவேடப்
பொலிவழகும் துதித்து வாழ்வாம்

—சிவஞானசுவாமிகள்.

# அவதாரம் செய்தார்

"தருமபுர ஆதீன வித்துவான், திருவண்ணுமலை ஆதீன விரிவுரையரசு,
மதுரை ஆதீனச் சிந்தாந்த சைவ வித்தகர், சித்தாந்தப் புலவர் மாமணி,
பாலகவி" வயிநாகரம் வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,
(தத்புருஷதேசிகர்), தேவகோட்டை.

தெய்வப் புலமைச் சேக்கிழார், பெருமான் அருளிச் செய்த திருத்தொண்டர் புராணம் சிவஞானியர்களின் சீரிய வரலாறுகள் கூறும் ஒரு சைவ சம்பிரதாயப் பெருநூல். இந்நூலில் சைவ மரபும், நெறிகளும் பெரிதும் போற்றிப் பாதுகாக்கப் பெற்றுள்ளன. இதனை இலக்கியக்கண் கொண்டு நோக்குபவர்களுக்கு அடிப்படை உண்மைகளைத் தையும் அறிந்துக்கொள்ளும் வாய்ப்புக் கிட்டாது. எத்தனையோ வகையான சம்பிரதாயம் உண்மைகளை வெளிப்படையிலும், குறிப்பிலும் காட்டிச்சமய வரம்பை நிலைநாட்டி இருக்கும் இவ்வாசிரியர் பெருமானுக்குச் சைவ உலகம் எழுமையும் பணி பூண்டு நன்றி செலுத்துங் கடப்பாடு உடையது.

திருமுறைகளுள் பன்னிரண்டாவதாகக் குறிக்கப் பெறுகிறது திருத்தொண்டர் புராணம், மந்திரங்களுள் பன்னிரண்டாவதாகக் குறிக்கப் பெறுகின்ற வித்தியாதேகத்தை ஒப்பது என்று சான்றோர் கூறுவர். பதினொரு சம்ஹிதா மந்திரங்களுக்கும் அவற்றின் உயிர் நாடியாகிய மூலமந்திரத்துக்கும் உடம்பாக அமைந்திருப்பது **வித்தியா தேக மந்திரம்.** அது போல முன்னைப் பதினொரு திருமுறைகளுக்கும் அவற்றின் உயிர்நாடியாகிய வேதாகமங்களுக்கும் திருத் தொண்டர் புராணம் தேகமாக அமைந்திருக்கிறது.

சேக்கிழார் பெருமானது புராணம் பாடிய **உமாபதி சிவாசாரிய சுவாமிகள்** "சங்கரன்தாள் தமது சிரங் கொள்திருத் தொண்டர் புராணத்தை அளவிட நம் சேக்கிழார்க் கெளிதலது தேவர்க்கும் அரிதே" என்று கூறித் திருத்தொண்டர்களது பழைய வரலாற்றை அளவிடுதற்குச் சேக்கிழார் ஒருவரே வல்லவர் என்பதை வலியுறுத்தினுர்கள். இதில் "வரலாறு கூறுதற்கு" என்று சொல்லாது "வரலாற்றை அளவிடுதற்கு" என்று சொல்லியிருப்பதிலிருந்து மற்ற ஆசிரியர்களைப்போலச் சேக்கிழார்பெருமான் கதை சொல்லுங் குறிப்பு மட்டும் உடையவரல்லரென்பதும்,வரலாறுகளிலுள்ள சம்பிரதாய உண்மைகளை வெளிப்படுத்துதலில் உண்மை நாட்டங் கொண்டிருந்தாரென்பதும் அறியக்கிடக்கின்றன. இந்த முறையில் சம்பிரதாயக் களஞ்சியமாக விளங்கும் திருத்தொண்டர் புராணம் சைவ பாரம்பரிய நெறியைக் கடைப்பிடித்து ஒழுகுகின்றவர்களுக்கு ஒரு அறக்கட்டளை நூலாகவும் அமைந்திருக்கின்றது. இத்தகைய ஞானப் பெருநூலில்,

" திலகவதி யார்பிறந்து
சிலமுறையாண் டகன்றதற்பின்

அலகில்கலைத் துறைதழைப்ப
அருந்தவத்தோர் நெறிவாழ

உலகில்வரும் இருள்நீக்கி
ஒளிவிளங்கு கதிர்போற்பின்

மலரும்மருள் நீக்கியார்
வந்தவதா ரம்செய்தார் ”

என்று திருநாவுக்கரசு சுவாமிகளின் தோற்றம் குறிக்கப் பெற்றுள்ளது. அப்ப ரடிகளின் தமக்கையாகிய திலகவதி யம்மையார் உடன் பிறந்த முறைமை யினுல் அவரது சகோதரியாகக் குறிக்கப் பெற்ருரெனினும், சுவாமிகளது வரலாற் றைச் சமயக்கண் கொண்டு பார்ப்பவர் களுக்குச் சுவாமிகளை சைவ உலகத் துக்குப் பெற்றுத்தந்த தாயாகவும், சைவா சாரியராக்கிய குருமூர்த்தியாகவுமே அவர் காணப்பெறுவாரென்பது உறுதி. எந்த வகையிலும் அப்பர் சுவாமிகளுக்கு ஒரு படி மேலாக வைத்து மதிக்கப் பெறுகின்ற திலகவதியம்மையாரது நிலவுலகத்தோற் றத்தை “ **நிகழுமலர்ச் செங்கமல நிறை இதழின் அகவயினில் திகழவரும் திரு வனைய திலகவதியார் பிறந்தார்**” என்று ஆசிரியர் சேக்கிழார் பெருமான் கூறு கிருர். திலகவதியாரைப் **பிறந்தார்** என்றும், திருநாவுக்கரசு சுவாமிகளை **அவதாரஞ் செய்தார்** என்றும் அருளு கின்ற சம்பிரதாய உண்மை நமது நினை வில் இருத்தத் தக்கது.

அம்மையாரைப் பிறந்தாரென்று முதற்பாடலில் உரைத்ததோடு அமை யாது அடுத்தபாடலிலும் “ **திலகவதியார் பிறந்து** ” என்று அவரது பிறப்புண் மையை வலியுறுத்துகின்ற ஆசிரியர் பெருமான், அவ்விரண்டாம் பாடலி லேயே அப்பர் சுவாமிகளை “ அவதாரம் செய்தார் ” என்ற சொற்ருெடராற் சைவ மக்களாகிய நமக்கு அறிமுகப்படுத்தி வைக்கின்ருர். சுந்தர மூர்த்தி சுவாமி களது தோற்றத்தைத் “ **தீதகன்று உலகம் உய்யத் திரு அவதாரஞ் செய்தார்** ” என்றும், திருஞானசம்பந்தப் பெருமானது தோற்றத்தைச் “ **சிவம் பெருக்கும் பிள்ளை யார் திரு அவதாரஞ் செய்தார்** ” என்றும் உரைத்து, இவ்விருவரது தோற் றங்களும் திருநாவுக்கரசு சுவாமிகள் தோற்றத்துடன் ஒப்பக்கொள்ள வேண்டு வன என்பதையும் சேக்கிழார் பெருமான் அறிவுறுத்துகின்ருர்.

மனுநீதிகண்ட புராணத்தில் மனுச் சோழனது புதல்வனை “ **மைந்தன் பிறந் தனன்** ” எனவும், கண்ணப்ப நாயனுர் புராணத்தில் அவரது தோற்றத்தை “ **மகப்பயந்தபோது** ” எனவும், மானக் கஞ்சாற நாயனுர் புராணத்தில் அவரது புதல்வியின் தோற்றத்தைப் “ **பெண் கொடியைப் பெற்றெடுத்தார்** ” எனவும் சண்டேசுவர நாயனுர் புராணத்தில் அவரது தோற்றத்தை “ **வந்து உதயஞ் செய்தார்** ” எனவும், காரைக்காலம் மையார் புராணத்தில் அவரது தோற்றத் தைப் “ **புனிதவதியார் பிறந்தார்** ” என வும், சிறுத்தொண்ட நாயனுர் புராணத் தில் சீராள தேவரது தோற்றத்தைத் “ **திருமைந்தர் அவதரித்தார்** ” எனவும், சேரமான் பெருமாள் நாயனுரது புரா ணத்தில் அவரது தோற்றத்தை “ **அரனருளால் பிறந்தார்** ” எனவும், திருத்தொண்டர் புராணத்தில் அடி யாரது தோற்றங்கள் குறிக்கப் பெறு கின்றன. இவற்றிலிருந்து சீராளதேவர் மட்டும் சமயகுரவரைப் போல “ **அவதரித் தவர்** ” எனவும், விசாரசருமராகிய சண் டேசுரர் மட்டும் “ **உதயஞ்செய்தவர்** ” எனவும் ஏனையோரனைவரும் ‘ **பிறந்த வர்கள்** ’ எனவும் தெரிகின்றது. இங் ஙனம் அவதாரம், உதயம், பிறப்பு ஆகிய மூவகைச் சொற்களாலும் திருத்தொண் டர்களது தோற்றங்களை ஆசிரியர் குறித் துக் காட்டுவதில் அடங்கியிருக்கும் பேருண்மை ஊகித்து அறிந்து கொள் ளத்தக்கதாயிருக்கிறது.

பிறப்பிறப் பில்லாதராகிய சிவபெரு மான் உயிர்கள் மலபரிபாகம் பெறும் பொருட்டாக அவைகளைப் பிறப் பிறப்பு களுக்கு உட்படுத்துகிருர். அப்பிறப்பு நிலவுலகத்திலும் கீழ்மேலுலகங்களிலுமாக நிகழுகின்றது. அனுதியே ஆணவ மலத்தில் கட்டுண்டு அறிவிருந்தும் சடம் போலக்கிடந்த ஆன்மாக்களுக்கு ஆண் டவனது திருவருள் உடம்பு, உட்கரு விகள், உலகம், நுகர்ச்சிப் பொருள்கள் ஆகிய வற்றை வழங்கிச் சிறிதளவு அறிவு

விளங்குமாறு செய்தது. அவ்விளக்கத்தால் பின்னர் பெறத்தக்க உய்திக்கு வழியைத் தேடி ஒழுகுபவைகளும், அதில் நோக்கம் கொள்ளாது உலகத்திற் கிடைத்த நுகர்ச்சிப் பொருள்களையே உடம்பாலும் உட்கருவிகளாலும் நுகர்ந்து அதனுல் மீண்டும் மீண்டும் பிறந்து இறப்பவைகளுமாக உயிர்கள் இருவகைப் பட்டன.

உய்தியை நாடாது உலகியலில் உழலும் உயிர்களுக்கு உய்யும்நெறிகாட்ட இறைவன் திருவருள் அவ்வுய்தியையடைந்த புண்ணிய ஆன்மாக்களை நிலவுலகத்துக்கு அனுப்பும். இந்தவகையில் உலகில் பிறந்து பிறந்து இறக்கின்றவர்களும் இறைவனுல் வானுலகிலிருந்து அனுப்பப் பெறுகின்றவர்களுமாக இங்கே தோன்றுபவர்கள் இருப்பார்கள். இவர்களில் விண்ணுலகிலிருந்து மண்ணுலகத்திற்கு வழிகாட்ட அருளால் வந்தவர்களை அவதாரஞ் செய்தார்களென்றும், வினைவழியே பிறப்பவர்களைப் பிறந்தார்களென்றும் சொல்லுவது சம்பிரதாயம். **அவதாரம்** என்ற சொல் **கீழிறங்குதல்** என்ற பொருளையுடையது சமயகுரவர் மூவரும் இறைவனுடைய திருவுளக்கருத்தின்படி மாதவம் செய்த தென்திசை மாந்தருக்கு வாழ்வு வழங்க வந்தவர்கள். அவர்கள் மூவரும் திருக்கயிலாயத்தில் வாழ்ந்து வந்தார்கள். சுந்தரமூர்த்தி சுவாமிகளது கயிலை வாழ்வு திருத்தொண்டர் புராணத் திருமலைச் சிறப்பில் கூறப் பெற்றுள்ளது. ஞானசம்பந்தப் பெருமான் திருக்கயிலாயக் கந்தவெற்பில் வாழ்ந்தவர் என்பதைத் தலபுராணங்களில் காண்கிறோம்.

அப்பர் சுவாமிகள் திருக்கயிலாய மலையில் வாகீச முனிவராகத் திருத்தொண்டு செய்து வாழ்ந்திருந்தவரென்பதை அவரது புராணத்திலுள்ள முதற் பாடலில் "திருநாவுக்கரசுவளர் திருத்தொண்டின் நெறிவாழ வருஞானத் தவமுனிவர் **வாகீசர்**" என்ற பகுதியால் அறிகிறோம். இன்னும் "**முன்னமே முனியாகி எனையடையத் தவம் முயன்றுன்**" என்று திலகவதியாரிடம் சிவபெருமான் அருளிச் செய்ததாக உரைக்கப் பெறும் புராணப் பகுதியும் இவரது முன்னைய முனிவர் நிலையைப் புலப்படுத்துவதாகும்.

தங்கள் தங்களது வினையினுலே வந்து தோன்றி அவ்வினைகளுக்கேற்ற இன்பத்துன்பங்களை நுகர்ந்து அதன் வழியே இறந்து படுகின்ற உலகினரின் தோற்றத்திற்கும் இறைவனது திருவருளினுலே வந்து தோன்றி அத்திருவருள் வழியே வாழ்ந்து அதன் வழியாகவே வந்த இடத்தைச் சென்றடைந்த சமயகுரவர்களது தோற்றத்திற்கும் மிகமிக வேறுபாடு உண்டு. இதனை உணர்த்தவே சமயகுரவர்கள் அவதாரம் செய்தார்கள் என்று ஆசிரியர் சேக்கிழார் பெருமான் விளக்கிக்காட்டினுர்.

அலகில் கலைத்துறை தழைப்பவும் அருந்தவத்தோர் நெறிவாழவும் அப்பர் சுவாமிகள் அவதாரம் செய்தருளினர் என்று, அவரது திருவவதாரத்தால் உலகம் பெற்ற பயனைப் பாடலில் ஆசிரியர் கூறுகின்றுர். வினையால் வந்து பிறப்பவர்களுக்கு இங்ஙனம் பிறப்பால் வரும் பயனை எடுத்துக் கூறமுடியுமா? மேலும் புற இருளைப் போக்குகின்ற கதிரவனைப் போலச் சுவாமிகள் தோன்றியருளினுர்கள் என்று கூறி இருப்பதும், மக்களது அஞ்ஞான இருளை ஒழித்து மெய்ஞ்ஞான ஒளியை நல்கும் ஞானுசிரியராக விண்ணுலகத்திலிருந்து அவர் வந்தாரென்பதை அறிவுறுத்திக் கொண்டிருக்கிறது.

—★—



# ஏன் பிறந்தோம்?

திரு அ. காமாட்சி குமாரசாமி, M.A., அரசினர் கல்லூரி, சேலம்.

ஆறறிவுடன் கூடிய மக்களாய்ப் பிறந்த ஒவ்வொருவரும் தன்னையே நோக்கிக் கேட்க வேண்டிய கேள்வி ''ஏன் பிறந்தோம்'' என்பதாகும். இதற்குரிய விடைகள் அவ்வவரின் அறிவு நிலைக்கேற்ப அமையும். அவ்விடைகளுக்கேற்ப, உலோகாயதம் முதலான சமயங்கள் ஆன்றோரால் இடைக்காலத்து நூல்களில் காட்டப்பெற்றன. இவ்வினவிற்குரிய விடையினைக் காண முடியாது தவிப்போர்க்கு, வாழ்க்கைத் துறையில், வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து காட்டிய முதியோர் துணைநின்று தக்க விடையளிப்பர். அத்தகைய சான்றோர் பலருள் மக்களின் மருள் நீக்கி அருள் நெறி காட்டிய அப்பர் பெருமானும் ஒருவராவர்.

இவ்வையத்து வாழ்வாங்கு வாழ்ந்தவருள் அப்பர் பெருமானும் ஒருவர் எனக் குறித்தது மிகவும் பொருத்தமேயாகும். இளம்பருவத்திலேயே தனது பெற்றோர், தமக்கை முதலியவரிடத்துப் பற்றுக் கொண்டு அவர்க்குப் பெருமதிப்புத் தந்தவர். தமக்கையான திலகவதியாரின் திருவருளால் சைவத்திற்கு மீண்டும் திரும்பியவர். சமண்சமயம் புகுந்தும் சைவத் தமக்கையாரை அவர் மறக்கவில்லை. நாயன்மாராகியும் வெறும் ஆன்மத் துறையோடு நின்று, உலகத்தோடு ஒட்டாது வாழ்ந்தவரல்லர். வயது முதிர்ந்த பருவத்தும் தன் கையில், இடையறுது, அகலாது, நின்ற உழவாரத் திண்படையால் ஆலயத்திற்கு வரும் அடியாரின் அடிகள் துன்புறுதவாறு, புல், முள், முதலியவற்றைச் செதுக்கலாகிய திருத்தொண்டினை (Manual Labour) இடை விடாது ஆலயந்தோறும் செய்து வந்தவர். நடை உடையால் எளிய வாழ்க்கை வாழ்ந்து, உயர்ந்த குறிக்கோள் பூண்டவர். காட்சிக்கு மிக எளியவராய், கடுஞ்சொல் அற்றவராய்த் திகழ்ந்தவர். மழையின்மை காரணமாக, மக்களிடம் பசியும் பிணியும் பஞ்சமும் தோன்றிய போது திருவீழிமிழலையில் பொற்காசு பெற்று ஏழை யெளியோர்க்கு உணவளித்தலாகிய உயர்ந்த மக்கள் தொண்டினையும் (Social Service) கடமையாகக் கொண்டு ஆற்றியவர். இவற்றுடன் ஆயிரம் பிறை கண்ட முதியோராய், ஆண்டிலும், அறிவிலும், ஆன்மத் துறையிலும் முதிர்ந்து பக்குவமுற்றவர். மேலும் காளைப் பருவத்திலேயே சைவ சமயத்தினின்றும் நீங்கிப் பரசமயமான சமண சமயத்திற்குச் சென்று, ஏறக்குறைய அவரது அரை ஆயுளை அங்கு கழித்து, சமண்சமய நூல்கள் பல கற்று, ''தருமசேனர்'' என்ற பட்டப் பெயரும் பெற்று, பிறகு சைவத்திற்குத் திரும்பியவர். இவ்வாறு பற்பல துறைகளிலும் புகுந்து, பார்த்து, அறிவால் முதிர்ந்த அப்பர் பெருமான், ''ஏன் பிறந்தோம்?'' என்ற நமது வினவிற்கு விடையளிப்பாராயின் அதைவிடச் சிறந்ததோர் விளக்கம் இருக்க முடியுமா?

அப்பர் பெருமான் அளிக்கும் விடைதான் யாதெனக் காண்போம். மக்கள் எத்துணைக் குறையுடையராயினும், அவற்றைப் பிறர், சுட்டிக் காட்டுவதையோ, பழிப்பதையோ அறவே வெறுப்பர். எனவேதான் அருட்பெரியோர் அனைவரும் மானுடர்தம் குற்றங் குறைகளைத் தம்மீதே ஏற்றிக் கூறுவர். அவ்வாறே அப்பர் பெருமானும் அரியதோர் திருத்தாண்டகத்தில் பாடியுள்ளார். அப்பாடலின் இறுதியில் கேள்வியும், முற்பகுதியில் மறைமுகமாயும், எதிர் மறையிலும் விடைகள் உள்ளதைக் காணலாம்.

குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும்
பொல்லேன்
குற்றமே பெரிதுடையேன் கோலமாய
நலம்பொல்லேன் நான்பொல்லேன் ஞானியல்லேன்
நல்லாரோ டிசைந்திலேன் நடுவேநின்ற
விலங்கல்லேன் விலங்கல்லா தொழிந்தேன்
அல்லேன்
வெறுப்பனவும் மிகப்பெரிதும் பேசவல்லேன்

இலம்பொல்லேன் இரப்பதே ஈயமாட்டேன்
என்செய்வான் தோன்றினேன் ஏழையேனே.

''ஏழையேன் என்செய்வான் தோன்றினேன்'' எனும் ''ஏன் பிறந்தோம்'' என்றது கேள்வி யாகும். அதற்கு மேலே அவர் குறிக்கும் விடைகளை, எதுகை மோனைக்காக அமைக்கப்பெற்ற வரிசையினைச் சற்று மாற்றிப் பொருத்திப் பார்ப்போம். மக்களாய்ப் பிறந்தும் நம்மிடையே அவ்வப்போது தலைதூக்கும் விலங்குப் பண்புகளை அறவே ஒழிக்க வேண்டும்; குடிப்பிறப் பிற்கேற்ப, குற்றம் நீக்கி, நற்குணங்களைப் பெறவேண்டும்; சீலமிகுந்த நற்கோல முடையராய்த் திகழ்தல் வேண்டும்; வெற்றுரை நீக்கிப் பயனுள்ள வற்றையே பேசல் வேண்டும்; இந்தக் குணங்களை எளிதிற் பெற நல்லாரோடிணங்கி, வாழ்க்கைக் குறிக்கோளாகச் சிறந்த ஒன்றினைக் கடைப் பிடித்து இரவாது நம்மாலியன்றதைப் பிறர்க்கு ஈந்து, ஈத்துவக்கும் இன்பத்தினைப் பெற்று, அறம் வளர்த்து, ஞானமாகிய மெய்யுணர்தலைப் பெறுவதே பிறப்பின் பெரும் பயனாகும். பாட்டின் முற்பகுதியை ஆராய்ந்து நோக்குவார்க்கு இவ்விடையே தெற்றெனப் புலப்படும்.

மேற்கூறியவை அத்தனையுமே, ஏதேனும் ஒரு உயர்ந்த குறிக்கோளுடையராய் வாழ வேண்டும் என்ற ஒன்றில் அடங்கும். அவையனைத்தும், குறிக்கோள் நிறைவேறுவதற்கு உறுதுணைகளும், பயனுமே யாகும், நாவுக்கரசரும், தன்னெஞ்சைச் சிவனுக்கே இடமாக்கி, இரவும் பகலும் பிரியாது நின்று, நலந்தீங்கிலும் இறைவனை மறவாது, சலம் பூவொடு தூபம், தமிழிசைப் பாடல் ஆகிய இறை வழிபாட்டை என்றும் மறவாது வாழ்ந்தவரே என்பது அவர் பாடிய முதற் பதிகத்தால் அறியப் படும். இடையே புறச் சமயத்திற் புகுந்தனரே யென்றால், அதுவும் இறைவனின் திருச்செயலே யாகும் என மற்றோர் திருத்தாண்டகத்தில் அழகாய்ப் பாடுவர். ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு அவனே ஓட்டுவித்தால் யார் தான் ஓடாமல் இருக்க முடியும் என அவர் குறிப்பது நயக்கத் தக்கது.

தான் நினைத்தவாறெல்லாம் நம்மை ஆட்டுவிக்கின்றவரும் இறைவன்தான். வாழ்க்கையில் ஆட்டங்களெல்லாம் ஓய்ந்து ஒடுங்குங்கால் நம்மை அடக்குவித்து நம்முயிர்க்கும் உடலுக்கும் உரிய அமைதியைக் கொடுப்போனும் அவனேதான். அவ்வாறே சைவத்தினின்றும் பிறசமயத்திற்கு ஓட்டுவித்தவனும் அவன் தான். ஆனால் அதற்குப் பிறகு தன் உள்ளத்தை உருக்கி, தனக்குப் பாடுந் திறனும் கொடுத்துப் பாட வைத்துத் தன்னையே பணியுமாறு பணிவித்தவனும் அவ்விறைவனே, இறுதியில் காணாத பரம்பொருளைக் காட்டுவானும் அவனேதான்.

ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே
அடக்குவித்தால் ஆரொருவர் அடங்காதாரே
ஓட்டுவித்தால் ஆரொருவர் ஓடாதாரே
உருகுவித்தால் ஆரொருவர் உருகாதாரே
பாட்டுவித்தால் ஆரொருவர் பாடாதாரே
பணிவித்தால் ஆரொருவர் பணியாதாரே
காட்டுவித்தால் ஆரொருவர் காணாதாரே
காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக்காலே

என்பது அவ்வரிய திருத்தாண்டகமாகும்.

இப்பாடல் முழுவதிலும், இணை இணையாய் வரும் வினைச் சொற்களுள் முதலில் வருபவை அனைத்தும் பிறவினையாகவே இருத்தல், எல்லா வற்றையும், எத்துறையிலும், இயக்குபவன் அவனேஎன்பதும், அவன் பணித்தவழி இயங்குவதே உயிர்களின் இயல்பாகும் என்ற பேருண்மையை நன்கு புலப்படுத்தும். இறையருளை உணருவதற்கும் அவனருள்தான் கண்ணாக வந்தமைந்து வழிகாட்ட வேண்டும் என்ற உண்மையினை மற்றோரிடத்திலும் '' அவனருளே கண்ணாகக் காணின் அல்லால், இப்படியன், இந்நிறத்தன், இவ்வண்ணத்தன் இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணாதே '' எனப் பாடுவார்.

இறையருளை அடைதற்குரிய நெறி முறையினையும், அழகியதோர் பாட்டிலே அப்பர் பெருமான் எடுத்துரைப்பர்.

'' விறகில் தீயினன் பாலிற்படு நெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவுகோல் நட்டு உணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே ''

இறைவன் எங்கும் நிறைந்துள்ளான். ஆனல் மறைந்துளான். விறகு முழுதும் தீ பரவி நிற்றல் போன்றும், பால் முழுவதும் வெண்ணெய் விரவி நிறைந்து மறைந்து இருப்பது போலவும் பார்க்குமிடமெல்லாம் பரம் பொருள் நிறைந்தும் மறைந்தும் உள்ளது. விறகிலுள்ள தீயினை வெளிப்படுத்தத், தீக்கடை கோலை நட்டு உறுதியான கயிற்றினுல் முன்னும் பின்னுமாகப் பெரு முயற்சியுடன் தொடர்ந்து கடைந்தாக வேண்டும். அதே போன்று பாலினின்றும் வெண்ணெய் பிரித்துக் காண வேண்டில், அப்பாலை நன்கு காய்ச்சி, புரையிட்டுப் பின்னர் மத்தினை நடுவே நாட்டிக் கயிற்றினுல் நன்கு கைவிடாது கடைய வேண்டும். இவ்விரு உவமைகளிலும், கோலும், கயிறும், வாங்கிக் கடைதலும் பொதுவாகும். அதே போன்று எங்கணும் விரவி நிற்கும் இறைவனின் இன்னருளைப் பெற, உறவு என்ற கோலை நாட்டி, உணர்வு என்ற கயிற்றினுல், பெரு முயற்சியுடன், முறுக வாங்கிக் கடைவது போன்ற இடையரு ஆத்ம சாதனையில் ஈடுபட வேண்டும் என்ற உவமை மிகமிகப் பொருத்தமானது. இறைவனிடம் உறவு கொண்டால் மட்டும் போதாது; அவ்வுறவினை மேன்மேலும் வளர்த்தற்குரிய உணர்ச்சி வசப்பட வேண்டும்; இவ்வுணர்ச்சியும் இடையருது இருத்தல் வேண்டும். வந்த இரு உவமைகளும் இறைவனது இருவகைப் பண்புகளையும் உணர்த்தும் நயம் உணரற்பாலது. விறகில் வெளிப்படும் தீ வெப்பமானது. பாலிற்படு வெண்ணெயோ தண்மையும் மென்மையும் உடையது. தீப்போல் இறைவன் நமக்குத் துன்பமும் தருவான். அது அவனது மறக் கருணை. வெண்ணெய் போல் குளிர்ந்த இன்பமும் தருவான். இது இறைவனின் அறக் கருணையாகும். இவ்விரண்டினையும் அவனது கருணையாகவே ஏற்றல் வேணடும். தனக்கு நாட்டிலில்லாத குடர் நோயினை நல்கி ஆட்கொண்ட இறைவனின் இரு கருணைகளையும் ஏற்ற அப்பர் பெருமான் இவ்வாறு பாடுவது பொருத்தமே யன்றே!

மேற் கூறிய மும்மணிகளைப் போன்ற அப்பர் பெருமானின் பாடல்கள் காட்டுமாறு போல், மக்களாய்ப் பிறந்த நாம் ஒவ்வொருவரும், அவ்வவரின் ஆற்றல், சூழ்நிலைக்கேற்ப உயர்ந்ததோர் குறிக்கோள் கொண்டு, அதன் வழி உறுதியாய் நின்று, இறைவழிபாடு தோத்திரம் முதலியவற்ருல் ஒழுகி, இறைவனின் இன்னருளைப் பெற முயல வேண்டும்.



திருத்தகுசீர் அதிகையருட் டலத்தின் ஓங்கும்
சிவக்கொழுந்தின் அருட்பெருமைத் திறத்தால் வாய்மை
உருத்தகுமெய் யுணர்ச்சிவடி வாகிச் சைவ
ஒளிவிளங்க நாவரசென் றெருபேர் பெற்றுப்
பொருத்தமுற உழவாரப் படைகைக் கொண்ட
புண்ணியனே! நண்ணியசீர்ப் புனிதனே! என்
கருத்தமர்ந்த கலைமதியே! கருணை ஞானக்
கடலே! நின் கழல்கருதக் கருது வாயே.

—இராமலிங்க அடிகள்.

# திருநாவுக்கரசின்

# திருநின்ற செம்மைமுறை

வித்துவான், சித்தாந்தமாமணி திரு. வே. மாணிக்கவாசகம் பிள்ளை

மலர்தலை உலகின் புறவிருள் அகற்றும் பன்னிரு ஞாயிறே போன்று மக்கள் அக இருள் அகற்றுவன பன்னிரு சூத்திரங்களான் அமைந்த சிவஞான போதமும் பன்னிரு திருமுறைகளும். சிவ பெருமானே முழுமுதற் கடவுள் என்ற உண்மையை நிலை நாட்டுவது சைவம். இவ்வுண்மையைக் கடைப் பிடித்துச் சிவபெருமான் அருளியே வேதாகம நெறியிலும் அவனருள் பெற்ற அடியார் அருள் நூல் வழியிலும் நிற்பவர் சைவர். ஒவ்வொரு சமயமும் ஒவ்வொரு தத்துவப் பொருள் அளவாகச் சென்று அதனையே முடிவாகக் கூறும். முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்தவர் கடவுள், அவர் எல்லாச் சமயத்தவர்க்கும் அவ்வவர் அறிவு எவ்வெவ்வளவு செல்லுகின்றதோ அந்த இடத்தில் அவர் அறிவுக்கு எட்டிய பொருளாய்த் தோன்றுவர், சைவத் திறனுணர்ந்தார்க்குத் தத்துவாதீதராய்க் குறியிறந்து, அறிவினில் தனது குணமாகிய அருளுந்தானுமாய்த் தோன்றுவர்.

சைவ உண்மைகள் சாத்திரங்களாகவும் தோத்திரங்களாகவும் அறிவுறுத்தப் பெறுகின்றன. சாத்திரங்கள் மெய்கண்ட நூல்கள் என வழங்கப் பெறும். உண்மையைக் கண்டவரால் விரும்பப்படும் முறை திருமுறை. திருமுறைகள் தோத்திரம். திரு என்பது கண்டாரால் விரும்பப் படுந் தன்மை. திருமுறைகள் பன்னிரண்டும் அருள் வாக்கு. பன்னிரு திருமுறைகளில் நான்காவது, ஐந்தாவது, ஆறுவது திருமுறைகள் அப்பர் பெருமானாரால் அருளிச் செய்யப் பெற்றவை. நான்காந் திருமுறை திரு நேரிசை திரு விருத்தங்களால் அமைந்தது. ஐந்தாந் திருமுறை திருக்குறுந் தொகை. ஆறுந்திருமுறை திருத்தாண்டகம்.

அப்பர் பெருமானார் சாத்திர உண்மைகளை நமக்குப் புகட்டுந் திறம் பெரிதும் பாராட்டற் பாலது. தாய் தன் குழந்தைக்குக் கசப்பான மருந்தை இன்சுவைப் பாலினும் தேனினும் கலந்து கொடுப்பது போல், சைவ உண்மையை இலக்கியச் சுவையமைந்த தீந்தமிழ் அமிழ்தம் கலந்து ஊட்டுகிறார்.

நல்லார் இறைவன் திருவடிகளைத் தலைமேற் சூடுவர். அஃதாவது அவருடைய அறிவு செயல்களை இறைவனுடைய வியாபக அறிவு செயல்களில் அடங்கி யிருக்கச் செய்வர் என்பதாம். இக்கருத்தினை நயம்பட நமது மனதில் பதியுமாறும் சிந்தை விட்டகலாவாறும் தெரிவிக்கிறார் நாவரசர். இராவணன் கைலைமலையினை அசைக்க முயல்கிறான். கைலாசபதி தனது பெரு விரலால் ஊன்றுகிறார். இராவணன் நசுங்கி அலறுகிறான். ஆனால் திருநாவுக்கரசரோ இரண்டு திருவடிகளையும் எப்போதும் தம் சிரத்தின் மேலிருப்பதாகவே கொண்டு "அருள் நனைந்தனைய திருவடியென் தலைமேல் வைத்தார் நல்லூர் எம்பெருமானார் நல்லவாறே" என்ற சிந்தையுடன் அடங்கி வாழ்கின்றார். தாம் அவ்வாறு வாழுவதைப் பாருங்கள் என்று சொல்கிறார்.

" பெருவிரல் இறைதான் ஊன்றப்
பிறை எயிறிலங்க அங்காந்து
அருவரை அனைய தோளான்
அரக்கன் அன்றலறி வீழ்ந்தான்
இருவரும் ஒருவனாய உருவம்
அங்குடைய வள்ளல்
திருவடி சுமந்து கொண்டு
காண்க நான் திரியுமாறே "

இறைவன் திருவடியைத் தலைமேலன்றிச் சிந்தையுள்ளும் பதிக்க வேண்டும். திருநாவுக்

கரசர் சிவபெருமான் சேவடி தைவரு சிந்தையர். சிந்தையே சிவனுக்குக் கோயிலாகப் பெறுதல் ஒரு சிறந்த பேறு. இதனையே நாயனுர் இறைவன் தாள் சேர்தல் என்கிருர். பரிமேலழகரும் சேர்தல் என்பதற்கு இடைவிடாது நினைத்தல் எனப் பொருள் காண்கிருர். நெஞ்சத்தைச் சிவபெருமானுக்கு இடமாக வைத்தலையும், அதனுல் விளையும் பயனையும் சொல் வேந்தர் சொல்லுகிருர். இராவணன் விசும்பு ஆருகத் தேரிற் செல்கிருன். விமானத்தைப் பாகன் ஓட்டிச் செல்கிருன். கயிலை வந்ததும் பாகன் 'இனி நம் தேர் போகாது' என்று சொல்லி நிற்கிருன். இராவணன் சினங்கொண்டு தன்னைத் தடுக்கிற பாகனை விடுவிடு என்று சொல்லிக் கையைத் திருகிக் கொண்டு சென்று கயிலையைத் தூக்குகிருன். தோள்கள் நைகின்றன. இத்தகைய செருக்கொழிக்கும் திருவடியை என்மனம் எப்பொழுதும் நினைக்கின்றது என்கிருர்.

" கடுகிய தேர் செலாது கயிலாயமீது
கருதேல் உன்வீரம் ஒழிநீ
முடுகுவதன்று தன்மம் எனநின்று பாகன்
மொழிவானை நன்று முனியா
விடுவிடு என்றுசென்று விரைவுற்றரக்கன்
வரையுற் றெடுக்க முடிதோள்
நெடுநெடு இற்றுவிழ விரலுற்றபாதம்
நினைவுற்ற தென்றன் மனனே.

சிவபெருமான் நம் உள்ளத்தில் உறைவாராயின் நாம் ஒருவருக்கும் அஞ்ச வேண்டியதில்லை. ஒன்றுக்கும் அச்சமில்லை.

" வெம்பவரு கிற்பதன்று கூற்றம் நம்மேல்
வெய்ய வினைப்பகையும் பையவ நையும்
எம்பரிவு தீர்ந்தோம் இடுக்கண் இல்லோம்
எங்கெழில் என்ஞாயி றெளியோ மல்லோம்
அம்பவளச் செஞ்சடைமேல் ஆறுசூடி
அனலாடி ஆன்அஞ்சும் ஆட்டுகந்த
செம்பவள வண்ணர் செங்குன்ற வண்ணர்
செவ்வான வண்ணர் என் சிந்தையாரே."

பொய்ச் சமயங்களில் சேர்ந்து உயிரை விடாதே. அவைகள்சாவி. அறிவினுல் ஆராய்ந்தால் உண்மையாகிய உள்ளீடு இன்மையின் சாவி காற்றில் பறந்து போவது போல் பறந்து போய் விடும். இது சாத்திரம்.

" சாவிபோம் மற்றைச்சமயங்கள் புக்குநின்று
ஆவி அருதே என்றுந் தீபற
அவ்வுரை கேளாதே உந்தீபற "

—திருவுந்தியார்

புறச்சமய உரைகளைக் கேளாதே. அச்சமயங்களிற் புகாதே என்ற மெய் கண்ட உரைகளை அனுபவத்திற் கண்டு நமக்குப் புத்தி புகட்டுகிருர் நாவரசர். ஒருவரைத் திருத்துவதற்குப் பழமொழி கூறித் திருத்துதல் சிறந்த முறை எளிதில் மனத்திற் பதியுமுறை. திருநாவுக்கரசர் இம் முறையைக் கைக்கொள்ளுகிருர் நம்மைத் திருத்துவதற்கு.

" பப்போதிப் பவணனுய்ப் பறித்ததொரு
தலையோடே திரிதர் வேனை
ஒப்போட ஓதுவித்து உள்ளத்தின்
உள்ளிருந்தங் குறுதி காட்டி
அப்போதைக் கப்போதும் அடியவர்கட்
காரமுதாம் ஆருரரை
எப்போதும் நினையாதே இருட்டறையின்
மலடுகறந் தெய்த்த வாறே."

நல்ல கறவைப் பசுக்கள் வெளியிடத்தில் நிற்கின்றன. அவற்றைக் கறந்து நல்ல பசும் பால் குடித்து இன்சுவை நுகரலாம். அவற்றை விட்டு இருட்டறையிற் கட்டப்பட்டிருக்கின்ற மலட்டுப் பசுவைக் கறந்தால் யாது பயன். கைகடுத்தலே பயனுகும். சைவம் விட்டுப் புறச் சமயம் புகுதல் பயனற்றது என்று எங்கள் அப்பர் எடுத்துக் காட்டுகிருர்.

நான் என்ற முனைப்பறுதல் முத்திப் பேற்றிற்குச் சிறந்த சாதனமாகும். நான் என்ற முனைப்போடு எச்செயலையுஞ் செய்வதால் வினையேறுகிறது. வினையே காரண காரியத் தொடர்ச்சியாய் வருகின்ற பிறவிக்குக் காரணமாகும்.

" யான் செய்தேன் பிறர் செய்தார்
என்னது யானென்னும்

இக்கோணை ஞான எரியால்
வெதுப்பி நிமிர்த்துத்
தான் செவ்வே நின்றிட அத்
தத்துவன்தான் நேரே
தனை அளித்து நிற்கும்
வினை ஒளித் திட்டோடும்!"

—சிவஞான சித்தியார்

மாணிக்கவாசகரும் திருவாசகத் தேன் மொழியில்,

"வான் கெட்டு மாருதம் மாய்ந்து
அழல்நீர் மண்கெடினும்
தான் கெட்டலின்றிச் சலிப்
பறியாத் தன்மையனுக்கு
ஊன் கெட்டு உயிர் கெட்டு உணர்வு கெட்டு
என் உள்ளமும் போய்
நான் கெட்ட வாபாடித்
தெள்ளேணங் கொட்டாமோ"

எனச் செருக் கொழிதலை அணைந்தோர் தன்மையாகவே கூறுகிருர். வாக்கின் மன்னவனுர் நான் கெடுவதற்கு, நான் என்ற முனைப்பு முளைக்கும் போதே அதனைக் கிள்ளி எறிந்து தான் என்ற உணர்ச்சியைத் தோற்றுவிக்க வேண்டும் என்கிருர். இச்சாதனம் கடைப் பிடிப்பவரே ஞானிகளாவார்.

"நானெனில் தானே யென்னும்
ஞானத்தார் பத்தர் நெஞ்சுள்
தேனும் இன்னமுதும் ஆனுர்
திருச்செம் பொன் பள்ளியாரே."

இவ்வாறு தோத்திரத்தில் சாத்திரத்தை விளக்கும் அப்பர் சுவாமிகள் திருவடி போற்றி.

"அணிகொள் ஆடையம் பூணணிமாலை
அமுது செய்தமு தம்பெறு தண்டி
இணைகொள் ஏழெழு நூறிரும் பனுவல்
ஈன்றவன் திருநாவினுக் கரையன்
கணைகொள் கண்ணப்பன் என்றிவர்பெற்ற
காதலின்னருள் ஆதரித்தடைந்தேன்
திணைகொள் செந்தமிழ் பைங்கிளி தெரியும்
செல்வத் தென்திரு நின்றியூர் அரனே."

—சுந்தரர் திருமுறை 7





தேர்ந்தஉளத் திடைமிகவும் தித்தித் தூறும்
செழுந்தேனே! சொல்லரசாம் தேவே! மெய்ம்மை
சார்ந்துதிகழ் அப்பூதி அடிகட் கின்பம்
தந்தபெருந் தகையே! எம் தந்தையே! உள்
கூர்ந்தமதி நிறைவே! என் குருவே! எங்கள்
குலதெய்வமே! சைவக் கொழுந்தே! துன்பம்
தீர்ந்தபெரு நெறித்துணையே! ஒப்பி லாத
செல்வமே! 'அப்பன்'எனத் திகழ்கின் ரேனே!

—இராமலிங்க அடிகள்

# Praise of the Lord is the pulsation of the soul

Thiru Dr. V. A. Devasenapathi, M.A., Ph.D.,

*Reader in Philosophy, University of Madras.*

With love great and unceasing, with eyes filled with tears of Joy, with the spade in his sacred hands, with a heart in which were enshrined the sacred feet of the Lord, with utter rerunciation, with a mouth ever uttering the praise of the Lord, with the splendour of a devotee of the Lord—Saint Appar appears to Siva gnanayogin, the author of the great commentary on the Siva gnanabodham. This is a beautiful pen-picture in which the outstanding features of the saint's life are vividly presented.

The love that devotees of the Lord cherish for him is astonishingly rich and varied in its manifestations. In the case of saint Appar we find that despite the severe persecution he was subjected to, he never wavered in his love. Inspite of his earlier defection to Jainism, the saint could truthfully sing, 'Never have I ceased thinking about you!' because it was his search for truth that led him to Jainism He was panting for truth 'as the hart panteth after water brooks'. When through severe physical illness he was brought back to his ancestral faith, he could appreciate its richness, like one who experienced poverty first enjoying subsequent acquisition of wealth.

• It is to be noted that the saint's faith was subjected to severe tests by the persecution he had to undergo. Locked up in a lime-kiln, thrown before an infuriated elephant to be trampled under its feet, given a drink of poison and finally thrown in to the sea tied to a heavy stone—what sustained him in all these trials? It was the sacred name of the Lord! Hence he sings with the certainty born of personal experience:

*"Come ye men, I have something to tell you*
*If you can eat fruits when these are offered,*
*There is the fruit of the Lord's feet,*
*It is very sweet indeed for those without sorrow"*

With the Lord's name on his lips and a spade in his hands, Appar went from shrine to shrine singing the praises of the Lord. Though he is said to exemplify the path of manual service to the Lord, and though he says he is not a gnani, same of his verses show that he was a very great gnani indeed. He sings that he is armed with the sacred name of the Lord and that he is not a weak vessel. He pledges himself to eternal service and refuses to leave the Lord even if pushed away. Wearing the sacred ashes and worshipping the Lord he surrenders himself completely unto him.

The fruit of such strong faith in the Lord is fearlessness. The saint is completely free from fear. He is not afraid of human might as represented in the king. He has no fear even of nature in its terrific aspect. Earthquakes and other physical convulsions whether on global or cosmic scale—have no terrors for him.

How does the saint reckon life? He reckons it in terms of praise of the Lord. He counts himself as unborn on all those days he failed to utter the name of the Lord. It is truly said that 'praise must be the permanent pulsation of the soul'. If physical life is counted in terms of the beat of the heart, it is no less true that spiritual life should be counted in terms of the spiritual heart—in other words, in terms of the praise of the Lord. Appar has shown to the world that praise is due to the Lord alike in prosperity and in adversity. May the Lord help us to follow in his foot steps!

---

# திருநாவுக்கரசரின்
# சிறந்ததொரு தேவாரப் பாடல்

திரு. ந. ரா. முருகவேள், M.A., M.O.L.,
ஆசிரியர் : 'திருக்கோயில்'

முன்னுரை :

தேவார திருவாசகத் திருமுறைகள், நம் செந்தமிழ் நாட்டின் தலைசிறந்த ஞானச் செல்வங்கள். அவற்றின் அருமை பெருமைகள் அளவிடற்பாலன அல்ல. சேக்கிழார் சுவாமிகள் குறிப்பிடுவது போல, அவற்றை நம் தமிழ் நாட்டின் எல்லாவகை நலங்களுக்கும் அடிப்படைக் காரணமான ''மூல இலக்கியங்கள்'' எனக் குறிப்பிட்டுப் புகழ்ந்து போற்றுதல் பொருந்தும். மேத்யூ ஆர்னல்டு என்னும் ஆங்கிலப் பேரறிஞர் ஒருவர், ''இங்கிலாந்து தேசத்தின் இத்துணைப் பெரும் புகழும், வேறு பிறிது எதனுலுமன்றி, அதன் சிறந்த இனிய கவிதைகளினலேயே ஏற்பட்டதாகும்''. (''By nothing is England so glorious, as by her poetry''—Matthew Arnold) எனக்கூறியிருப்பது போல, நம் தமிழ் நாட்டின் பலவகைப் பெருமைகளுக்குங்கூட, மூலமும் அடிப்படைக் காரணமுமாகத் திகழ்வன, நம் திருமுறைகளைப்போன்ற சிறந்த இனிய அருட் பாடல்களே யாகும் எனலாம். எனவே அவற்றை நாம் பொன்னினும் மணியினும் போற்றிப் பொதிந்து பெரிதும் காப்பாற்றக் கடமைப் பட்டுள்ளோம்.

திருநாவுக்கரசர் தேவாரம் :

'' பன்னில் ஊறும் பழத்தினும் இன்சுவை
என்னில் ஊறி எனக்கே களிதரும்
உன்னில் உன்னும் உறவிடில் விட்டிடும்
என்னுள் ஈசன் இருந்த இயற்கையே''.

என்பது ஒரு சிறந்த தேவாரப் பாடல். இதனைப் பாடியருளியவர் திருநாவுக்கரசர். ஆயினும் திருநாவுக்கரசரின் தேவாரப் பாடல்களில், இத் திருப்பாடல் காணப்படவில்லை. எத்துணையோ பல தேவாரப் பதிப்புக்கள் இந்நாளில் வெளிவந்துள்ளனவாயினும், அவற்றில் இப் பாடல் இடம் பெருமலே விடப்பெற்றுப் போயிருக்கின்றது. ஆயினும் இங்ஙனம் விடப்பெற்று விட்டிருக்கின்ற இத் திருப்பாடல், திருநாவுக்கரசரின் சிறந்த தேவாரப் பாடல்களுள் ஒன்று என்பதும், இதனை நம்முன்னேர்கள் பலரும் படித்துச் சுவைத்து மகிழ்ந்து பாராட்டி இருக்கின்றனர் என்பதும், நமக்குப் பெருமகிழ்ச்சியை விளைவிக்கின்றன.

பாம்பன் சுவாமிகள் :

இத் திருப்பாடலை ஸ்ரீமத் பாம்பன் குமரகுருதாச சுவாமிகள், தாம் அரிதின் ஆராய்ந்து எழுதியுள்ள சைவசமய சரபம் என்னும் அரும் பெரும் நூலில் மேற்கோள் காட்டியிருக்கின்ருர்கள். ''தகர வித்தை'' என்னும் அரியபொருள் பற்றி விளக்கிக்கொண்டு வருங்கால், இத்தேவாரத் திருப்பாடல் ஸ்ரீமத் சுவாமிகளால் மேற்கோளாக எடுத்து ஆளப்பட்டுள்ளது.

சுவாமிநாத பண்டிதர் :

இங்ஙனம் ஸ்ரீமத் பாம்பன் குமரகுருதாச சுவாமிகளால் 1908-ஆம் ஆண்டில் வெளிவந்த ''சைவ சமய சரபம்'' என்னும் நூலின் முதற் பதிப்பிலேயே மேற்கோளாக எடுத்தாளப் பெற்றிருந்தும், இச் சிறந்த தேவாரப் பாடல் அதற்குப் பின்னர் வெளிவந்த எத்தனையோ பல தேவாரப் பதிப்புக்களிலும் சேர்த்துக்கொள்ளப் பெருமலே விடுபட்டுப் போயிருத்தல் மிகவும் வியப்பிற்குரியதாகத் திகழ்கின்றது. எனினும்

1911-ஆம் ஆண்டில் யாழ்ப்பாணம் திரு. சுவாமிநாத பண்டிதர் அவர்களால் வெளியிடப் பெற்ற அடங்கன் முறைப் பதிப்பில், இப்பாடல் 'அநுபந்தம்' என்னும் பிற்சேர்க்கையாகத் தரப் பெற்றிருப்பது ஒருவகையில் நமக்கு ஆறு தல் அளிக்கின்றது.

### தேவாரப் பாடலின் தெளிபொருள் :

இறைவன் நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன். நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே,பெருமான் புக்கு நின்று எழுந்தருளி விளங்குகின்றான். தன்னை நினைப்பவர்களைத் தானும் நினைந்து அருள் புரிகின்றான். தன்னை நினையாதவர்களைத் தானும் நினையாமல் இருந்து விடுகின்றான். உயிர்களின் உள்ளங்களிலெல்லாம் உயிர்க்குயிராய் எழுந்தருளி விளங்கும் இறைவன், தன்னை நினைக்கும்பொழுது கூடியும், நினையாதபொழுது நீங்கியும் நின்று உயிர்களுக்கு அருள்புரிந்து வருகின்றான். தன்னை உணர்வினால் உன்னி அன்புடன் நினைந்து உருகும் அடியவர்களுக்கு, அவன் தேனும் பாலும் அமுதமுமாய்த் தித்திக்கின்றான். அவனை நினைத்தொறும் நினைத்தொறும் அன்பர்களின் உள்ளத்தில் ஆனந்தத் தேனைச் சொரிகின்றான். "காயத்துள் அமுதூற ஊறக் கரையிலா இன்ப உணர்வைக் கண்டு கொள்மின்" எனக் காட்டியருள்கின்றான்; பன்னில் ஊறும் பழத்தினும் இன்சுவையாய் அன்பர்களின் உள்ளத்தில் ஊறி அளவிலாக் களிப்பினை அளித்தருள்கின்றான்!

"சொல்லுவ தறியேன் வாழி முறையோ
 தரியேன் நாயேன் தானெனைச் செய்தது
தெரியேன் ஆவா செத்தேன் அடியேற்
 கருளிய தறியேன் பருகியு மாரேன்
விழுங்கியும் ஒல்ல கில்லேன்
 செழுந்தண் பாற்கடற் றிரைபுரை வித்(து)
உவாக்கடல் நள்ளுநீர் உள்ளகந் ததும்ப
 வாக்கிறந் தமுதம் மயிர்க்கால் தோறும்
தேக்கிடச் செய்தனன்; கொடியேன் ஊன் [தழை
 குரம்பை தோறும் நாயுட லகத்தே
குரம்பைகொண் டின்தேன் பாய்த்தி நிரம்பிய
 அற்புதம் ஆன அமுத தாரைகள்
எற்புத் துளைதொறும் ஏற்றினன் உருகுவது
 உள்ளங் கொண்டோர் உருச்செய்தாங் [கெனக்கு
அள்ளூறு ஆக்கை; அமைத்தனன் ஒள்ளிய
 கன்னற் கனிதேர் களிறெனக் கடைமுறை
என்னையும் இருப்ப தாக்கினன்; என்னிற்
 கருணை வான்தேன் கலக்க
அருளொடு பராவமுது ஆக்கினன்
 பிரமன்மால் அறியாப் பெற்றி யோனே".

என மாணிக்கவாசகப் பெருமான் அருளிச் செய்துள்ள திருவண்டப் பகுதி அகவல் வரிகள், 'என்னில் ஊறி எனக்கே களிதரும்' என வரும் இத் தேவாரப் பாடலின் பகுதியினைச் செவ்விதின் உணர்த்தும்.

### தாயுமான சுவாமிகள் :

திருநாவுக்கரசர் அருளிச் செய்த இவ்வரிய சிறந்த தேவாரப் பாடலை, வேதாந்த சித்தாந்த சமரச ஞான வித்தகச் செல்வர் ஆகிய தாயுமான சுவாமிகள் தாமும், மிகவும் போற்றி எடுத்துச் சிறப்பித்துரைத்து மகிழ்விக்கின்றார். தாயுமான சுவாமிகள் பாடலில், 'அறிவுருரை' என்னும் பகுதியில்,

"உன்னிலுன்னும் என்ற உறுமொழியால்
 என் இதயம்
தன்னிலுன்னி நன்னெறியைச் சாரும்
 நாள் எந்நாளோ?"

என வரும் 'எந்நாட் கண்ணியில்' இச் சிறந்த இனிய தேவாரப் பாடல் எடுத்து மொழிந்து இனிது போற்றப் பெற்றிருத்தல் காணலாம்.

### அருள்நந்தி சிவாசாரியர் :

மேலும், தாயுமான சுவாமிகளைப் போலவே நம் சைவ சித்தாந்த சந்தான ஆசிரியர்களுள் ஒருவரும், சிவஞான சித்தியார் என்னும் ஒப்புயர்வற்ற செந்தமிழ்த் தத்துவ நூலினை இயற்றியருளியவரும் ஆகிய அருள்நந்தி சிவாசாரிய சுவாமிகள், தாம் பாடியருளிய இருபா இருபஃது என்னும் சைவ சித்தாந்த சாத்திர நூலிலும், திருநாவுக்கரசரின் இச் சிறந்த தேவாரத் திருப் பாடல் எடுத்தாளப் பெற்றிருத்தல் காணலாம்.

"எண்டிசை விளங்க இருட்படாம் போக்கி
 முண்டகம் மலர்த்தி மூதறிவு அருளும்

மேதினி யுதய மெய்கண்ட தேவ!
கோதில் அமுத குணப்பெருங் குன்ற!
உன்னின் ஆர்தலும் அகறலும் என்னைகொல்
உன்னில் உன்னி உனுவிடிற் பெயர்குவை
என்னும் அதுவே நின் இயல்பு எனினே,
வியங்கோ ளாளனும் ஆகி இயங்கலும்
உண்டெனப் படுவை; எண்தோள் முக்கண்
யாங்கணும் பிரியாது ஓங்கும்நின் நிலையின்
யான்வந்து அணைந்து மீள்குவன் ஆயின்,
ஆற்றுத்துயர் உற்றோர் அணிநிழல் அசைஇ
வீற்றுவீற் றெழுதர வேண்டலும் வெறுத்
தலும்
இன்றச் சாயைக்கு நன்றுமன் இயல்பே!
அனைய யாகுவை நினைவரும் காலை!
இந்நிலை யதனின் ஏழையேற்கு இரங்கி
நின்னை வெளிப்படுத்து ஒளிப்பை நீயேல்,
அருள்மா ருகும்; பெரும!அஃ தன்றியும்,
நிற்பெற் றவர்க்கும் உற்பவம் உண்டெனும்
சொற்பெறும்; அஃதித் தொல்லுலகு இல்லை
அவ்வவை யமைவும் சால்பும் அயர்வறச்
சொல்லிற் சொல்எதிர் சொல்லாச்
சொல்லே சொல்லுக சொல்லிறந் தோயே''.

என வரும் இருபா இருபஃது என்னும் சைவ சித்தாந்த நூலின் 12-ஆம் பாடலில் 6,7-ஆம் வரிகளில் ''உன்னில் உன்னி உனுவிடிற் பெயர் குவை என்னும் அதுவே நின் இயல்பு எனினே'' என அருள்நந்தி சிவாசாரிய சுவாமிகள் அநுவாதம் செய்து மேற்கோளாகக் காட்டி எடுத்து மொழிந்திருப்பது,

''உன்னில் உன்னும் உனுவிடில் விட்டிடும்
என்னுள் ஈசன் இருந்த இயற்கையே''

என வரும் இவ் இனிய தேவாரப் பாடலின் இரண்டு வரிகளையும் நினைவு கூர்ந்தேயாகும்.

**நமச்சிவாயத் தம்பிரான் :**

இவ் வுண்மையைப் பிற உரையாசிரியர்கள் நுண்ணிதின் உணர்ந்து காட்டாது ஒழிந்தன ராயினும், திருவாவடுதுறை ஆதீனத்து **நமச்சிவாயத் தம்பிரான்** அவர்கள், தாம் இயற்றிய இருபா இருபஃது உரையில் இவ் வரிகளுக்குப் பொருள் விவரிக்குங்கால், இத் தேவாரப் பாடலை முழுதாக எடுத்துக் காட்டி இன்புறுத்துகின்ருர்கள். இப்பாடல் தேவாரம் என்றும் அவர்களாற் கிளந்து கூறப் பெற்றுள்ளமை, நமக்குத் தெளிவும் மகிழ்வும் பயக்கின்றது.

**சித்தாந்த நூல்களில் தேவாரம் :**

ஸ்ரீ அருள்நந்தி சிவாசாரிய சுவாமிகள் ஆங்காங்குத் தேவார திருவாசகத் திருமுறைத் தொடர்களை நினைவுகூர்ந்து தம் நூல்களில் ஏற்ற பெற்றி எடுத்தாளும் இயல்பினர் என்பதனை, அவர்தம் **சிவஞான சித்தியார்** என்னும் செந்தமிழ்த் திருநூலிற் பல இடங்களிற் காணலாம். அஃது ஒருபுறம் இருப்ப, இவ் 'இருபா இருபஃது' என்னும் அரிய இனிய நூலினுள்ளும்

''இருநிலம் தீநீர் இயமானன் கரல் (1) எனும்
பெருநிலைத் தாண்டவம் பெருமாற்கு இல்
ஆதலின்,
வேருே ? உடனே? விளம்பல் வேண்டும்!
சீறி அருளல் சிறுமை யுடைத்தால்!
காண்பார் யார்கொல்? காட்டாக் கால் (2)
எனும்
மாண்புரை யுணர்ந்திலை மன்ற! பாண்
டியன்
கேட்பக் கிளக்கும் மெய்ஞ்ஞா னத்தின்
ஆட்பா லவர்க்கருள் (3) என்பதை அறியே
—இருபா இருபஃது, 2.

''உற்றவர் பெற்றவர் அற்றவர் முற்றும்
அற்றவர்க்கு அற்றவன் (4) அல்லவர்க்கு
அல்லவன்
அந்தம் ஆதி இல்லவன் ......''
—இருபா இருபஃது, 20

எனவரும் பகுதிகளில், அரிய பல தேவாரப் பாடல்களை நினைவுறுத்தி, ஆசிரியர் அருள்நந்தி சிவாசாரிய சுவாமிகள் எடுத்துக் காட்டிக் கையாண்டிருத்தல் காணலாம்.

இப் பகுதிகளில் முறையே, (1) ''இருநிலனய்த் தீயாகி நீரும் ஆகி... எனவும், (2) ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடா தாரே...'' எனவும் வரும் திருநாவுக்கரசர் திருப்பாடல்களும்; (3) ''ஆட்பாலவர்க்கு அருளும் வண்ணமும் ஆதி மாண்பும் கேட்பான் புகில் அளவில்லை'' எனவும், (4) ''அற்றவர்க்கு அற்ற சிவன் உறைகின்ற ஆலவாய் ஆவதும் இதுவே'' எனவும்

வரும் திருஞான சம்பந்தர் திருப்பாடல்களும் எடுத்தாளப் பெற்றிருக்கின்றன.

இவற்ருல் ''உன்னில் உன்னி உனவிடிற் பெயர்குவை'' எனவரும் இருபா இருபஃது வரியும், நாம் மேற்குறித்த திருநாவுக்கரசர் தேவாரப் பாடலைச் சுட்டியதேயாகும் என்பது செவ்விதிற் றெளியப்பட்டு நன்கினிது வலியுறும்.

முடிவுரை :

இதுகாறும் கூறியவாற்ருல் யாழ்ப்பாணம் திரு. சுவாமிநாத பண்டிதர், ஸ்ரீமத் பாம்பன் குமரகுருதாச சுவாமிகள், திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீ நமச்சிவாயத் தம்பிரான், தாயுமான சுவாமிகள், ஸ்ரீலஸ்ரீ அருள்நந்தி சிவாசாரிய சுவாமிகள் முதலிய பலரானும், நாம் மேலே கண்ட திருநாவுக்கரசர் தேவாரத் திருப்பாடல் பெரிதும் போற்றப் பெற்றிருக்கும் செய்தி செவ்விதில் தெளியப்படும்.

எனவே, இச் சிறந்த இனிய தேவாரத் திருப்பாடலை இனிவரும் திருமுறைப் பதிப்புக் களிலேனும் சேர்த்துப் பதிப்பிட்டுப் பயன் கொள்ளுதல், சைவத் தமிழுலகிற்கு இன்றியமையாத கடப்பாடாகும். ★

இந்நாளில் நாம்காண இனியநல்ல
காந்தியண்ணல் உலகம் எல்லாம்
என்னேமற் றிவர்பெருமை எனவியப்ப
வாழ்ந்திருந்தார்! இனிதி வர்போல்,
அந்நாளில் ஆயிரத்து முந்நூறு
ஆண்டுகளின்முன் அப்பர் என்னும்
நந்நாவுக் கரசர்பிரான் நனிவாழ்ந்தார்!
இவர்களைநாம் நயந்து வாழ்வோம்.

— ந. ரா. முருகவேள்



திருநாவுக் கரசுவளர் திருத்தொண்டின் நெறிவாழ
வருஞானத் தவமுனிவர் வாகீசர் வாய்மைதிகழ்
பெருநாமச் சீர்பரவல் உறுகின்றேன் பேருலகில்
ஒருநாவுக் குரைசெய்ய ஒண்ணுமை யுணராதேன்

—சேக்கிழார் சுவாமிகள்.

# திருநாவுக்கரசர் வரலாறு

திரு. K. சோமசுந்தரம் செட்டியார் அவர்கள், B.A.
முன்னாள் உதவிச் செயலர், சென்னை அரசு.

பத்திச் சுவை நனி சொட்டச் சொட்டத் தொண்டர் புராணத்தைப் பாடிய கவிவல்லவர் சேக்கிழார் சுவாமிகள் கூறும் தொண்டர் வரலாறுகள் 72. அவற்றுள் 9 தொகைக் கூட்ட அடியார்களுடையனவும், ஏனைய 63-ம் விழாக் கொள்ளும் அறுபத்து மூவருடையனவுமாகும். தொகையடியார்களாவார், அப்பாலுமடிச் சார்ந்தார், திருவாரூர்ப் பிறந்தார், தில்லைவாழ் அந்தணர், பத்தராய்ப் பணிவார், பரமனையே பாடுவார், பொய்யடிமை யில்லாத புலவர், முப்போதும் திருமேனி தீண்டுவார், முழுநீறு பூசிய முனிவர், சித்தத்தைச் சிவன் பாலே வைத்தார்.

தனியடியார்களில் நால்வர் — திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசு சுவாமிகள், சுந்தர மூர்த்தி சுவாமிகள், மணிவாசகப் பெருமான், சைவ சமய குரவர் எனப்படுவார். இவர்கள் முறையே சத்புத்திர மார்க்கம், தாச மார்க்கம், சக மார்க்கம், சன்மார்க்கம் மேற்கொண்டனர். முதல் மூவரும் பாடியது தேவாரப் பாடல்களாகும். மணிவாசகப் பொருமான் பாடியது திருவாசகமாகும். ஞானசம்பந்தர் பாடல்களைத் திருக்கடைக் காப்புச் செய்யுள் என்றும், நாவுக்கரசர் பாடிய பாடல்களை மட்டும் தேவாரங்கள் என்றும், சுந்தர மூர்த்தி சுவாமிகள் பாடிய பாடல்களைத் திருப்பாட்டுகள் என்றும் சிலர் கூறுவர். பத்துப் பாடல்கள் கொண்ட தொகை பதிகம் எனப்படும். உதாரணமாக, திருநீற்றுப் பதிகம், கோளறு பதிகம்...

திருஞான சம்பந்தருடைய பதிகங்கள் 7, 8, 9-ம் பாடல்கள் முறையே ஆணவம், கன்மம், மாயை இவைகளைக் குறிக்கும். 7-வது பாட்டு ஆணவம் உடைய இராவணனைக் குறிக்கும். 8-வது கன்மமுடைய பிரம்மன், இராமன் இவர்களைக் குறிக்கும். 9-வது பாட்டு மாயையாகிய மயக்க அறிவுடைய சமணர், சாக்கியர் இவர்களைக் குறிக்கும்.

இறுதியாகக் கூறிய மூன்றும் நமது வலக் கையிலுள்ள கட்டை விரல் பதியையும், சுட்டு விரல் பசு அல்லது ஆன்மாவையும், ஏனைய மூன்று விரல்களும் மும்மலங்களையும் குறியா நிற்கும் என்று கொள்ளலாம். இப்பதி, பசு, பாசக் கொள்கையே சைவ சித்தாந்தக் கொள்கை. நம்மவர்களில் சிலர் காலையில் எழுந்தவுடன் இரு கைகளையும் சேர்த்துத் தேய்த்துப் பாத அஞ்சலி செய்வது உண்டு. ஐந்து விரலால் ஆண்டவனின் ஐந்தெழுத்தையும், முதல் மூன்று விரல்களால் பதி, பசு, பாசக் கொள்கையையும் நினைப்பதாகக் கொள்ளலாம். ஆகவே கைகளாலும் விரல்களாலும் ஆன திருவருட் பயனையடையலாம்.

இந்தக் கட்டுரையில் சிறப்பாக வெளியிடுவது சமய குரவர்களுள் ஒருவராகிய திருநாவுக்கரசு சுவாமிகள் வரலாறு ஆகும். அவர் தேவாரம் பாடிய மூவருள் ஒருவர். சமயகுரவர் நால்வரை, ஆளுடைய பிள்ளையென்றும், ஆளுடைய அரசு என்றும், ஆளுடைய நம்பி என்றும், ஆளுடைய அடிகள் என்றும், ஆண்டவனால் ஆளப் பட்டமையால் வழங்குவது உண்டு.

சிவன் கோயில்களில் நான்கு அடியார்களையும் கண்டு அநுபவிப்பதற்குச் சம்பந்தர் கையில் தாளமும், நாவுக்கரசர் தோளில் உழவாரப்படையும், சுந்தரர் மெய்யில் ஆடை அலங்காரங்களையும், மணிவாசகரை கையில் புத்தகத்துடனும் காணலாம். அப்புத்தகம்தான் திருவாசகம் ஆகும்.

அப்பர் சுவாமிகளைத் தாண்டக வேந்தர் என்று அழைப்பதும் உண்டு. தாண்டகமாவது ஒருவகைப் பிரபந்தம். அது இருபத்தாறெழுத்தின் மிக்க எழுத்தானடி கொண்டுவரும்பா. அறுசீராலேனும் எண்சீராலேனும் இயன்ற

ஒத்த நான்கடி கொண்ட செய்யுட்களையுடையதும், கடவுளரைப் புகழ்வதுமான ஓர் வகைப் பிரபந்தமாகும். இவருடைய பாடல்களுள் பதி, பசு, பாசத்தைக் குறித்த ஆணவம், கன்மம், மாயைக்குரிய பாடல்கள் ஒழுங்காகச் சம்பந்தர் பதிகங்களில் காணப்படுவதைப் போல் மற்றவர்கள் பாடல்களில் காண முடியாது.

நால்வருள் திருநாவுக்கரசு ஒருவர்தான் வேளாளர். ஏனையமூவரும் வேதியர்கள். நால்வருள்ளும் வாகீசராகிய நாவுக்கரசு எண்பத்தோராண்டு வாழ்ந்து தெய்வீகம் அடைந்தார். முதலில் சமண சமயச் சார்பு உண்டாகிச் சமணப் பள்ளியிலேஇருந்தார். அவர் கல்விகேள்விகளிலே சிறந்தவராக இருந்து சமணர் கேட்கும் கேள்விகளுக்கெல்லாம் தகுந்த முறையிலே விடையளித்து சிறப்பாகத்திகழ்ந்தார். ஆகவே அவர்கள் அவரைத் தங்களுக்குத் தலைவராகக் காணும் பான்மையிலே அவருக்குத் தருமசேனர் என்று பெயரிட்டனர். சிறிது காலம் ஆனபிறகு ஆண்டவன் மறக்கருணையால் சைவத்திற்கு மீட்டுக் கொள்ளக் கடிய சூலை நோய் (Hernia) உண்டாகும்படிச் செய்தார். அந்நோய் குடரோடு தொடக்கி முடக்கியிடச் செய்து பெருவேதனை செய்தது. சமணர்களால் எவ்வளவோ முயன்றும் அந்நோயை விலக்க முடியவில்லை. இறுதியில் ஒரு சமையல்காரன் நாயனருடைய தமக்கையாரிடத்து (திலகவதியாரிடத்து) கொண்டு வந்து திருவதிகையில் சேர்த்து விட்டுச் சென்றான்.

இந்தத் தமக்கையார்தாம் தாய் தந்தையர் காலமாய்விடத் தம்பியார் "உளராக வேண்டும் என வைத்த தயா" வினால் தழைத்தார். இன்றேல் அவர் நமக்குக் கிடைத்திருப்பாரோ இல்லையோ! 'தயா' என்னும் சொல் அரிய ஆட்சியை உடையது. சைவ நூல்களில், திருவாசகத்தில் திருப்பூவல்லி(13-3ம் பாடல்)யிலும், மேலே குறிப்பிட்ட பெரிய புராணத்திலும் காணலாம். வைணவத்தில் கம்ப இராமாயணத்தில் திருவடி சூட்டுப் படலத்திலும் (55, 60) காணலாம். இன்றேல் நமது நாவுக்கரசு அவர்கள் கிட்டியிருப்பாரோ இல்லையோ!

அந்தத் திருவதிகையிலே உழவாரப்படை வைத்துக்கொண்டு கோயிலில் வழிபட வருவோர்களுக்கு வழியுண்டாக்கித் தந்தார். இந்த உழவாரப் படைதானே திருப்புகலூரில் அது நுழையுமிடமெல்லாம் மணியும் பொன்னுமாக ஆண்டவன் உண்டாகச் செய்தான். அம்மணித்திரள்களைக் கண்டும் நாயனர்க்கு ஆசை சிறிதும் உண்டாகவில்லை. அவர்க்கு மண்ணாசை பொன்னாசை ஒன்றும் நிலைக்காது. பெண்ணாசையுமில்லை என்பதற்குத் தேவ மாதர்கள் அவ்விடத்திற்கு வந்து காம எழுச்சியுண்டாகுமாறு ஆடல் பாடல்கள் செய்தார்கள். அதனாலும் அவர் மயங்கவில்லை. மணித்திரள்களைத் தமது உழவாரப் படையினாலே வாரி எறிந்தார். ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்குவார் என்பது அடியாருடைய இலக்கணமாகும் (பெரிய புராணம் — திருக்கூட்டச் சிறப்பு காண்க)

அந்தக் காலத்தில் சைவத்திற்கும் சமணத்திற்கும் பெரும் பகையுண்டு. சைவத்தை விலக்கிச் சமணத்தை நிலைநிறுத்துவிக்க முயன்றார்கள். பல்லவ அரசர்களும் அம்முயற்சிகளுக்குத் துணையாக உதவினர். பழையாறை வடதளி என்னும் இடத்தில் சிவலிங்கம் சமணர்களால் மறைக்கப் பட்டிருந்தது. அம்மறைப்பினை விலக்கத் திருநாவுக்கரசு நாயனர் பெரும் பாடுபட்டும் சமணர்கள் இடம் விடவில்லை. மனம் பெரிதும் நொந்து நாயனர் உண்ணாவிரதம் மேற்கொண்டார். இறைவன் இவ்வுண்ணாவிரதத்தைச் சோழ அரசனுக்குக் கனவில் அறிவித்தார். அரசன் மூடியிருந்த சிவலிங்கத்தை விடுவித்தான். நம் நாட்டை ஆங்கில ஆட்சியிலிருந்து விடுவித்தது காந்தியடிகளுடைய சத்தியாக்கிரகம் என்னும் நெறியே. அந்த ஆக்ரஷப் பகுதியிலே உண்ணாவிரதமும் ஒன்று. இவ்வுண்ணாவிரதம் நம்தமிழ்நாட்டில் சமணர் குறும்பை ஒழிக்க நாவுக்கரசர் முதல் முதலில் மேற்கொண்டார். அவ்விரதம் புதிய ஒன்று அன்று.

அக்காலத்தில் நோய்களை மணி, மந்திரம், ஔஷதாதிகளாலே நீக்குதல் உண்டு. இந்த முறைகளில் நமது நாயனரும் மந்திர மிட்டுப் பாம்பின் விஷத்தை நீக்கியிருக்கிறார். "ஒன்று கொலாம்" என்ற செய்யுளை நோக்குக. நாயனருக்கு அன்பராகிய அப்பூதியடிகள் இல்லத்தில் உணவருந்தச் சென்றிருந்தபோது அப்பூதியடிகளுடைய மூத்தபிள்ளையாகிய மூத்த திருநாவுக்கரசு வாழையிலை கொய்தபோது பாம்பு ஒன்று கடித்துவிட்டது. ஒன்று முதல் பத்து வரையில் எண்ணலங்காரத்தில் பாடுவது

இயல்பாயிருந்தது. "ஒன்று வெண்பிறைக் கண்ணியோர் கோவணம்" நோக்குக (தேவாரம் – சமாஜப் பதிப்பு - பக்கம் 290 - பாடல் 89)

சைவத்திற்குச் சமணர்கள் செய்த இடர்கள் கணக்கில. நாயனரை நஞ்சுண்ணச் செய்தார்கள். அவர் நஞ்சு என்று தெரிந்தும் உண்டார். வள்ளுவர் வாய் மொழிப்படி இது சிறந்த நாகரிகம் ஆகும். (குறள் 580 - "பெயக்கண்டும் நஞ்சுண்டமைவர் நயத்தக்க நாகரிகம் வேண்டுபவர்" ஒன்றுலும் நாயனரைக் கொல்ல முடியாமை கண்டு கல் தூணில் சேர்த்துக் கட்டிக் கடலில் பாய்ச்சினர். அப்பொழுதும் அவர் மரிக்காமல் நமச்சிவாயப் பதிகம் பாடிக்கொண்டே கல் தூணைத் தெப்பமாகக் கொண்டு கரையேறினர். இப்போது அவ்விடம் கரையேறிவிட்ட குப்பம் என்று வழங்குகிறது.

கிரேக்க வரலாற்றில் சாக்ரடீஸ் என்ற தத்துவ ஞானிக்கு விஷம் ஊட்டப்பட்டது. இது பண்டைக் காலத்து அடக்கு முறையாகும். நம் நாவுக்கரசரோ விஷத்தையுண்டும் பிழைத்திருந்தார்.

நீற்றறையி லிடுவிக்கப்பட்ட அப்பர் ஒரு வாரம் இருந்தும் புழுங்கிப் பொசுங்காவண்ணம் வெளியேறினர். பெருமகிழ்ச்சியுடன் வெளி வரும்போது "மாசில் வீணையும்" என்ற அனைத்தும் குளிர்ச்சியடையும்படி பாடிக் கொண்டே வந்தார். இவ்வாறெல்லாம் அநேக இக்கட்டுகள் பட்டும் ஒருவித துன்பமும் இல்லாமல் உவகையுடனிருந்தார்.

திருநாவுக்கரசர் தமது உழவாரப் படையினலே ஆலயத்திற்குப் போகவர மக்களுக்கு யாதொரு முட்டுமில்லாமல் ஆக்குவதற்குக் கல், புல், முள் இவைகளை நீக்கிச் சேவை செய்தார். அவ்வுழவாரப் படையால், அடியார்க்குச் செய்யும் தொண்டு ஐயனுக்கே செய்தது ஆகும். நாயனருடைய வாழ்க்கை இறுதியில், திருப்புகலூரில், ஒரு வாவியின் பக்கத்தில் உழவாரப் படை நுழையும் இடமெல்லாம் மணியும், பொன்னும் திரள் திரளாக உண்டாயின.

நாயனர் அவைகளையெல்லாம் சிறந்த விலை பெற்றனவாய் மதியாது, பருக்கைக் கற்களோடு ஒப்ப மதித்து எல்லாவற்றையும் வாரி உழவாரப் படையினுல் வாவியினில் புக எறிந்தார். ("செம்பொன்னும் நவமணியும்" பெரிய புராணம்-திருநாவு-417) நாயனர்க்குச் செல்வமாக்கும் மணிகள் மீது ஆசை செல்லவில்லை. எனவே அவைகளை வாரி எறிந்தார். இவ்வாறு மணிகளையும் கற்களையும் ஒக்க எறிவது இன்ப துன்பம் ஒன்ருகக் கருதுவதுபோல ஆகும்.

"thou hast been
As one, in suffering all, that suffers nothing,
A man that fortune's buffets and rewards
Hast ta'en with equal thanks"
[Hamlet Act III, Lines 63 to 66.]

என்கிருர் ஷேக்ஸ்பியர். இன்ப துன்பங்களை ஒன்ருகப் பாவிக்கின்ற நிலையை அக்கூற்றில் ஷேக்ஸ்பியர் கூறுவதைக் காணலாம்.

இதுவே இருவினையொப்பு எனப்படும். இந்த இருவினையொப்பேதான், ஏனைய மல பரிபாகம், அருள் சத்தி நிபாதம் உண்டாகுவதற்கான அடிப்படையாகும். இவை உண்டாகி விட்டால் மேல் பதவிகளாகிய சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சிய நிலைகளையடைந்து இறுதியில் ஆண்டவனேடு இரண்டறக் கலக்க ஏதுவாகும். இவைகளுக்கெல்லாம் அடிப்படையாயிருப்பது இருவினை யொப்பு என்பது நோக்குக.

மணிவாசகரும் தமது திருக்கழுக்குன்றப் பதிகத்தில் "என் வினை ஒத்தபின் கணக்கிலாத் திருக்கோலம் நீ வந்து காட்டினய் கழுக்குன்றிலே" என்று பாடியருளினர். அங்ஙனமே நமது திருநாவுக்கரசரும் திருப்புகலூரில் தேவ மாதர்களுடைய ஆடல் பாடல்களோடு ஆண்டவன் தரிசனம் கிடைத்து அவனேடு ஐக்கியமானர். இது கி பி. 655 ஐ ஒட்டியிருக்கலாம் என்று கருதப்படுகிறது.

"தந்திரிக்கழகு தறுகண் ஆண்மை" என்றனர் ஆன்ருேர். இது சேனுதிபதிகளுக்குச் சொல்லப்பட்ட முக்கிய இலக்கணமாகும். தறுகண் என்றுல் அஞ்சாமையாகும். தந்திரி—சேனைத்தலைவன். எதையும் கண்டு அஞ்சாமல் இருப்பதுதான் சேனைத் தலைவனுடைய இலக்ஷணமாகும்.

"தலைமார் கெடிலப் புனலும் உடையா
யொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை
அஞ்ச வருவது மில்லை."

இவ்விலக்கணம் நமது நாயனருக்கு அளவு கடந்து அமைந்துள்ளது. அவரே இதைச் சில பாடல்களில் தெரிவிக்கிருர். "நாமார்க் கும் குடியல்லோம், நமனை யஞ்சோம்" என்ற பாடலை ஓதியுணர்க. இந்த அச்சமின்மையின் காரணமாக மற்றவர்கள் அஞ்சுகின்ற சிறு தெய்வ வணக்கத்தை அவர் பாடல்களில் காண முடியவில்லை". அச்சமே கீழ் மக்களது ஆசாரம்! என்ருர் திருவள்ளுவர் (குறள் 1075-கயமை) நமது திருநாவுக்கரசு நாயனர் மிக உயர்ந்த நிலையிலுள்ள ஆசாரியராகையால் இந்தக் கீழ் மக்களது ஆசாரத்தை அவரிடம் காணக் இயலாது.

நமது நாயனருடைய வரலாற்றில் கைலாயம் காணும் பகுதி சிறப்புடையது. கைலை காண்பதற்காகக் க்ாளத்தி (தென் கயிலை) சென்று, பிறகு வழியெல்லாம் நடந்து கைலை மலையின் அடிச் சார்ந்தார். அதற்குப்பின் கைகளால் ஊர்ந்து சென்று, மார்பாலும் தாழ்ந்து சென்று, உடலெல்லாம் புண்ணுகி, சென்று கொண்டிருந்தவரை, ஆண்டவன் வேதிய உருவம் போல அங்கு நின்று "இனிப் பேகா வேண்டாம் இதற்குமேல் நரர்கள் செல்லக் கூடாது" என்று கட்டளையிட்டார். மற்றும் இந்த வாவியினில் மூழ்கினல் திருவையாற்றுக் குளத்தில் எழுந்திருப்பீர்கள். அங்குக் கைலைக் காட்சி கிட்டும் என்று ஆணையிட்டார்.

அவ்விதமே நாயனரும் அக்குளத்தினில் மூழ்கித் திருவையாற்றுக் குளக்கரையினின்று வெளியேறினர். எழுந்தபோது சரம், அசரம் ஆகிய எல்லாப் பொருள்களும் ஆணும், பெண்ணுமாகக் காணப்பட்டன. இது ஆணுக்கும் பெண்ணுக்குமுள்ள அன்புப்பிணிப்பைக்காட்டுவதாகும். இவ்வன்புப் பிணிப்பே கைலாயக் காட்சியாகும். ஆண்டவனும் சத்தியுடன், சிவசத்தி சொருபமாய்க் காட்சியளித்தார் ("மாதர் பிறைக் கண்ணியானை" என்னும் பாடலில் காண்க.) அவ்வமயம் பிடியோடுகளிறும், கோழி பெடையோடும், குயில் பெடையோடும், சேவல் பெடையோடும், மயில் பெடையோடும், மான் கலையுடனும், கிளி ஆணும் பெண்ணுமாய் அனைத்தும் வரக் கண்டார்.

ஆணும் பெண்ணுமாக வருவது ஒரு தனி நிலையாகும். அதுவே அன்பு நிலையெனப் படும். கிறித்துவ சமய நூலாகிய பழைய ஏற்பாட்டில், பிரளய காலத்தில் நோவா என்பவன் சிருஷ்டிகளையெல்லாம் தன்னுடன் அழைத்துக் கொள்வதற்கு ஆணும் பெண்ணுமாகவே புரு முதலியவற்றை வெளிவிட்டு, தன்னிடம் மீண்டு வரும்போது ஜோடி ஜோடியாக வந்ததாகவும் கூறியிருப்பதைக் காணலாம். தலைவன், தலைவி என்னும் பாத்திரங்களை வைத்துக்கொண்டு பாடுவதே கோவை நூலாகும். மணிவாசகப் பெருமானும் தான் பாடிய திருக்கோவையாரிலும் சிவசத்தியைத் தலைவன் தலைவியாக வைத்துப் பாடியிருக்கிருர். தமது திருச்சாழலில்-பின்வருமாறு கூறுகிருர்.

"தென்பா லுகந்தாடும்
தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பா லுகந்தான்
பெரும்பித்தன் காணேடி!
பெண்பால் உகந்திலனேல்
பேதாய்! இருநிலத்தோர்
விண்பாலி யோகெய்தி
வீடுவர்காண் சாழலோ!

திருநாவுக்கரசர் கண்ட காட்சி இக் குறிப்பினையே வலியுறுத்துவதாகும். நாவுக்கரசர் திருப்பைஞ்ஞீலிக்குச் செல்லும்போது பெரும் பசி நீர் வேட்கை யுண்டாயிற்று. (பைம்+ஞீலி பைம்=பசிய; ஞீலி=வாழை) மேலும்சென்ருர். ஒரு சோலையில் வேதியர் கோலத்தோடு பொதிசோறும் தண்ணீரும் வைத்துக்கொண்டு ஆண்டவர் நின்று கொண்டிருந்தார். அச்சோற்றையும் நீரையும் நாவுக்கரசரும் உடன் சென்ரேரும் வேண்டிய அளவு உண்டு பசிப் பிணியினின்றும் நீங்கினர்

இஃதே போன்று சுந்தரரும் திருக்கச்சூரில் தானும் ஏனைய அடியார்களுடனும் உணவருந்திய காட்சி கூறப்படுகிறது. ("முதுவாயோரி ......என்னும் பதிகம் காண்க.)

தமிழகத்தில் பஞ்சம் நேர்ந்த காலத்து அடியார்க்கெல்லாம் உணவளிக்கச் சம்பந்தனுர் வாசியுள்ளகாசும், நாவுக்கரசர் வாசியில்லாக் காசும் இறைவன் அருளால் அளிக்கப் பெற்ருர்கள். நாவுக்கரசருக்கு ஏற்பட்ட இக் குறையை மறைக்காட்டுக் கோயிலின் பழங் கதவைத் திருநாவுக்கரசர் திறக்கவும், ஞானசம்பந்தர் மூடவும் இறைவன் அமைத்து, இரு குரவருக்கும் ஈடுபாடு இம்முறையாகச் செய்தார்.

நாவுக்கரசு சுவாமிகள் உழவாரப் படையோடு பொது மக்களுக்கான சேவை செய்ததே முக்கியமான பணியாகும். அவர்களே தேவாரத்தில் "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்று அருளியுள்ளார்கள் என்பதைக் கீழ்வரும் பாடலில் காணலாம்.

"நங்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்துகி டப்பதே"





வீட்டிற்கு வாயில் எனும்தொடை சாத்து
சொல்வேந்த ! பொது
ஆட்டிற்கு வல்லன் ஒருவற்கு ஞான
அமுதுதவி
நாட்டிற் கிலாத குடர் நோய் நினக்குமுன்
நல்கினும் என்
பாட்டிற்கு நீயும் அவனும் ஒப்பீர் !
எப்படியி னுமே.

—சிவப்பிரகாச சுவாமிகள்.

எனக்கன்பு நின்பொருட் டெய்தாத
தென்கொல்? வெள்ளே றுடையான்
தனக்கன்பு செய்திருத் தாண்டக
வேந்த ! இத் தாரணியில்
நினக்கன்பு செய்கின்ற அப்பூதி யைச்சிவ
நேச முறும்
இனர்க்கன்பு செய் நம்பி யாரூரன்
ஏத்தும் இயல் பறிந்தே

—சிவப்பிரகாச சுவாமிகள்.

# அப்பர் அருள்மொழி

திரு. G. கலியாணம், M.A., Dip.Econ.

'அறம் சுருங்கி மறம் பெருகும் காலத்தில் நான் உலகில் அவதரிப்பேன்' என்று கண்ணபகவான் பார்த்தனுக் கருளினன். உலகில் பாவச் செயல்கள் மிகும் போது பெரியோர்கள் தோன்றி நன்னெறியில் ஒழுகுமாறு மக்களைத் திருப்பியுள்ளனர் என்பது வரலாறறிந்த தொன்று. தமிழகமும் பல்லவர் ஆட்சிக் காலத்தில் பரசமயத்தின் பாற்பட்டு நிலை தவறியிருந்தது. அப்போது தமிழ் நாட்டின் வடபகுதியை ஒரு பெரியாரும், தென்பகுதியை ஒரு சிறிய பெருந்தகை யாரும் சைவநன்னெறிக்குத் திருப்பத் தோன்றியருளினர். சமயகுரவர் நால்வர் வரலாற்றை எழுதிய ஆசிரியர்கள், உலகில் தீமை நீங்கி நன்மை பெருகவே அவர்கள் தோன்றினுர்கள் என்று கூறி யிருக்கிறுர்கள். "தாவில் சராசரங்க ளெல்லாம் சிவம் பெருக்கும் **பிள்ளையார்** திருஅவதாரம் செய்தார்" என்றும், "உலகில் வரும் இருள் நீக்கி ஒளி விளங்கு கதிர்போல மலரும் **மருணீக் கியார்** வந்தவதாரம் செய்தார்" என்றும், "தீதகன்று உலம் உய்யத்திரு அவதாரம் செய்தார்" சுந்தரர் என்றும், "பொய் மையாம் உலகின் மாயப்பொங்கிருள் அகல......ஞானதினகரன் (மணிவாசகர்) உதயஞ்செய்தார்" என்றும் கூறி யிருப்பது ஈண்டு உய்த்துணரற் பாலது. திருநாவுக்கரசர் உலகில் தோன்றியதை, "பெற்றுல் நினைப் பெற்றவர் போற் பெறலும் பிறப்பதுண்டேல் நற்றுரணியில் நினைப்போற் பிறப்பதும் நல்ல கண்டாய்" என்று சிவப்பிரகாச சுவாமிகள் நால்வர் நான்மணிமாலையில் கூறியிருக்கின்றுர்.

திருக்கூட்டச் சிறப்பைக் கூறவந்த சேக்கிழார் பெருமான் அடியார்களின் பொது இலக்கணங்களை வகுத்துத் தொகுத்துக் கூறியிருக்கிறுர். "கைத் திருத் தொண்டு செய்கடப் பாட்டினுர்; பூசு நீறுபோல் உள்ளும் புனிதர்கள்; பூதம் ஐந்து நிலையில் கலங்கினும் மாதொர் பாகர் மலர்த்தாள் மறப்பிலார்; கோதிலாத குணப் பெருங் குன்றனுர்; கேடும் ஆக்கமும் கெட்ட திருவினுர்; ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக் குவார்; கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி வீடும் வேண்டா விறலின் விளங் கினுர்; ஆரங்கண்டிகை ஆடையும் கந்தையே; பாரம் ஈசன்பணியல தொன் றிலார்; ஈரஅன்பினர்; யாதும் குறை விலார்; வீரம் எம்மால் விளம்பும் தகை யதோ." அப்பர் சுவாமிகளின் வரலாற்று நிகழ்ச்சிகளை உற்று நோக்கினுல் இவ் விலக்கணங்கள் அனைத்துமே அவரிடம் அமைந்திருந்ததைக் காணலாம்.

தாசமார்க்கம், கிரியாமார்க்கம் என்ப வற்றைக் கடைப்பிடித்து ஆண்டான் அடிமைத்திறத்து உயர்ந்து நின்ற அப்பர் **கைத்திருத் தொண்டாகிய** உழவாரத் தொண்டைச் செய்து வந்தார்.

**"வானந்துளங்கிலென் மண்கம்பமாகி லென்", "நாமார்க்கும் குடியல்லோம்"**
**"அஞ்சுவது யாதொன்றும் இல்லை இனி அஞ்சவருவதும் இல்லை", "என்றும் நாம் யாவர்க்கும் இடைவோம் அல்லோம்"**

என்ற அவருடைய திருவாக்குகள் **"பூதம் ஐந்து நிலையிற் கலங்கினும்"** தான் அஞ்சாத நிலையைக் காட்டு கின்றன. அரசர்களுக்கும் பகைவர் களுக்கும் அஞ்சி ஓடி ஒளிந்த பல

மதத்தலைவர்களைப் போன்ற நிலை நம் ஆளுடைய அரசரிடம் காணப்பெற வில்லை யென்றால் வேறென்ன கூற வேண்டும்.

பழையாறை வடதளிக் கெழுந் தருளிய போது அங்கு சிவபெருமானைச் சமணர் மறைத்து வைத்ததறிந்து, "வண் ணங்கண்டு நான் உம்மை வணங்கி யன்றிப் போகேன் என்று எண்ணம் முடிக்கும் வாகீசர் இருந்தார் அமுது செய்யாதே." உண்ணா நோன்பிருந்து தம் குறிக்கோளில் வெற்றி பெற்ற முதல் சத்தியாக்கிரகி இவரேயன்றோ! "ஆளும் நாயகன் கயிலையில் இருக்கை கண்டல் லால் மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன்" என்று கூறியதிலிருந்தும் இவர் நிலை கலங்கா மனவுறுதி புலப்படுகிறது.

திருப்புகலூரில் உழவாரப்படையால் கிளர்ந்த பொன் மணிகளைப் பரற்கற் களுடன் பொய்கையில் வாரி யெறிந்த செய்தி, இவரது **ஓடும் பொன்னும் ஒக்கவே நோக்கும்** பெற்றியை விளக்கி நிற்கின்றது.

திங்களூர் அப்பூதியடிகளின் மகன் அரவு தீண்டி யிறந்தவனைப் பதிகம் பாடி எழுப்புவித்தது, இவர் **ஈர அன்பினர்** என்பதை எடுத்துக் காட்டுகின்றது. பிறர் துயரம் காணப்பொறாத பெருந் தகையாரன்றோ!

பல்லவமன்னன் இவரை வருமாறு அமைச்சர் மூலம் ஆணைபிறப்பித்த போது 'நாமார்க்கும் குடியல்லோம்' என்று தொடங்கும் தாண்டகம் பாடி 'நீர் அழைக்கும் அடைவிலம்' என விடை பகர்ந்ததி லிருந்து இவருடைய **வீரம்** தெரிகின்றது.

"தாழ்வெனும் தன்மையோடு சைவ மாம் சமயம் சாரும் ஊழ் பெறல் அரிது" என்பர் ஆன்றோர். பாண்டி நாட்டில் சைவ நெறிபரப்பி வெற்றியுடன் திரும்பு கின்ற ஞான சம்பந்தர், அப்பர் தங்கி யிருக்கும் திருப்பூந்துருத்திக்கு விரைந்து வருகிறார். இதையறிந்த நாவரசர் 'வாழி அவர் தமைத்தாங்கும் மணிமுத்தின் சிவி கையினைத் தாழும் உடல் இது கொண்டு தாங்குவன் யான்" என்று கூறி, யாரும் அறியாதபடி சம்பந்தர் இவர்ந்து வரும் பல்லக்கைச் சுமந்து வந்தார். பூந்துருத்தி யண்மியதும் "அப்பர் எங்குற்றார்" என்று வினவினர் ஆளுடைய பிள் ளையார். "உம்மடியேன் உம்மடிகள் தாங்கிவரும் பெருவாழ்வு வந் தெய்தப் பெற்று இங்குற்றேன்" என்றார் அப்பர். என்னே இவரின் பணிவும் பண்பட்ட உள்ளமும்!

கல்லே புணையாகக் கொண்டு கடலி லிருந்து கரையேறிய சொல்வேந்தர் திரு வதிகைக்கு வந்ததை,

> **தூய வெண்ணீறு துதைந்த பொன்**
> **மேனியும் தாழ்வடமும்**
> **நாயகன் சேவடி தைவருசிந்தையும்**
> **நைந்துருகிப்**
> **பாய்வது போலன்பு நீர் பொழி**
> **கண்ணும் பதிகச் செஞ்சொல்**
> **மேய செவ்வாயு முடையார் புகுந்தனர்**
> **வீதியுள்ளே**

எனச் சேக்கிழார் கூறுகிறார். காஞ்சிப் புராண ஆசிரியர் இயற்றிய "இடையறாப் பேரன்பும்" என்று தொடங்கும் துதிப்பா டல் ஈண்டு நினைவு கூரற்பாலது. சிவபெரு மான் திருவடிக்கே பதித்த நெஞ்சும் என்பது "நாயகன் சேவடி தைவருசிந் தையும்" என்ற சேக்கிழார் வாக்கை அடியொற்றிச் செல்கிறது.

கடவுளது திருவடியை வருடும் உள் ளத்தர் என்பதை இவருடைய பல பாடல் களில் கண்கிறோம். "அரவணையான் சிந்தித்து அரற்றும் அடி" (திருவதிகை), "திருஇன்னம் பரான்றன் இணையடியே" (திரு இன்னம்பர்), "நான் அடிபோற்று வதே" (திருப்பூந்துருத்தி) என்பன போன்ற பல.

> **அண்டர் வாழ்வும் அமர ரிருக்கையும்**
> **கண்டு வீற்றிருக்கும் கருத்தொன்றிலோம்**

வண்டுசேர் மயிலாடு துறையரன்
தொண்டர் பாதங்கள் சூடித் துதையிலே

என்று விளக்கமாகப் பாடுகிறார். "ஏற்றாய் அடிக்கே" என்று முதல் பாடலில் கூறிய இவர், "ஒருவனையும் அல்லாது உணரா துள்ளம்..........உன்னடிக்கே போது கின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே" என்று கடைசியாக முடித்து அண்ணலார் சேவடி நீழற் கீழமர்ந்தார். இறைவன் திருவடிதைவருசிந்தையர் நாவரசர் என்பதைப் பல இடங்களில் குன்றை முனிவர் குறித்திருக்கின்றார். "செம்பொற்றாளே சார்வான திருமனமும்", "ஓவாது சிவன் தாள்கள் தழுவிய சிந்தையில் உணர்வு தங்கிய நீர்மை", "அத்தனார் திருவடிக்கீழ் நினைவகலா அன்புருகும் மெய்த்தன்மை உணர்வுடைய விழுத்தவத்து மேலோர்" என்பன அவற்றுட்சில. இறைவன் திருவடி என்றால் அவன் திருவருள் தான். அதையடைய மனம், வாக்கு, காயம் என்ற மூன்றாலும் அப்பர் வழிபட்டார். மனம் அவரையன்றி வேறொன்றையும் நினைக்காது; வாய் அவனுடைய பெருமையைச் செந்தமிழ்மாலை சாற்றிப் போற்றும்; காயம் உழவாரத் தொண்டில் ஈடுபட்டு நிற்கும்.

தாண்டக வேந்தர் நமக்குச்சில அறிவுரைகள்-அறவுரைகள் பகர்ந்தருளியுள்ளார். பொய்சொல்லிப் பொருள் சேர்த்தலை, "மாட்டைத்தேடி மகிழ்ந்து நீர் நும்முளே நாட்டுப் பொய்யெலாம் பேசிடும் நாணிலீர்" என்று சொல்லிக் கண்டிக்கிறார். உடல் வளர்க்கப் பேசுபவரை "வேம்பினைப் பேசி விடக்கினை ஓம்பி" என்று வெறுக்கிறார், "நடலையை மெய்யென்று நாத்திகம் பேசாதே" என்று தெய்வமில்லை யென் பாரை வெறுத்துப் பேசுகிறார். வெளிவேடம் - போலி வேடத்தை, "கோலும் புல்லும் ஒரு கையிற் கூர்ச்சமும்....நூலும் வேண்டுமோ நுண்ணுணர்ந்தோர்கட்கே' என்று சொல்லிப் பரிகசிக்கிறார். "சென்று நாம் சிறு தெய்வம் சேர்வோம் அல்லோம்" என்று கூறி ஒரு தெய்வ வழிபாட்டை வற்புறுத்துகிறார். உடலெடுத்த பெரும்பயன் ஆலயவழிபாடு செய்வதற்கே யென்று பல பாடல்களில் சொல்லி யிருக்கிறார். ஆணவம் ஒழிந்தழிந்தால் தான் இறையருள் கிட்டும் என்பதை இராவணன் கயிலையின் கீழ் அகப்பட்டுச் சாமகானம் பாடிச் சிவபெருமானிடம் வாளும் நாளும் பெற்றான் என்பதை அவர் ஒவ்வொரு பதிகத்திற் கூறியதன் மூலம் நமக்கு அறிவுறுத்துகிறார்.

மனிதர்கள் இங்கு வம் மொன்று சொல்லுகேன்
கனிதந்தால் கனிஉண்ணவும் வல்லிரே
புனிதன் பொற்கழல் ஈசன் எனுங்கனி
இனிது சாலவும் ஏசற் றவர்கட்கே

என்று நமக்காக இறைவனிடம் பரிந்து பேசுவதற்கு யாம் அவருக்கு என்ன கைம்மாறு செய்ய வல்லோம். அவருடைய அருள்மொழிகளின் வழிநின்று திருவருளுக்குப் பாத்திரமாக முயல்வோமாக.

திருநாவுக்கரசு வளர் திருத்
தொண்டின் நெறி வாழ்க!
திருநின்ற செம்மைநெறி யாங்கணும்
ஓங்குக!



# திருவடியும் திருநாவரசும்

முதுபெரும்புலவர் சிவஞானத்தம்பிரான் சுவாமிகள், திருவெண்காடு

திருநாவுக்கரசர் அருளிய தேவாரத்துள் திருவடியைத் தொழுது பாடிய அளவினை நோக்கின், ஏனையவற்றின் அளவு குறைவினதே. அதனால், அவ்வளவும் இதில் எழுத இயலாது. இயலாதெனினும், இயன்ற அளவு முயன்றெழுத வற்புறுத்தினர், திருநாவரசர் திருநெறியே தந்நெறியாக் கொண்டொழுகும் சைவப் புலவர் திருமுறையாராய்ச்சிப் புலவர், சித்தாந்த வித்தகர் திரு. ரா. சண்முகசுந்தரனர். அவர் வற்புறுத்தும் அதனின் நீங்க வல்லேன் அல்லேன், காரணம் அவர்க்கும் எனக்கும் சிவனடிமைத் தொடர்பு பெரிதுண்மையே ஆகும்.

திருநாவுக்கரசர், தாம் புழுவாய்ப் பிறக்கினும், புண்ணியனாகிய சிவபிரான் திருவடியை (மறவாது) வழுவாது போற்றும் வாய்ப்பு வேண்டும் என வரங் கேட்டார். "புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி என் மனத்தே வழுவாதிருக்க வரந் தர வேண்டும்" என்பது, திருப்பாதிரிப்புலியூரில் இறக்கவும் மற்றொரு பிறவி யெடுக்கவும் நேருமோ என்று அஞ்சியும் ஐயுற்றும் நின்றவர் போல அப்பர் சுவாமிகள் வேண்டிய வரம். இப்படிப் 'புழு' நினைப்பு வருதல் பெரியோர்க்கு இயல்பு. உபநிடதங்கள் சிற்சில உண்மைத் துறவிகட்கு ஒப்பாகப் புழுவைக் காட்டியிருக்கின்றன. அவை நாரத பரிவிராஜ கோபநிஷத் முதலியன. புழு ஊர்ந்து செல்வதால் உயிர்களுக்குத் துன்பம் இராது. அதுபோலத் துறவியும் நடைகொள்ளக் கடவன். "பர்யடேத் கீடவத்பூமௌ வர்ஷாஸ்வேகத்ர சம்வஸேத்" "கீடவத்விசரேந் மஹீம்." நாற்றம் மிக்க உடம்பிற் பற்றுடையவன் புழுவை ஒப்பான். "த்வக்மாம் ஸருதிரஸ் நாயுமஜ்ஜா மேதோஸ்தி ஸம் ஹதௌவிண் மூத்ர பூருய ரமதாம் க்ரீமி நாம்கிய தந்தரம்." பிரமர கீடம் போல உபாசித்து வந்தால் எல்லாக் கட்டுக்களினின்றும் வீடுறுகின்றன்.

"புழுவுக்குங் குணம் நான்குஎனக்கும் அதே
புழுவுக்கு இங்கெனக்குள்ள பொல்லாங்கில்லை
புழுவினும் கடையேன் புனிதன் தமர்
குழுவுக்கு எவ்விடத்தேன் சென்று கூடவே."

என்பது திருநாவரசர் அருளிச் செய்த திருவாக்கு. இதிலே, எனக்கும் புழுவுக்கும் குணக் கணக்கில் வேறுபாடில்லை. நான்கு குணம் என்னும் ஒன்றில் மட்டுந்தான் ஒற்றுமை உளது. இங்கு எனக்குள்ள பொல்லாங்குகள் புழுவுக்கு இல்லை. பொல்லாங்குடைய யான், (சிவபோக சாரத்தில் உள்ளது இவ்வாட்சி) நல்லாங்குடைய புழுவினும் கடையேன் ஆவேன். ஆதலின், சிவனடியார் இணக்கம் எனக்கு வாய்க்கும்படி அதற்குரிய தகுதி எனக்குச் சிறிதும் இல்லை.

அவர் எவ்விடத்தவர்? யான் எவ்விடத்தேன்? அவர் இருக்கும் இடத்திற்கும் யான் இருக்கும் இடத்திற்கும் நெடுவாசி உண்டு. அதனால் அவரிடத்திற்சென்று அவரோடு கூடி அருளாரமுதம் உண்ணும் பெரு நிலையைப் பெறயான் தகுதியில்லாதேன் என்பது இத்திருக்குறுந்தொகையின் உட்கோளாகும். இதிற் குறித்த நான்கு குணங்கள் யாவை? புழுவின் குணம் நான்கு எவை? நாவரசர் குணம் நான்கு எவை? இவ்வினாக்கள் இரண்டனுள் ஒன்றற்கே விடை தெரிகிறது. ஞானிகளின் நாற்குணம் "திருமந்திரம்-சிவஞான சித்தியார்" முதலிய அருள் நூல்களிற் கூறப்பட்டன. புழுவின் குணம் எனக்குத் தெரியவில்லை. சிலர் என்னிடம் சொன்னவை சிறிதும் பொருந்தாதன. அதனால், அவற்றை இதிற்குறித்திலேன்.

"ஞானிக்கு உடற்குணம் ஞானத்தின் நான்குமாம்" என்றது திருமந்திரம். உடற் குணம் நான்கும் பண்டையுறுதியிற் செல்லுதி யாயின், நடுத்திகழ் ஞானவாய்ம்ம நழுவியது என்பர்" என்பது உமாபதி சிவத்தின் திரு வாக்கு. "ஞான யோகக்கிரியாசரியை நான் கும் நாதன்றன் பணி" என்பது சிவஞான சித்திவசநம். இவற்ருல், ஞானத்திற் சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆன நான்கும் இத் திருக்குறுந் தொகையிற் குறித்த நான்கு குணம் ஆகும் என்பது தெளிவாயிற்று. ஆயினும் புழுவின் குணம் நான்கு எவை என்பதற்கு விடை கிடையாது.

'உண்பதனேடு ஆன குணம் நான்கும்' என்று தக்ஷிணமூர்த்தி தேசிகர் அருளியனவா கிய சுவை, ஒளி, ஊறு, ஓசை ,நாற்றம் என் னும் ஐம்புலனுகிய குணங்களை அன்றி வேறு குணங்களைப் புழுவின்பாற் கொள்ளல் எஞ்ஞான் றும் இல்லை. இன்ருகவே அவற்றுள் ஒன்று குறைந்தனவே கொள்ளப்படுவன. தள்ளப் படுவதை நிச்சயம் பண்ணுததே ஐயம் அரு மைக்கு ஏது. இக்காலத்து உயிர் நூலறிவுடை யார் என்ன கூறுவரோ?

சிவத்தியாநம் இல்லாதார் புழுவாய்ப் பிறப்பர் என்பது நியதி. அதனைத் திருக் கோவையாரும்,

"மாடஞ்செய் பொன்னகரும் நிகர் இல்லை
இம் மாதர்க்கு என்னப்
பீடஞ்செய் தாமரையோன்
பெற்ற பிள்ளையை, உள்ளலரைக்
கீடஞ் செய்து, என் பிறப்புக்
கெடத் தில்லை நின்ருேன் கயிலைக்
கூடஞ் செய் சாரற் கொடிச்சி
என்ருே நின்று கூறுவதே."

என்றது. (கீடம்-புழு). பொன்வண்ணத் தந்தா தியும்,

"தனக்குன்ற மாவையம் சங்கரன்றன்
அருளன்றிப் பெற்ருல்
மனக்கென்றும் நஞ்சிற் கடையா
நினேவன் மதுவிரியும்
புனக்கொன்றை யான் அருளால்,
புழுவாகிப் பிறந்திடினும்
எனக்கென்றும் வானவர் பொன்னுல
கோடொக்க எண்ணுவனே."

அதில் உள்ள 98-ஆம் திருப்பாடலும் இங்கு நோக்கத்தக்கது. கோயிற்றிருப்பண் ணியர் விருத்தமும் 'என் விதிவசத்தால், கடை படு சாதி பிறக்கினும் நீ வைத்தருளு கண்டாய், புடைபடுகிங்கிணித்தாட் செய்ய பாதம் என் னுள் புகவே.'' ''அருள்தரு சீர்த்தில்லையம் பலத்தான்றன் அருளின் அன்றிப் பொருள் தருவானத்து அரசு ஆதலின் புழுவாதல் நன் ரும், கருள்தரு செஞ் சடையோன் அருளேல், பிறவிக்கு, இருள்தரு கீழ் ஏழ் நரகத்துவீழும் இருஞ்சிறையே நன்ரும்.'' என்றது. 'நரகம் புகினும் எள்ளேன் திருவருளாலே இருக்கப் பெறின்' என்னும் திருவாசகத்தின் விளக்கம் இது.

இவ்வுண்மை நாயன்மார் அருளிச் செயல் களை நோக்கின், திருவடி வழிபாடு ஒன்றே சைவர்க்கு உரியது. அஃது இல்லையேல் புழு வாய்ப் பிறப்பது உறுதி என்பது புலனுயிற்று. ஆகவே, நாம் எல்லோமும், சிவபிரானை வேண் டிக் கொள்ளும் வரம் ஒன்றே. அதுவே இது வேறும் பல வழி தேவாரத்துள் உள. முக்கிய மாக நினைவில் வைத்துக் கொள்ளற் பாலன இவை :—

(அ) கருவுற்ற நாள் முதலாக உன்பாதமே காண்பதற்கு உருகிற்று என் உள்ளமும். (ஆ) கருவாய்க் கிடந்துன் கழலே நினையுங் கருத்து உடையேன். (இ) கருவுள்ளிருந்துன் கழலே நினைந்தேன். (ஈ) முத்திதருந்தாளிணைக்கே சரணம் புகுந்தேன். (உ) எம்பெருமான் திரு வடியே எண்ணின் அல்லால் கண்ணிலேன் மற்ருேர்களை கண் இல்லேன். கழலடியே கைதொழுது காணின் அல்லால்......உணர மாட்டேன். புண்ணியா உன்னடிக்கே போது கின்றேன் என ஒருமுறைக்குப் பத்து முறை சொல்லவேண்டும். (ஊ) பூவார் அடிச்சுவடு என்மேற் பொறித்துவை. (எ) இம்மை உன் தாள் என் நெஞ்சத்து எழுதிவை; ஈங்கு இக ழில் அம்மை அடியேற்கு அருளுதி என்பது இங்கு ஆர் அறிவார்? (ஏ)காதல் செய்வோர் தேவா திருவடி நீறு என்னைப் பூசு. என்

பவை முதலிய தேவாரச் செம்பொருளடிகளை ஓதி நாள் தோறும் திருவடி நினைவை வளர்த்துக் கொள்ளல் வேண்டும்.

அதனுல்தான், "இடம்படு ஞானத் தீயால் எரிகொள இருந்து நோக்கிற்கடம்பமர்காளை தாதை கழலடி காணலாமே" என்றது சுவாநுபூதிகமாம். முக்கணுன் பாதநிழலுள் ளிடை மறந்து நின்றங்குணர்வினுல் எய்யலாம். புள்ளுவர் ஐவரையும் இங்கு அவனருளே கண்ணுகக் காண்டல்—ஞானத் தீயால் நோக்குதல்-அவனருளாலே அவன்தாள் வணங்குதல் புள்ளுவரைப்பாத நிழலுள் இருந்து உணர்வினுல் எய்யலாம் என்றன. எல்லாம் பொருளால் ஒன்றே ஆகும்.

அவ்வாறு செய்யாமை பிறப் பிறப்பை விளக்கும். "பூக் கைக்கொண்டு அரன் பொன்னடி போற்றிலார்...காக்கைக்கே இரையாகிக் கழிவரே." 'திருக்கோயிலில்லாத திருவிலூரும்' 'திருநாமம் அஞ்செழுத்தும் செப்பார் ஆகில்' என்று தொடங்கும் திருத்தாண்டகங்களை அவ்வப்போது பாடிக்கொண்டிருத்தல், எதிர்மறை முகத்தாற் பெரும் பயன் தரும். திருவடி நிழலை அடைந்து அழியாத பேரின்ப வாழ்வு பெறப் பெருந்துணையாய் நிற்கும் திருவைந்தெழுத்து ஓதுவது இன்றியமையாமைத்து. அதன் பொருளறிந்து ஓதுதல் வேண்டும். வாய்மையின் ஓதல் வேண்டும். தன்(னை) நினையா வஞ்சர் தம்மை மறந்தானை(ச் சேராதார் நன்னெறிக்கட் சேராதார்) என்று திருநாகேச்சரத்துள் பாடியருளிய பெருமானுர், திருவீழி மிழலையிலும் அவ்வஞ்சனையாளர்க்கும் நஞ்சணிகண்டர்க்கும் இடைநிலமும், இடைப் பொழுதும் அளவிலாதன என்று குறித்தமை அறியத் தக்கது. "வஞ்சனையால் அஞ்செழுத்தும் வழுத்துவார்க்குச் சேயானைத் திருவீழி மிழலையானைச் சேராதார் தீநெறிக்கே சேர்கின்றுரே." வஞ்சனை இன்றி, "அகம் குழைந்து, மெய்வருந்தி அழுவார் தங்கள் வாயவன் காண்." வஞ்சனையாளர்க்குச் சேயவன் ஆகி மறைந்தவன், "வஞ்ச நெஞ்சர்க்கு (வாயவனுகும் அணியனுய்) அருளும் நள்ளாறன்" என்ற உண்மையை அநுபவித்துணரலாம். திருவீழிமிழலையில் அஞ்செழுத்தைக் குறித்துப் பாடியருளியதற்கு உரிய உண்மைக் காரணத்தை ஆராய்ந்தறிதல் வேண்டும். "மிழலையுள்ளீர் விக்கி அஞ்செழுத்தும் ஓத்து (முதனிலை திரிந்த தொழிற் பெயர்) ஒழிந்து உம்மை மறக்கினும் என்னைக் குறிக்கொண்மினே." சிவனெனும் நாமம்...பவனெனும் நாமம் பிடித்துத் திரிந்து பின்னுள் அழைத்தால், என்னைப் பன்னுள் அழைப்பு ஒழியான் இவன் என்று எதிர்ப்படுவான் அவன். "நின்நாமம் பரவி நமச்சிவாய என்னும் அஞ்செழுத்தும்; சாம் அன்று உரைக்கத் தருதி கண்டாய் எங்கள் சங்கரனே." என்று வேண்டுதல் நம் கடனுகும், யகரம் விட்டிசைக்கும் நேரசை, ஆனுல், தான் அவ்வேந்தையார் திருநாமம் ஆகிய நமச்சிவாயம் நம்மை இரு விசும்பில் (அவரடியில்) இருத்தும்,

"முருகார் நறுமலர் இண்டை
தழுவி வண்டே முரலும்
பெருகா றடைசடைக் கற்றையினுய்,
பிணிமேய்ந்திருந்த
இருகாற் குரம்பை இது;
நானுடையது; இது பிரிந்தால்
தருவாய் எனக்கு உன் திருவடிக் கீழ்
ஓர் தலைமறைவே."

என்ற விண்ணப்பமே நல்லோர்க்கு இறுதி விண்ணப்பம். இது கைகூடிட வேண்டிச் சிற்சில திருப்பதிகங்களை நாள்தோறும் ஓதிவருதல் வேண்டும். அவையாவன :

1. 'எட்டாந் திசைக்கும்' எனமுதலும் அடிநிழற்கீழ் ஆருயிர்த்திருவிருத்தம்.

2. 'குறுவித்தவா' எனத் தொடங்கும் பொன்னடிக் கீழ்த்திருவிருத்தம்.

3. 'சிந்திப்பரியன' எனத் தொடரும் (இருபது) அடித்தலத் திருவிருத்தம்.

4. 'மன்னும் மலைமகள்' எனப் பின்னும் இணையடித் திருவிருத்தம்.

5. 'மாணிக்கு' 'கருடத் தனிப்பாகன்' என்னும் இரு மலரடித்திருவிருத்தம். இத் திருப்பதிகத்துள் ஏனைய திருவிருத்தங்கள் நம் தவக் குறைவால் மறைந்தன.

6. தூங்கானைமாடச் சுடர்க் கொழுந்தடித் திருவிருத்தம்.

7. மரண பயம் போக்கும் திருக்கடவூர் உத்தமன் சேவடிவிருத்தம்,

# நால்வரில் நாவலர்!

திரு. P. U. ஷண்முகநாதன் அவர்கள், B.A., B.L. திண்டுக்கல்.

நந்தமிழ் நாட்டில் அனுதி காலமாய் வளர்ந்தோங்கி வந்த சமயம் சைவசமயம். இச் சமயத்துக்கு வேதபாகமாய் இருப்பவை பன்னிரு திருமுறைகள். அவற்றில் முதல் எட்டுத் திருமுறைகளை அருளிச் செய்தவர்கள் சமய குரவர் எனப் போற்றப்படும் சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்ற நால்வர். இந்நால்வரில் அப்பர் சைவ வேளாள குலத்தவர். ஏனையவர் அந்தணர். அந்தணர் மூவருக்கும் இறைவன் அருளிய பான்மை வேறு. அப்பருக்கு அருளியது வேறு. சம்பந்தருக்கு இறைவனும் இறைவியும் நேரில் தோன்றி ஞானப்பால் கொடுத்தருளி ஆட்கொண்டார்கள். இறைவியால் பொற்கிண்ணத்தில் அளிக்கப்பட்ட திருமுலைப் பாலை அருந்தியவுடனே,

"சிவனடியே சிந்திக்கும்
திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினில்
ஓங்கிய ஞானம்
உவமையிலாக் கலைஞானம்
உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர்
தாம் உணர்ந்தார் அந்நிலையில்"

என்றபடி இறைவனே முன்னின்று ஆட்கொண்டு தவமுதல்வராக்கி வைத்தார். இவரைப் பிற்காலத்தவர் முருகக் கடவுளின் அவதாரம் என்றே கருதினர். சுந்தரர் ஏற்கனவே கயிலையங்கிரியில் அணுக்கத் தொண்டராய் இருந்து பணி செய்தவர். அவர் இறைவன் ஆணையால் புவியில் அவதரித்தார். அவரை இறைவனே கிழ வேதியனுக மனப்பந்தலில் தோன்றி வழக்காடித் தடுத்தாட்கொண்டார். இதனை,

"கற்பகத்தினைக் கனகமால் வரையைக்
காம கோபனைக் கண்ணுதலானைச்
சொற்பதப் பொருள் இருளறுத்தருளும்
தூய சோதியை வெண்ணை நல்லூரில்
அற்புதப்பழ ஆவணங்காட்டி
அடியனுவென்னை ஆளதுகொண்ட
நற்பதத்தை நள்ளாறனை அமுதை
நாயினேன் மறந்தென்னினைக்கேனே"

என்று சுந்தரரே கூறுகின்ருர். இது போன்று வேறு பாடல்களிலும் குறித்துள்ளார். மாணிக்கவாசகருக்கு இறைவனே திருப்பெருந்துறையிற் குருந்த மரத்தடியில் குருநாதனுகத் தோன்றி நயனதீக்ஷை, ஸ்பர்ஸதீக்ஷை, திருவடிதீக்ஷை

---

திருவடியும் திருநாவரசும் ... ...

8. அணியணுமலைத் திருநேரிசையுள் வருந்திருவடி மறவா நினைப்பின் சிறப்பு.

9. திருவதிகைத் திருத்தாண்டகத்துள் ஒன்ருய திருவடித் திருத்தாண்டகம்

10. 'முளைத்தானை' எனமுன்னும் திருவாலவாய்த் திருத்தாண்டகம்; சிவனடியே சிந்திக்குந் திருப்பெருக்குந் திருத்தாண்டகம்.

11. 'உன்னடிக்கே போதுகின்றேன்' என்னும் உயர்புகலூர்த் திருத்தாண்டகம்.

12. திருவடியைச் சொல்லும் ஏனைய தேவாரத் திருப்பாடல்கள் (பெருகும் என்றஞ்சி இதிற் குறித்திலேன்) திருவடி சுமக்குந் திறத்தில் இராவணனுக்கும் சொல்வேந்தர்க்கும் உள்ள நெடுவாசி கூறும் திருப்பாடல்களையும் நோக்குவாராக. இவற்றை ஓதி வருவோம் ஆயின், அப்பொழுதுதான் நாம் எல்லாம் திருவடி நிழலைத்தரும் நமச்சிவாயம் நாவால் சொல்லவல்லோம் ஆவோம். வாழ்க வாகீசர் வாய்மை! வளர்க அவர் காட்டிய சைவநெறி.★

செய்தருளி பஞ்சாக்ஷர உபதேசமும் செய்கின்ருர். இச்செய்தியை மாணிக்கவாசகரே பல பாடல்களில் கூறியிருக்கின்ருர்.

"செந்தழல் புரை திருமேனியும் காட்டித்
திருப்பெருந்துறை கோயிலும் காட்டி
அந்தணன் ஆவதும்
காட்டி வந்தாண்டாய்"

ஆக இம்மூவர்க்கும் இறைவனே மானிடச் சட்டை தாங்கி அவர்கள் முன் தோன்றித் தீக்ஷை செய்வித்து உபதேசமும் செய்தருளினுன்.

ஆயின் அப்பருக்குத் தீக்ஷையும் உபதேசமும் செய்தருளியது யார்? எவ்விதம்? சேக்கிழார் புராணத்திலோ, அதற்கு முன் தோன்றிய சுந்தரரின் திருத்தொண்டத் தொகையிலோ, நம்பியாண்டார் நம்பியின் திருத்தொண்டர் திருவந்தாதி, திருநாவுக்கரசர் ஏகாதசமாலை முதலிய நூல்களிலோ இவருக்கு இறைவன் குருநாதனுக எழுந்தருளி தீக்ஷை செய்வித்து உபதேசம் அருளியதாகக் காணக் கிடைக்க வில்லை. ஏனைய மூவரும் முன்பு கூறியபடி இறைவன் தமக்கு அருளியதை அவர் பாடல்களிலிருந்து அகச் சான்ருகவே அறியக் கிடக்கின்றது. அப்படியும் நம் அப்பர் பாடல்களில் ஏதும் அகச்சான்று இருப்பதாகவும் இல்லை. இறைவன் தம் மீது பல சமயங்களில் காட்டிய அருட்டிறனைப் போற்றிப் புகழ்ந்து பாடியுள்ளனரேனும், தனக்கு இறைவன் குருநாதனுக வந்தனன் என்ற முறையில் யாதொரு சான்றும் கிடைத்திலது. இனி அவர் புராணத்தைச் சிறிது ஆராய்வோம்.

சேக்கிழார் புராணத்தில்,

"நில்லாத உலகியல்பு கண்டு
நிலையா வாழ்க்கை
அல்லேன் "என் றறத்துறந்து
சமயங்களான வற்றின்
நல்லாறு தெரிந்துணர
நம்பர் அருளாமையினுல்
கொல்லாமை மறைந்துறையும்
அமண்சமயம் குறுகுவார்.

என்றமையால், வாழ்க்கையின் நிலையாமையை உணர்ந்து, யாவற்றுப் பற்றையும் துறந்து பல சமயங்களை ஆராய்ந்தார். ஆனுல் "நம்பர் அருளாமையினுல்" கொல்லாமை என்றதையே விரதமாகக் கொண்ட அமண் சமயத்தை மேற் கொண்டார், என்று பார்க்கிறேம். தமது ஆன்ம சாந்தி எங்கு கிடைக்கும் என்று ஏங்கினவராய்ப் பல சமய ஆராய்ச்சியில் இறங்கியும் இறைவன் அருள் கூடாமையால் மெய்ந் நெறியை விட்டுப் பொய் நெறியாம் அமண் சமயம் மேவினுர். துறவறமும், கொல்லாமையும் என்ற போர்வையில் உண்மை நெறி போல் காட்சி யளித்த இடைக்காலத்துச் சமணநிலை அவரை ஈர்த்தது போலும். அதற்கு முக்கிய காரணம் இறைவனருள் கூடவில்லை என்கின்ருர் சேக்கிழார்.

இவ்வாறு இவர் சமண் சமயத்தைச் சேர்ந்து அங்கும் அச்சமய நுட்பங்களை நன்கு கற்றவராய் அம்மதத் தலைவராகவே ஆகி விட்டார். தருமசேனர் எனப் பெயரும் இடம் பெற்ருர். அவ்வமயம் அவர் தமக்கையான திலகவதியார், தன் தம்பியின் நிலையை உன்னி வருந்துகின்ருர். தனக்கு மணஞ் செய்ய இருந்த கலிப்பகையார் போரில் உயிர் விட்டார். அக்கணமே தானும் உயிர் நீக்கத் துணிந்தார். ஆனுல் தம்பியின் பொருட்டுத் "தம்பியார் உளராக வேண்டும்" என்ற கருணையினுல், உயிர் தாங்கி, அனைத்துயிர்க்கும் அருள் தாங்கி ஆனுல் மங்கல நூல் தாங்காது வாழ்ந்தவரல்லவா? எவர் பொருட்டுத் தம்முயிரை வைத்திருந்தனரோ அவரே அமண் சமயம் சார்ந்தார் என்ற நிகழ்ச்சி அவரை நோய் போல் வாட்டியது. இறைவனிடம் முறையிட்டார்.

"தூண்டு தவ விளக்கனையார்
சுடரொளியைத் தொழுதென்னை
ஆண்டருளும் நீராகில்
அடியேன் பின் வந்தவனை
ஈண்டு வினைப் பரசமயக்
குழிநின்றும் எடுத்தாள
வேண்டும் எனப் பலமுறையும்
விண்ணப்பம் செய்தனரால்."

"மன்னுதபோ தனியார்க்குக்
கனவின்கண் மழுவிடையார்,

"உன்னுடைய மனக்கவலை
ஒழிநீ உன்உடன் பிறந்தான்
முன்னமே முனியாகி எமை
யடையத் தவம் முயன்ருள்
அன்னவனை இனிச்சூலை
மடுத்தாள்வம் என அருளி"

என்பது சேக்கிழார் வாக்கு. முலைப்பால் கொடுத்தாட் கொண்டது, ஆவண ஓலை காட்டி ஆட் கொண்டது, குருந்த மரத்தடிக் குரவனுக வந்து ஆட்கொண்டது போன்று, இங்கு இறைவன் "சூலை மடுத்தாள்வம்" என்று அருளிச் செய்கின்ருர்.

அதன்படியே சூலை நோயும் அவரைப் பற்றியது. எத்தாலும் தீரவில்லை. குண்டர்களும் கை விட்டனர். அப்பொழுதுதான் தமது தமக்கையாரின் நினைவு வருகின்றது. அவரிடம் போக விழைகின்ருர். இந்த விழைவை "ஈசரருள் கூடுதலால்" என்கின்ருர் சேக்கிழார். அருள் கூடிய உடன் ஒவ்வா இப்புன் சமயத்தின் மந்த்ர தந்த்ர ஔஷதங்களால் நீங்காத இந்தச் சூலை நோயை ஒழிக்க "செவ்வாறு சேர் திலகவதியார்தாள் சேர்வன்" என்று உறுதி கொண்டார். அப்படியே தம் தமக்கையிடம் வந்தார்.

"வந்தணைந்து திலகவதியார்
அடிமேலுற வணங்கி
நந்தமது குலஞ் செய்த
நற்றவத்தின் பயனனையீர்!
இந்தவுடற் கொடுஞ்சூலைக்
கிடைந்தடைந்தேன் இனிமயங்கா
துய்ந்துகரை ஏறுநெறி உரைத்
தருளும்" என உரைத்(தார்)

இவ்வாறு தமதடி வீழ்ந்த தம்பியை விளித்து 'கோளில் பரசமய' நெறிக் குழியில் விழுந்து அறியாது மூளும் அருந்துயர் உழந்தீர், எழுந்திரீர் என்ருர் ஈண்டு 'உழந்தீர்' என்பதை வினைமுற்ருகவும், எட்டாம் வேற்றுமை விளியாலணையும் பெயராகவும் கொள்ளலாம். 'எழுந்திரீர்' என்ற சொல் மிக்க நயம் பட அமைந்தது. காலில் வீழ்ந்தவரை எழுந்திரும் என்று சொன்னதாகப் பொருள் கொள்வது சாமான்யம். பரசமயக் குழியில் விழுந்தவரே! அதினின்றும் கரை ஏறுவீர் என்பது விசேஷப் பொருள்.

திலகவதியார் பின்னும் கூறுவார்.

"கற்றை வேணியர் அருளே காணும்
இது, கழலடைந்தோர்
பற்றறுப்பார் தமைப் பணிந்து
பணி செய்வீர்."

எனப் பணித்தார். மேலும் திலகவதியார் இறைவனடி தன்னை மனதில் தியானித்து "திருக்கயிலைக் குன்றுடையார் திருநீற்றை அஞ்செழுத் தோதிக் கொடுத்தார்" திருநீற்றைப் பெற்று "பெரு வாழ்வு வந்தது" எனப் பணிந்து ஏற்று உடம்பு முழுவதும் உத்தூளனமாய்ப் பூசிக் கொண்டார். உடனே அவருடைய அகத்திருளும் புறத்திருளும் நீங்கின என்கின்ருர் சேக்கிழார்.

இதுவே அப்பருக்கு அருளிய தீக்ஷையும் உபதேசமுமாம். பஞ்சாக்ஷரம் ஓதிக்கொடுத்த திருநீறு பூசினது தீக்ஷையாகவும், "பற்றறுப்பார் தமைப் பணிந்து பணி செய்வீர்" என்பது உபதேசமாகவும் ஆயின. முன்னமே இறைவனையடையத் தவமியற்றி அதில் வழுவினவர் இவர். மேலும் மெய் நெறி விட்டுப் பொய் நெறி புகுந்தவர். இவரைச் சூலை நோய் கொடுத்து மறக்கருணையால் ஆட்கொள்ளல் அவசியமாகின்றது. இது சித்தியார் பாடல் ஒன்றை நினைவூட்டுகின்றது.

"தந்தைதாய் பெற்ற தத்தம்
புதல்வர்கள் தம்சொல் லாற்றின்
வந்திடா விடின் உறுக்கி
வளாரினல் அடித்துத் தீய
பந்தமும் இடுவர் எல்லாம்
பார்த்திடில் பரிவே யாகும்
இந்தநீர் முறைமை யன்ருே
ஈசனுர் முனிவு மென்றும்"

வளாரினுல் அடித்தல் முதலியன செயல் வகையான் வெகுளி போலத் தோன்றிடினும் கருத்து வகையான் அருளேயாதல் கண்கூடு.

ஓர் சிறு ஆராய்ச்சி. அப்பர் பாடல்களில் திலகவதியாருக்கு யாதொரு அகச்சான்று மிலது. அது போன்றே திருத்தொண்டத் தொகையிலும், திருத்தொண்டத் திருவந்தாதியிலும் பதினோராம் திருமுறையில் நம்பி யாண்டார் நம்பி அருளிய திருநாவுக்கரசர் திருவேகாதச மாலையில் 'தமக்கை' எனக் குறிக்கப் பட்டிருக்கின்றதே ஒழியத் திலகவதியார் என்ற பெயர் இல்லை. சேக்கிழார் பெருமானே கல்வெட்டுகளிலிருந்து திலகவதியாரைப் பற்றிய குறிப்புகள் சேகரித்துத் தமது புராணத்தில் கூறினர்.

திருவதிகை வீரட்டான இறைவன் முன்பு நிற்கும் போது அவனருளால் அவனைப் பாட வேண்டுமென்ற உணர்வு வர "கூற்றுயின வாறு" என்று அடியெடுத்துப் பாடுகின்றார். "கூற்று" என்ற சொல் அவச் சொல்லாயினும் தமது முதல் பாட்டில் முதல் சொல்லாக வைத்தது என்னையெனின், இறைவனது மறக்கருணையின் பரிவால் தருமசேனரான தான் இறந்து திருநாவுக்கரசராக மறுபிறப்பு எய்தினர் ஆதலின் என்க. எது வரினும் இறைவன் கருணை என்று நினைக்கும் மனப்பான்மையை அடைந்தவர் அப்பர். தான் அமண் சமயம் தழுவியிருந்த ஞான்று வழிபட்ட அருகக் கடவுளே சிவபெருமானின் மற்றொரு தோற்றம் என்று நினைக்கின்றார். ஆதலால் "சலம் பூவொடு தூபம் மறந்தறியேன்" என்றும், உன்னுமம் என் நாவில் மறந்தறியேன் என்றும் கூறுகின்றார். சமயங்கள் பலவாயினும், இறைவன் ஒருவனே. சமயங்கள் தோறும் அவனுக்கு வெவ்வேறு நாமங்கள் சொல்லி அழைப்பினும் அவை யாவும் ஒரே தெய்வத்தையே சாரும் என்ற உண்மையை அநுபவ வாயிலாக உணர்ந்தவர் அப்பர். ஏனைய மூவர் சிவனன்றி வேறு தெய்வம் இல்லை என்று சொன்னதை, அப்பர் எச்சமயக் கடவுளாயினும் எல்லாம் சிவனே என்கின்றார். சித்தியார் பாடல் ஒன்றில் "யாதொரு தெய்வங் கொண்டீர் அத் தெய்வமாகி யாங்கே மாதொரு பங்கனார் தாம் வருவர்" என்பதை ஒப்பு நோக்குக.

இன்னல் வருவது இறைவனருளால் என்ற கொள்கையை உடைய வராதல் பற்றி இன்னலை எதிர்த்துப் போராட மாட்டார். அநுபவித்து வெற்றி காண்பார். பல்லவன் செய்த இன்னல்களையெல்லாம் இவ்வாறு இறைவனருளை முன்னிட்டுத் தமது மந்த்ர சித்தியாலும் யோக சாதனையாலும் வென்றார். சம்பந்தருக்குப் பாண்டிய நாட்டு அழைப்பு வந்தபோது அப்பரும் கூடச் செல்லாததற்கு இதுவே காரணம். சம்பந்தர் சமணர்களை எதிர் நின்று போராடி அவர்கள் கழுவேற வழி கோலினார். அப்பர் இதனைச் செய்திருக்க மாட்டார். பகைவர்களுக்கும் அருளும் பான்மை கொண்டார். தம்மை யழைக்க வந்த பல்லவ அதிகாரிகள், தாம் கூடச் செல்லாவிடில் பல்லவனால் துன்புறுவர் என்று கருதியே கூடச் சென்றாரல்லவா?

அரசன் கோபத்துக்கு ஆளானவர்கள் அப்பரும், மாணிக்கவாசகரும். மகேந்திர பல்லவன் அப்பரைத் தண்டித்தான். அரிமர்த்தன பாண்டியன் மாணிக்கவாசகரைத் தண்டித்தான். ஆயினும் இருவர் பட்ட தண்டனைகளுக்கும் அடிப்படைக் காரணங்கள் வேறு. மாணிக்கவாசகர் குதிரை வாங்கக் கொண்டு சென்ற பணத்தைக் கோயில்கட்டினார் என்பதற்காக பாண்டியன் அவரை வாட்டுகிறான். அப்பர் அடிகள் சமயம் மாறிவிட்டார் என்பதற்காக தண்டிக்கப் பட்டார். ஒன்று சமூகக் குற்றம், மற்றொன்று சமயக் குற்றம். மாணிக்கவாசகருக்காக இறைவன், நரிபரியாக்கியும், பிட்டுக்கு மண் சுமந்தும், பிரம்பால் அடிபட்டும் பாண்டியனுக்கு மாணிக்க வாசகரின் பெருமையை உணர்த்தினான். அப்பர் அடிகள் தண்டனையை ஏற்று, அதை எதிர்க்காமல் சாத்வீகப் போரினால் வெற்றி கண்டு பல்லவனே சைவ சமயத்தைத் தழுவி, சமணப் பள்ளியை இடித்து குணபரவீச்சரம் கட்டினான். சுந்தரர் இறைவன் கோபத்துக்கே ஆளானார். சங்கிலியாருக்கு கொடுத்த வாக்கை மீறியதற்கு கண்களை இழந்தார். பின்பு மன்னிக்கப் பட்டார். சம்பந்தர் இறைவனின் திருக்குமாரர். அவர் கையால் தாளம்போட்டு கைகள் சிவந்துவிடுமே யென்று பொற்றாளம் கொடுத்தார். வெயிலில் நடந்தால் பாதங்கள்நோகுமே யென்று முத்துச் சிவிகை அளித்தார். சம்பந்தர் அவற்றைக் கேட்டுப்பெறவில்லை. அவரும் இறைவனிடம் இரண்டு சமயங்களில் சில கேட்கத்தான் செய்தார். ஒரு சமயம் "வாசி தீரக் காசு நல்குவீர்" என்றார். மற்றொரு சமயம் தமது தகப்பனாரின் வேள்விக்காக "இடரினும் தளரினும்" பாடிப் பொருள் கேட்டார். இவற்றையே சுந்தரர் "சம்பந்தர் செய்த குற்றம்" என்கின்றார். ஆனால் அவர் வேண்டும் போதெல்லாம் இறைவனிடம்

பொன்னும் பொருளும் போகமும் கேட்டார். "குற்றமே செய்யினும் குணமெனக் கொள்ளும்" பான்மையைக் கண்டு இறைவனைப் பற்றிக் கொண்டதாகக் கூறியிருக்கின்றார்.

தாமிரமானது ரஸவாதத்தால் பொன்னுவது போன்ற நிலை சம்பந்தருடையது. திருமுலைப் பால் அருந்தியதும் ஓதாமல் உணர்ந்தார் கல்லாமல் கற்றார். பூமியைத் தோண்டி சுரங்கம் எடுத்துப் பிரயாசையால் பொன் ஈட்டுவது போன்ற நிலை அப்பருடையது. தமது ஆராய்ச்சியாலும், சாதனையாலும், அனுபவத்தாலும், பேறு பெற்றார் அப்பர். ஏற்கனவே பொன்னுக இருந்ததை எடுத்து ஆபரணமாகச் செய்து கொண்டது போன்ற நிலை சுந்தரருடையது. திருக்கயிலையில் ஆலால சுந்தரராக இருந்தவரைப் புவியில் பிறக்கச் செய்து சுந்தரமூர்த்தியாக்கி யருளினர். கட்டிப் பொன்னுயிருந்தது பணிப் பொன்னனது போல, தங்கமலையைச் சார்ந்த காகமும் பொன்னுவது போன்றது மாணிக்கவாசகரின் நிலை. பொன்னைச் சார்ந்து பொன்னுனர். ஒன்று செயற்கைப் பொன், மற்றென்று இயற்கைப் பொன், மூன்றாவது வேலைப்பாடு செய்யப் பட்ட பணிப் பொன், நான்காவது சார்புப் பொன். நான்கும் பொன் தான். சம்பந்தர் பக்தி யோகி, அப்பர் கர்ம யோகி, சுந்தரர் ராஜ யோகி, மாணிக்க வாசகர் ஞானயோகி.

அப்பர் கர்மயோகி என்றதால் அவருக்கு மனைவாழ்க்கை யுண்டா வென்று கேட்க வேண்டாம். கர்மயோகத்துக்கு மனை வாழ்க்கை அத்யாவசியமன்று. எனினும் அப்பர் பாடல்களினின்றும் அவருக்கு மனைவாழ்க்கை இருந்திருக்கலாமோ என்று நினைக்க வேண்டி யிருக்கிறது. ஆராய்ச்சியில் தேர்ந்த சேக்கிழார் இது பற்றி ஒன்றும் கூறவில்லை. இருந்திருப்பின் கூறியிருப்பார். ஆயினும் பதினைந்து இடங்களில் மனை வாழ்க்கையைப் பற்றி அப்பர் கூறியிருக்கின்றார். அவை நான்காம் திருமுறையில் 1·7; 1·8; 26·4; 26·7; 52·3; 52·5; 54·6; 67·6; 67·9; 69·9; 78·9; 79·2; ஐந்தாம் திருமுறையில் 70·2; 90·8; ஆறும் திருமுறையில் 98·3; இவற்றில் சுற்றம், மனைவி, மக்கள் குறிக்கப்படுகின்றனர்.

தமது தமக்கையார் செய்த உபதேசம் பற்றுப்பார் தமைப் பணிந்து பணிசெய்தல் என்பது இதனை.

"நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும் எம்பிரானுடைய கோயில்புக்கு
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்குமிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்துபாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடிச்
சங்கரா சயபோற்றி போற்றியென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதீயென்றும்
ஆரூரா என்றென்றே அலறுநில்லே"

என்று தம் நெஞ்சுக்குக் கூறிக் கொள்வதுபோல் நம் போன்றார்க்கும் உபதேசிக்கின்றார்.

சேக்கிழார் பெருமான் அப்பருடைய திருவுருவத்தை மூன்று பாடல்களில் படம் பிடித்துக் காட்டுகின்றார். அவற்றில் ஒன்று கூறி இக் கட்டுரையை முடிப்போம்.

"மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாரும்
திருவடிவும் மதுரவாக்கில்
சேர்வாகுந் திருவாயில் தீந்தமிழின்
மாலைகளும் செம்பொற்றாளே
சார்வான திருமனமும் உழவாரத்
தனிப்படையும் தாமும்ஆகிப்
பார்வாழத் திருவீதிப் பணிசெய்து
பணிந்தேத்திப் பரவிச்செல்வார்"

———



# தமிழ் மொழித் தலைவர்

செஞ்சொற்கொண்டல் வித்துவான். சொ. சிங்காரவேலன், M.A.
முதல்வர், தருமை ஆதீனப் பல்கலைக் கல்லூரி.

## சேக்கிழார் செம்மொழி :

திருநாவுக்கரசுப் பெருமானைச் சேக்கிழாரடிகள் பலவகைகளில் புகழ்கின்றார். உழவாரப் படையாளி (229) பரசமயப் பற்றறுத்த பான்மையினர் (1361) தேசம் உய்யவந்தவர் (1808) வாக்கின் பெருவிறல் மன்னர் (2172) அன்புறுபத்தி வடிவான வாசீசர் (1695) என்றெல்லாம் புகழ்கின்றார்; இவற்றுள் எல்லாம் 'தமிழ்மொழித் தலைவர்' (2501) என்ற தொடரைச் சேக்கிழார் ஆளும் இடமும், அத்தொடர் பற்றிய சில விளக்கங்களும் இக் கட்டுரையில் தெளிவுபெறக் காணலாம்.

## தமிழ்மொழித் தலைவர் :

திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும் திருவாய்மூரில் வழிபாட்டை முடித்துக்கொண்டு திருமறைக்காடு சேர்கின்றார்கள் ; அங்கே பண்ணிசைப் பதிகங்களைப் பாடிப் பரவுகின்றார்கள்.

''சண்பைநா டுடையபிள்ளை
தமிழ்மொழித் தலைவரோடு
மண்பயில் சீர்த்திச்செல்வ
மாமறைக் காட்டுவைகிக்
கண்பயில் நெற்றியார்தங்
கழலிணை பணிந்துபோற்றிப்
பண்பயில் பதிகம்பாடிப்
பரவிஅங் கிருந்தா ரன்றே'' (2501)

தமிழ்மொழித் தலைவர் என்ற அழகிய நறுந்தொடரால் திருநாவுக்கரசுப் பெருமானை இங்குக் குறிக்கும் அருமைப்பாட்டை அறிதல் வேண்டும். தமிழ் மொழிக்குத் தலைவராகக் கூடிய தகுதி அப்பரடிகளுக்கே உண்டு.

## தமிழ்க்கலை பயின்ற தவ முனிவர் :

இளமையிலேயே தமிழ்க்கலைகள் அனைத்தையும் முற்றக்கற்ற முத்தமிழ் வித்தகர் அடிகள்; தமிழ்மொழியின் திட்ப நுட்பங்களைத் தாமே நன்கு ஆராய்ந்து அறிந்து தெளிந்த அண்ணல் அடிகள். அப்பரடிகள் திருவவதாரம் செய்து நற்றமிழ் இசைபாடி நாடெல்லாம் பணிபுரிந்த சிறப்பால் கலைத்துறைகள் தழைத்தன; தவத்தோர் நெறி வாழ்ந்தது என்று சேக்கிழார் விளக்கும் பகுதியை இங்கே உணர்தல் வேண்டும்:

''அலகில் கலைத்துறை தழைப்ப
அருந்தவத்தோர் நெறிவாழ
உலகில்வரும் இருள்நீக்கி
ஒளிவிளங்கு கதிர்போல
மலரும் மருணீக்கியார்
வந்தவதா ரம்செய்தார்''. (1288)

அப்பரடிகள் கலைபயிலத் தொடங்கினர் என்பதைக் குறிக்கவரும் சேக்கிழார் மிக அருமையாகவும் அழகாகவும் கலைக்கு அடைமொழி புணர்த்து ஓதுகின்றார். அப்பரடிகள் கலைத்துறை எவ்வாறு அமையவேண்டுமென்று கருதினாரோ அதனையே இங்குச் சேக்கிழார் குறிப்பாக உணர்த்துகின்றார்: கலை, அறிவு தருவதுடன் மனத்தின் மலர்ச்சியையும் உண்டு பண்ணுவதாக இருக்கவேண்டும்: பொருள்களின் ஆழங்களைக் கண்டறியும் அறிவுமட்டும் தரும் கலையால் நாட்டிற்கோ இனத்திற்கோ நற்பலன் விளைந்துவிடாது; அரும்பாக இருக்கும் மனத்தை மலராக்கும் தரமும் உள்ள கலையினாலேயே நாடு, மொழி, இனம் நற்பலன்

பெறும்.* இத்தகைய கலையை அப்பரடிகள் பயிலத் தொடங்கினுர் என்கின்ருர் சேக்கிழார் : அப்பகுதி :—

"பொருள் நீத்தம் கொளவீசிப்
புலன்கொளுவ, மனம் முகிழ்த்த
சுருள்நீக்கி மலர்விக்கும்
கலைபயிலத் தொடங்குவித்தார்"
(1290)

அறிவுக்கும் உள்ளத்துக்கும் பயன்தரும் கலையின்பத்தைக் காணுங்கால் சான்ருேர் பிராஞகிய அப்பரடிகட்கு இறையின்பமே முந்துகின்றது. சிவபிரானும், அறிவுதரும் கடவுளாய், சுருள்படைத்த உள்ளத்தைத் தெருள்படைத்த நிலையில் மலர்விக்கும் தலைவனுய் உள்ளான் ஆதலின், அறுபத்துநான்கு கலைகளும் அவன் திருவடிவமே என்று அறுதியிட்டுரைக்கின்ருர் :

"இளம்பிறையும் முதிர்சடைமேல்
வைத்தான் கண்டாய்
எட்டெட் டிருங்கலையும்
ஆனுன் கண்டாய்" (6-73-9)

இத்தகு உயர்கலை விற்பன்னராக விளங்கி, எண்பத்தோராண்டுகள் இந்நிலவுலகத்தில் வாழ்ந்து மெய்யடிமைத் திறம்பூணட மேலோராகிய அப்பரடிகள் 'ஐந்திலக்கணமும் தோய்ந்து பழுத்த தமிழ்ப்புலமை' உடையோராய் இருந்திருத்தல் வேண்டுமென்பது அத்திருவாக்குகளான் தெளிவாகின்றது; ஆதலின் 'தமிழ் மொழித் தலைவர்' என்று இன்பம் ததும்ப எடுத்துரைக்கும் தொடர் அடிகட்கு மிகப் பொருந்தியதாகின்றது.

### தமிழோடிசையை மறவாத தலைவர் !

சமண சமயம் முதலிய எல்லாச் சமயங்களையும் நன்கு ஆராய்ந்தவர் அப்பரடிகள். ஆதலின் வடமொழி முதலிய எல்லா மொழிகளையும் அடிகள் கற்றுணரப் பெருவாய்ப்பு இருந்தது. எத்தனை மொழிகளை அறிந்தபோதும், கற்றபோதும், அடிகள் உள்ளத்தை ஆட்கொண்டிருந்தது அருந்தமிழே ஆகும். இதனை அப்பரடிகள் திருவாக்கினுலேயே அறியலாம். சூலை தீர்த்தருளப் பாடிய திருப்பதிகத்தில், (அடிகள் பாடிய முதற்றிருப்பதிகமும் இதுவே)

"சலம்பூவொடு தூபம் மறந்தறியேன்
தமிழோடிசை பாடல் மறந்தறியேன்
நலந்தீங்கிலு முன்னை மறந்தறியேன்
உன்னுமம் என்நாவில் மறந்தறியேன்"
(4-1-6)

எனப் பாடியிருத்தலைக் காணலாம். தமிழோடு இசை பாடலை மறந்ததுமில்லை என்று கூறுவாராயின், தம் உள்ளத்தே தமிழ்மொழிக்கு அடிகள் தந்திருந்த உயர்ந்த இடம் நன்கு தெளியப்படும் உண்மையாகும்.

### செந்தமிழின் பயன் தெரிந்த தலைவர் !

தமிழ்நாட்டில் சமணர் அப்பர்காலத்தில் உயர் நிலையிலிருந்து இழிந்ததற்குக் காரணம் அவர்கள் தமிழ் மொழியைப் புறக்கணித்ததேயாகும் என்று அப்பர் காரணம் காட்டுகின்ருர். வடமொழி முதலிய மொழிகளிலேயே தம் நாட்டத்தைச் செலுத்தியிருந்தார்கள். செந்தமிழை ஆழ்ந்து அறிந்து அதன் பயனை அடைய அவர்கள் முந்திஞரில்லை. அப்பரடிகள் காலத்து வாழ்ந்தருளிய திருஞான சம்பந்தரும் 'மந்திபோல் திரிந்து ஆரியத்தொடு செந்தமிழ்ப்பயன் தெரிகிலா அந்தகர்' என்று அந்நிலையைத் தெளிவுபடுத்திஞர். அடிகளும்,

"வாயிருந் தமிழே படித்தாளுரு
ஆயிரம் சமணு மழிவாக்கினுன்
பாயிரும் புன லாறைவடதளி
மேயவன் னெனை வல்வினைவீடுமே"
(5-58-9)

இவ்விடத்துத் தம் ஆரா அன்புடைமையால், 'தமிழ் மொழித் தலைவராகிய' அடிகள் 'வாயிருந்

*அறிவிலக்கியம் அறிவுறுத்தும்; ஆற்றல் இலக்கியம் இயங்க நெறிகாட்டும். சேக்கிழார் காட்டும் கலையாற்றல் இவ்விரண்டையும் உடையதாதல் காண்க. கீழ்வரும் பகுதியினையும் இதனுடன் ஒப்பிட்டு மகிழ்க :—

"There is first the literature of knowledge, and secondly, the literature of power. The function of the first is to teach; the function of the second is to move,"

DE QUINCEY—"Essays on the poets: pope."

இக் கட்டுரையிற் காட்டப் பெற்றுள்ள பெரியபுராணப் பாடல் எண்களும், அப்பர் தேவாரப் பாடல் எண்களும் சமாஜப் பதிப்பில் உள்ளவாறு தரப் பெற்றன,

தமிழ்' என்று வாயார வண்டமிழைப் புகழ்ந்திருத்தல் காணலாம். வாய்மையும் பெருமையும் உடையது தமிழ் என்பது இத் தொடரின் பொருளாகும்.

'கொல்லாமை மறைந்துறையும் அமண் சமயம்,(1307) என்று சேக்கிழார் கூறுவாராதலின், வாய்மைக்குப் புறம்பே நின்ற சமணர் நெறிகளை முற்றும் அறிந்தவராதலின் 'தமிழின் வாய்மையை' நன்கு வெளிப்படுத்த அடிகள் இவ்விடத்துக் கருதினுராதல் வேண்டும்; அன்றியும் வஞ்சனையால் சிவலிங்கப் பெருமானைப் பழையாறை வடதளியில் மறைத்திருத்தன ராதலின் உண்ணு நோன்பிருந்து தாம் பாடும் மெய்ம்மைத் தமிழின் மேன்மையைப் புலப்படுத்துவாராகவும் 'வாயிருந்தமிழ்' என்று அருளிய அருமைப்பாடு ஆழ்ந்து ஆழ்ந்து இன்புறற்குரியது.

## எண்ணும் எழுத்தும் இறைவன் உருவம் !

ஒருமொழி எண், எழுத்து என்ற இரண்டு நெறிப்பட்டு இயங்கும். இவ் விரண்டினையும் கல்விச் சிறப்புணர்ந்தவர் இரு கண்ணெனப் போற்றுதல் வேண்டுமென்பர்:

''எண்ணென்ப ஏனைஎழுத்தென்ப இவ்
விரண்டும்
கண்ணென்ப வாழும்உயிர்க்கு''

என்று வள்ளுவர் வாக்கு, எண்ணையும் எழுத்தையும் நன்கு அறிந்து மொழித்திறத்தின் முட்டறுக்கும் திறம் உடையோன் முதனூற் பொருளையுணர்ந்து வீடு பெறுவான் என்பது சான்றோர் முடிவு:

''எழுத்தறியத் தீரும் இழிதகைமை தீர
மொழித்திறத்தின் முட்டறுப்போனுகும்—
மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதனூற்பொரு
ளுணர்ந்து
கட்டறுத்து வீடுபெறும்''

எல்லாம் இறையுருவாகக் காணும் அடிகள், தமிழ்மொழி முதலிய எல்லா மொழிகளிலும் எண்ணும் எழுத்துமாக உள்ளவனும் அவனே என்று இனிக்கப் பாடுகின்ருர்:

''கண்ணுனாய் மணியானாய் கருத்தானாய்
அருத்தானாய்
எண்ணுனாய் எழுத்தானாய் எழுத்தினுக்கோர்
இயல்பானாய்''
(4-13-7)

''எண்ணும் எழுத்துங் குறியும் அறிபவர் தா
மொழியப்
பண்ணின் இசைமொழி பாடியவானவர்''
(4-90-6)

''விண்ணானாய் விண்ணவர்கள் விரும்பிவந்து
வேதத்தாய் கீதத்தாய் விரவி எங்கும்
எண்ணானாய் எழுத்தானாய் கடலேழானாய்
இறையானாய் எம்மிறையே என்றுநிற்கும்''.
(6-12-5)

தமிழ் மொழியையே இறைவனாகக் கண்டவர் அடிகளென்பதை அவர் வாக்குகள் பல உறுதியாக்கும்: (5-18-3; 6-23-5; 6-23-9; 6-46-10; 6-87-1; முதலிய இடங்களைக் காண்க.)

தமிழ் மொழியின்கண் அமைந்த முற்கால நூல்கள் பலவற்றையும் முற்றக் கற்ற மூதறிஞர் அடிகள் ஆதலின் அவ் விலக்கியக் கருத்துக்களை ஏற்றபெற்றி ஆங்காங்கு நினைவுகூர்ந்து அருளியுள்ளார். அவ்வவ் விடங்களில் கற்போர் சிந்தையில் களிபேருவகை தோன்றுமாறு திறம்பட அவற்றை எடுத்தோதியுள்ளார்.

## திருக்குறள் கமழும் திருவாக்குகள் :

தமிழின் தலைசிறந்த நூலாக உள்ள திருக்குறட் கருத்துக்களை அடிகள் தமக்கேயுரிய தனிச் சுவையுடன் ஆளும் பகுதிகள் அறிதற்கு இனியன:

(1) ''இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந்தற்று''

என்ற குறள் உவமையை,

''கனியிருக்கக் காய்கவர்ந்த கள்வனேனே''
(4-5-1)

எனுமிடத்து இணைத்து அழகு செய்துள்ளார்.

(2) பொய்யாமை யறத்தை—வாய்மைச்
சிறப்பை,

''பொய்யினைத் தவிரவிட்டுப் புறமலா
அடிமை செய்ய
ஐயநீ அருளிச் செய்யாய்'' (4-23-7)

என்று மொழிகின்ருர்.

(3) ''மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்
ஆகுலநீர பிற''

ஆதலின் அதையொட்டி இறைவன் அருளியல்பை எடுத்துக் கூறுமிடத்து,

"மனத்தினுள் மாசு தீர்ப்பார்
மாமறைக் காடனாரே" (4-33-8)

என்கின்றார்.

(4) வள்ளுவரது ஈகையறத்தை வலியுறுத்து வாராய்,

"இரப்பவர்க் கீயவைத்தார்
ஈபவர்க்கருளும் வைத்தார்
கரப்பவர்தங் கட்கெல்லாம்
கடுநரகங்கள் வைத்தார்" (4-38-10)

எனப்பாடும் பகுதி உணர்தற்கினியது.

(5) "தனக்குவமை யில்லாதான்
தாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்றல் அரிது"

"வேண்டுதல் வேண்டாமையிலானடி
சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பையில"

ஆதலின் அடிகள் அக்கருத்தை அடியொற்றி,

"உயிர்கட்கெல்லாம்
இடர்தனைக் கழிக்கவேண்டில்
இறைவனை ஏத்துமின்னே" (4-42-5)

எனப்பாடுதல் ஊன்றி உணர்தற்குரியது.

(6) காலமறிதல் என்னும் வள்ளுவர் விதியின் கண் நின்று நல்லறம் நுவல்பவராய் அடிகள் பாடிய,

"காலமான கழிவதன் முன்னமே
ஏலுமாறு வணங்கிநின் றேத்துமின்"
(5-43-9)

எனும் வரிகள் சுவை பயப்பவை.

(7) "எண்குணத்தான்தாளை வணங்காத்தலை" என்று வள்ளுவர் வழங்கியதற்கேற்ப,

"கலைஞானிகள் காதல்
எண்குணவன் காண்" (5-63-4)

என்றும்,

"எட்டுவான் குணத்து ஈசன் எம்மான்"

என்றும், (5-89-8)

"எட்டுக்கொலாமவர் ஈறில் பெருங்குணம்"
(4-18-8)

என்றும் அடிகளருளிய வாக்குகள் இங்கு நினைக்கத் தக்கன.

(8) திருவள்ளுவர் "வாலறிவன்" என்று இறைவனை அறிவுருவனாக அழைத்தமையை ஒற்றி,

"அண்டனே அண்டவாணா அறிவனே
அஞ்சல் என்னாய்" (4-67-2)

என்று பாடியருள்வார் அடிகளும்,

(9) "செம்பொருள் கண்டார் வாய்ச்சொல்" என்ற வள்ளுவர் வாக்கிற்கேற்ப,

"சிவனெனு நாமம் தனக்கே
உடைய செம்மேனி எம்மான்" (4-12-)
"செம்மானத் தொளியன்ன மேனியான்"
(6-24-1)

என அருளிய பகுதிகள் உணர்ந்து மகிழ்தற்கினியன. இவ்வாறே தமக்கு முந்திய இலக்கியக் கருத்துக்கள் பொதுளத் திருப்பதிகங்களை அருளியுள்ளார் அப்பரடிகள் என்பதற்குப் பற்பல சான்றுகள் காட்டலாம்.

## இலக்கண மரபு காட்டும் இனிமை :

உண்டல் என்ற சொல்லை உண்டற்குரிய வல்லாத பொருள்களிலும் கையாளுதல் மரபே என்று ஆசிரியர் தொல்காப்பியர் அருளுவர், அம் மரபைச் சங்க நூல்களிற் பரக்கக் காணலாம்.

"பசலையால் உணப்பட்டுப்
பண்டை நீரொழிந்தக்கால்"

என்பது கலித்தொகை. இதற்கமைதி மேற்குறிக்கப்பட்ட தொல்காப்பிய நூற்பாவேயாகும்:

"உண்டற்குரிய வல்லாப்பொருளை
உண்டனபோலக் கூறலுமரபே"
(1529)

அப்பரடிகள் இந்த இலக்கணத் தமிழ் மரபையும், இலக்கியச் சொல்லாட்சிகளையும் மறந்தாரல்லர்:

"பொன்மாலை மார்பன்என் புதுநலம்
உண்டு இகழ்வானோ" (4-12-1)
"இணையார மார்பன்என் எழில்நலம்
உண்டு இகழ்வானோ" (4-12-7)

என்பன அடிகள் அருள்வாக்குகள்.

உயிர்களின் பாகுபாடுகளும் அவற்றது சிறப்பு மரபும் உணர்த்திய தொல்காப்பிய நூற்பாவையொட்டி ஒரு நுட்பச் செய்தியை அப்பரடிகள் அருளக் காண்கின்றோம்.

"ஒன்றறிவதுவே உற்றறிவதுவே
இரண்டறிவதுவே அதனெடுநாவே
மூன்றறிவதுவே அவற்ருெடு மூக்கே
நான்கறிவதுவே அவற்ருெடுகண்ணே
(1526)

என்றது தொல்காப்பிய நூற்பா. உயிர் வருக்கத்துள் நான்கறிவுடைய புழுவை எடுத்துக் கொண்டு தம்மொடு ஒப்பிட்டுரைக்கின்ருர் அடிகள்:

"புழுவுக்கும் குணம் நான்கெனக்கும்மதே
புழுவுக்கிங் கெனக்
குள்ள பொல்லாங்கில்லை" (5-91-4)

**கோதில்மொழிக் கொற்றவனுர் :**

இவ்வாறு இலக்கிய இலக்கணத் திட்ப நுட்பங்களில் எல்லாம் சிறந்து விளங்கும் அடிகளைத் 'தமிழ்மொழித் தலைவர்' என்று உண்மை விளங்க உரைத்தருளிய சேக்கிழார் செம்மையை என்னென் றியம்புவது! அரிய சொல்லாராய்ச்சிக் குறிப்புக்களை யெல்லாம் தம் திருப்பதிகங்களில் வழங்கியருளும் ஞானவள்ளலாக அடிகள் விளங்கி ஒளி வீசுதல் அறிவுலகு நன்கு அறிந்ததேயாகும். "கோதில்மொழிக் கொற்றவனுர்" (1799) என்று சேக்கிழார் மற்ருேரிடத்திற் கூறியபடிக் குற்றமற்ற—உறுதிஉடைய சொற்களைக் கையாண்டு தமிழ்யாப்பு, எழுத்துச் சொற் பொருளிலக்கண மரபுகளைத் தழுவி அன்பு கனிந்து பாடியருளிய அப்பரடிகளின் அருந்தமிழ் இன்பத்தை உலகு நுகர்ந்து அந்நெறி நின்று நீடு வாழ்வதாக!





கொள்ளைக் கதிர்முத்தின் பந்தரும்
சின்னமும் கொள்ளும் ஒரு
பிள்ளைக் கதுதகும் நாவர
சாய பெருந்தகையோய்!
கள்ளைக் குவளை யுமிழ் வீழியிற் படிக்
காசொன்று நீ
வள்ளைக் குழையுமை பங்காளர்
கையில் என் வாங்கினையே!

—சிவப்பிரகாச சுவாமிகள்.

# அப்பரின் உபதேச மொழிகள்

வித்துவான் திரு. ந. சண்முகசுந்தர தேசிகர்
தமிழாசிரியர், கழக உயர்நிலைப் பள்ளி, பண்ணுருட்டி.

அப்பர் பெருமான் காலத்தில் தமிழக மக்களின் சமுதாய வாழ்க்கை நிலையும், சமய நெறியும் ஒன்றுடொன்று தொடர்பின்றி தனித் நிலையில் விளங்கின. அப்பர் காலத்து சமண பௌத்த சமயங்கள் எங்கும் பரவி மனித சமுதாய நிலைக்கு ஒவ்வா நிலையில் இசை, நாடகம் வெறுத்தல், பெண்பிறவி இழிவு எனக் கருதல்; துறவு நிலையே உயர்ந்தது எனப்போற்றல் முதலியன போன்ற கருத்துக்களை வளர்த்துக் கொண்டு வந்தன. இவை யாவும் தமிழகத்துத் தொன்மை நெறியான மாதொரு பாகனுக விளங்கும் சிவபரம்பொருளால் சிறப்பாகத் தோற்றுவித்த சைவச் செந்நெறிக்குப் புறம்பானவை. ஏனைய சமயநெறி சோபான முறையாக இலங்க சித்தாந்த சைவநெறி சிகரமாக விளங்குகிறது என்ற உண்மைத் தன்மையை குமரகுருபரர் பண்டார மும்மணிக்கோவையில், உரைக்கின்றார். " இறைவன் உயிர்த்தொகுதிகள் உய்யும் பொருட்டுச் சுத்தமாயை யென்னும் வயலினிடையே அருளாகிய வித்தையிட்டுக் கருணையாகிய நீரைப் பாய்ச்சி வேதமென்னும் மரத்தை வளர்த்தான். அம்மரத்தினைச் சார்ந்தவர்களுள் பலர் இலை கொண்டு உவந்தனர்; பலர் தளிர் கொண்டு உவந்தனர். ஏனையோர் அரும்பும், மலரும் பிஞ்சும் காயும் கொணர்ந்து உவந்தனர். இங்ஙனம் இருப்ப வேதாந்தமென்னும் உச்சியிலே பழுத்த இன்பந்தரும் அருங்கனி பிழிந்து அதன் சாரங் கொண்ட சைவசித்தாந்தமாகிய தேனை நுகர்ந்தனர் சிலரே " என்ற தனிப் பெருமையைக் காண்க.

சமயம் என்பது உயிர்களைப் பக்குவப்படுத்திச் செந்நெறியில் செலுத்துவதேயாம். அத்தன்மை நமது சைவச் செந்நெறிக்கே அமைந்துள்ளன. இத்தகைய சைவநன்னெறியில் அவதரித்த மருணீக்கியார், "சமயங்களானவற்றின் நல்லாறு தெரிந்துணர நம்பர் அருளாமையினால் " கொல்லாமை மறைந்துறையும் அமண சமய நெறியில் புகுந்தனர். மீண்டும், நம்பர் அருள் கூடுதலால் உண்மை ஓர்ந்து, தக்க சமுதாய நெறி சைவ நன்னெறியே ஆகுமெனந் தெளிந்து, அமண் தவிர்த்து அருள் நெறியாம் சைவ நெறிக்கு ஆட்கொள்ளப்பட்டார்.

அத்தகைய நாவரசர், உயிர்களைச் செந்நெறியில் செலுத்தும் சமயம் வாழ்க்கைச் சமயமாக அமைதல் வேண்டுமெனத் திருவுளங் கொண்டு கொண்டு இறையருளால் மக்கள் சமுதாயத்திற்குப் பல உபதேசங்களை யருளியுள்ளார். அவர் சமயக்காவலராக மட்டும் அமையாது சமுதாயக் காவலராகவும் விளங்கினர் என்று கூறுவது மிகையாகாது. என்றாலும், சமுதாயக் காவலராகவே வாழ்ந்தார் என்று கூறுவது ஏற்புடைத்தாம். ஏனெனில் உயிர் உடலின்கண் நிலைத்து நிற்க உடலை ஓம்புதல் வேண்டும். திருமூலரும் உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே" என்றார். அதுபோல உயிர் போன்ற சமயம் நிலைத்து நிற்க உடல்போன்ற சமுதாயம் நன்னிலையில் அமைதல் வேண்டும். சமுதாய வளர்ச்சியிலே சமய வளர்ச்சி அமைந்திருக்கிறது. உடல் உயிரோடு கூடியபொழுது சிறப்பு அடைவதைப்போல, சமுதாயம் சமய உணர்ச்சியோடு கூடியிருக்கும்போது சிறப்பு அடையும். எனவே தான், நாவரசர் பெருமான் இறையுணர்ச்சியோடு மக்கள் சமுதாயம் அமைய வேண்டுமெனக் கொண்டு மக்கள் சமுதாயத்தை நோக்கிச் சில உபதேசங்களைக் கூறித் தமிழ்ச் சமுதாயத்தை நல்வழிப்படுத்தினர். தமிழர் செந்நெறியையும் நிலைத்து நிற்கும்படிச் செய்தார்.

சமயச் செந்நெறியில் நின்று சமுதாயக் காவலராக விளங்கிய அப்பர் பெருமான் அருளிய திருமுறைகள் மூன்றில் நடுவணதாக அமைந்திருப்பது திருக்குறுந்தொகையாம். அத்திருமுறை ஏனைய திருமுறைகளைக் காட்டிலும் குறுகிய

வடிவில் அமைந்திருப்பதால் அப்பெயர் பெற்றது.

"அணுவைத் தொளைத் தேழ் கடலைப் புகட்டிக் குறுகத் தரித்த குறள்" போல வடிவில் சிறிய அளவினதாக அமைந்து மக்கள் சமுதாயத்தைச் செந்நெறிப்படுத்த நல்லருள் உபதேசங்களைத் தன்னகத்தே கொண்டுளது. அவ்வுபதேச நெறிகள் தனிமுறையிலும் பொது முறையிலும் அமைந்துள்ளன.

இறை உணர்ச்சியோடு கூடிய சமுதாய மக்களாக இருத்தல் வேண்டும், தலைவன் ஒருவன் உண்டு, அவனுக்கு நாம் என்றும் அடிமை இவ்வுலகமும், உலகத்துப் பொருளும் அவனுடைமை, என்பனவைகளை மனத்தடக்கி, "சிவாய நம வென்று சிந்தித்திருப்பார்க்கு அபாயம் ஒருநாளும் இல்லை" என்ற ஔவைப் பிராட்டியின் திருவாக்குப்படி இறைவனது திருநாமத்தையே இடையருது சிந்தித்து எச்செயலையும் செய்தல் வேண்டும். அவ்வாறு இல்லையாயின் பயன் இன்ரும் என்பதைப் பாவநாசத் திருக்குறுந் தொகையில் அருளியுள்ளரர்.

"கங்கை யாடிலென் காவிரி யாடிலென்
கொங்கு தண்குமரித் துறை யாடிலென்
ஒங்குமா கடலோத நீராடி லென்
எங்கும் ஈசன் எனுதவர்க்கு இல்லையே"

"வேதம் ஓதிலென் சாத்திரங் கேட்கிலென்
நீதி நூல்பல நித்தல் பயிற்றிலென்
ஓதி யங்கம் ஓராறும் உணரிலென்
ஈசனை யுள்குவார்க் கன்றி யில்லையே"

அப்பதிகத்தின் ஒன்பதாவது திருப்பாட்டில் இறையுணர்ச்சி இல்லாது செய்யப்படுகின்ற செயல், யாவரும் நகைக்கும்படியான "ஓடுமியல்புடைய நீரினை ஓட்டைக் குடத்தில் அடைத்து வைக்கும் மூடர்களின் செயலுக்கு ஒப்பாகுமென" அழகுபடக் கூறியுள்ளார்.

"கோடி தீர்த்தங் கலந்து குளித்தவை
ஆடி னுலும் அரனுக்கு அன்பிலையேல்
ஓடு நீரினை யோட்டைக் குடத்தட்டி
மூடி வைத்திட்ட மூர்க்க னேடொக்கும்"

என்பதாம்.

எச்செயலையும் இறையுணர்ச்சியோடு செய்யப்பட வேண்டுமெனக் கூறிய ஆசிரியர் அவ்வாறு செய்யப்படாத மக்கள் சமுதாயத்தைப் பார்த்து மிக வருந்திக் கூறுகின்ருர்.

"மனிதர்காள்! இங்கே வம்ஒன்று
சொல்லுகேன்"
என்றழைத்து; "கனிதந்தால் கனி
யுண்ணவும்
வல்லிரே" என்று கூறி; அக்கனி புனிதன்
பொற்கழலீசன் எனுங்கனி," எனச்சுட்டி
அதுவும் உலகியல் கனிபோலன்றி,
"தெள்ளத் தேறி தெளிந்து தித்திப்பதோர்,
உளத் தேறல் அமுத வொளி" எனத்தன்மை
யுங்கூறி; "இனிது சாலவும் ஏசற்றவர்
கட்கே"

என அக்கனியின் சிறப்புரிமை யாவர்க்கு என்பதையும் உணர்த்துகின்ருர்.

கனியின் சுவையாய் விளங்கும் இறைவனின் புகழைக் கேளாதார் செவி, துளைக்கப்படாத சுரைக்காய் போன்றதோ? நடலை வாழ்வு கொண்டு நிலைத்த செயல் என் செய்தீர்? வெட்கம் இல்லாதவர்களே சுடலை சேர்வது "நெருநல் உளன் ஒருவன் இன்று இல்லை" என்னும் பழமொழியை பிரமாணமாகஉள்ளது. கடலினஞ் சமுது உண்டவர் கைவிட்டால் இவ்வுடல் ஊரார் வெறுக்கின்ற பண்டமாக ஆகுமே! எனவும், பூவினுல் அவனடி போற்றுதவரும், நாவினுல் அவன் நாமத்தை நவிலாததரும், இவ்வுலகில் ஊன் உடலுக்கு இரைதேடி அலமந்து காக்கைக்கே இரையாகிப் பயனற்றுப் போகின்ருரே! எனவும் மக்கள் சமுதாயத்தின் மீது இரக்கங் கொண்டு கூறும் உபதேச மொழிகளை உணர்வோமாக.

அவ்விரக்க மேலீட்டால் உய்யும் நெறிகளையும் கூறுகின்ருர். தாயினும் நல்லானுக விளங்கும் ஈசன் நமக்கு, வாழ்த்த வாயும், நினைக்க மட நெஞ்சும், தாழ்த்தச் சென்னியும் தந்து இருக்கின்ருன். அத்தகைய தலைவன் நெக்கு நெக்கு நினைப்பவர் நெஞ்சுளே புகுந்து நிற்கின்ற புண்ணியன், அப்புண்ணியனைத் தொழுது தூமலர் தூவித்துதித்து நின்று அமுது காறுதல் வேண்டும். நீள நினைந்து எண்மல

ரிட்டுத் தொழ வேண்டும். அவ்வாறு நினைந்து தொழுவதால் திரைகள் போல் வரும் வினைகள் தீரும் என்பன போன்ற உபதேச மொழிகளைக் குறுந்தொகையில் காண்போமாக.

மேலும், மக்கள் சமுதாயத்தைப் பார்த்து நீர் சம்பாதிக்கின்ற பொருள், மனைவி, மக்கள் ஏனையோர், காலன் வந்து உயிர்கொண்டு போம் போது உடன் வாரார், என் செய்வார்.

" நீரினில் மூழ்கி நினைப்பொழிந்தார்களே ";
" அன்புடையார்கள் அழுதகன்றார்களே "

என்ற திருமூலர் வாக்குப்படி

" வைத்த மாடும் மனைவியும் மக்களும்
செத்த போது செறியார் பிரிவதே "

எனக்கூறுவர்.

ஆகவே நமக்குத் துணைப் பொருள் வேண்டுமெனில்

" கையினொடு கால்கட்டி யுமரெலாம்
ஐயன் விடினனென்பதன் முன்னம் நீர்
பொய்யிலா வரன் புள்ளிருக்கு வேளூர்
வள்ளல் பாதம் வணங்கித் தொழுமின் "

என இறைவனைத் தொழுதல் வேண்டுமெனக் கூறினர். இவ்வாறு தொழுதலால் இறைவன் என் செய்வனெனில்,

" வந்துகேண்மின் மயல்தீர் மனிதர்காள்
வெந்த நீற்றன் விசய மங்கைப் பிரான்
சிந்தையால் நினைவார்களைச் சிக்கெனப்
பந்துவாக்கி யுயக்கொளும் காண்மினே

சுற்றத்தானாக ஆக்கி, உய்யும் அருளினையும் அருள்வன் என்று கூறினர்.

இவ்வாறு அருளும் திறத்தை அகச்சான்றோடு நன்கு விளக்குவர்.

" துஞ்சிருள் காலைமாலை தொடர்ச்சியை
மறந்திராதே
அஞ்செழுத்தோதி நாளும் அரனடிக்
கன்பதாகும்
வஞ்சனைப் பாற் சோருக்கி வழக்கிலா வமணர்
தந்த
நஞ்சமுதாக்கு வித்தார் நனிபள்ளி
யடிகளாரே "

" கல்லினோ டெனைப்பூட்டி யமண்கையர்
ஒல்லைநீர் புக நூக்க வென்வாக்கினால்
நெல்லுநீள் வயல் நீலக்குடி யரன்
நல்ல நாம நவிற்றி யுய்ந்தேனன்றே "

இத்தகைய இறையுணர்ச்சியோடு கூடிய மனித சமுதாயமே தலையாய சமுதாயம் என்பார்.

" அனுசயப்பட்டது விதுவென்னாதே
கனிமனத்தோடு கண்களும் நீர்மல்கிப்
புனிதனைப் பூவனூரனைப் போற்றுவார்
மனிதரில் தலையான மனிதரே "

எனக் கூறுவர்.

இவ்வாறாக மனித சமுதாயம் அமைய வேண்டுமென்பதை தனி முறையிலும் பொது முறையிலும் கூறியிருக்கின்ற அருள் உபதேசத்தை உட்கொண்டு, அப்பெருமான் அவதரித்த சிவம் பெருக்கும் திருவாமூரில், அவரது திருமடத்தின் குடமுழுக்கு விழாநாளாகிய இந்நாளில் தமிழ்ச் சமுதாயத்தைச் சார்ந்த மக்களாகியநாம் பண்டு போல் இன்றும் உலக சமுதாயத்திற்கு வழிகாட்டியாக அமைய வேண்டுமென உறுதி கொள்வோமாக.

" என் கடன் பணி செய்து கிடப்பதே "
வளர்க சமயநெறி. வாழ்க உலகெலாம்.



# ஆணி — ஏணி — தோணி

திருமுறைக் கலைஞர், வித்துவான் தி. பட்டுச்சாமி ஓதுவார், திருச்சிராப்பள்ளி.

திருநாவுக்கரசு சுவாமிகள்

திருச்சோற்றுத்துறை : திருக்குறுந்தொகை [5-ஆம் திருமுறை]

ஆணி போலநீ ஆற்ற வலியைகாண் ;
ஏணி போல் இழிந்(து) ஏறியும் ஏங்கியும்
தோணி யாகிய சோற்றுத் துறையர்க்கே
பூணி யாய்ப்பணி செய் ; மட நெஞ்சமே! 7

திருவாவடுதுறை : திருத்தாண்டகம் [6-ஆம் திருமுறை]

பேணியநற் பிறைதவழ்செஞ் சடையி னானைப்
பித்தராம் அடியார்க்கு முத்தி காட்டும்
ஏணியை இடர்க் கடலுள் சுழிக்கப் பட்டிங்(கு)
இளைக் கின்றேற்(கு) அக்கரைக்கே ஏற வாங்குந்
தோணியைத் தொண்டனேன் தூய சோதிச்
சுலாவெண் குழையானைச் சுடர்பொற் காசின்
ஆணியை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 4

திருவையாறு : திருவிருத்தம் [4-ஆம் திருமுறை]

துன்பக் கடலிடைத் தோணித் தொழில் பூண்ட தொண்டர்தம்மை
இன்பக் கரைமுகந்(து) ஏற்றுந் திறத்தன ; மாற்றயலே
பொன்பட் டொழுகப் பொருந்(து) ஒளி செய்யும் அப்பொய் பொருந்தா
அன்பர்க் (கு) அணியன காண்க ; ஐ யாறன் அடித்தலமே. 6

பேணித் தொழுமவர் பொன்னுல(கு) ஆளப் பிறங்கருளால்
ஏணிப் படிநெறி யிட்டுக் கொடுத்(து) இமை யோர்முடிமேல்
மாணிக்கம் ஒத்து மரகதம் போன்று வயிரம்மன்னி
ஆணிக் கனகமும் ஒக்கும் ஐ யாறன் அடித்தலமே. 16

### ஆணி

முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம் பொருளான இறைவனின் திருவடிப் பெருமையினைப் பல்லாற்றானும் அப்பர் சுவாமிகள் தம் தேவாரத்துள் புகழ்கின்றனர். அவற்றுள், “ஆணிக் கனகமும் ஒக்கும் ஐயாறன் அடித் தலமே” என்பது ஒன்று. திருவடித் தாண்டகத்தும், “பொன்னுரையாய் நின்ற அடி” என்று இதனை விளக்கியுள்ளார். திருவாவடுதுறைத் திருத் தாண்டகத்தில், “சுடர் பொற்காசின் ஆணியை” என்றதும் இக்கருத்துப் பற்றியதே. எனவே, மாற்றறியலாகாத பொன்போல இத்தகையன் என்று அறியலாகாத பெருமையினையுடையவன் இறைவன் என்பது இவற்றால் அறியலாம். [திருச்சோற்றுத்துறைத் திருக்குறுந் தொகையில், “ஆணி போல நீ ஆற்ற வலியை காண்” என்றது நெஞ்சை நோக்கிக் கூறியதாகும்.]

### ஏணி

ஓரிடத்திலிருந்து மேலிடத்திற்கு ஏறிச்செல்லப் பயன்படுவது ஏணி. தான் நின்ற இடத்திலிருந்தே மற்றவரை உயர்த்தும் செய்கை ஏணிக்கு உரியது. நூலுரை போதகாசிரியருக்கு ஏணியை உவமையாகக் கூறுவதுண்டு. இறைவனும், ‘ஏணி போல்’ உள்ளனன் என்று திருச்சோற்றுத் துறைத் தேவாரத்தில் அப்பர் சுவாமிகள் கூறியுள்ளார். திருவாவடுதுறைத் திருத் தாண்டகத்தில் சிறிது விளக்கமாக இதனைக் கூறுகிறது. “பித்தராம் அடியார்க்கு முத்தி காட்டும் ஏணியை” என்பது அது. இவ்வுலகத்தில் அலைபவரை முத்தியைக்காட்டி ஏணிபோல் வீட்டுலகத்திற்குச் செலுத்துபவன் இறைவனே என்பது இதனால் அறியப்பெறும்.

### தோணி

இனி, இறைவன் தோணி போன்று ஆன்மாக்களைக் கரையேற்றுவித்தலாகிய செய்தி அப்பர் சுவாமிகள் தேவாரத்தினின்றும் அறியக்கிடக்கின்றது. பிறவிக்கடலைக் கடந்து திருவடி நெடுங்கரை சேர்வதற்கு அஞ்செழுத்தாகிய புணை இனிது பயன்படுதலை மணிவாசகப் பெருமானும் “அஞ்செழுத்தின் புணை பிடித்துக் கிடக்கின்றேனை” எனவரும் திருச்சதகத்தில் கூறியுள்ளார். அப்பர் சுவாமிகளும் தோணியாகிய சோற்றுத் துறையர் “என்றும், இடர்க்கடலுள் சுழிக்கப் பட்டிங்(கு) இளைக்கின் றேற்(கு) அக்கரைக்கே ஏறவாங் கும் தோணியை” என்றும், இறைவன் தோணியாதலை விளக்கியுள்ளார். எனவே, துன்பக்கடலாகிய பிறவிப் பெருங்கடலில் அழுந்திக் கிடக்கின்ற ஆன்மாக்களைத் திருவடி நெடுங்கரைக்கு உய்த்துச் செல்வது இறைவன் (திருவைந்தெழுத்து) ஆகிய தோணியே என்பது பெறப்படுகிறது. திருக்காளத்தித் திருத்தாண்டகத்தும், ஞானப் பெருங் கடற்கு ஓர் நாவாய் அன்ன பூரணன் காண் என்றும் அப்பர் சுவாமிகள் கூறுதல் இதனை வலியுறுத்தும்.

### தோணித் தொழில் :

மேற்கூறியவற்றால் தோணித்தொழில் (அதாவது தோணியாக இருந்து கரையேற்றுவிக்கும் தொழில்) இறைவனுக்குரியது என்பது தேற்றம். திருவையாற்றுத் திருவிருத்தத்தில் அப்பர் பெருமான் “துன்பக் கடலிடைத் தோணித் தொழில் பூண்ட தொண்டர் தம்மை, இன்பக் கரைமுகந்(து) ஏற்றும் திறத்தன” என்று கூறியுள்ளார். இதில் ‘தோணித் தொழில் பூண்ட தொண்டர்’ என்ற பகுதிக்குத் “தோணி போலும்

அலையும் தொழில் உற்ற தொண்டர்'' என்று பொருள் விரிப்பர் ஒருசாரார். மாணிக்கவாசகரே 'தனியனேன்' என்ற திருச்சதகத்தில், ''அஞ்செழுத்துப் புணை பிடித்துக் கிடக்கின்றேனை'' என்ற வரியில் அஞ்செழுத்தைப்புணை(தெப்பம்) என்று கூறுகிறார். அப்பர் பெருமானே இறைவனையே தோணி என்று கூறியுள்ளார். ஆகவே, 'தோணித் தொழில்' என்பதற்கு 'அலையும் தொழில்' என்று பொருள் கூறுவது அப்பர் சுவாமிகள் கருத்தாக இருத்தல் இயலாது. தோணித் தொழிலாவது, ''ஓரிடத்தினின்றும் வேறோர் இடத்திற்கு ஏற வாங்குதல் (ஏற்றிச் செலுத்துதல்) என்பதாகும்'' என அப்பர் பெருமான் திருவாக்காலே அறியப் பெறுகின்றது.

ஆகவே, ''தோணித்தொழில் **பூண்ட**'' என்ற பாடம் ஏடு எழுதியவரால் நேர்ந்தபிழையாக இருக்கலாம். ''தோணித் தொழில் **பூண்டு**'' என்பதே பாடமாக இருத்தல் வேண்டும். இங்ஙனம் திருத்தியமைப்பின் தோணித் தொழில் பூண்டவர் இறைவன் என்ற செய்தி அறியவரும்,'' பொருளும் ஆற்றொழுக் காகச் செல்லும்; இறைவன் தோணித் தொழில் பூண்டு தொண்டரை இன்பக் கரை (திருவடி நெடுங்கரை)யில் சேர்ப்பன் என்று அவ்வரிகள் பொருள் பட்டுச் சிறப்புறும்.

**தொகுப்புரை :**

இது காறும் கூறியவாற்றால் இறைவன் **ஆணிப்** பொன்னாகவும், **ஏணி** யாகவும், **தோணி**யாகவும் இருந்து ஆன்மாக்களை உய்விக்கின்றான் என்பது தெற்றெனப் புலப்படுகின்றது.

**கோணிக் கொண்டையர் வேடமுன் கொண்டவர்**
**பாணி நட்டங்கள் ஆடும் பரமனர்**
**ஆணிப்பொன்னின் — அண்ணாமலை**
**கைதொழப்**
**பேணி நின்ற பெருவினை போகுமே**

—அப்பர் தேவாரம்—திருவண்ணாமலை.

  

  

தாயிலி யாகும் சிவபெரு மான்தனைத்
தான் எனும் ஓர்
கோயிலின் ஆரறி வாகிய நாமம்முன்
கொண்டிருந்த
வாயிலின் ஆணவ மாகும் கபாடமும்
மன்திறந்து
நோயிலி யாகிய சொல்லிறை
காட்டுவன் நோக்குதற்கே.

—சிவப்பிரகாச சுவாமிகள்.

# அப்பர் தேவாரம் —
# இயற்கை வருணனை

வித்துவான், திரு. தியாகராஜ தேசிகர், கடலூர் N.T.

சித்தாந்த சைவச் செந்நெறியைத் தெளிவு பெறக் கூறுகின்றவை திருமுறைகளும் மெய் கண்ட நூல்களுமாம். அவற்றுள் திருமுறை களாவன, எல்லா மக்களும் ஓதி உணர்ந்து முத்தி பெற்றுய்தற் பொருட்டுச் சீவன் முத்தர் வாயிலாக, அவ்வக்காலங்களில் வெளிப்பட்ட சிவ வாக்குகளாகும். இலக்கணவகையால் கூறப்படும் பதிபசுபாசம் (இறைவன், உயிர், உலகு) என்ற மூன்றினையும் பற்றி இலக்கிய வகையால் அனுபவத்தில் காட்டுவன சைவத் திரு முறைகள்.

அவை திருஞான சம்பந்தர் அருளிய தேவாரங்கள் முதலாகப் பெரிய புராணம் ஈரு கப் பன்னிரண்டாகப் பெரியோர்களால் வகுக் கப்பட்டுள்ளன. அவையே திருமுறைகளெ னப்படுவது உயர்ந்தோர் மரபு. இத்திருமுறை கள் பன்னிரண்டினுள் முதல் ஏழு திருமுறை களும் சமயப்பேராசிரியர்களாகிய ஞானசம்பந் தர், அப்பர், சுந்தரர் என்னும் மூவரும் பாடி யுள்ள தேவாரங்களாகும். இவற்றுள் அப்பரடி கள் அருளிய தேவாரம் 4, 5, 6 ஆகிய திரு முறைகளாக வகுக்கப்பட்டுள்ளன.

சிறந்த செய்யுட்கள் செய்தமையால் சிவ பெருமானலேயே "நாவுக்கரசர்" என அழைக்கப்பட்டார் அப்பர். "சைவப் பெரு நெறிக்கே அணியன நாவுக்கரையர் பிரான் றன் அருந்தமிழே" என்று சிவப்பெருநெறி யின் திருவுடை அழகனுகத் திருநாவுக்கரசரை நம்பியாண்டார் நம்பிகள் காணுகிருர். "வாகீ சப் பெருந்தகை தன் ஞானப் பாடற்ருெடைய ருச் செவ்வாயும் சிவவேடப் பொலிவழகும் துதித்து வாழ்வாம்" எனச் சிவஞான சுவாமி கள் கூறியது கொண்டு, ஆளுடை அரசின் அமுதமொழி "ஞானம் தருதலில் தலையாயது" என்பதை அறியலாம்.

இத்தகைய தெய்வப்பாடல்களை அருளிய திருநாவுக்கரசர், நம் நாட்டில் திருவாமூரில் சைவவேளாளர் குலத்துட்டோன்றி, அறிவு தரும் நூல்களை ஐயந் திரிபறக் கற்றறிந்து அதன்படி அறநெறி நின்று, மறநெறி நீக்கி மாண்பொடுமிருந்தனர். பின்னர் சமண் சம யம் புகுந்து, அச்சமயத்தலைவராய்த் தரும சேனர் என்னும் பெயர் பெற்று விளங்கிய போது, திருவருளால் தமக்கு நேர்ந்த கொடிய சூலை நோயைத் தீர்த்துக் கொள்ளும் பொருட் டுத் தமது தமக்கையாராகிய திலகவதியாரை நாடிச் சென்று சைவத்துக்கு மீண்டு, திரு வதிகை வீரட்டானத்திற்கு வந்து சிவபெரு மான் அருள்பெற்றுத் திருப்பதிகம் பாடியருளி னர். சமணர்கள் விளைத்த நீற்றறையிடுதல் முதலிய பல பெரிய இடர்களைத் திருவருளாற் றலினுல் வெற்றி கொண்டவர். ஆளுடைப் பிள்ளையாருடன் சிறந்த நண்பு கொண்டிருந்து பல அற்புதங்களைச் செய்து, திருக்கயிலைக் காட்சியைத் திருவையாற்றிற் கண்டு களித் துத் திருப்புகலூரில் சிவபெருமான் ஆட்கொள் ளத் திருவடி நிழலை அடைந்தார்.

இப்படிப்பட்ட திருநாவுக்கரசு நாயனுர் அருளிய தேவாரத் திருப்பாசுரங்கள் உயிர்க்கு உறுதிபயக்கும் உண்மைகளை அறுதியிட்டு உரைப்பன. சிவானுபவப் பயன் நிறைந்தன வாய், கற்பாரது உள்ளத்தை யுருக்குவதில் ஒப்பற்ற தன்மை வாய்ந்தவை. இனிய எளிய சொன்னடை யுடையனவாய்த் திகழ்கின்றன. தாழ்மை மிக்க அவரது மனம்போல அவரு டைய திருப்பாடல்களும் தண்ணென்ற ஒழுக்க முடையனவாய் இலங்குகின்றன. இவற்று டன் உவமை, உருவகம், வர்ணனை முதலிய அணிகளையும் கொண்டு விளங்குகின்றன. நமது நாயனுர் தேவாரத்துள் கற்பனை நயமும்

நகைச்சுவையும் இயற்கை வருணனையும் பொருந்திய பாடல்களும் பலப்பல. அவற்றுள் இயற்கை வருணனை அப்பர் தேவாரத்துள் பயின்று வருதலை மட்டும் காண்போம்.

உழவுத் தொழில் செய்து நெல் விளைத்தல் என்னும் இயற்கையினைக் கண்ட நமது நாவுக்கரசர், உழவு செய்து நெல் விளைத்தல் போல, சிவகதியை விளைவிக்க வேண்டுமென்பதை ஒரு பாட்டில் உணர்த்துகின்றார். அப்பாடல் :—

“ மெய்ம்மையாம் உழவைச் செய்து
விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாம் களையை வாங்கிப்
பொறையெனும் நீரைப் பாய்ச்சித்
தம்மையும் நோக்கிக் கண்டு
தகவெனும் வேலி யிட்டுச்
செம்மையுள் நிற்ப ராகில்
சிவகதி விளையும் அன்றே. ”

என்பதாம்.

தென்கழிப்பாலைப் பெருமான்மீது வணங்கிப் பாடியருளிய பாடலொன்றில், நெய்தல் நிலப் பறவையாகிய குருகு (நாரை), அங்குள்ள தாழை மடற் குருத்தினைத் தனது பிள்ளையென்றெண்ணி அன்பால் தழுவிக் கொள்வதாகப் புனைந்துரைக்கின்றனர். அப் பாடல் :—

“ நெய்தற் குருகுதன் பிள்ளையென்
றெண்ணி நெருங்கிச் சென்று
கைதை மடல்புல்கு தென்கழிப்பாலை
யதனுறைவாய்
பைதற் பிறையொடு பாம்புடன்
வைத்த பரிசறியோம்
எய்தப்பெறினிரங் காதுகண்
டாய்எம் மிறையவனே. ”

இன்னும் அப்பாட்டினுள் சிவபெருமான் பாம்பினையும் பிறையினையும் ஓரிடத்தே வைத்ததை ஒருவியப்பாகக் கூறியுள்ளார். பாம்பு பிறையைப் பற்றிக் கொள்ளுமாயின் சிறிதும் இரக்கமின்றி அதனை விழுங்கி விடும். அவ்வாறிருப்பவும் அவ்விரண்டையும் ஓரிடத்தில் ஒன்றையொன்று நலியாமல் வைத்தது வியப்பை அளிப்பதாயிற்று.

திருவலம்புரத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமானைத் திருநாவுக்கரசர் வணங்கும் போது அத்தலத்தின் சிறப்பையே செய்யுள் முழுவதிலும் வருணித்துள்ளார். அப்பாடல் :

“ அருகெலாம் குவளை செந்நெல்
அகவிலை ஆம்பல் நெய்தல்
தெருவெலாம் தெங்கு மாவும் பழம்விழும் ;
படப்பை யெல்லாம்
குருகினங் கூடியாங்கே கும்மலித்
திறகு லர்த்தி
மருவலா மிடங்கள் காட்டும்
வலம்புரத் தடிகளாரே.”

இப்பாட்டின் பொருளாவது :

திருவலம்புரத்தின் பக்கங்களிலெல்லாம் செந்நெல் வயல்களும், அவற்றின் கண்ணுள்ள குவளை, ஆம்பல், நெய்தல் மலர்களும் செறிந்து அழகு செய்தன. வழியின் இருமருங்கும் வைத்துள்ள தென்னை, மா முதலிய மரங்கள் கனிகளை உதிர்த்தன. தோட்டங்களிலே நாரைகள் கூடி மகிழ்ச்சியோடு கூவிக் கொண்டும், இறகுலர்த்திக் கொண்டும் அவ்வூர்க்கு வருகின்றவர்களுக்குத் தக்க தங்குமிடம் ஈதெனக் காட்டுவது போல் உலாவித்திரிந்தன என்பதாம்.

அப்பர் பெருமான், நமது வாழ்க்கையானது கடலிற் பயணம் போன்றது. மனம் என்கிற தோணியிற் போகின்றோம். மதி-அறிவு என்கின்ற தோணியில் உள்ள சரக்கு சினம்-காமம் என்கிற கோபம் என்பதே. அங்ஙனம் போகும்போது பாறையில் தோணி தாக்குண்டு உடைகின்றது. அப்போது ஒன்றும் தோன்றாது மாய்கின்றோம் என ஒரு பாடலில் அழகுற அறிவிக்கின்றார். அப்பாடல் :—

“ மனமெனும் தோணி பற்றி
மதியெனும் கோலை யூன்றிச்
சினமெனும் சரக்கை யேற்றிச்
செறிகட லோடும் போது

மதனெனும் பாறை தாக்கி
மறியும் போதறிய வொண்ணுது
உனேயுனும் உணர்வை நல்காய்
ஒற்றியூர் உடைய கோவே.''

என்பதாம்.

உடம்பை வீடாகவும், உள்ளத்தை விளக்காகவும் ஒரு பாடலில் வருணித்துள்ளமை காணலாம். அப்பாடல் :—

"உடம்பெனு மனேயகத்து
உள்ளமே தகளி யாக
மடம்படும் உணர்நெய்
யட்டி யுயிரெனும் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயால்
எரிகொள இருந்து நோக்கில்,
கடம்பமர் காளே தாதை
கழலடி காணலாமே.''

குற்றமில்லாத வீணே, மாலேக் காலத்து நிலா, குளிர்ந்த பொய்கை, இளவேனில், வீசுதென்றல் இவை இன்பம் தருவனபோல, தன்னே அமணர்கள் வெம்மை மிக்க நீற்றறையிலிட்ட காலத்து ஈசன் திருவடி நீழல் இன்பம் தந்ததாகக் கூறியருளிய,

"மாசில் வீணேயும் மாலே மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணேயடி நீழலே.''

என்ற தேவாரப் பாடல் ஓதி இன்புறத்தக்கது.

மேலும் இன்னும் பல இயற்கை வருணனேகள் ஆங்காங்கே அப்பர் பெருமான் அருளிய திருப்பதிகங்களில் காணப்படுகின்றன. அவற்றை எல்லாம் அப்பர் அடிகள் அருளிய தேவாரங்களே நாளும் ஓதி, உணர வேண்டும். தேவாரம் என்பது நையாத மனத்தவரையும் நைவித்தற்கு ஒரு சிறந்த கருவி. சமயக்கருத்துக்களே இன்னிசையில் வைத்து நமது மனத்தை இயற்கை வழியில் ஈர்த்துக் கடவுள் திருவடியில் நம்மை ஈடுபடுத்துவதே தேவாரத்தின் தன்மை. இத்தகைய தெய்வத் திருமுறைகளின் சிறப்பையுணர்ந்து இத்தேவாரத் திருமுறைகளேப் பொருளுணர்ந்து நாளும் ஓதி ஓதிப் பேரானந்தப் பெருவாழ்வு பெற்று உய்வோமாக. ★



துடைவாழை மேல்மட வார்அல்குற் பாம்பு
தொடமயங்கி
நடைவாய்ப் ப்ணம்என்ப் பட்டார் பெறுகிலர்
நச்சுகுலே
உடை வாழை மேல்உர கம்தீண்ட
ஒருவன் உயிர்
அடைவான் அருள்புரி யும்திரு
நாவுக்கர சிணேயே

—சிவப்பிரகாச சுவாமிகள்.

# திருத்தாண்டகம்

வித்துவான். திரு. தங்கவேலர் அவர்கள், பண்ணுருட்டி.

நாம் வாழும் இவ்வுலகம் முதலான எல்லா அண்டகோடிகளும் வான வெளியில் தாழா மலும் தட்டாமலும் பலகோடி உயிரினங் களைத் தாங்கிக் கொண்டு சுழன்று கொண்டி ருக்கின்றன. இந்த அண்டகோடிகளெல்லாம் ‘இல்நுழை கதிரின் துன்அணுப்புரைய’ அணுக் களுக்கெல்லாம் அணுவாகவும், அண்டங்களுக் கெல்லாம் அண்டங்களாகவும் உயிர்க்கு உயி ராகி எங்கும் நீக்கமற, அப்பாலைக்கு அப்பா லாய் உண்மை அறிவு ஆனந்த வடிவமாய், போக்கு வரவு இன்றி நிற்கும் ஓர் பொருள் அருள்வடிவமாய்த் திகழ்கின்றது. இதனையே ஆன்றோர் செம் பொருள் எனவும், சிவபரம் பொருளெனவும் வழங்குவர்.

இந்தச் சிவபரம் பொருளிற் கலந்து பிறவி யில்லாப் பேரானந்தப் பெருவாழ்வை அளிக்க வல்ல சமையமே சைவ சமையம் எனப்படும். அந்தச் சைவ சமயத்தின் வழி நின்று ‘ மற் றோர் தெய்வங் கனவினும் நினையாது ’ சிவனை வழிபடுகின்றவர்களே சைவர்கள் எனப்படு வார்கள். அந்தச் சைவ சமைய வழிகாட்டி களாகிய சைவ குருமார்களே சைவ சமய குர வர்கள் எனப்படுவார்கள். அந்தச் சைவ சமைய குரவர் இயற்றியருளிய தோத்திரப் பாடல் களாகிய தேவார திருவாசகங்களும், அவர் களுக்குப்பின் அருளின் வழிவந்த அருளாளர் கள் இயற்றிய தோத்திரப் பாடல்களும், திரு நெறிய தமிழ் எனப்படும். அந்தத் திருநெறிய தமிழ்கள் ஆன்றோர்களால் பன்னிரு திரு முறைகளாகப் பிரிக்கப்பட்டு மிளிர்கின்றன. அவைகளாவன :—

திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள் இயற்றியருளிய தேவாரப் பாடல்கள் முதல், இரண்டு, மூன்று திருமுறைகள் ஆகும். திரு நாவுக்கரசு சுவாமிகள் இயற்றியருளிய தேவா ரப் பாடல்கள், நான்கு, ஐந்து, ஆறு திரு முறைகள் ஆகும். சுந்தரமூர்த்தி சுவாமிகள் இயற்றியருளிய தேவாரப் பாடல்கள் ஏழாவது திருமுறையாகும். மாணிக்கவாசக சுவாமிகள் இயற்றியருளிய திருவாசகமும் திருக்கோவை யாரும். எட்டாவது திருமுறை ஆகும். திரு மாளிகைத் தேவர் முதலாம் பல அருளாளர் களால் இயற்றப்பட்ட பாடல்கள் ஒன்பதாம் திருமுறை ஆகும். திருமூலதேவர் இயற்றி யருளிய திருமந்திரத் திருப்பாடல்கள் பத்தாந் திருமுறையாகும். திருவாலவாயுடையாரும் அவ ரருள் பெற்றோர்களும் இயற்றியருளிய திருப் பாடல்க்ள் பதினோராந் திருமுறை ஆகும். சேக்கிழார் பெருமானியற்றியருளிய திருத் தொண்டர் புராணம் பன்னிரண்டாந்திருமுறை ஆகும். இந்தப் பன்னிரு திருமுறைகளும் பன் னிரு சூரியர்கள் போல அகவிருளாகிய ஆணவ இருளைப் போக்கும் பேரொளிகளாக மிளிர்வன.

மேலே கூறப்பட்ட பன்னிரு திரு முறை களில், நமது திருநாவுக்கரசு சுவாமிகளாலே இயற்றப்பட்ட திருமுறைகள் நான்கு ஐந்து, ஆறு ஆகும். இவைகளுள், ஆறுந்திரு முறை யாகிய திருத்தாண்டகப் பகுதியே ஈண்டு ஆராய எடுத்துக் கொள்ளப்பட்டது ஆகும்.

மருள் நீக்கியார் சூலைநோயுடன் திரு வதிகையை அடைந்தார். தமக்கையாராம் திலகவதியாரை வணங்கி உய்ந்து கரையேறு நெறி கேட்டார். அம்மையார் ஐந்தெழுத் தோதிக் கொடுத்த திருவாளன் திரு நீற்றினை உடல் முழுவதும் அணிந்தார். தமக்கையாரின் ஆணையின்படி திருவீரட்டானம் கோயில் கொண்டுள்ள பெருமானை வலங்கொண்டார். திருமுன் நின்று தம் சூலைநோயே யன்றி ஏழு உலகத்திலுள்ளவர்களது பிறவி நோயும் அகலு மாறு கூற்றாயினவாறு விலக்கலீர் என்ற பதிகம் பாடினார். சூலைநோயும் பிறவி நோயும் அகன் றது. பாடல் பயன் துய்ப்பவனாகிய பரமன் உள்ளம் உவந்து திருநாவுக்கரசு என்று உலகே ழினும் நின் நாமம் நயப்புற மன்னுக என்று அசரீரியாக அருள் புரிந்தார். இந்த ‘ நாவுக் கரசு ’ என்ற பெயரை இறைவன் எவருக்கும்

கூட்டவில்லை. இக்காரணங் கொண்டு நோக்கின் இவரது பாடலின் பெருமை நன்கு புலனுகும். மேலும் சான்றோர்கள் இவரியற்றிய தாண்டகத்தின் பெருமையையும் வன்மையையும் அறிந்து இவருக்குத் 'தாண்டகவேந்தர்' எனவும் 'தாண்டகச் சதுரர் எனவும் அழைப்பார்களாயின் இவரது தாண்டகத் திருமுறையை 'ஆயக்கடவேன் நானேதான் என்னதோ இங்கு அதிகாரம்' என வாளாவிருக்காமல் ஆயத் தொடங்கிய என் நெஞ்சமே நாணமுறுகின்றது ஆயினும் மெய்யன்பர்கள் சிலர் எனக்கிட்ட பணியை மறுக்க அஞ்சியும், இது கொண்டேனும் இத்திருமுறையைப் படிக்கும் வாய்ப்புக் கிடைத்ததே என மகிழ்ந்தும், இறைவன் என்னுள்ளிருந்து உணர்த்தும் வகையில் எழுதத் துணிந்தனன்.

தாண்டகம் என்பது —அறுசீராலும் எண்சீராலும் இயன்ற ஒத்த நான் கடிகளைக் கொண்ட செய்யுட்களை உடையதும் கடவுளரைப் புகழ்வதுமான ஓர் பிரபந்த வகையேயாகும் எனப் பன்னிருபாட்டியல் (305) கூறுகின்றது.

தாண்டகம் என்பது ஒருவகைச் செய்யுள் ஆகும் என்றும் ஓரடியில் 24 எழுத்துக்கள் முதல் 26 எழுத்துக்கள் வரையில் அமைந்த அடிகளையுடைய செய்யுள் சந்தம் என்றும், ஓரடியில் 27 எழுத்து முதலாக மேற்கொண்ட எழுத்துக்களாகிய அடிகளைக் கொண்ட செய்யுள் தாண்டகம் என்றும் யாப்பருங் கலவிருத்தி யுரை (95 44) கூறுகின்றது. மற்றும் தாண்டகச் செய்யுளில் குருவும், லகுவும் ஒத்துவருஞ் செய்யுள் அளவியல் தாண்டகம் என்றும், குருவும் லகுவும் ஒவ்வாது வரும் செய்யுள் அளவழித் தாண்டகமெனவும் அவ்வுரை கூறுகின்றது. குருவென்பது :-குற்றெழுத்து மெய்யெழுத்தைச் சார்ந்ததும், நெட்டெழுத்துத் தனித்தும் மெய் யெழுத்தைச் சார்ந்தும் வருவனவாகும். 'லகு' என்பது குற்றெழுத்து மெய்யெழுத்தைச் சாராது தனித்து வருவதாகும்.

இனி, திருமங்கை ஆழ்வார் பாடியருளிய திருவாய் மொழியின் கண் காணப்படுகின்ற அறுசீர்க் கழி நெடில் ஆசிரிய விருத்தங்கள் திருக் குறுந் தாண்டகம் எனவும் எண்சீர்க் கழில் நெடில் ஆசிரிய விருத்தங்கள் திரு நெடுந் தாண்டகம் எனவும் பெயர்கள் அமைந்துள்ளன.

நமது திருநாவுக்கரசு சுவாமிகள் பாடியருளிய ஆருந் திருமுறைப் பாடல்கள் அனைத்தும் திருத்தாண்டகங்களே யாகும். இப்பாடல்களின் ஒவ்வோரடியும் எண்சீர்களால் ஆனவைகளேயாகும். இம் முறைகளை அடியொற்றியே பெரிய திருமொழியின்கண் வந்துள்ள திரு நெடுந் தாண்டகங்கள் காணப்படுகின்றன என்னலாம்.

தாண்டகம் என்ற சொல்லின் வேர்ச்சொல் யாது என ஆராயக் கூடவில்லை. 'தண்டகம்' என்ற செய்யுள் வகை ஒன்று வட மொழியிற் காணக் கிடக்கின்றது. இச் சொற்றொடரினை தண்டு+அகம்எனப் பிரித்து, பாவத்தை வாங்குவது என்ருயினும், மனத்தை வாங்குவது என்ருயினும் பொருள் கொண்டு இந்தத் 'தண்டகம்' என்ற சொற்றொடர்தான் தாண்டகமென நீளலாயிற்றே என ஐயுறக் கிடக்கின்றது. தாண்டு +அகம் என்றே பிரித்து, காடும் மலையும் மனக் குரங்கு தாண்டி ஓடும் இயல்பினது. அதனை அவ்வாறு தாண்டவொட்டாமல் அதன் இயல்பிலேயே இறைவன் பொருள் சேர் புகழினைக் கேட்டுத் தாண்டிச் செல்லும் வகையினில் ஆக்கப்பட்டது தாண்டகமாயிற்றே எனவும் ஐயுறக் கிடக்கின்றது. இவ்வாராய்ச்சியினைப் பேரறிஞர்பால் விடுத்து, அப்பர் செய்தருளிய தாண்டக வகைகளை ஆராய்வோம்.

அப்பர் திருத்தாண்டகங்களில் பல இறைவன் அருளால் செல்லின் வாய்ப்பட்டு மறைந்தன போக இப்போதுள்ள பதிகங்கள் 99 ஆகும். இவைகளிலும் சிதைந்த பாடல்கள் போக இப்போதுள்ள பாடல் தொகை 979 ஆகும். இவைகள் 64 தலங்களிற் பாடப்பட்டனவாகும். அந்தத் தலங்களுள் மிக்க பதிகங்களைப் பெற்றவை சிலவே. திருவாரூர் மட்டும் 11 தாண்டகப் பதிகங்களைப் பெற்றுள்ளது, திருவதிகை 5 பதிகம் பெற்றுள்ளது, பொதுவான தாண்டகப் பதிகங்கள் 8 ஆகும், திருவீழிமிழலை 4 பதிகங்களைப் பெற்றுள்ளது, திருக்கைலாயமும், திருவையாறும் 3 பதிகங்களைப் பெற்றுள்ளன. கோயில், நெய்த்தானம், மழபாடி, ஆனைக்கா, இடைமருது, ஆவடுதுறை, ஏகம்பம், இவைகள் ஒவ்வொன்றும் 2 பதிகங்களைப் பெற்றுள்ளன. மற்றைய தலங்கள் ஒவ்வொரு பதிகமே பெற்றுள்ளன. திருக்கழுக்குன்றம், இரண்டு தாண்டகத்தையும் திருவலஞ்சுழி ஒரே தாண்டகத்தையும் பெற்றுள்ளன.

மேலே கூறப்பட்ட தாண்டகப் பதிகங்க ளெல்லாம் பல பெயர்களால் கூறப்படுகின்றன. அவை: 1. மறுமாற்றுத் திருத்தாண்டகம், 2. ஏழைத் திருத்தாண்டகம், 3. பெரிய திருத் தாண்டகம், 4. புக்க திருத்தாண்டகம், 5. அடையாளத் திருத்தாண்டகம், 6. திருவடித் திருத்தாண்டகம், 7. போற்றித் திருத்தாண்ட கம், 8. காப்புத் திருத்தாண்டகம், 9. தல வரிசைத் திருத்தாண்டகம், 10. அடைவு திருத் தாண்டகம், 11. நின்ற திருத்தாண்டகம், 12. வினுவிடைத் திருத்தாண்டகம், 13. தனித் திருத்தாண்டகம், 14. பலவகைத் திருத்தாண் டகம் எனப் பலவகைப் படுவனவாம்.

இவைகளுள் மறுமாற்றுத் தாண்டகமே முதலில் பாடப்பட்டதாகும். பல்லவனது மந் திரிகள் அரசன் ஆணைப்படி அப்பரடிகளை அழைக்க நம் அரசர் பெருமான்,

" நாமார்க்கும் குடியல்லோம் நமனை யஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலை இல்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோம் அல்லோம்
இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை
தாம் ஆர்க்கும் குடியல்லாத் தன்மையான
சங்கரன் நற்சங்கவெண் குழையோர் காதில்
கோமாற்கே நாம் என்றும் மீளா ஆளாய்க்
கொய்ம் மலர்ச்சே அடியிணையே குறுகினேமே"

எனவும்,

துகில்உடுத்துப் பொன்பூண்டு திரிவார் சொல்லும்
சொற்கேட்கக் கடவேமோ துரிசற்றேமே

எனவும்,

பாராண்டு பகடேறித் திரிவார் சொல்லும்
பணிகேட்கக் கடவேமோ பற்றற்றேமே

எனவும்,

நாவலந்தீ வதனுக்கு நாதரான—காவலரே ஏவி
விடுத்தாரேனும்
கடவமலோம் கடுமையொடு களவற்றேமே

எனவும்,

இறையருள் துணை கொண்டு அஞ்சா நெஞ்சினராய் உடன் வருவதற்கு மறுத்துக் கூறுதலின் இது மறுமாற்றுத் தாண்டகம் எனப் பட்டது. நமது இந்திய நாட்டுச் சுதந்திரப் படை வீரர்கள் திரு. வி. க. வின் அறிவுரைப் படி இப்பாடலைப் பாடிக் கொண்டே சென்று நெஞ்சுறுதியைப் பெற்று வெள்ளையரை வென்று சுதந்திரம் பெற்றார்கள் எனின் அப்பரது திருத் தாண்டகத்தின் பெருமையை என்னென்றுரைப் பது. 'சொற் குறுதிக் கப்பரெனச் சொல்' என்ற ஆன்றோர் வாக்கும் ஈண்டு ஒப்பு நோக் கற்பாலது.

ஓர்கால் வைதிகப் பிராமணோத்தமர் ஒரு வர் தங்கள் வேதங்களே சிறந்தன எனவும், தமிழ் வேதங்களில் அவ்வரிய கருத்துக்கள் காணப்படுவதில்லை எனவும் பல அறிஞர் நடு வண் வாதித்துப் பேசினர். அதைக் கேட்டு அவையின்கண் வீற்றிருந்த பெரியார் ஒருவர் தமிழ் வேதத்தில் என்ன கருத்தில்லை சொல் லுங்கள் என்றார். அதற்கு அப்பிராமணர், இறைவனது அட்டமூர்த்தங்கள் வேதங்களில் சொல்லப்படுகின்றனவே. இந்தப் பெருங் கருத் தினைத் தமிழ் வேதத்தில் இருந்தால் எடுத்துக் கூறுங்கள் பார்ப்போம் என வாதாடினர். அதைக் கேட்ட தமிழ்ப் பெரியார் அப்பரடிகள் இயற்றி யருளிய 'நின்ற திருத் தாண்டகத்துள்' ஒரு பாடலாகிய,

" இருநிலனாய்த் தீயாகி நீரும்ஆகி
இயமானனாய் எறியும் காற்றும்ஆகி
அருநிலைய திங்களாய் ஞாயிறாகி
ஆகாசமாய் அட்டமூர்த்தி யாகிப்
பெருநிலைய திங்களும் பெண்ணும்ஆணும்
பிறர்உருவும் தம்முருவும் தாமேயாகி
நெருநலையாய் இன்றாகி நாளையாகி
நிமிர்புன் சடையடிகள் நின்றவாறே."

என்ற பாடலைப் பாடி விளக்கிக் காட்டினர். அதனைக் கேட்ட சபையினர் எல்லாம் ஆச்சரி யப்பட்டனர். வாதாடிய அந்தணர் மன முடைந்து அவையினரை நோக்கித் தமது அறியாமைக்கு மன்னிப்பு கேட்டுக் கொண்ட னர் எனின், நமது அப்பர் பெருமானின் வேத சாரமாகிய திருத்தாண்டகப் பாடல்களின் பெருமையை எவரே அளவிட்டுரைக்க வல்லு நர் இந்தத் திருத்தாண்டக முதலாம் பாடல்க ளெல்லாம் இறையருள் கொண்டு பாடினவை யேயல்லாது தமது சொந்த அனுபவங்

கொண்டு பாடியவை அல்ல என்பதனை அப்பரடிகளே தமது திருத்தாண்டகப் பகுதிகளில்,

"பத்திமையால் பணிந்து அடியேன் தன்னைப்
பன்னாள்
பாமாலை பாடப் பயில்வித்தானை"

எனவும்,

" பன்னியநூல் தமிழ்மாலை பாடுவித்துஎன்
சிந்தை மயக்கறுத்த திருவருளினானை."

எனவும்,

கூறும் அகச்சான்றுகள் கொண்டு கண்டு கொள்க. இதனானன்றே இப்பாடல்களெல்லாம் திருவருட்பாடல்கள் ஆயின என்க. இவ்வாறு இறையருள் துணை கொண்டு நம்வாகீச வள்ளல் பாடும் திருத்தாண்டகப் பாடல்களெல்லாம் சொல்லழகும், பொருளழகும், எதுகை மோனை அழகுகளும், தொடை யழகும், நடை யழகும் ஆய்ந்து பாடியும் கேட்டும் அநுபவித்தவர்களுக்கே நன்கு விளங்கும். ஒவ்வொரு திருத்தாண்டகமும், கல்நெஞ்சமும் கரைந்து நெக்குருகிக் கண்ணீர் பெருக்கெடுத் தோடச் செய்து, இறைவனை எளிதில் கண்முன் காட்டி நவின்றோர்க்கு இனிமையும், நன்மொழி புணர்த்தலும், ஓசையுடைமையும், சிந்தைக்கினிய செவிக்கினிய வாய்க்கினிய வாயும், திகழ்கின்றன. ஒவ்வோர் கருத்துக்களும் நெஞ்சை ஈர்க்கின்றன. 'பெறுதற்கரிய பிறவியைப் பெற்றும்' பெறுதற்கரிய பிரானடி பேணாராய்த் திரியும் மக்களை நோக்கி இரங்கிக் கூறுவனவும் இன்புரைகளாகக் கூறுவதும், வன்புரைகள் கூறுவதும், அறிவுரைகள் கூறுவதும், ஆங்காங்குப் பல படப் பரவிக் கிடக்கின்றன. சொல்லடுக்குகட்கோ பஞ்சமில்லை. வடலூர் வள்ளலார் பாடல்கள் இனிப்பதற்கெல்லாம் காரணம் நம் வாகீச வள்ளலாரின் சொல்லடுக்குக் கொண்டே எனத் திட்பமாகக் கூறலாம். ஒன்றை ஈண்டுக் காண்போம்,

" திருவே என்செல்வமே தேனே வானோர்
செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற் சோதிமிக்க
உருவே என்உறவே என்ஊனே ஊனின்
உள்ளமே உள்ளத்தின் உள்ளே நின்ற
கருவே என்கற்பகமே கண்ணே கண்ணிற்
கருமணியே மணியாடு பாவாய்! காவாய்!
அருவாய வல்வினைநோய் அடையா வண்ணம்
ஆவடுதண் டுறையுறையும் அமரர் ஏறே!"

என்ற இத் தாண்டகத்தின்கண் சொல்லடுக்குகள் முதலிய எல்லா நலன்களும் பொருந்தியிருத்தல் கண்டு கொள்க. இனி இவ்வாறே திருத்தாண்டகத்தின் உள்ள நலன்களை யெல்லாம் முற்றக் கூறல் எம்போலியர்கட்கு இயலாததொன்றாகும் என்பதனை,

"தாண்டகவேந் தன்னருளும் தாண்டகத்தின்
தன்பெருமை
தாண்டவவேந் தேயறிவான் தையலுடன்—
வேண்டுகின்ற
தேவர் அறியார் தேவர்கோன் தானறியான்
யாவர் அறிவார் இயம்பு"

என்னும் வெண்பாவினால் அறியலாம்.

இனி நம் தாண்டக வேந்தர், ஒவ்வொரு தாண்டகப் பதிகங்களின் இறுதிப் பாடல்கள் தோறும், இராவணன் கைலைமலையை யெடுத்ததும், அதனால் உமை அஞ்சி இறைவனைத் தழுவியதும், இறைவன் வெகுண்டு தம் கால் விரல் ஒன்றினால் நெருக்கியதும், அதனால் இராவணன் மலையின் அடியில் அகப்பட்டு வருந்தியதும், பின்னர் இறைவன் உளம் மகிழப் பாடியதும், அதுகண்ட இறைவன் உளம் இரங்கி உவந்து இராவணனுக்கு நாளும் வாளும் கொடுத்ததும் முதலான வரலாறுகளைத் தாம் நேரிற் கண்டு கூறுவது போலவே கூறுகின்றார். குற்றம் செய்த இராவணனுக்கு மறக்கருணை புரிந்து அருளி ஆண்டவன் ஆண்டது போலவே, குற்றம் செய்த தமக்கும் மறக்கருணையால் சூலை நோய் தந்து ஆட்கொண்ட தன்மையை ஒப்பிட்டுக் கூறுமுகத்தான் ஒவ்வொரு பதிகத்தின் இறுதி தோறும் இராவணனுக்கு அருளும் திறத்தைக் கூறுவாராயினர். இதனைத் தெய்வச் சேக்கிழாரும்,

" அத்தன்மைய னான இராவணனுக்கு
அருளுங் கருணைத் திறமான அதன்
மெய்த்தன்மை அறிந்து துதிப்பதுவே
மேல்கொண்டு வணங்கினர் மெய்யுறவே"

என்றனர்.

இனி தென்னிலங்கை இராவணன் வட கயிலையைப் பெயர்த்து எடுத்தல் தவறானதே!

அக் குற்றத்திற்கு இறைவன் மறக்கருணை புரிந்ததும் மாண்பே. ஆயினும் நமது தாண்டக வேந்தர் செய்த தவறுதான் என்னையோ எனின்? கூறுதும்.

நமது திருநாவுக்கரசர், வாகீச முனிவர் என்னும் பெயருடன் முன்பிறவியில் வடகயிலைச் சாரலில் தவம் புரிந்தனர். இராவணன் கயிலை மலையின் கீழ் அகப்பட்டு அழுதல் கேட்டனர். உள்ளம் இரங்கினர் அவனருகில் சென்று உய்யும் உபாயங் கூறினர். சாமகானப் பிரியன் என்றுணர்ந்த இராவணன் சாமகானம் பாடி மீண்டான். தீயோனுக்கு உய்யு நெறி கூறியது தவருகும். இக் குறிப்பினை வீரட்டப் பெருமான் திலகவதியார் கனவில் சென்று கூறுவதாகத் தெய்வச் சேக்கிழார் பெருமான்,

"உன்னுடைய மனக்கவலை ஒழிநீ
உன்னுடன் பிறந்தான்
முன்னமே முனியாகி நமையடையத்
தவம்முயன்ருன்
அன்னவனை இனிச்சூலை மடுத்
தாள்வம் எனவருளி."

என்கின்ருர். மேலும்,

"பண்டுபுரி நற்றவத்துப் பழுதினளவு
இறை வழுவும்
தொண்டரை ஆளத் தொடங்கும்
சூலை வேதனை தன்னைக்
கண்டரு நெற்றியர் அருள."

எனவும் கூறியவதனல் பெருங் குற்றம் செய்த இராவணன் அடைய வேண்டிய துன்பத்தைத்தடுத்து உய்யும்நெறி அருளியமையால் இராவண்ன் அடைய வேண்டிய துன்பத்திற்கு ஈடான துன்பத்தைத் தரும்படியான சூலை வேதனை தன்னை இறைவன் அருளினுர் என்ற குறிப்பு வெள்ளிடை மலையாக விளங்குகின்றது.

நமது தாண்டக வேந்தர் இராவணனைக் கூறும்போது தாண்டகத்தில் தாம் கண்டதைக் கூறுவது போலக் கூறுவது கொண்டு இவர் தவமியற்றும்போது செய்த குற்றம் இனிது புலப்படுகின்றது. நமது வாகீச வள்ளல், இராவணனைக் கூறும் பாடல்கள் கொண்டு இதனை ஆராய்வோம்.

இராவணன் கயிலை மலையைப் பெயர்த்தான். இறைவன் கால் விரல் ஊன்றித் துன்புறும் படி நெரித்தார். இராவணன் மலையினடியில் அகப்பட்டு உடல் நொறுங்கி மீள முடியாது அழுதான். அது கேட்ட வாகீச முனிவர் சாமகானம் பாடு மீளலாம் என்ருர். வீணை இல்லையே என்ருன். ஓர் தலையையும் ஓர் கையையும் எடுத்து வீணையாக்கி உடலின் நரம் பெடுத்துக் கட்டிப் பாடு என்ருர். நரம்பைச் சுகிர்ந்து தூய்மையாக்குதற்கு சின்ன அரிவாள் ஒன்று வேண்டும். எல்லாம் முடிந்தும் அரிவாள் இல்லாத குறையால் தவித்தான். இறைவன் அது கண்டு ஓர் சின்ன அரிவாளொன்றைக் கொடுத்தான். இராவணன் மகிழ்ந்து எடுத்து நரம்பைத் தூய்மையாக்கி ஒலி காட்டிச் சாமகானம் பாடித் துதித்தான். இறைவன் வாளும் வாழ்நாளும் கொடுத்தார், இதனை நேரிற் கண்ட நமது தாண்டக வேந்தர், தமது திருத்தாண்டகத்தில்,

"முறிப்பான பேசிமலை யெடுத்தான் தானும்
முதுகிறமுன் கைந்நரம்பை எடுத்துப்பாடப்
பறிப்பான்கைச் சிற்றரிவாள் நீட்டினனை"

எனவும்,

"தோளாண்மை கருதிவரை யெடுத்த
தூர்த்தன்
தோள்வலியும் தாள்வலியும் தொலைவித்
தாங்கே
நாளோடு வாள்கொடுத்த நம்பன்தன்னை"

எனவும் கூறுவது கொண்டு தீயோனுக்குத் துணை செய்தா ரெனவும், அத்தீமை காரணமாக அவனடைய வேண்டிய துன்பத்தைத் தாம் சூலையின் மூலம் அடைந்தாரெனவும் பெறப்படுகின்றது. இதனுலேயே இறைவன் தனக்கருளிய மறக்கருணை போலவே இராவணனுக்கு அருளிய மறக்கருணையைத் தமது பாடலில் வைத்து இறைவனைத் துதிப்பாராயினுர்.

இப்படிப்பட்ட சைவப் பெரியோரைப் பெற்றெடுத்த காரணத்தால் திருவாமூர் மேலேழுலகங்கட்கும், சைவம் தழைக்கச் செய்வதாயிற்று. சேக்கிழார் பெருமான் அந்தத் திருவாமூரைக் கூற வந்த போது,

# சொற்குறுதிக் கப்பர்

வித்துவான் திரு. அம்பை சங்கரனுர்

"ஆலும் வேலும் பல்லுக்குறுதி நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி" என்பது ஒரு பழமொழி. இதில் மக்களுக்கு நன்மையைத் தருவன நாலும் இரண்டும் என்பது விளங்கும். அந் நாலும் இரண்டும் என்பன முறையே நாலடியாரையும் திருக்குறளையும் குறிக்கும். இவ்விரண்டு நூல்களும் இம்மை வாழ்வில் ஒரு மனிதன் எம்முறையில் வாழ்ந்தால் நன்மை எய்தலாம் என்பதை மிகவும் தெளிவான முறையில் விளக்குகின்றன. அம்மை வாழ்வைப் பற்றியும் சிறிது சுட்டிச் செல்கின்றன. ஆனல் அவை நீதி நூல்களாதலின் இவ்வாறு செய்தால் ஏகும் சுவர்க்கத்தினிது; இம் முறையில் ஒழுகினல் இன்னபேறு அடையலாம்" எனப் பொதுமுறையாகக் கூறிச் செல்வதுதான் அவைகளுக்குரிய நியதியாகும்.

மற்ருெரு தனிவெண்பா ஒன்று அறிஞர் பெருமக்களிடையே நீண்டகாலமாய் வழங்கி வருகின்றது. அது யார் யார் நூல்கள் எவ்வெம்முறையில் சிறந்தவை என்பதை மிக அழகாகத் தெரிவிக்கின்றது. அது வருமாறு:—

"வாக்கிற் கருணகிரி வாதவூ ரர்கனிவில்
தாக்கில் திருஞான சம்பந்தர்—நோக்கிற்கு
நற்கீர தேவர் நயத்துக்குச் சுந்தரனுர்
சொற் குறுதிக்கு அப்பர்எனச் சொல்"

சொற்குறுதிக் கப்பரெனச் சொல் என்பதாம்.

இப்பாட்டில் "சொற்குறுதிக் கப்பரெனச் சொல்" என்ற அடி மிக ஓர்ந்தின் புறற் பாலதொன்று. அப்பர் பெருமானுடைய சொற்கள் மிக ஆணித்தரமாய் உறுதிகளைக் கூறுபவை. அவை, கேட்டார் நெஞ்சில் மிகவும் ஆழமாகப் பதிந்து பின் சிந்திக்கச் செய்பவை. உதாசீனமாக இருப்பவர்களைக் கன்னத்தில் ஒரு அறை அறைந்து அழைத்துப் புத்திமதி கூறுவது போல்பவை. சில இடங்களில் அவர் அறி

---

திருத்தாண்டகம் ... ...

"சைவநெறி ஏழுலகும் பாலிக்கும் தகைமையினுல்
தெய்வ நெறிச் சிவம்பெருக்கும் திருவாரூர் திருவாரூர்"

என்றருளினர்.

இனி நம் நாட்டிற்குரிய கயிலையை, அந்நியனுகிய சீனன் பறித்துக் கொள்ள முடியாதபடி தடுத்து அந்தக் கயிலை மலையினைக் காத்தல் சைவ மரபிற் பிறந்த ஒவ்வொருவருக்கும் தலையாய கடமையாகின்றது; அன்ரே? இதனை,

—சுனைமல்கு கயிலாயம்
எடுத்தானைத் தடுத்தானை என்மனத்தே வைத்தேனே.

எனும் தமிழ் மறை கொண்டு, கயிலை மலையைக் காக்க முற்படும் ஒவ்வொரு தமிழ் வீரனையும் நமது உள்ளத்தில் வைத்து ஒவ்வொருவரும் போற்றுவோமாக.

வுரைகள் மனத்தில் உறுத்தத்தக்கன வாய் இருக்கின்றன. ஆனுல் திருக்குறள் நாலடியார் போன்று பெரும்பாலும் இம்மை வாழ்விற்குரிய நீதிகளைக் கூருது அம்மை வாழ்வின் நன்மைகளுக்குரிய நற் செயல்களைச் செய்ய வலியுறுத்திக் கூறுவ தில் தலை சிறந்தது.

அறிவுரைகளை எல்லோரும் சொல்லக் கூடாது. முதலில் தான் நல்லவனுய் நடந்து பின் பிறருக்கும் அறிவுரை கூற வேண்டும். சிலர் "தான் எப்படியிருந் தாலும், பிறருக்கு நல்லதுதானே என் பதைத் கொள்ளவேண்டுமே யொழிய அவ்வறிவுரை கூறுபவருடைய குறை குணங்களை ஆராயக்கூடாது" என்று கூறுவர். அது ஒருவிதத்தில் ஏற்றுக் கொள்ளத் தக்கதாயினும் அதைவிட அறி வுரை கூறுபவர் மிகவும் சிறந்தவராய் எக் குற்றமு மற்றவராயிருக்கின் அவ்வறி வுரைக்கு மிகவும் வன்மையுண்டு என்ப தில் சிறிதும் ஐயமில்லை. இந்நிலையிலும் அப்பர் மிகவும் சிறந்த இடத்தைப் பெற்ற வர். ஆண்டாலும், பட்டறிவாலும் மற் றும் எல்லாவகைகளாலும் அப்பர் பெரு மான் சிறந்தவரா யிருந்ததினுலேயே அவர் வாக்குகள் மிகவும் ஈர்ப்புவன்மை யுடையனவா யிருக்கின்றன.

மேலும் அவர் தாண்டகம் என்ற ஒரு யாப்பு முறையை மேற்கொண்டது 'மக் கள் நன்ருயுணர வேண்டும்' என்ற அடிப்படையைக் கொண்டேயாகும்.

"நிலை பெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீ வா", "இவ்வாறெல்லாம் செய்" என்று மிக அழகாக அறிவுறுத்து கின்ருர்.

மக்கள் பல்வேறு திறத்தினர், சிலர் சில அறிவுரைகளைத் தங்கள் கல்விச் செருக்கால் உதாசீனம் செய்வார்கள். தாங்கள் மிகவும் படித்தவர்களென நினைத் துக் கொண்டதால் சில நூல்களின் மேற் கோள் காட்டித் தங்கள் கொள்கையை நிலைநிறுத்த முனைவார்கள், அவர்களுக்கு அப்பர் பெருமானுர் அறிவுறுத்துவதைப் பாரீர்.

"சாத்திரம் பலபேசும் சழக்கர்காள்
கோத்திரமும் குலமும்கொண் டென்செய் [வீர்?
பாத்திரம் சிவமென்று பணிதிரேல்
மாத்திரைக்குள் அருளும் மாற்பேறரே.

என்ற வாசகத்தின் உண்மையை ஓர்ந்து சிந்தியுங்கள்.

சிலர் பாசாங்குக் காரர்களாய் நடிப் பார்கள். மனத்துள்ளே பெருமானைப் பற் றிய எண்ணம் அறவே யிருக்காது. அவர்களுக்குக் கூறுகிருர்.

வஞ்சமின்றி வணங்குமின் வைகலும்
வெஞ்சொலின்றி விலகுமின் வீடற
நைஞ்சு நைஞ்சுநின்று உள்குளிர் வார்க்கெலாம்
அஞ்ச லென்றிடும் ஆனைக்கா அண்ணலே.
குறிகளும் அடையாளமும் கோயிலும்
நெறிகளும் அவர்நின்றதோர் நேர்மையும்
அறிய ஆயிரம் ஆரணம் ஓதிலும்
பொறியிலீர் மனம் என்கொல் புகாததே.

எனக் கூறுவனவற்றை நோக்குக.

சில சமயங்களில் தனக்கு அறி வுறுத்துவது போன்று கூறிப் பிறருக்கு அறிவுறுத்தும் பான்மையுமுண்டு. தன் நெஞ்சிற்குக் கூறுகின்ருர்.

மனைவிதாய் தந்தைமக்கள்
மற்றுள சுற்றமென்னும்
வினையுளே விழுந்தழுந்தி
வேதனைக் கிடமாகாதே
கனையுமா கடல்சூழ் நாகை
மன்னு காரோணத் தானை
நினையுமா வல்லீராகில்
உய்யலாம் நெஞ்சினீரே?

இவ்வாறு பல்வேறு வகைகளில் அப்பர் பெருமானுர் மன்பதைகள் உய் வான் வேண்டிப் பேரருள் நோக்கோடு பாடியுள்ளார். அவைகளைப் பாடியுருகி இறைவனை வழிபடின் உறுதி உறுதி என்பதில் எட்டுணையும் ஐயமுண்டோ? ❋

# திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரப் பாடல்களின் நகைச்சுவை

கயப்பாக்கம் திரு. சோமசுந்தரஞ் செட்டியார் அவர்கள்

திருநாவுக்கரசு சுவாமிகள் திருமுனைப் பாடி நாட்டில், திருவாமூரில் வேளாளர் குலத்தில் குறுக்கையர் குடியில் புகழனுர்க்கும் அவர்தம் கற்பிற்சிறந்த மனைவியார் மாதினியாருக்கும் இரண்டாவது மகனுகத் தோன்றியவர். இவருக்கு முன் பிறந்தவர் திலகவதியம்மையாராகும். இவரியற்பெயர் மருணீக்கியார். இவர், நல்ல குலம், நல்ல சமயத்திலே தோன்றியும் நம்பரருளாமையால் கொல்லாமை மறைந்துறையும் அமண் சமயம் குறுகினுர். அங்குப் பல்லாண்டுகள் தருமசேனர் என்ற பட்டப் பெயருடன் வாழ்ந்து சமண் சமயத்தை வளர்த்து வந்தார். திலகவதியம்மையார் "தம்பியாருளராக வேண்டுமென வைத்ததயாவால் உம்பருலகணையாமல் உயிர்தாங்கி அம்பொன் மணிநூல் தாங்காது அனைத்துயிர்க்கும் அருள் தாங்கி இம்பர்மனைத்தவம் புரிந்து" திருவதிகையில் திருத் தொண்டுகள் செய்து வாழ்ந்து வந்தார்.

தினமும் இவர் திருவதிகை வீரட்டானப் பெருமானிடம் பின்வருமாறு விண்ணப்பஞ் செய்து வந்தார். "தூண்டு தவ விளக்கனையார் சுடரொளியைத் தொழுது என்னை, யாண்டருளினீராகில் அடியேன் பின்வந்தவனை, யீண்டு வினைப்பர சமயக் குழிநின்றும் எடுத்தாள வேண்டுமெனப் பலமுறையும் விண்ணப்பம் செய்தனர்". பிரார்த்தனைக்கிரங்கிய பரமனும் அன்னுர் கனவில் தோன்றி "அன்னவனை யினிச் சூலை மடுத்தாள்வ மென்ற" ருளினுர்.

தருமசேனருக்குப் பரமன் மறக்கருணையால் சூலைநோய் பற்றி வருத்தியது. சமணர்களது மந்திரம், மருந்து, முதலியவற்ருல் தீராமை கண்டு திலகவதியம்மையார் திருவடிகளில் வந்து வீழ்ந்து சரணடைந்தார். அவருக்கு அம்மையாரும் திருவாளன் திருநீற்றையஞ்செழுத்தை ஓதிக்கொடுத்துத் திருமேனியில் அணியச் செய்து ஆலயத்திற்கு அழைத்துச் சென்று எம்பெருமான் திருமுன் விடுத்தனர். பெருமானைத் தருமசேனர் தொழுதார், வணங்கினுர், இறைஞ்சினுர். அவரருளால் "உரைத்தமிழ் மாலைகள் சாத்துமுணர்வுபெறவுணர்ந் துரைப்பார்". முதலில் பாடிய திருப்பதிகம் "கூற்ருயினவாறு" எனத் தொடங்கும் பதிகமாகும். இப்படிப் பல்லாண்டுகள் வாழ்ந்து பல தலங்களைத் தரிசித்துப் பல அற்புதங்களைப் புரிந்து, பல்லாயிரக் கணக்கான பதிகங்கள் பாடியருளினுர். இவர் திருவாய் மலர்ந்தருளிய பதிகங்கள் 49,000 என நம்பியாரூரரும், நம்பியாண்டார் நம்பிகளும் அருளியுள்ளார்கள். இவற்றுள் நாம் செய்த தவக்குறைவால் நமக்குக் கிடைத்துள்ள பதிகங்கள் 313ஆம். நான்காம் திருமுறையில் 114 பதிகங்களும், ஐந்தாம் திருமறையில் 100 திருப்பதிகங்களும், ஆருந் திருமறையில் 99 பதிகங்களுமேயாம்.

இனி, இவர்தம் பாடல்களனைத்தும் ஊனையும் உருக்குந் தன்மையனவாகவே அமைந்துள்ளதை அன்பர்கள் அறிவார்கள். அவர் வயது நிரம்பிய தள்ளாத நிலையில் சைவ சமயத்தைச் சார்ந்து பல பதிகங்களையும் பாடத் தொடங்கியமையாலும், அவர் தம் கருணை வடிவத்தைத் தெய்வச் சேக்கிழார் பெருமான் பின்வருமாறு படம் பிடித்துக் காட்டியுள்ளதாலும், அவர்தம் அருட்பாடல்கள் அனைத்தும் பக்தி சுவைக் கனி சொட்டச் சொட்ட விளங்கும். ஓதுவார் மனத்தை உருக்கும். இறைவனடியிற் சேர்ப்பிக்கும். ஆதலால், ஏனைய இரு சமயாசிரியர்கள் திருப்பாடல்களில் பலவகைச் சுவை ததும்பும் பாடல்கள் இருப்பன

போல இவர்தம் பக்திப் பாடல்களில் இருக்க மாட்டா என்பது பலர் அபிப்பிராயம். இவர்தம் அருமைத் திருவாக்கிலும் அத்தகைய நகைச் சுவைப் பாடல்கள் உண்டு என்பதை நிரூபிப் பதே இக்கட்டுரையின் நோக்கம்.

" சிந்தையிடையரு அன்பும் திருமேனி
தன்னில் அசைவும்
கந்தைமிகை யாங்கருத்தும் கையுழவா
ரப்படையும்
வந்திழிகண் ணீர்மழையும் வடிவிற்பொலி
திருநீறும்
அந்தமில்லாத் திருவேடத் தரசுமெதிர்
வந்தணைய"
—சேக்கிழார்.

இந் நிலையிலும் சுவாமிகள் திருவாக்கில் எங்ஙன் நகைச் சுவைப்பாடல்கள் தோன்றும் என எண்ணக் கூடும்!

இனி இவர் திருவடிவத்தைக் காஞ்சிப் புராண ஆசிரியர் ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகளும் எப்படி நமக்குக் காட்டியுள்ளார் என்பதையும் கவனித்தால் தான் அவர்தம் அருளினீர்மை தோன்றும்:

" இடையருப் பேரன்பும் மழைவாரும்
இணைவிழியும் உழவா ரத்தின்
படையருத் திருக்கரமும் சிவபெருமான்
திருவடிக்கே பதித்த நெஞ்சும்
நடையருப் பெருந்துறவும் வாகீசப்
பெருந்தகைதன் ஞானப் பாடல்
தொடையருச் செவ்வாயும் சிவவேடப்
பொலிவழகும் துதித்து வாழ்வாம்"

எனவே, இந்நிலையிலும் அவ்வாசிரியர் பெருந் தகையார் நம் போலிகளுமுய்யுமாறு சிற்சில நகைச்சுவையுடைய திருப்பாடல்களைப் பாடி யுள்ளனர். அவற்றுள் சிலவற்றை மட்டும் ஈண்டுக் காட்டுவோம்.

## அற்புதம் 1

சிவபெருமானும் உமா தேவியாரும் ஏகாந்த மாக இருந்த காலத்துப் பிருங்கி முனிவர் சக்தியை நீக்கிச் சிவத்தை மட்டும் வலம் வந்து வணங்கினர். உமை சினந்து அவர் தம் சக்தியை இழுத்துவிட்டார். அப்போது அவர் எலும்பு வடிவத்துடன் கீழே விழ இருந்த காலை அவருக்குச் சிவன் மூன்ருவது காலைக் கொடுத்து நிற்குமாறு அருள்புரிந்தார். உடனே அம்மையும் சிவனைவிட்டு நீங்கித் திருக்கேதாரம் சென்று பரமனைக் குறித்துத் தவம் கிடந்தாள். இறைவனைப் பிரியாத நிலையில் ஒரே வடிவில் இருக்கும் பேறு பெற்ருள். (இதுவே உலகப் பிரசித்திபெற்ற கேதார கௌரி விரதம் எனும் தீபாவளிப் பெருநோன்பு) அங்ஙனம் தன் உடம்பைக் கூறிட்டுக்கொடுத்த காலை தன் நெற்றிக் கண்ணிலும் பாதி கொடுத்துவிட்டான். அதனுல் அவனுக்கு முக்கண்ணன் என்ற பெயர் மாறி ஒன்றரைக் கண்ணன் என்று கூறும் நிலை ஏற்பட்டதாக அப்பர் சுவை ததும் பக் கூறுகின்ருர்.

" இன்றரைக் கண்ணுடையார் எங்கும்
இல்லை இமயம் என்னும்
குன்றரைக் கண்ணன் குலமகட்
பாவைக்குக் கூறிட்ட நாள்
அன்றரைக் கண்ணும் கொடுத்துமை
யாளையும் பாகம் வைத்த
ஒன்றரைக் கண்ணன் கண்டீர்
ஒற்றியூர் உறை உத்தமனே"

## அற்புதம் 2.

சிவபெருமான் திருமேனியில் பல பாம்பு களை அணிந்துள்ளார். அவன் சடாபாரத்தில் பிறைச் சந்திரன் விளங்குகின்ருன். அவன் பக்கத்தில் மயில் போன்ற சாயலையுடைய உமையம்மையார் ஒரு புறம் அமர்ந்துள்ளார் கள். அம்மை சிவபெருமான் திருமேனியி லுள்ள பாம்பைக் கண்டு சிறிது அஞ்ச, அப் பாம்பும் அம்மையாரை மயில் என்றெண்ணி நடுங்க, அப்பாம்பைக் கண்டு சடையிலுள்ள சந்திரன் கலக்கம் எய்த இச்செயல்களைக் கண்டு சிரிப்பதுபோல இறைவன் அணிந் துள்ள தலை மாலைகள் தோன்றுகின்றன. இக் கருந்து அமைந்த பாடலைக் காண்போம்.

கிடந்தபாம் பருகுகண் டரிவை பேதுறக்
கிடந்தபாம் பவளை யோர் மயிலென்
றையுறக்
கிடந்துநீர்ச் சடைமிசைப் பிறையும்
ஏங்கவே
கிடந்துதான் நகுதலைக் கெடில
வாணரே

## அற்புதம் 3.

கங்கை உலகையழிக்கும் எண்ணத்தோடு ஆகாயத்திலிருந்து நிலவுலகத்துக்கு வந்தாள். இதனைக் கண்டு நடுங்கினர் மக்கள். இதன் வேகத்தைத் தடுத்து உலகைக் காக்கும் ஆற்றல் ஈசன் ஒருவனுக்கே உண்டு என்பதை உணர்ந்தனர். சிவனும் உலகைக் காக்க வேண்டித் தன்கருணையினால் அதன் கர்வத்தை அடக்கிச் சடையில் தரித்தருளினன். இதனால் இறைவனுக்குக் கங்காதரன் என்று ஒரு பெயர் உண்டு. உமையம்மை இதனைக் கண்டாற் கோபிப்பாள் என்றும், அதற்காக அப்பர் சுவாமிகள் சிவபெருமானுக்கு ஓர் எச்சரிக்கை செய்வது போலவும் அமைந்துள்ள இப்பாடலைப் படித்து இன்புறுவோமாக !

வங்க மலிகடல் நாகைக்
காரோணத்தெம் வானவனே
எங்கள் பெருமான்ஓர் விண்ணப்பம்
உண்டது கேட்டருளாய்
கங்கை சடையுள் கரந்தாய்
அக் கள்ளத்தை மெள்ளஉமை
நங்கை அறியிற் பொல்லாது
கண்டாய் எங்கள் நாயகனே

## அற்புதம் 4.

ஒரு நற்றாய் தன் பருவப் பெண் இறைவனிடத்தே காதல் கொண்டு, அவனால் ஆட்கொள்ளப்படுவதையும், அதன் அடையாளமாக அவன் மணமாலை தன் பெண் கழுத்தில் இருப்பதையும், அவன் தலையிலுள்ள கண்ணியும் தன் பெண்மீது இருப்பதையும் கண்டு பிற பெண்களைப் பார்த்து ஆச்சரியத்துடன் சொல்லுகின்றாள். “பெண்களே ! சிவன் மணமாலை என் பெண் கழுத்தில் எப்படி வந்தது ? தன் மனைவியாகிய உமை அதனைக் கழற்றிய பின் வேறொரு பெண்ணுக்குச் சூட்டினால் பொறுப்பாளா ? மேலும் சிவன் முடியிலுள்ள கண்ணியும் என் பெண்ணிடம் வந்துள்ளது. இதனைச் சிவன் நீக்கி இவளுக்குக் கொடுத்தால் அதனைக் கங்கை சும்மா விடுவாளா ? ஆனால் இவ்விரண்டும் என் பெண்ணிடம் உள்ளனவே ! இவை எப்படி வந்தன ? எங்காவது வேறு கடையில் வாங்கி இவளுக்குக் கொடுப்பாரோ ? வியப்பாக இருக்கின்றதே ! என்றாள் தாய். இக் கருத்தடங்கிய பாடலைப் படித்து அனுபவிப்போமாக !

“ மங்கை காணக் கொடார்மண
மாலையைக்
கங்கை காணக் கொடார்முடிக் கண்ணியை
நங்கை மீர்இடை மருதர்இந் நங்கைக்கே
எங்கு வாங்கிக் கொடுத்தார் இதழியே”

விரிவஞ்சி இதனுடன் அமைகின்றேன்.

* * *



உ

நம்பியாண்டார்நம்பிகள் அருளிய

# திருநாவுக்கரசுதேவர்

# திருவேகாதசமாலை



புலனொ டாடித் திரிம னத்தவர்
பொறிசெய் காமத் துரிசடக்கிய
புனித நேசத் தொடுத மக்கையர்
புணர்வி னாலுற் றுரைசெ யக்குடர்
சுலவு சூலைப் பிணிகெ டுத்தொளிர்
சுடுவெணீறிட் டமண கற்றிய
துணிவி னுன்முப் புரமெரித்தவர்
சுழலி லேபட் டிடுத வத்தினர்
உலகின் மாயப் பிறவி யைத்தரும்
உணர்வி லாவப் பெரும யக்கினை
ஒழிய வாய்மைக் கவிதை யிற்பல
உபரி பாகப் பொருள்ப ரப்பிய
அலகின் ஞானக் கடலி டைப்படும்
அமிர்த யோகச் சிவவொ ளிப்புக
அடிய ரேமுக் கருளி னைச்செயும்
அரைய தேவத் திருவ டிக்களே. 1

திருநாவுக் கரசடி யவர்நாடற் கதிநிதி
தெளிதேனொத் தினியசொல் மடவார் ஊர்ப் பசிமுதல்
வருவானத் தரிவையர் நடமாடிச் சிலசில
வசியாகச் சொலுமவை துகளாகக் கருதி மெய்
உருஞானத் திரள்மனம் உருகாநெக் கழுதுகண்
உழவாரப் படைகையி லுடையான்வைத் தனதமிழ்
குருவாகக் கொடுசிவன் அடிசூடத் திரிபவர்
குறுகார்புக் கிடர்படு குடர்யோனிக்கு ழியிலே 2

குழிந்து சுழிபெறுநா பியின்கொண் மயிர்நிரை யார்
குரும்பை முலையிடையே செலுந்தகைநன் மடவார்
அழிந்த பொசியதிலே கிடந்திரவு பகல்நீ
அனைந்தயரு மதுநீ யறிந்திலை கொல்மனமே
கழிந்த கழிகிடுநா ளினங்கிதயம் நெகவே
கசிந்திதய மெழுநா றரும்பதிக நிதியே
பொழிந்தருளு திருநா வினெங்களர சினையே
புரிந்துநினை யிதுவே மருந்துபிறி திலையே. 3

இலைமா டென்றிடர் பரியா ரிந்திர
னேயொத் துறுகுறை வற்றாலும்
நிலையா திச்செல்வ மெனவே கருதுவர்
நீள்சன் மக்கடல் இடையிற்புக்
கலையார் சென்றரன் நெறியா குங்கரை
அண்ணப் பெறுவர்கள் வண்ணத்தின்
சிலைமா டந்திகழ் புகழ்ஆ மூருறை
திருநாவுக்கர சென்போரே. 4

என்பட் டிக்கட்டிய இந்தப்பைக் குரம்பையை
இங்கிட்டுச் சுட்டபின் எங்குத்தைக் குச் செலும்இது
முன்பிட்டுச் சுட்டிவ ருந்திக் கெத்திக்கென
மொய்ம்புற்றுக் கற்றறிவின்றிக்கெட் டுச்சில
வன்பட்டிப் பிட்டர்கள் துன்புற்றுப் புத்தியை
வஞ்சித்துக் கத்திவி ழுந்தெச்சுத் தட்டுவர்
அன்பர்க்குப் பற்றிலர் சென்றர்ச்சிக் கின்றிலர்
அந்தக்குக் கிக்கிரை சிந்தித்துப் பித்தரே. 5

பித்தரசு பதையாத கொத்தைநிலை யுளதேவு
பெட்டியுரை செய்துசோறு சுட்டியுழல் சமண் வாயர்
கைத்தரசு பதையாத சித்தமொடு சிவபூசை
கற்றமதி யினன்ஓசை இத்தரசு புகழ்ஞால
முத்திபெறு திருவாள னெற்றுணையின்மித வாமல்
கற்றுணையில் வருமாதி
பத்தரசு வசைதீர வைத்ததன தமிழ்மாலை
பற்பலவு மவையோத நற்பதிக நிதிதானே. 6

பதிகமே ழெழுநூறு பகருமா கவியோகி
பரசுநா வரசான பரமகா ரணவீசன்

அதிகைமா நகர்மேவி அருளினுல் அமண்மூடர்
அவர்செய்வா தைகள்தீரும் அனகன்வார்
கழல்சூடின்

நிதியரா குவர்சீர்மை யுடையரா குவர்வாய்மை
நெறியரா குவர்பாவம் வெறியரா குவர்சால

மதியரா குவர்ஈசன் அடியரா குவர்வான
முடையரா குவர்பாரின் மனிதரா னவர்தாமே.7

தாமரைநகு மகவிதழ் தகுவன
சாய்பெறுசிறு தளிரிணே யணையன

சார்தருமடி யவரிடர் தடிவன
தாயினும்நல கருணையை யுடையயன

தூமதியிணே யொருபது கொடுசெய்த
சோதியின்மிகு கதிரிணே யுடையன

தூயனதவ முனிவர்கள் தொழுவன
தோமறுகுண நிலேயின தலேயின

ஓமரசிணே மறைகளின் முடிவுகள்
ஓலிடுபரி சொடுதொடர் வரியன

ஓவறு முணர் வொடுசிவ ஒளியணே
ஊறியகசி வொடுகவி செய்தபுக

ழாமரசுய ரகநெகு மவருள
ஞரரசதி கையின்அர னருளவ

ஞமரசுகொ ளரசெணே வழிமுழு
தாளரசுதன் அடியிணே மலர்களே. 8

அடிநாயைச் சிவிகைத் தவிசேறித் திரிவித்
தறியாவப் பசுதைச் சிறியோர்பாற் செறியுங்

கொடியோனுக் கருளைத் திருநாவுக் கரசைக்
குணமேருத் தணேவிட் டெணேயாமொட்
டகல்விற்

பிடியாரப் பெறுதற் கரிதாகச் சொலும்அப்
பிணநூலைப் பெருகப் பொருளாகக் கருதுஞ்

செடிகாயத் துறிகைச் சமண்மூடர்க் கிழவுற்
றதுதேவர்க் கரிதச் சிவலோகக் கதியே. 9

சிவசம்பத் திடைத் தவஞ்செய்து
திரியும் பத்தியிற் சிறந்தவர்

திலகன் கற்றசிட் டன்வெந்தொளிர்
திகழும் பைம்பொடித் தவண்டணி

கவசம் புக்குவைத் தரன்கழல்
கருதுஞ் சித்தனிற் கவன்றிய

கரணங் கட்டுதற் கடுத்துள
களகம் புக்கநற் கவந்தியன்

அவசம் புத்தியிற் கசிந்துகொ
டழுகண் டத்துவைத் தளித்தனன்

அனகன்குற் றமற்ற பண்டிதன்
அரசெங்கட் கொர்பற்று வந்தறு

பவசங் கைப்பதைப் பரஞ்சுடர்
படிறின் றித்தணேத் தொடர்ந்தவர்

பசுபந் தத்திணேப் பரிந்தடு
பரிசொன் றப்பணிக்கு நன்றுமே. 10

நன்று மாதர நாவினுக் கரைசடி
நளினம்வைத் துயின் அல்லால்

ஒன்று மாவது கண்டிலம் உபாயம்மற்
றுள்ளன வேண்டோமால்

என்று மாதியும் அந்தமும் இல்லதோர்
இகபரத் திடைப்பட்டுப்

பொன்று வார்புகுஞ் சூழலிற்புகேம்
புகிற்பொறியில்ஐம் புலனுேடே. 11

திருச்சிற்றம்பலம்.



உற்ருன் அலன்தவம் தீயில்நின் ருன்அலன் ஊண்புனலா
அற்ருன் அலன்நுகர் வும்திரு நாவுக் கரசெனும்ஓர்

சொற்ருன் எழுதியும் கூறியு மேஎன்றும் துன்பில்பதம்
பெற்ருன் ஒருநம்பி அப்பூதி என்னும் பெருந்தகையே

—சிவப்பிரகாச சுவாமிகள்,

# ஆளுடைய அரசும் அறநெறியும்

பேராசிரியர் திரு. பூ. ஆலாலசுந்தரனுர், M.A., தாம்பரம்.

சைவசமய குரவர் நால்வருள் அப்பர் பல ஆண்டுகள் வாழ்ந்தமையின் அனுபவம் நிரம்பப் பெற்றவராய் விளங்கினர். "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்ற திருமூலர் வாக்கிற்கு ஏற்பத் திருநாவுக்கரசர் நாம் நல்ல முறையில் வாழவேண்டும் என்ற கருத்தோடு நமக்குப்பல அறவுரைகள் வழங்கியுள்ளார். அவர்பாடியுள்ள பாக்களுள் நான்காம் திருமுறை கவிச்சுவை நிரம்பிய பாக்களாகவும், ஐந்தாம் திருமுறை அறவுரைப் பகுதியாகவும் அமைந்துள்ளன. ஆறும் திருமுறையில் இறைவன் தன்மை, அவர் ஆன்மாக்களுக்கு அருளும்வகை, வரலாறு முதலியன கூறப்பட்டுள்ளன. மக்கள் உய்யும் வண்ணம் திருநாவுக்கரசர் திருவாய் மலர்ந்தருளிய திருப்பாடல்களில் காணப் படும் அறவுரைப் பகுதிகளை இனி ஆராய்வோம்.

மானிடப் பிறவி பெறுதற்கரிய பிறவியாகும் என்பதை அப்பர் நமக்கு எடுத்து விளக்கியுள்ளார். இதனை,

வாய்த்தது நந்தமக் கீதோர் பிறவி மதித் [திடுமின்
பார்த்தற்குப் பாசு பதமருள் செய்தவன் [பத்தருள்ளீர்
கோத்தன்று முப்புரந் தீவளைத் தான்தில்லை [யம்பலத்துக்
கூத்தனுக் காட்பட் டிருப்பதன் றேநந்தங் [கூழைமையே

என்ற திருவிருத்தத்தால் அறியலாம். மானிடப் பிறவியின் பெருமையை விளக்கப் போந்த தொல்காப்பியனுர்,

"மக்கள் தாமே ஆறறி வுயிரே"
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே
(தொல்-மரபியல்-33)

எனக் கூறியுள்ளர். ஐம்புலன்களால் அறியும் ஐந்து அறிவுடன் பகுத்தறிவும் சேர்ந்து மனிதன் ஆறறிவு படைத்துள்ளமையின் மானிடப் பிறவி சிறந்தது என்க. இது நல்லது இது கெட்டது என அறியும் பகுத்தறிவினை மனிதன் பெற்றுள்ளான். இவ்வாறு மிக அருமையான மானிடப் பிறவி பெற்றதன் பயன் இறைவனை மனமொழி மெய்களான் வணங்குவதேயாகும். இதனை உணராது பலர் யான் என்னும் அகப்பற்றும் எனது என்ற புறப்பற்றும் மிக்கவராய் இறைவனை வழுத்தாது தம் வாணுளை வீணுகக் கழிக்கின்றனர். பெறுதற்கரிய மானிடப் பிறவியைப் பெற்றும் இறைவனடி சேர வேண்டும் என்ற எண்ணமில்லாமல் வீணுகக் காலம் கழிக்கும் மக்களைக் கண்டு இரங்குகின்ருர் திருமூலர். இதனைக் கீழ்க்காணும் திருமந்திரம் வலியுறுத்துதல் காண்க.

பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும்
பெறுதற் கரிய பிரானடி சேரார்
பெறுதற் கரிய பிராணிகள் எல்லாம்
பெறுதற்கரியதோர் பேறிழந் தாரே.
(திருமந்திரம் 2090)

திருநாவுக்கரசர் தமது பாக்களில் யாக்கை நிலையாமை இளமை நிலையாமை செல்வநிலையாமை போன்றவைகளை நமக்கு எடுத்துக்காட்டி, இறைவன் திருவடிகளை அடைவதையே நம் வாழ்க்கையின் குறிக்கோளாக நாம் கொள்ளுதல் வேண்டும் என்பதனையும் வற்புறுத்தியுள்ளார். பலர், சமயம் வேறு வாழ்க்கை வேறு எனக்கருதுகின்றனர். சமய சின்னங்களை அணிந்து கொண்டு சமய உண்மைகளுக்குப் புறம்பாய் வாழ்க்கையை நடத்திவருகின்றனர். சமயநூல்களில் கூறப்படும் உண்மைகளை வாழ்க்கையில் கடைப்பிடித்து ஒழுகுதல் வேண்டும். எடுத்துக்காட்டாகத் தெருவில் குருடன் ஒருவன் பிச்சையெடுத்துச் செல்கின்றான் என வைத்துக் கொள்வோம். அவனைக் கண்டவுடன் அவனது வருந்தத் தக்க நிலைக்கு மனமிரங்கி நாம் நம்மால் இயன்ற பொருளுதவி புரிந்து அவனைக் காப்பாற்ற வேண்டும். உள்ளத்தில் அன்பு அற்றவர் சைவர் எனக் கருதப்படார். ஏனெனில் அன்பே சிவம் என்பது சைவத்தின் அடிப்படையான கொள்கையாகும். இக்கருத்தினை,

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே.
(திருமந்திரம்-270)

என்ற திருமந்திரம் காண்க.

இறைவன் நமது பேச்சிலும் மூச்சிலும் உள்ளத்திலும் இடம் பெற்றுள்ளான். இக்கருத்தினைக் கூறவந்த திருநாவுக்கரசர்,

என்னிலாரும் எனக்கினி யாரில்லை
என்னி னும் இனி யானொரு வன்னுளன்
என்னு ளேஉயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்கு
என்னு ளேநிற்கும் இன்னம்பர் [ஈசனே

எனப்பாடியுள்ளார். இறைவன் நம் உள்ளத்தில் இடம் பெறுவதால் நாம் பிறரிடத்து அன்பு செலுத்துவது இறைவனிடத்தில் அன்பு செலுத்துவதற்கு ஒப்பாகும். இக்கருத்தினைத் திருமூலர்,

படமாடக் கோயில் பகவற் கொன் றியில்
நடமாடக் கோயில் நம்பர்க்கங் காகா
நடமாடக் கோயில் நம்பர்க் கொன் றியில்
படமாடக் கோயில் பகவற்க தாமே.
(திருமந்திரம் 1857)

என்ற பாட்டில் கூறியுள்ளார்.

பலர் பொய் பல பேசிச் செல்வத்தை ஈட்டுவதில் காலம் கழிக்கின்றனர். செல்வம் நிலையற்றது என்பதை அன்னார் உணர்ந்தாரில்லை. மேலும் செல்வம் ஈட்டும் போது பழி பாபத்திற்கு அஞ்சி நல்லவழியில் பொருள் தேடவேண்டும்.

பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல்
(திருக்குறள்-44)

என்ற திருக்குறளின்படி ஒருவன் பழி பாவத்திற்கு அஞ்சிப் பொருள் ஈட்டித் தானும் உண்டு பிறர்க்கும் கொடுத்து வாழ்வானுகில் அவன் குடும்பக் கால்வழி என்றும் நிலைத்திருக்கும். இந்தத் திருக்குறளுக்கு விளக்கவுரையெழுதப் போந்த பரிமேலழகர் "பாவத்தான் வந்த பிறன் பொருளைப் பகுத்து உண்ணின் அறம் பொருளுடையார் மேலும், பாவம் தன் மேலுமாய் நின்று வழி எஞ்சுமாகலின் 'பழிஅஞ்சி' என்றார். வாழ்வானது உடைமை வாழ்க்கைமேல் ஏற்றபட்டது" எனக் கூறியுள்ளது ஈண்டுச் சிந்திக்கத் தக்கது. எனவே பொருளை நல்வழியில் ஈட்டவேண்டும் என்பது பெறப்படு

கின்றது. மேலும் எவ்வளவு பொருள்தான் நம்மிட மிருப்பினும் நாம் இறக்கும் போது அவை நம்முடன்வாரா. எனவே பொருள் ஈட்டுவதில் மட்டும் காலம் செலுத்தாமல் செல்வநிலையாமையினையும் யாக்கை நிலையாமையினையும் உணர்ந்து நாம் பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பி இறைவனை மன மொழி மெய்களான் இறைஞ்சி வாழ வேண்டும். இதனைக் கீழ்க்கண்ட திருக் குறுந் தொகை விளக்குதல் காண்க.

மாட்டைத்தேடி மகிழ்ந்து நீர் நும்முளே
நாட்டுப் பொய்யெலாம் பேசிடும் நாணிலீர்
கூட்டை விட்டுயிர் போவதன் முன்னமே
காட்டுப் பள்ளியு ளான் கழல் சேர்மினே.
(திருக்காட்டுப்பள்ளி-திருக்குறுந்தொகை)

இதுகாறும் கூறியவற்றல், மானிடப் பிறவி பெறுதற்கரிது என்பதும், மக்கள் ஆறறிவுடையோர் என்பதும், சமய உண்மைகளை வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டும் என்பதும், அடியவரிடத்து அன்புவைத்தல் இறைவனிடம் அன்பு செலுத்துவதற்கு ஒப்பாகும் என்பதும், செல்வநிலையாமை, யாக்கை நிலையாமை முதலியவைகளை உணர்ந்து செல்வம் ஈட்டுவதில் மட்டும் காலத்தைக் கழித்து விடாமல், அறவழியில் பொருள் ஈட்டிப் பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பி இறைவனை மனமொழி மெய்களான் இறைஞ்சி வீடுபெற விழைதல் வேண்டும் என்பதும் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளன. இதன் விரிவினை நாம் திருநாவுக்கரசர் திருவாய் மலர்ந்தருளிய தேவாரத்தில் கற்று, கற்றவண்ணம் நிற்போமாக. இறைவன் திருவருள் கூட்டுவதாக.

---

திருநீற்றை மெய்யமுத்தி அஞ்செ ழுத்தை
நெஞ்சமுழுத்திச் சிலைக்கை மாரன்
உருநீற்றும் பெருமானை யுறவழுத்திச்
சமணர்எனும் ஒன்னுர் மூட்டும்
பொருநீற்றுக் குடவறையும் கடகரியும்
விடஅரவும் புறங்கண் டாழிக்
கருநீத்தங் கடப்பஓரு கற்றுணி
யுகைத்தானைக் கருத்துள் வைப்பாம்.

—திருக்குற்றுலப் புராணம்.

# அப்பர் மன்மாற்றம்

பேராசிரியர் திரு. தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர், M.A ,B.L.,M.O.L.,
அண்ணுமலைப் பல்கலைக்கழகம்

அப்பருடைய வரலாற்றை எல்லோரும் அறிவார்கள். பலநாள் சமணராக வாழ்ந்து, பின் சூலைநோயில் வாடிய இவர், சைவராய பின் அந்தநோய் தீரப்பெற்ருர் என்று அறிகிறேம். சமணத்திற்கும் சைவத்திற்கும் உள்ள ஏற்றத் தாழ்வுகளை ஆராய்வது இருபதாம் நூற்ருண்டு வரவேற்கும் சமுதாய உலகிற்கு உகந்ததாகாது. இன்று பரவியுள்ள கருத்துலகில் நின்று காணும்போது என்ன தோன்றுகிறது என்றே ஆராய்தல் வேண்டும்.

சில நோய்கள் — கடுமையான கொடுமையான நோய்கள் — மருந்தில்லாமலே தீர்கின்றன. வயிற்றுநோய் அத்தகைய நோய்களில் ஒன்று. அப்போது அந்தநோய் மனக் கோளாருல் வந்ததாக இருத்தல் வேண்டும். மனத்தெழுந்த போராட்டமே இங்கே நோய்க்குக் காரணமாக நிற்கும். மனத்தின் அடிப்படை அகப்போக்கிற்கும் வாழ்வில் மேற்கொண்ட புறப்போக்கிற்கும் எழுகின்ற போராட்டத்தை ஓர் உதாரணமாகக் குறிப்பிடலாம். மனப் போராட்டம் அடிமனத்தில் அன்றிப் பொதுவாக மனம் என்று கூறும் மேனிலை மனத்தில் தோன்ருமையால் இதனை நோயாளியும் அறிவதில்லை.

இந்தக் கண்கொண்டு காணும்போது அப்பரைப்பற்றி ஒருவிளக்கம் தோன்றுகிறது. உலகில் இருவகை மனநிலைகள் உண்டு. ஒன்று தனி நின்று உலகமுழுவதையும் எதிர்த்து வெற்றிபெறும் வன்பு மனநிலை. ஆனுல் மற்றென்றே, அவ்வாறு தனி நிற்க மாட்டாமல் பிறரொடு கூடிக்குலாவி ஏதேனும் ஒன்றினைப் பற்றிக்கொண்டு வாழும் அன்பு மனநிலை, வன்பு மனநிலையிலும் பிறரொடு வாழும் காட்சி தோன்றலாம்; பிறருக்காகத் தன்வாழ்வைத் தருகின்ற காட்சியும் தோன்றலாம். ஆனுல் அங்கும் பிறரது துன்பத்தைத் துடைப்பதில் தனிநின்று வெற்றி காண்பதே உண்டு. அன்பு மனநிலையிலும் தனிநிற்கும் புறக்காட்சி தோன்றலாம். நெகிழ்ந்து கசிந்த அன்பால், உலகம் உண்மையை உணராது எதிர்க்கும் போதும், உலகத்திற்குத்தனி நின்று போராடி உழைக்கும் காட்சி தோன்றும். தந்தை நிலை, தாய்நிலை, அல்லது ஆண்நிலை பெண்நிலை என இவற்றைப் பொதுவாகக் கூறி அறிய முற்படலாம். தன்னில்தான் தனி நிற்றல் ஒன்று. தனக்கும் புறமான அப்பாற்பட்ட ஒன்றைப் பற்றி நிற்றல் மற்றென்று. கொழு கொம்பு தேடாது தானே பிறவற்றிற்குக் கொழுகொம்பாகும் மரநிலை ஒன்று, கொழு கொம்பு தேடும் கொடிநிலை ஒன்று.

அப்பருடைய இயற்கை மனநிலை இரண்டாம் மனநிலை, கடவுள் நம்பிக்கை இயல்பாக மலரும் மனநிலை. ஆனுல் சூழ்நிலையோ கடவுளை நம்பமுடியாதபடி மேனிலை மனத்தை உருவாக்கியது. இளமையிலேயே தாயையும் தந்தையையும் இழந்தார்; தமக்கையை மணக்க இருந்தவர் நாட்டிற்காக உயிரைத் துறந்தார்; தமக்கையரும் உயிர் மாய்க்கத் துணிந்தார். இச்சூழ்நிலையைக் கண்டு கலங்கிய இவர் மனம் — கொழுகொம்பு நாடும் பிஞ்சு மனம் ஒடியும் என, அவ்வம்மையார் இவருக்கெனவே உயிர்வாழ்ந்தார். இந்தத் துன்ப உலகின் உண்மையை அறிய அந்நாளைய கல்வி எல்லாம் கற்ருர் அப்பர். எண்ணி எண்ணிப் பார்த்தார். தமிழ் நாடு கலங்கி நின்ற காலம் அது. கடவுளையும் கடவுள் அருளையும் அருளுக்கு மாருன மருள் உலக வாழ்வு எவ்வாறு அவருக்குக் காட்டும்? துன்பம் அவருக்கு ஏட்டுச் சுரைக்காய் அன்று; தின்று அனுபவித்த பேய்ச்சுரைக்காய். எனவே செல்வ நிலையாமை, இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை என்ற இளமை அனுபவங்கள் அவரைத் துறவில் கொண்டு

தள்ளின. தமக்கையின் அன்போ பிறருக்கு அன்பு செய்ய வேண்டும் என்று இவரைத் தூண்டியது. இயல்பிலேயே நெகிழ்ந்த மன மன்றோ அவர் மனம்!

வருந்துவதே இயல்பானல் இதுவே ஒருண் மையைக் காட்டக் கண்டார் தவம் செய்வாரின் உயர்வு — அதற்கஞ்சுவாரின் தாழ்வு — இக் காட்சி சமய உலக உண்மை ஒன்றை எடுத்துக் காட்டியது. இந்தத் துன்ப உலகச் சூழ் நிலையைப் புறவகையால் எதிர்க்கமுடியாத சூழ் நிலையை — அகநிலையால் போராடி வெல்லுதல் வேண்டும். அங்கும் புறநிலையைப் பற்றிக் கொண்டு பயனில்லை. தன்னிற்றுனே தனி நின்று முயன்று, கட்டறுத்து உயர்நிலை யடைவது ஒன்றே உள்ளது. இது தான் கடவுள் நிலை. தன் உயர்வை அன்றிக் கடவுள் எனப் புறத்தே நம்புதற்கு ஒன்று இல்லை. இவ் வாறு நம்பி அவர் வாழ்வு ஓர் எதிர்மறைக் கோலத்தை மேற்கொண்டது. சைனமதமே அவருக்கு இந்தநிலையில் மிகமிகப் பொருத் தமாகத் தோன்றியது. ஆனுல் இவர் மனமோ நெகிழ்ந்து கசிந்தமனம். எனவே பிறர் துன்பம் துடைக்கும் அருள் வாழ்வும் புறஉல கிற்குத் தோலாத அகநோக்கின் வெற்றிக்கு வழியாகத் தோன்றியது. கொல்லாமையையே உயிர்நிலையாகக் கொண்டதன்றோ சமண சமயம் ? எனவே பற்றுக்கோடு விரும்பும் இவர் மனம் இத்தகைய சூழ்நிலையில் சமண மதத்தையே பற்றுக் கோடாகக் கொண்டது. இந்த உண்மையை — மனநிலை வளர்ச்சியை விளக்குதலில் வல்ல சேக்கிழாரும் சுட்டுகிருர்.

சமண மதத்தலைவர் ஆயினர். ஆனுல், அருள்கனிந்த நெஞ்சம் பிறர் துன்பத்தை நீக்க முடியாதபோது அவர் அலமந்திருத்தல் வேண்டும். இதுதான் உலகம் என மனம் கசியாது. அருக நிலையை நோக்கி முயலும் வன்மை அவருடைய மென்மை மனத்தில் வளரவில்லை. அடியார்க்காக அவர் ஆண்ட வனிடம் செய்துகொள்ளும் வேண்டுகோள் இதனை வற்புறுத்தும். கடுந்துறவும் கடுந் தவமும் மேற்கொண்டார். சமணமதத்தைப் பற்றுக்கோடாகப் பற்றியது. அவருடைய மனம் போக்கிற்கு ஏற்ற பற்ருகத் தோன்றவில்லை. சமணராக வாழ்ந்த வாழ்வு அவ்வாறு வாழ்ந்த காலத்தும் அவர் அடிமனத்தோடு ஒன்றவில்லை. பின், அவர் சமணத்தை இகழ்ந்துபாடும் பாடல்களால் இந்த நிலை நன்கு விளங்கும். சமணமதத்தின் இழிவென அவர்பாடுவன இவர் மனநிலையோடு பொருந்தாத நிலைகள் என்றே இங்கே நாம் பொருள் கொள்ளவேண்டும். பிறமதங்களிற் போலச் சமணமத நடை முறையிலும் சிலகுற்றம் குறைகள் இருந்திருக் கலாம். அவை அல்ல இங்கு நாம் ஆராய வேண்டியவை. அமண்கோலம் கொள்ளும் கடுந்துறவும் இவர் மனத்தை வாட்டியது. ‘பெண்கள் கதவடைப்பது’ தம்மால் பெண்கள் படும்பாடாகத் தோன்றியது. ஏன் பெண்களை வாட்டவேண்டும் என்ற எண்ணம் இவர் அடி மனத்தே எழுந்தது போலும். அமண் கோலத்திற்கு மாருகப் பாயிடுக்கி உடல் மறைக்க இவருக்குத் தோன்றியது போலும். இவ்வாறு சமணமதத்தினைப் பற்றி அவர் கூறும் பாடல்கள் கொண்டு இவர் மனத்தை ஆராய்தல் வேண்டும்.

உடலை வாட்டலும் மனப் போராட்டமும் சூலை நோயாக முற்றின. இவர் பட்டபாட்டை இவரே உலகம் மறக்கமுடியாத பாட்டாகப் பாடியுள்ளார். நோயோ உண்மைநோய். அது தீர வழியில்லை. சமண வாழ்வு அதனை வளர்க்கவே தொடங்கியது. அந்தநிலையில் தமக்கையின் நினைவு இவருக்கு வந்தது என்கிருர் சேக்கிழார். அதுதானே மனித இயல்பு.

எம்மை யாரிலை யானு முளேனலேன்
எம்மை யாரும் இதுசெய வல்லரே
அம்மை யார்எனக் கென்றென் றரற்றினேற்கு
அம்மையாரைத் தந்தார் ஆரூர் ஐயரே.

என்பது அப்பர் பாடல். எல்லாம் கற்று உலகத்தலைமையேற்று வாழ்கிற தாம் மன அமைதியும் பெறவில்லை; உடல் நலமும் பெற வில்லை. தம்மோடு எல்லாம் இழந்த தமக்கையாள் திக்கற்ற பெண்ணுக இருந்தும் மன அமைதியோடு வாழும் காட்சி அவர் மனத்தே தோன்றி இருப்பது வியப் பன்று. அவ்வம்மையார் நம்பியது நமக்கும் அப்பாற்பட்ட சிவம். இந்த உண்மையை உணர்ந்ததும் அச் சிவத்தைக் கைப்பற்றினர். திருநீறு பூசினர். தம்மையே பற்றுவதனை விட்டுத் தமக்கும் அப்பாற்பட்ட ஒன்றினைப் பற்றினர். தம் அடிமனம் விரும்பிய பற்றுக்கோடு கிடைத்ததும் மனக்கோளாறு

தீர்ந்தது; சூலைநோயும் மாயமாய் மறைந் தோடியது. "அறுகயிறா சலானேன்" என்பர் அப்பர்.

தயாமூல தன்மம் சிவமாக விளங்கியது. கொல்லாமை வாழ்வு சிவனருளின் மலர்ச்சியாம் தொண்டு வாழ்வாயிற்று. எனவே மனமன்றி வேறென்றும் இங்கு மாறவில்லை; சிவமன்றி வேறென்றுமில்லை. ஆதலின் முன் தாம் செய்தன எல்லாம் அந்த வகையில் சிவத் தொண்டாகக் கண்டார். "இரவும் பகலும் பிரியாது வணங்குவன் எப்பொழுதும்" "தமிழோடிசைபாடல் மறந்தறியேன்." "கருவுற்ற நாள் முதலாக உன்பாதமே காண் பதற்கு உருகிற்று என் உள்ளமும் நானும் கிடந்தலந்து எய்த்தொழிந்தேன்" என்று அவரே பாடுகின்றார்.

இங்கே கூறிய வற்றை அப்பர் பாடல் கொண்டு அறியலாம். தமிழ் நாட்டின் நல்ல காலம். திரு செங்கல்வராயபிள்ளை அவர்கள் 'தேவார ஒளி நெறி' என்ற தலை சிறந்த நூலில் அப்பரைப் பற்றிய வரலாறாக அவர் பாக்களில் நாம் அறிவனவற்றைத் தொகுத்துத் தந்துள் ளார். அப்பகுதியில் வரும் பாடல்களை இங்குக் கூறியவகையில் ஆராய்வது பெரும்பயனுடைய தாகும். அங்கே தொகுத்தவற்றை இங்கே திருப்பி எழுதிப் பயன் இல்லை.

இவ்வாறு விளக்கந் தருவதால் சிவ பெருமான் அருளையோ, அப்பர் வாழ்வின் அற்புதத்தையோ மறுத்ததாகாது. அவற்றை விளக்கியதே ஆம். ஆண்டவன் திருவிளை யாடல் என இவற்றை அப்பர் கண்டார். ஆண் டவன் அருள் இவ்வாறு பரந்து நிற்பதனைக் காணும் கண்ணை அப்பர் பெருமான் நமக்கும் தந்தருள்வாராக.

தூயவெண்ணீறு துதைந்தபொன் மேனியுந்
[தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவருஞ் சிந்தையும் நைந்
[துருகிப்
பாய்வது போலன்பு நீர் பொழி கண்ணும் பதிகச்
[செஞ்சொன்
மேயசெவ் வாயு முடையார் புகுந்தனர் வீதி
[யுள்ளே.
(பெ. திருநா. 140)

கையுந் தலைமிசை புனையஞ் சலியன கண்ணும்
[பொழிமழை யொழியாதே
பெய்யுந்தகையன கரணங் களுமுட னுருகும்
[பரிவின பேறெய்தும்
மெய்யுந்தரைமிசை விழுமுன் பெழுதரு மின்றாழ்
[சடையொடு நின்றாடும்
ஐயன் றிருநட மெதிர்கும் பிடுமவ ரார்வம்
[பெருகுத லளவின்றால்.
(பெ. திருநா 167)

மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாருந் திருவடிவு
[மதுர வாக்கிற்
சேர்வாகுந் திருவாயிற் றீந்தமிழின் மாலைகளுஞ்
[செம்பொற் றாளே
சார்வான திருமனமு முழவாரத் தனிப்படையுந்
[தாமு மாகிப்
பார்வாழத் திருவீதிப் பணி செய்து பணிந்தேத்திப்
[பரவிச் செல்வார்.
(பெ. திருநா. 223)

என்பவை அப்பர் சிவத்தைப் பற்றும் இயற்கை மனத்தை நாம் காணுமாறு செய் கின்றன. சேக்கிழாரது பாடலிற் காணும் செப்பிடுவித்தை இது.



# தம்பிக்கு வாழ்வளித்த தமக்கையர்

திரு. S. இராஜரத்தினம் அம்மையார், M.A.L.T.

தமிழ் ஆசிரியர், வில்லிங்டன் சீமாட்டியார் போதனமுறைக் கல்லூரி, சென்னை-5.

"உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே". உயர்ந்தோர் என்பவர் புகழுக்குரிய, செய்வதற்கரிய, செயல்களைச் செய்தவராவார். அப்படிப்பட்டவரை எக்காலத்தவரும் புகழ்வார். எனவே வள்ளுவப் பெருந்தகையும் "தோன்றிற் புகழோடு தோன்றுக" என்று கூறியுள்ளார்.

கல்வி, அறிவு, செல்வம் போலவே புகழும் ஒருவருடைய முயற்சியின் பயனாகத் தோன்றுவதாகும். அலெக்சாந்தர், சிவாஜி முதலியவருடைய புகழுக்குக் காரணமாக இருந்தது அவர்களுடைய அஞ்சாமையும் வீரமும். இவற்றை அம்மேன்மக்கள் அடையும் படியாக வாய்ப்பளித்தவர் அவர்களுடைய தாயாராவார். மகாத்மா காந்தியின் சத்திய நெறிக்கும், பக்தி மார்க்கத்துக்கும் அடிகோலியவர், அவருடைய வளர்ப்புத்தாயின் நிலையிலிருந்த 'இரம்பா', என்னும் பணிப்பெண் ஆவார். அல்லாத நெறியில் சென்ற 'வேமன்ன' என்ற ஆந்திரப் புலவரின் பக்தி மார்க்கத்திற்கு வழிகாட்டியவர் அவருடைய தமயனாரின் மனைவியாம். கூன் பாண்டியனைக் கொடிய நோயினின்றும் மீட்டு அவரைச் சைவ நெறியில் செலுத்தியவர் மங்கையர்க்கரசியார் என்ற பாண்டிமாதேவியாவார்.

பிறவியின் நோக்கத்தினைச் சற்றும் சிந்தித்து அறியாது உலக போகத்தில் மூழ்கி இருந்த அருணகிரி நாதரை நன்னெறிப் படுத்திய பெருமை அவரது சகோதரிக்கே உரியதாகும். இது போன்றே எத்தனையோ பெண்கள் ஆண்களை நல்வழிப்படுத்தியுள்ளார்கள்.

பகுத்தறிவு இருந்தும், கல்வி கேள்விகளால் உயர்ந்திருந்தும் சூழ்நிலையின் காரணமாகவும், மண், பொன், பெண் ஆசை காரணமாகவும் பலர் அல்வழிச் சேருதல் கண்கூடு. அச்சமயங்களில் அவர்களிடம் உரிமை பூண்ட தாயோ, சகோதரியோ, மனைவியோ அல்லது முதுக்குறைந்த மகளோ கூட (ஆண் மக்களைப் போலவே) தைரியமாக அவர்களை நல்லுரைகளாலும், அவசியமாயின் இடித்துரைத்தும் நல்வழிப்படுத்துதல் கடமையாகும். ஒரு பெண் சகோதரி என்ற நிலையிலிருந்து தனது சகோதரனை எவ்வாறு நல்வழிப்படுத்தினர் என்பது திருநாவுக்கரசர் அல்லது அப்பர் அடிகளின் சரித்திரத்திலிருந்து புலனாகின்றது.

தென்னாற்காடு ஜில்லாவிலுள்ள திருவாமூர் என்ற சிற்றூரில் வேளாள மரபில் வந்த புகழனாருக்கும், மாதினியாருக்கும் மகவாய்த் தோன்றினர் திலகவதியார் என்ற தையலார். அவர்பிறந்த சில ஆண்டுகளுக்குப் பிறகு மருள் நீக்கியார் என்ற திருநாவுக்கரசர் அவதாரஞ் செய்தார்.

திலகவதியார் தக்க பருவம் அடைந்த போது கலிப்பகையார் என்ற வீரருக்கு அவரைத் திருமணம் செய்து தருவதாகப் பெற்றோர் உறுதி செய்தார்கள். அப்போது பல்லவ நாட்டின் மீது பகைவர் படையெடுத்து வந்த காரணத்தால் திருமணம் நடக்கும் முன்பே கலிப்பகையார் போர்மேற் சென்றார்.

சிறிது காலத்திற்குப் பிறகு திலகவதியாரின் பெற்றோர்கள் உயிர் நீத்தனர். ஆகையால் திருவனைய திலகவதியார் தம்பியாகிய மருள்

நீக்கியாருடன் சுற்றத்தவரின் பாதுகாப்பில் இருந்து வந்தார். அவ்வமயம் வட புலத் திற்குப் போர் மேற் சென்ற கலிப்பகையார் போரில் உயிர் நீத்தார் என்ற செய்தியைத் திலகவதியார் செவிமடுத்தார். அதைக் கேட்டவர் திருமணமாகாத நிலையிலும், தாம் மனத்தினுல் வரித்திருந்த கலிப்பகையார் இறந்தவுடனே தாமும் உயிர் நீத்தற்கு உறுதி கொண்டார். அதை அறிந்த மருள் நீக்கியார் தமக்கையார் தம்மைப்பிரிய நினைத்தால் அவருக்கு முன்பே தான் இறந்து விடுவதாகக் கூறினுர். ஆகையால் அம்மையார் தன் தம்பியின்பொருட்டுத் தம்முடைய எண்ணத்தை மாற்றிக்கொண்டு உயிர்வாழத் தீர்மானித்தார். இதனையே சேக்கிழார் பெருமான்,

" தம்பியார் உளராக வேண்டுமென வைத்ததயா
உம்பருல கணையவுறு நிலை விலக்க உயிர்தாங்கி
அம்பொன்மணி நூல்தாங்கா தனைத்துயிர்க்கும் [அருள்தாங்கி
இம்பர்மனைத் தவம்புரிந்து திலகவதியாரிருந்தார்"

என்று கூறியுள்ளார்.

தொடர்புள்ளார் மாட்டுக் கொள்வது அன்பு, தொடர்பற்றுர் மாட்டும் காட்டுவது தான் அருள். திலகவதியார் தன் தம்பியிடம் அன்பும், அவர் உலகத்தவருக்கு வழிகாட்டியாக வாழ வேண்டுமென்ற நினைவோடு உயிர் தாங்கி இருந்ததால் உலகோரிடம் அருளும் கொண்டு வாழ்ந்தார் என்பதனையே சேக்கிழார் அடிகள் 'அருள்தாங்கி' என்று குறிப்பாக உணர்த்தியுள்ளார்.

அவ்வாறு மங்கல நூல் தாங்காது இருந்தும் மணமாகு முன்பே தான் விரும்பிய மணமகனை இழந்ததால் கைம்மைக் கோலத்துடனேயே அவர் வாழ்ந்தார். தமது தம்பியையும் கல்வி கேள்விகளில் சிறந்தவராகப் பயிற்றுவித்தார். பிறகு அவர் கெடில நதிக் கரையிலுள்ள திருவதிகை நகரில் குடியேறினுர். அங்கே வீரட்டானேஸ்வரருடைய ஆலயத்திற்குச் சென்று நாள்தோறும் கைத்தொண்டு செய்து வந்தார். அதாவது காலையில் எழுந்து கோவிலைக் கூட்டி, சாணம் தெளித்துச் சுத்தம் செய்து கோலம் போட்டு, பிறகு பெருமானுக்கு வேண்டிய பூமாலை புனைந்து திருத்தொண்டு செய்து வந்தார்.

அவ்வமயம் ஊழ்வினையின் காரணமாக மருள்நீக்கியார் சமண சமயத்தில் பற்றுள்ள வராகிப் பாடலிபுரத்தில் பரவியிருந்த அமண சமயத்தைத் தழுவினுர். அச்சமண சமய நூல்களைப் பயின்று வல்லவராகி 'தருமசேனர்', என்ற சிறந்த பட்டத்தையும் சமணர்களிடம் பெற்றுர். திலகவதியார் இதைச் சிறிதும் விரும்பவில்லை. எனவே அவர் தாம் பிறந்த சமயமாகிய சைவசமயத்திற்குத் தன் தம்பியார் மீண்டும் வரவேண்டும் என்று எல்லாம் வல்ல சிவபெருமானை வேண்டி நின்றுர்.

அப்போதும் தமக்கையார் தம்பியைவெறுக்க வில்லை. தாம் முன்பு கொண்ட அன்பிலும் அருளிலும் சிறிதும் மாறவில்லை. அவரைப் பரசமய குழியிலிருந்து எடுத்து அருளவேண்டு மென்று இறைவனிடம் நாள் தோறும் தவருமல் வேண்டுகோள் விடுத்துவந்தார். இறைவனும் அம்மையாரைக் கவலை ஒழிக்கும் படியாகக் கூறினுர். அவருக்குச் சூலை நோய் தந்து தாம் ஆட்கொள்ளப்போவதாக உணர்த்தினுர். அவ்வாறே தரும சேனராக அமணப் பள்ளியில் இருந்த மருள் நீக்கியாருக்கு ஒருநாள் சூலை நோய் கண்டது. அங்கிருந்த சமணத் துறவிகள் யாவரும் தாம் கற்ற மணி மந்திர ஔஷதங்களைத் தந்து அந்நோயை நீக்க முயன்றனர். ஆனுல் அவை பயன் படா தொழிந்தன. எனவே தருமசேனர் சோர் வுற்றுர். அவர் தன் தமக்கைக்கு ஆள் அனுப்பி அழைக்கச் செய்தார். அதற்கு அம்மையார் சமணப் பள்ளிக்குத் தாம் செல்ல மறுத்தார். ஆகையால் தரும சேனரே அவ் வலியுடன் பாடலிபுரத்திலிருந்து புறப்பட்டுத் திருவதிகைக்குச் சென்று தமக்கையாரைக் கண்டு தனக்கு வாழ்வருளுமாறு வேண்டினுர்.

அதற்குத் திலகவதியார் 'பிறவாயாக்கைப் பெரியோனுகிய' சிவபெருமானை வணங்குமாறு தன் தம்பிக்குக் கூறினுர். அவர் புறச் சமயத்தைச் சார்ந்தவராதலால் அவரை மீண்டும் சைவத்திற்கு அழைத்துக்கொள்ளுவதற்கான மதமாற்றத்தைத் துணிவுடன் செய்தார். அதாவது ஐந்தெழுத்தாகிய பஞ்சாட்சரத்தை ஓதி வெண்ணீறு அணிவித்து அவரைத் தூயவராக்கி, கோவிலினுள் அழைத்துச் சென்று வீரட்டானேஸ்வரரை வணங்கச் செய்தார். பரந்த நோக்கத்தோடும், சிறந்த

உள்ளத்தோடும், தூய மனத்தோடும் புறச் சமயத்தைச் சார்ந்த ஒருவரை வெண்ணீற்றின் துணைகொண்டு, தூய்மைசெய்து கோவிலுக்குள் அழைத்துச்சென்று சைவராக்கினர். அதன் விளைவாக மருள் நீக்கியார் நோய் நீங்கப்பெற்றுத் திருவருளின் கருணையை வியந்து பலபாடல்களைப்பாடினர். தமக்கையாரைப் போலவே தாமும் உழவாரப் படையைக் கொண்டு கைத்தொண்டு செய்து வாழ்ந்து வந்தார். திலகவதியார் தம்பிக்காக உயிர் தாங்கி இருந்து அவரை ஒரு அறிஞராக்கிச் சமண மதத்திலிருந்து சைவத்திற்குக் கொண்டுவந்தார். அதன் விளைவாகச் சிறந்த பாடல்கள் அடங்கிய நான்கு, ஐந்து, ஆறும் தேவாரத் திருமுறைகளை நாம் கிடைக்கப் பெற்றோம். தருமசேனருக்குத் திருநாவுக்கரசர் என்ற பெயரைத் திருவதிகைப் பெருமான் சூட்டி மகிழ்ந்தார். அவருடைய தந்தை அன்பையும் வயது முதிர்ச்சியையும் கண்ட ஞானசம்பந்தப் பெருமான், அவரை “அப்பரே” என்று அன்புடன் அழைத்தார். ஆகையினுல் மருள் நீக்கியார், ‘நாவுக்கரசர்’ ‘அப்பர்’ என்ற சிறப்புப் பெயர்களுக்கு உரியரான பெருமை திலகவதியாரையே சாரும்.

“ எழுபது வெள்ளஞ் சேனை யெடுத்திடு பலகற் [கொண்டு
செழுமணிப் பரவையொன்றே கடந்த வெஞ் [சிலையோன் நாண
வழுவமண் இடுகல் ஒன்றுல் மறிகடல் பிறவி [வேலை
முழுவதுங்கடந்த எங்கள் முதல்வனுக்கன்பு [செய்வாம்”

என்ற சிறப்புக்கு உரியரானுர் மருள் நீக்கியார். அதற்குக்காரணமாக இருந்தவர் அவருடைய தமக்கையார் திலகவதியாரன்றே; ஆகையால்

“ பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மை யுண்டாகப் பெறின்”—

---

தேவரையும் முனிவரையும் துளவ மார்பிற்
றிருவரையும் குரவரையுப் செல்வ மிக்கோர்

யாவரையும் ஏவல்கொளும் நெற்றி நாட்டத்
திறைவரைமுன் இகந்திருந்த எண்ணம் தோன்றச்

சேவரையும் நெங்கொடியின் தகைமை எல்லாத்
திசைவரையும் செலத்தமிழிற் செய்யுள் பாடும்

நாவரையர் புகழ்மொழிகள் வரைந்து கூறி
நயந்தவர்செய் திருத்தொண்டு வியந்து வாழ்வாம்

—சேதுபுராணம்.

# WHAT APPEALS TO ME IN APPAR

Sri. C. N. SINGARAVELU, M.A.
*Asst. Secretary to Govt., Home Department.*

The four great exponents of Saiva religion are the well known saints Thirugnanasambanthar, Appar, Sundaramurthi Swami and Manickavasagar. Of these four the last mentioned stands apart and is treated differently from the rest His age is still a matter of dispute among scholars and his life has not deen dealt with by the great poetic historian Sekkilar for the reason that there is no unequivocal evidence that he has been included among the sixty three saints enumerated by Saint Sundarar. However, Manickavachagar's great works, namely, Thiruvachakam and Thirukkoviyar have been fortunately handed down to us intact.

Of the other three great saints, the authors of Thevaram, Appar appeals to me most in view of the sufferings and trials undergone by him at a fairly advanced age and the consequent mellowness of his verses. He lost his parents while he was still young, his elder sister lost her fiancee soon after and she was preparing herself to give up her life. As Appar threatened to follow suit, she bore her life for his sake. Thus he was brought up by his sister in altogether unhappy circumstances. Realizing the transitoriness of life, he gave up his possessions in charity, entered the life of an ascetic and joined the order of the Jains. The reason why he embraced Jainism is given by Sekkilar in two lines, namely :-

"நல்லாறு தெரிந்துணர நம்பர் அருளாமையினல்
கொல்லாமை மறைந்துறையும் அமண்
சமயங்குறுகுவார் "

The implications of these lines are profound, Appar went in quest of Truth purely with the aid of intellect and the quest landed him in athestic religion (viz) Jainism. Unless one relies on intuition inspiration, faith in God's grace, and in the Power in which we live and have our being, all our unaided intellectual effort will be in vain as has been that of Marulneekiar, as he was then called before he was reunited to Saivism, by the Grace of God. One of the fundamental principles of Saivism is, that the grace of God is necessary even to get the Grace of God The implications of the second line quoted from Sekkilar are that since Appar experienced misery in his own life he was attracted by the religion, the ostensible first principle of which, was non-violence. But then the creed of non-violence was only a cloak for the unworthy life led by the Jains in those days.

What was wrong with Jainism in those days? Sekkilar answers in these lines :-

"தவமென்று பாயிடுக்கித்தலை பறித்து
நின்றுண்ணும்
அவமொன்று நெறிவீழ்வான் விழாமே
அருளும் எனச்
சிவமொன்று நெறிநின்ற திலகவதியார் பரவப்
பவமொன்றும் வினைதீர்ப்பார் திருவுள்ளம்
பற்றுவார்"

The futility of Jainism and the merits of Saivism are both expounded in this verse. In the first two lines the poet says that Jainism has all the rediculous trappings and practices of an ascetic but lacks the spirit behind them. Practices such as carrying a mat under the arm's pit, shaving the head and taking food standing, take us nowhere. In the second two lines the poet indicates that the seed for the cycle of birth and death is 'Karma' or action born of attachment and the only way to free ourselves from Karma is to attach ourselves to the Supreme. Hence the 'Sivaneri' or path

of Siva where the Supreme occupies the Central place is the only Path that can bring about one's salvation.

That Appar was an intellectual giant could be seen from the fact after he joined the order of the Jains he soon become a leader among them and was conferred the title of 'Dharmasenar.' He also beat the Buddhists in a contest in argument and enhanced his reputation as a great leader among the Jains. It is seen that the Jains and the Buddhists were famous for hairsplitting arguments. But they lacked the core and spirit of religion. That is why Saint Thirugnanasambanthar in his famous verse beginning with

"ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும்
மிக்குச் சோதிக்க
வேண்டா, சுடர்விட்டுளன் எங்கள் சோதி"

pleaded with them to forget the arguments for the nonce and to see God who is as clear as the effulgent Sun.

Appar's sister Thilakavathiar who bore her life for the sake of her brother was greatly disappointed at the conversion of her brother, but continued to pray to Lord Siva for the restoration of her brother to 'Sivaneri'. God promised to grant her request and the result was that Appar developed an unbearable stomach pain which resulted in his reunion to Saivism through the initiation of his sister.

Unlike the other Samayachariars, Appar obtained God's Grace in the hard way. That was perhaps due to the fact that he depended too much on himself and tried to see Truth through the unaided intellect. Thirugnanasambandar was born as it were with a silver spoon in his mouth and he lisped in numbers for numbers came and in the case of Sundarar, God sought him voluntarily and showered His Grace. But Navukkurasar had to pay his full quota of suffering before he could obtain God's Grace. This could be seen not only during his re-entry to Saivism but throughout his life. At every stage, God tested him with suffering and he came out of the tests like burnished gold. The way in which he travelled to Kailas was described most pathetically by Sekkilar. His legs were worn out, and he used his arms and then his chest to travel and they were also duly worn out and he used up every inch of his body to reach the goal (viz) Kailas. Even then God appears in the form of a Saint and discourages him from proceeding further. Finding that the Spirit of Appar was still undaunted, God made him whole and granted him the Kailasa dharshana at Thiruvaiyar itself. Even at the end of his earthly life God tested him or rather, as Sekkilar had put it, God wanted to show to the world that Appar would not yield to the temptation of gold and women. Anyhow we feel when we read those incidents that the World did not require further evidence of the ripeness of Appar's soul for final beatitude.

We are in complete sympathy with Appar when he at this stage in the verses beginning with "பொய்ம் மாயப் பெருங் கடலில்" appealed to the fates to spare him and not to stand any more between him and his Master.

The special characteristics of Appar's life and writings are his humility and his spirit of service. In the very first line of Sekkilar's life of Thirunavukkarasu Swamigal he says that he proposes to narrate his life in order that the path of noble service nurtured by Thirunavukkarasu might live for ever in this World. He worked with his hand and he took great pleasure in cleaning the temples and the surroundings with his own hand. He carried his pick axe always with him and even now in the temples his figure is always shown with a pick-axe in his hand. It is the symbol of service carried out with one's own hand and nowadays when so much is said about the dignity of labour, the importance of basic education and the need for doing some service with one's own hand, however intellectual one may be, the manual service rendered by Appar, apart from the beautiful poems produced by him, requires to be made known widely.

Let us now turn to the divine poems sung by Appar. In my humble opinion, next to Manickavasagar, Appar appeals most to the modern mind. By this statement I mean that even those nurtured in Western education, who have developed a scientific and puritanical outlook, who scoff at religious forms and ceremonies will find the outpourings of Manickavasagar and next to him of Appar soul satisfying. A little more sympathy and identification with Saivism is necessary for one to appreciate Thirugnanasambandar and Sundarar. The one is the pet child of God and the other is God's friend ; they take God's grace for granted and they never argue either with themselves or with others.

Let me give some examples as to how Appar's poetry appeals to the modern mind. In a series of poems, Appar says that all the forms and ceremonies and religious practices are of no avail if we don't see God within and everywhere and unless we think of, and yearn for him constantly. Appar does not scoff at these practices. He only says that without the mind cooperating, these acts by themselves are of no use. Here are some of the verses rendered in English :—

1. " Why bathe in Ganga's stream or Kaviri ?
Why go to Comorin in Kongu's land ?
Why seek the waters of the sounding sea ?
Release is theirs, and theirs alone, who call
In every place upon the Lord of all.

2. Why chant the Vedas, hear the Sastras' lore ?
Why daily teach the books of righteousness ?
Why the Vedangas six say O'er and O'er ?
Release is theirs, and theirs alone, whose heart
From thinking of its Lord shall ne'er depart.

3. Why roam the jungle, wander cities through ?
Why plague life with stinting penance hard ?
Why eat no flesh and gaze into the blue?
Release is theirs, and theirs alone, who cry
Unceasing to the Lord of Wisdom high.

4. Why fast and starve, why suffer pains austere ?
Why climb the mountains, doing penance harsh ?
Why go to bathe in waters far and near ?
Release is theirs and theirs alone, who call
At every time upon the Lord of all. "

In a number of verses, Appar explains in elaborate similies how we can realize God within by purifying our mind by eliminating untruth and by patiently nurturing Truth, Love and Gnana. Here are some of the verses :-

1. காயமே கோயில் ஆகக்
கடிமனம் அடிமை ஆக
வாய்மையே தூய்மை ஆக
மனமணி இலிங்கம் ஆக
நேயமே நெய்யும் பாலா
நிறையநீர் அமைய ஆட்டிப்
பூசனை ஈசனுர்க்குப்
போற்றவிக் காட்டினேமே

2. உடம்பு எனும் மனை அகத்துள்
உள்ளமே தகளியாக
மடம்படும் உணர்நெய் அட்டி
உயிர் எனும் திரிமயக்கி
இடம்படு ஞானத் தீயால்
எரிகொள இருந்து நோக்கில்
கடம்பு அமர் காளை தாதை
கழல் அடி காணலாமே.

3. மெய்ம்மையாம் உழவைச் செய்து
விருப்புஎனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாம் களையை வாங்கிப்
பொறை எனும் நீரைப் பாய்ச்சித்
தம்மையும் நோக்கிக் கண்டு
தகவுஎனும் வேலி இட்டுச்
செம்மையுள் நிற்பராகில்
சிவகதி விளையும் அன்றே.

God cannot always be contemplated in the abstract. We want something in the concrete and that is why we want our idols and temples. God is in our mind, but he is also in the temples, and everywhere. There is a beautiful contradiction in the following statement of Appar :-

" தொண்டர் அகமலால் கோயில் இல்லை
ஐயன் ஐயாறனுர்க்கே "

The meaning of these lines is that the God

who dwells in Thiruvaiyaru temple has no other abode but the heart of the devotee, which apparently is self-contradictory, but pregnant with meaning.

For contemplation and meditation we want the image of an Ishtadevadha. We should constantly dwell on that image in our inward mind, allow our fancy to play upon it, love it and fix it in our mind so that we may conjure it up in our vision at a moment's notice in order that it may give solace when we are in distress, peace when we are perturbed and happiness on all occasions. Two such beautiful pen pictures given by Appar relate to Lord Siva one in his conventional garb and the other as Nataraja.

The picture of Lord Nataraja as seen by Appar is given below :-

" குனித்த புருவமும் கொவ்வைச் செவ்
வாயிற் குமிண் சிரிப்பும்

பனித்த சடையும் பவளம் போல்
மேனியிற் பால் வெண்ணீறும்

இனித்தம் உடைய எடுத்த பொற்
பாதமும் காணப் பெற்ருல்

மனித்தப் பிறவியும் வேண்டுவ
தே இந்த மாநிலத்தே "/

For sweetness and Grace this picture can hardly be surpassed, even by its original in Chidambaram.

The picture of Lord Siva as seen by Appar in his divine vision is given below :-

" வடிவேறுதிரி சூலந் தோன்றுந் தோன்றும்
வளர்சடை மேல்இள மதியந் தோன்றும்
தோன்றுங்

கடியேறு கமழ் கொன்றைக்கண்ணிதோன்றுங்
காதில் வெண்குழை தோடு கலந்துதோன்றும்

இடியேறு களிற்றுரிவைப் போர்வை தோன்றும்
எழில் திகழுந் திருமுடியு மிலங்கித் தோன்றும்

பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம்புனிதனுர்க்கே"

"See, there His Bright trident appears to me;
See, there is the moon in His tangled hair;

His garland of flowers from the Kondrai
And the ear-ring white in His either ear,

The cloak that He tore from the elephant wild
His glittering crown and his body's Sheen,

Ash-smeared, He is ever the undefiled,
In Puvanam circled by groves all green"

This is a picture of Himalayan grandeur and sublimity.

Our ancestors saw the Himalayas and were impressed by its grandeur. There is nothing equal to it in grandeur in the whole World. Naturally they visualised God in that form. They saw the crescent moon near the crest of the Himalayas, the Ganges taking its birth right on its head, huge snakes rolling on its sides, elephants moving (only their dark skins could be visible from a distance), and the icy cap turning red with the evening Sun. This is the picture of Lord Siva. Appar allows his fancy to play lovingly on the picture. The lady Ganges the Consort of Siva whom Siva has placed on his head shrinks from the Cobra which has also taken its abode there. But there the Cobra mistakes the lady for a peacock and is humbled. Not content with this fun, Siva covered his body with the elephant's skin and added the moon to his head. The snake on his body mistook the far away moon to his head. The snake on his body mistook the far away moon for a lightning and shrank. Saint Thirunavukkarasu has depicted this drama in a beautiful verse :-

" நாகத்தை நங்கை அஞ்ச
நங்கையை மஞ்ஞை என்று

வேகத்தைத் தவிர நாகம்,
வேழத்தின் உரியைப் போர்த்துப்

பாகத்தில் நிமிர்தல் செய்யாத்
திங்களை மின்னென்று அஞ்சி

ஆகத்திற் கிடந்த நாகம்
அடங்கும் ஆரூர ஞர்க்கே " ★

# ஞானத் தவமுனிவர்

சித்தாந்தக் கலைமணி. வித்துவான். சி. அருணைவடிவேலு முதலியார், தருமபுரம்.

திருநாவுக்கரசு நாயனுர்க்கு, அப்பெயர், திருவதிகை வீரட்டானேசுரர், உலகேழும் ஓதி உய்ய வழங்கியருளிய திருப்பெயர். உயிர்களை எல்லாம் ஆளுடையான் ஆகிய சிவபிரானுகவே இருந்து, அங்ஙனம் ஆளுடைய தன்மையால், அப்பெயர், 'ஆளுடைய அரசு' எனப் போற்றி வழங்கப்படும். இறைவன், உயிர்களை எல்லாம் பொதுவாக ஆளுடையன் ஆதலே யன்றி, பக்குவம் எய்திஞேரைப் பல திறத்தில் ஆண்டருளிய பெருமை தோற்றி நிற்பவனுகலின், அத்தன்மையும் புலப்பட, 'ஆண்ட அரசு' என்றலும் அருளாளரது மரபே.

இனி, 'நாவுக்கரசர்' என்னும் நற்பெயர் தானே, வடமொழியில், 'வாகீசர்' எனவழங்கப் பெறும். சிவபெருமான் 'நாவுக்கரசு' என அழைத்தருளிய நாயனுரை, சிந்தையிடை அரு அன்புடைய அந்தமிலாத் திருவேடத் தொடு, ஆண்டு முதிர்வினுல் திருமேனிதனில் அசைவும் பொருந்தக் கண்ட ஆளுடைய பிள்ளையார், யாவர்க்கும் தந்தையாகிய சிவ பெருமானை, 'அப்பா' என்று அழைத்தருளியது போலவே, 'அப்பரே' என, அகங்குளிர அழைத்து மகிழ்ந்தார். இவ்வாற்ருல் அந்நாயனுர்க்குத், 'திருநாவுக்கரசர்' எனவும், 'அப்பர்' எனவும் போந்த இருதிருப் பெயர்களே எவரும் அறிந்து போற்றும் இணையற்ற, திருப் பெயர்களாய் இலங்கும்; 'வாகீசர்' என்னும் பெயர், அவைகளை அடுத்துவைக்கும் பயிற்சி யுடையது.

இவ்வாருயினும், சேக்கிழாார் நாயனுர், திருநாவுக்கரசருக்கு ஆக்கியுரைக்கும் திருப் பெயர்கள் அளப்பில. அவை, 'மொழிக்கு இறை, வாகீசத் திருவடி, வாக்கின் பெருவிறல் மன்னர், தமிழாளியார், உழவாரப் படையாளி, முனைவர், பரமுனிவன்' முதலியன. அவை போல, அந்நாயனுரது புராணத்தின் முதற்றிரு விருத்தத்துள்ளே,

"திருநாவுக் கரசுவளர் திருத்தொண்டின் [நெறிவாழ
வருஞானத் தவமுனிவர்"

என அருளிசெய்த, 'ஞானத் தவமுனிவர்' என்னும் திருப்பெயரும் ஒன்று; அதன் கருத்தை நினைந்து எய்தும் பயனைச் சிறிது பெறத் தோன்றுவதே இச் சிறு கட்டுரை.

'ஞானத் தவமுனிவர்' என்னும் திருப் பெயருள், 'ஞானம்-தவம்-முனிவர்' என்னும் மூன்று சொற்களைக் காண்கிருேம்; அவைகளால் குறிக்கப்படும் அப்பொருள்களின் இயல்புகள் யாவை? அவ்வியல்புகள் அனைத்தும் நாயனுர்க்கு ஒருங்கே பொருந்த, மேற்குறித்த அப்பெயரால் நாவுக்கரசரைச் சேக்கிழார் முதற்கண்ணே போற்றி யருளியது என்னை? இவற்றை நினைத்தல், நாவுக்கரசரது வரலாற்றை உணர விரும்புவோர் அனைவர்க்கும் இன்றியமையாக் கடனுகும்.

'ஞானம்' என்பது, மெய்ப்பொருள் உணர்வு. மெய்ப் பொருளாவது, என்றும் ஒரு படித்தாய் நிலைவேறு படாது இருக்கும் பொருள். அது கடவுட்பொருளே. அதனை, 'பரம்பொருள், பரப்பிரமம், சத்து, செம்பொருள்' என்றெல்லாம் கூறுவர். அப்பொருளை, 'சிவம்' என்று கூறும் சைவ சமயம். ஆகவே, மெய்ப் பொருள் உணர்வை, 'பிரம ஞானம்' என்று வைதிக நூல்களும் 'சிவஞானம்' என்று சைவ நூல்களும் கூறும். எனவே, சேக்கிழாரது திருமொழியிற் போந்த ஞானம் சிவஞானமே என்பது தெளிவு.

இனி, 'தவம்' என்பது, ஞானத்தை அடைவதற்குரிய சாதனச் செயல் என்பது, எல்லார்க்கும் உடன்பாடு. அச்செயலை, அவரவர் கூறும் ஞானத்திற்கு ஏற்ற வகையில் வேறு வேறு வகையாகக் கூறுவர். 'ஞானமாவது சிவஞானமே' எனக் கூறும் சைவ நூல்கள், அதற்குரிய தவமாகக் குறிப்பிடுவது, 'சரியை, கிரியை, யோகம்' என்பவற்றையே யாகும். திருக்கோயில் தொண்டு, அடியார் பணி முதலியன சரியை; சிவபூசை கிரியை, சிவாகம முறைப்படி செய்யும் யோகம் யோகம். எனவே, இங்கு, 'தவம்' எனப்பட்டன சரியை கிரியை யோகங்களே என்பதில் ஐயமில்லை.

இனி, 'மௌன நிலையை அடைந்தவர் முனிவர்' என்பர். முனைவர் என்பது போல, மக்களுள் முன் நிற்றற்கு உரியர் என்பது பற்றி முனிவர் எனப்படுவர்' எனவும் கூறுவர். சொற் பொருள் யாதாயினும், அப்பெயர், துறவுநிலையை அடைந்தாரையே குறிக்கும்.

ஞானம் முதலிய மூன்றன் பொருளும் தனித்தனி இவ்வாறு விளங்கினும், சேக்கிழார் அம்மூன்றனையும் இயைத்து அருளிச்செய்த தொடர்ப் பொருளே இங்கு இனிது உணரத் தக்கது. 'ஞானம்' என்னும் சொல், 'தவம்' என்னும் சொல்லோடு இயைந்து, 'ஞானத் தவம்' என நிற்கின்றது என்றும் கூறலாம்; அவ்வாறின்றி, 'ஞானம், தவம்' என்னும் இரண்டு சொற்களும் தனித்தனியே, 'முனிவர்' என்பதனோடு இயைந்து, 'ஞான முனிவர், தவமுனிவர்' என நிற்கின்றது என்றும் கூறலாம். இவ்விரண்டிற்கும் அத்தொடர் இடம் கொடுக்கும், ஆனல், 'ஏற்புழிக் கோடல்' என்ற வகைப்படி, அவ்விடத்திற்கும், முன்பின் உள்ள தொடர்புகளுக்கும் ஏற்றவாறு அறிந்து கொள்வதே உண்மைப் பொருளாகும்.

'ஞானத் தவம்' எனக் கொண்டால், 'ஞானத்துக்கு ஏதுவாகிய தவம் அல்லது ஞானத்தோடு கூடிய தவம்' எனப் பொருள் தரும். 'தவம்' எஞ்ஞான்றும் ஞானத்துக்கு ஏதுவேயாகையால் அப்பொருளை எடுத்தோதினர் எனின், அது, வேண்டா கூறியதாகவே ஆகிச் சிறப்பில்லாததாம். இனி, 'ஞானத்தோடு கூடியதவம்' எனினும், அஃதும் அங்ஙனமேயாம். அஃது எவ்வாறு எனின், தவமாகிய சாதன நிலையில் நிகழும் ஞானம், சாத்தியமாகிய மெய்ஞ் ஞானமாகாது, பொது வகையான ஞானமேயாகும். அரும்புமலர், காய்போல நிகழும் அந்தப் பொதுவகை ஞானம் இல்லாது சரியை முதலிய தவங்கள் நிகழ்தல் இல்லை ஆகையால், அப்பொருளிலும் தவத்தை, 'ஞானத்தவம்' என்றதனல், சிறப்பு ஒன்றும் இல்லையாய்விடும். எனவே, மேற் கூறிய இரு பொருளில் யாதேனும் ஒருபொருளே கருத்தாயின், 'ஞானத் தவ முனிவர்' என வேண்டாது, 'தவ முனிவர்' என்றலே போதுமானதாக அமையும். அவ்வாறின்றித் தவ முனிவர் என்று ஓதாது, "ஞானத்தவமுனிவர்" என்று ஓதினமையால், சேக்கிழார் அதனை, 'ஞானமுனிவர் தவமுனிவர்' எனத் தனித்தனிக் கூறும் கருத்திலே அருளிச் செய்தார் என்பது பெறப்படும்.

துறவொழுக்கத்தை யுடைய முனிவர், 'முற்றத் துறந்த அறிவரும், அந்நிலையை அடைய முயலும் தாபதரும்' என இருதிறப் படுவர். முற்றத் துறந்தாராவர் பற்றற்றான் பற்றினையே பற்றி உலகப் பற்றை அறவே நீக்கியவர். பற்றற்றானே மெய்ப்பொருளாகலின், அவனது பற்றைப் பற்றி நிற்றலே ஞானமாகும். அந்தஞானம் கைவரப் பெற்றோர் அவன் பற்றினை விடாது பற்றி நிற்போரேயாகலின், அவர், 'அறிவர்' எனப்படுவர். 'அறிவர், ஞானியர்' என்பன ஒருபொருட் சொற்கள். இவரே பரம்பொருளை அடைந்தவர்; இவரைத் திருவள்ளுவ நாயனர், "தலைப்பட்டார் தீரத் துறந்தார்" என்றார். எனவே, இவர்களையே, 'சிவானு பூதிச் செல்வர்' என்னும் சைவசமயம்.

இனி, தாபதராவார், நீர்பலகால் மூழ்கல் முதலிய இயம நியமங்களையுடையராய், மற்றும் யோகநெறி நிற்பவர் எனப் பொது நூல்கள் கூறும். ஆகவே, சிவநெறியில் சரியை முதலிய தவத்தில் நிற்போரே அவர் என்பது பெறப்படும்.

இங்ஙனமாகவே, 'ஞானமுனிவர்' எனவும் 'தவமுனிவர்' எனவும் முனிவர் இருதிறத்தினராதல் விளங்கும். ஓடும் செம் பொன்னும் ஒக்கவே நோக்கி, வானம் துளங்கிலும் மண் கம்பம் ஆகிலும் அசையாத பெருந்துறவினராகிய திருநாவுக்கரசரை, 'முனிவர்' என்று குறிப்பிட வந்த சேக்கிழார், 'ஞான முனிவர்'

என்றே 'தவமுனிவர்' என்றே குறித்திருக்கலாம். அவ்வாறன்றி, 'ஞானத் தவமுனிவர்' என இருவகையாலும் குறித்தருளினர். அதற்குக் காரணம் யாது?

சைவ ஆசிரியன்மார்களில், கைத்தொண்டினை மேற்கொண்டு செய்து காட்டியவரும், "நித்தலும் எம்பிரானுடைய கோயில் புக்குப்-புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கும் இட்டுப்-பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்துபாடி" என்றாற் போலச் சரியைத் தொண்டினைப் பல விடங்களில் வலியுறுத்தி ஓதியருளினவரும் திருநாவுக்கரசு நாயனாரே. அச்சிறப்புத் தோன்ற அவரைக் குறித்தல் வேண்டும் என்பது சேக்கிழாரது திருவுள்ளம். அதன் பொருட்டு அவரைத் 'தவமுனிவர்' என்று குறிப்பிடப் புகுந்தார். ஆனால், 'தவமுனிவர்' என்றே கூறிவிடின், அவரது உண்மை நிலையை மக்கள் உணராதுவிடுவர் என்று அஞ்சியே, 'ஞானம்' என்பதை உடன் புணர்த்து, 'ஞானத் தவமுனிவர்' என்றருளினர்.

திருநாவுக்கரசரது நிலை, சிவத்தைத் தலைப்பட்டுச் சிவானந்தத்தில் திளைத்திருத்தலாகிய, 'ஞானத்தில் ஞானம்' எனப்படும் முடிந்தநிலை. அது, 'ஈசன் எந்தை இணையடி நீழல், மாசில் வீணை முதலியன போலப் பேரின்பம் தந்தது' என்றும், 'மனிதர்காள், கனிதந்தால் கனி உண்ணவும் வல்லிரே?' என்றும், 'புனிதன் பொற்கழல் ஈசன் எனுங்கனி-இனிது சாலவும்' என்றும், 'ஈசனை இனி யான் மறக்கிற்பனே' என்றும், மற்றும் இவ்வாறும் அருளிச் செய்த பல திருமொழிகளால் இனிது விளங்கும். அது பற்றியே அவரது உள்ளத்தை, "நாயகன் சேவடி தைவரும் சிந்தை" என்றார் சேக்கிழார். ஆகவே, இவ்வுண்மை நிலையை மக்கள் திருநாவுக்கரசரிடம் முன்னர் நன்குணர்தல் வேண்டும். அதன் பின்னரே, அத்துணைப் பேரருளாசிரியர் உழவாரப் படையைக் கையிற் கொண்டு உழவாரப் பணி செய்து வந்த அருமையை உணர்தல் வேண்டும். அவ்வாறு உணர்வாராயின், திருத்தொண்டின் பெருமை புலனாவதாகும். திருத்தொண்டின் பெருமையை உலகிற்கு விளக்கி, அதனை உலகில் நிலை நிறுத்தத் தோன்றியருளியவரே திருநாவுக்கரசர். அதன் பொருட்டே அவர் கைத்தொண்டினைச் செய்துவந்தார். இதனை அறியாது சிலர், 'அவரது நிலையே சரியை நிலைதான்' என்று எண்ணி மயங்கிக் குற்றப்படவும் கூடும் என்று நினைந்து, அதனை அகற்றி, திருநாவுக்கரசரது நிலை, ஞானத்தில் ஞானமாகிய முடிந்த நிலையே யாகும்; ஆயினும், அவர் கைத்தொண்டின் இன்றியமையாமையை உலகம் உணர்ந்து உய்தல் வேண்டும் என்னும் திருக்குறிப்பினாலே உழவாரப் பணியை மேற்கொண்டு செய்து வந்தார் என்பதை விளக்கவே, அவரை, ஞானத்தவமுனிவர்' என்று குறித் தருளினர் சேக்கிழார்.

ஆகவே, தமது நிலையில் ஞானத்தில் ஞானம் உடையவராய் விளங்கிய நாயனார், உலகம் உய்தற் பொருட்டு உழவாரப் படையாளியாராய் உலாவினர் என்று அவரது உண்மை நிலையை உலகம் உணர்ந்து, போற்றி, அவர் வழி நின்று உய்வதாக. வாழ்க திருத்தொண்டின் நெறி!

" திருநாவுக் கரசுவளர் திருத்தொண்டின் [நெறிவாழ
வருஞானத் தவமுனிவர், வாகீசர் வாய்மை [திகழ்
பெருநாமச் சீர்பரவ லுறுகின்றேன் பேருலகில்
ஒருநாவுக் குரை செய்ய வொண்ணுமை [யுணராதேன்".

—சேக்கிழார்.



# அப்பரைப் பற்றிய ஓர் ஆய்வுரை

திரு. ந. ரா. முருகவேள், M.A., M.O.L.,

**தோற்றுவாய் :**

சிவநலமும் தமிழ்நலமும் செறிந்த சிறந்த நல்லறிஞர் ஒருவர் 'அப்பரைப் பற்றிய ஓர் ஆய்வுரை' ஒன்றினைச் சில ஆண்டுகளுக்கு முன்னர் நிகழ்த்தியுள்ளார். அதன்கண் அவர் பின்வரும் கருத்தினைத் தெரிவித்துள்ளார் :—

**ஆய்வுரையாளர் கூற்று :**

"அப்பர் சமணராய் இருந்தபோது அவருக்கு வயிற்று வலி யுண்டாயிற்று என்றும், சைவராக மாறித் திருவதிகையில் பதிகம் பாடிய பிறகே அவருக்கு அவ்வலி நீங்கிற்று என்றும், தற்போது வழங்கி வரும் அப்பருடைய வாழ்க்கை வரலாறு கூறும். இதற்கு ஆதாரமாக இருப்பது 'கூற்றாயினவாறு விலக்ககிலீர்' என்று தொடங்கும் திருப்பதிகமே. இதில் உள்ள பத்துப் பாடல்களையும் கூர்ந்து நோக்கினால், நாம் மேற்கூறிய வரலாற்றிற்கு மாறான முடிவுக்கு வரவேண்டியிருக்கிறது. அதாவது, அப்பர் சைவராக மாறி வாழ்ந்து வந்த காலத்தில்தான் அவருக்கு அவ்வலி யுண்டாயிற்று என்று கொள்ளக் கிடக்கின்றது"

**அவர் வேண்டுகோள் :**

அவ்வாய்வுரையின் முடிவில், அவர் பின்வருமாறும் குறிப்பிட்டிருக்கின்றார் :—

"எப்படி இருந்தபோதிலும், 'கூற்றாயினவாறு' என்று தொடங்கும் பதிகத்தால் குறிக்கப்படும் சூலை, அப்பர் சைவரான பிறகுதான் தோன்றிற்று என்பதற்குப் போதுமான அகச்சான்றுகள் கீழே குறிக்கப்பட்டன. இவைகள் உண்மையோ அல்லவோ என்பதைத் தமிழுலகம் நடு நிலையில் நின்று ஆராயுமாக!"

**இக்கட்டுரையின் நோக்கம் :**

அவ்வறிஞர் பெருந்தகை அவர்கள் விரும்பிப் பணித்துள்ள பான்மைக்கு இணங்கவும், 'எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்ப தறிவு' எனத் திருவள்ளுவர் அறிவுறுத்தியதற்கு ஏற்பவும், அவர்கள் குறிப்பிட்ட அகச்சான்றுகளை நடுநிலை நின்று இயன்றவரை சிந்தித்து உணரும் நோக்கத்துடன் கருத்து விளக்கத்தின் பொருட்டு, இக்கட்டுரை 'மிகவும் பணிவுடன்' எழுதப்படுகின்றது. இதனையும் தமிழுலகம் நடுநிலையில் நின்று ஆராய்வதாக!

**ஆய்வுரையும் அதன் விளைவும்**

"அப்பர் சைவராக மாறி வாழ்ந்து வந்த காலத்தில்தான் அவருக்கு அவ்வலி உண்டாயிற்று" என, நாம் மேற்குறித்த அவ்வாய்வுரை துணிகின்றது.

மேம்போக்காக நோக்கும்போது, இத்துணிவுரை 'அப்பருக்கு வலியுண்டாகிய காலத்தைப் பற்றிய ஆய்வுரை' போலத் தோன்றினும், இதன் கண் வேறு பல அடிப்படையான முதன்மைப் பொருட் குறிப்புக்களும் பிணைப்புண்டு மறைந்து கிடக்கின்றன. ஆதலின், இதனை நாம் 'நேரல்-பல்பொருட் பிணைப்புக்-குறிப்புப்-பிழைமொழி' (The fallacia

plurium Interrogationum) என்றே விழிப்பாக இருந்து உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். இவ்வாய்வுரை, எத்துணையோ பல அடிப்படை யுண்மைகளையும் செய்திகளையும் அடியோடு தகர்த்து எறிந்துவிடும் தன்மையதாகக் காணப் படுகின்றது.

இவ்வாய்வுரையின் முடிவு உண்மை எனத் துணியப்படுமாயின், அது நம் சைவ சமயத்திற் கும், அப்பரின் வாழ்க்கை வரலாற்றுண்மைக் கும், அதனைச் செவ்விதின் ஆராய்ந்து பாடி யருளிய சேக்கிழார் சுவாமிகளின் சிறப்புக்கும் எத்துணை முழுமாருக முடிந்துபோம் என்பது, நடுவுநிலை நல்லறிஞர்கள் நன்கினிது சிந்தித்து உணர்தற்குரியது.

### தவருன அடிப்படை

ஆய்வுரை நிகழ்த்திய அறிஞர் பெருந்தகை அவர்கள், தமது ஆய்வுரையினைத் தொடக்கத் திலேயே தவருன அடிப்படையை அமைத்துக் கொண்டு நிகழ்த்தத் தலைப்பட்டிருக்கின்ருர்கள் எனத் தெரிகின்றது.

> "அப்பர் சைவராக மாறித் திருவ திகையில் பதிகம் பாடிய பிறகே அவ ருக்கு அவ்வலி நீங்கிற்று என்று தற்போது வழங்கிவரும் அப்பருடைய வாழ்க்கை வரலாறு கூறும்"

என்று அவர்கள் குறிப்பிட்டிருப்பது, தொடக் கத்திலேயே அவர்கள் பிழைபட்டதனைப் புலப் படுத்துவதாகும்.

திருவதிகையில் பதிகம்பாடிச் சூலைநோய் 'தீர்ந்த பிறகே' அப்பர் சைவராக மாறினர் என்பதுதான், தற்போது வழங்கிவரும் வரலாறு. சூலைநோய் தீர்ந்தது முன்னரும், சைவராக மாறியது பின்னரும் நிகழ்ந்தனவாகும். 'சைவ ராக மாறினர்' என்பது கூடப் பொருத்தமில்லை. இடையிற் சமண் சமயம் புக்க அவர், முன்பே தமக்கு உரியதாக இருந்த சைவ சமயத்திற்கு மீண்டு போந்தார் என்றலே உண்மையாகும்.

### நிகழ்ச்சிகள் நிகழ்ந்த நிரல்

அப்பர் தம் சூலைநோயின் கொடுமை தாங்க முடியாமல், வெண்புடைவை மெய் சூழ்ந்து, ஒருவரும் காணுமே இரவின்கண் புறப்பட்டுத் திருவதிகையை அடைந்தார். தமக்கையாரின் சொற்படி நடந்தார். அவர் தம் அகத்திருள் மாறவரும் நிலையும் நெருங்கி நின்றது. திருவதிகை வீரட்டானர் முன்பு சென்று தொழுது நின்றபோது, அவர்க்கு 'உரைத்தமிழ் மாலைகள் சாத்தும் உணர்வு' நிகழ்ந்தது. தமது மருளும் பிணியையும் மாயை யையும் அறுத்துப் போக்கியருளும்படி திருப் பதிகம் பாடினர். பதிகம் பாடியபின் சூலைநோய் அகன்றது. அதனல் அவர் தெருட்சியும் மருட் சியும் ஒருங்கே எய்தி இறைவன் கருணைக் கடலில் மூழ்கினர். சமண் சமயக் குழியில் விழுந்து எழுமாறு அறியாது மயங்கி அவம் புரியும் நான், இவ்வாழ்வு பெறத் தரு சூலை நோய்க்குக் கைம்மாறு யாது செய்ய வல்லேன் எனத் தொழுதார். பின்னர் மையற்றுறை விட்டு ஏறினர். முன்புபோல் மனத்தளவிலும் ஓரோ வழியும் அன்றி, மொழியானும் மெய்யா னும் கூட இடையருது எஞ்ஞான்றும் திருப்பணி செய்பவரானர். அதனல் விரவும் சிவ சின்னம் விளங்கிடப் பெற்ருர். அவர் தம் மனம், தியா னம் அரு உணர்வுநிலை பெற்றது. வாய் ஈறின்றி எழும் திருவாசகம் உடையதாயிற்று. கையில் உழவாரம் கைக்கொண்டு கலந்து கசிந்து மகிழ்ந்தார் அப்பர். இவ்வுண்மையினை,

நீற்ருல் நிறை வாகிய மேனியுடன்
நிறையன்புறு சிந்தையில் நேசமிக
மாற்ருர்புரம் மாற்றிய வேதியரை
மருளும்பிணி மாயை அறுத்திடுவான்
கூற்ருயின வாறு விலக்ககிலீர்
எனநீடிய கோதில் திருப்பதிகம்
போற்ருல்உல கேழின் வருந்துயரும்
போமாறெதிர் நின்று புகன்றனரால்

மன்னும்பதி கம்அது பாடியபின்
வயிறுற்றடு சூலை மறப்பிணிதான்
அந்நின்ற நிலைக்கண் அகன்றிடலும்
அடியேன்உயி ரோடருள் தந்ததெனுச்
செந்நின்ற பரம்பொருள் ஆனவர்தம்
திருவார் அருள் பெற்ற சிறப்புடையோர்
முன்நின்ற தெருட்சி மருட்சியினல்
முதல்வன் கருணைக்கடல் மூழ்கினரே

பொய்வாய்மை பெருக்கிய புன்சமயப்
பொறியில்சமண் நீசர் புறத்துறையாம்
அவ்வாழ்குழி யின்கண் விழுந்தெழுமா
றறியாது மயங்கி அவம்புரிவேன்
மைவாச நறுங்குழல் மாமலையாள்
மணவாளன் மலர்க்கழல் வந்தடையும்
இவ்வாழ்வு பெறத்தரு சூலையினுக்கு
எதிர்செய்குறை என்கொல் எனத்தொழுவார்

மையற்றுறை ஏறி மகிழ்ந்தலர்சீர்
வாகீசர் மனத்தொடு வாய்மையுடன்
மெய்யுற்ற திருப்பணி செய்பவராய்
விரவும்சிவ சின்னம் விளங்கிடவே
எய்துற்ற தியானம் அருவுணர்வும்
ஈறின்றி எழும்திரு வாசகமும்
கையிற்றிக ழும்உழ வாரமுடன்
கைக்கொண்டு கலந்து கசிந்தனரே

என வரும் பெரிய புராணப் பாடல்களால், சேக்கிழார் சுவாமிகள் நிகழ்ந்த நிரலே, முறை பிறழாதும்-இயற்கைநெறி பிழையாதும் செவ்விதின் விளக்கியருளியிருக்கும் திறம், ஓர்ந்து உணர்தற் குரியது.

இவ்வாற்ருல் திருப்பதிகம் பாடிச் சூலை நோய் தீரப்பெற்ற பிறகே, அப்பர் மன மொழி மெய்களால் மீண்டும் சைவராயினர் என்பதே, வரலாற்றின்படி உண்மையாகும் என்று யாவரும் இனிது தெளியலாம்.

## ஆய்வுரையாளர் வினு

"இனி 'நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன்.நினையாது ஒருபோதும் இருந் தறியேன். சலம்பூவொடு தூபம் மறந் தறியேன். தமிழோடு இசைபாடல் மறந் தறியேன். நலந்தீங்கிலும் உன்னை மறந் தறியேன். உன் நாமம் என் நாவில் மறந்தறியேன்' என்றபடி, அப்பர் சிவனை மறந்து ஒருபோதும் இல்லை என்ருல், அந்த நிலையில் அவர் சைவரான பிறகே இருந்திருக்க முடியும். அதற்கு முன் சம ணராய் இருந்தபொழுது அவர் சிவனை மறந்து இருந்தறியார் என்ருல்,அது உண் மையாகாதன்ருே?" என ஆய்வுரையா ளர் வினவுகின்ருர்.

## உணர்ச்சித் தடுமாற்றம்

இத்திருப்பதிகம் பாடப் பெற்ற சூழ்நிலை யையும், அதுபோது அப்பர் கொண்டிருந்திருக் கக் கூடிய "உணர்ச்சித் தடுமாற்றம்" மிக்க கொந்தளிப்பான உள்ள நிலையினையும், உள்ள வாறு நாம் உன்னி உணர்ந்துகொள்ளப் பெற் ருல், இவ்வினு நிகழ்தற்கே இடனில்லை. இத் திருப்பதிகம் பாடிய நிலையில் அப்பர் சமணரா வும் இல்லை, முழுதாக மீண்டும் சைவராகி விடவும் இல்லை. 'இருபாற் பட்டு இடையூசல் ஆடி ஒருபாற் படாதென் உளம்' என்றது போன்ற ஒரு நிலையில், அவர் தம் உள்ளம் இங்கும் அங்குமாக ஊசலாடிக் கொண்டே இருந்தது. ஒரு வகையில் அவர் 'இரண்டு கன்றினுக்கு இரங்கும் ஓர் ஆன் என இருந்தார்' என்றது போன்ற உளத் தடுமாற்றம் மிக்க நிலை யிலேயே இருந்தார் எனலாம். எனவே இவ் விரு சமயங்களையும் குறித்து எத்தகைய முடி வுக்கும் வந்துவிடாமல், உண்மை காணும் ஆய்வு நிலைக்குரியவராக மட்டுமே அவர் இருந் தார் எனத் தெரிகின்றது.

## என் போலிகள் : அடியார்

இவ்வுணர்ச்சித் தடுமாற்ற நிலையினை "என் போலிகள் உம்மை இனித்தெளியார் அடியார் படுவது இதுவேயாகில்" எனவரும் அப்பர் திருமொழி கொண்டே யுணரலாம். "என் போலிகள்" என்றது அவர் இன்னும் சமண் சமயச் சார்பினை அறவே விட்டொழித்து நீங்கப் பெருத நிலையையும் "அடியார்" என்றது மீண்டும் சைவசமயம் சார்ந்து கொள்ளுதற் கேற்ற மனமாற்றம் பெற்று நின்ற நிலையையும், குறிப்பிற் புலப்படுத்தி நிற்றல் காணலாம். 'அடியேன் படுவது இதுவேயாகில்' என்னுது 'அடியார் படுவது இதுவேயாகில்' என்றது தன்னைப் பிறன்போற் கூறிய கூற்ருகும். இது 'தன்மையிற் படர்க்கை வந்த வழுவமைதி' எனப்படும்.

அப்பர் இங்ஙனம் உணர்ச்சித் தடுமாற்ற நிலையில் இருந்ததனைக் "காத்தாள்பவர் காவல் இகழ்ந்தமையால் கரை நின்றவர் கண்டு கொள் என்று சொல்லி நீத்தாய கயம்புக நூக்கி

யிட நிலைக்கொள்ளும் வழித்துறை ஒன்றறி யேன்" என வரும் திருமொழி கொண்டும் தெளியலாம். "குறிக்கோள் இலாது கேட்டேன்" என்றதும் கருதுதற் குரியது.

## சிவனை மறவாத சிந்தை

மேலும் பிறசமயச் சூழ்நிலைகளில் இருப்பினும் ஒருவர் தம் முன்னைய சமயத் தெய்வத்தை மறவாதிருத்தல் இயலும் என்பதற்குச் சாக்கிய நாயனர் வரலாறே (The psychology of the Converted recruits) போதிய சான்றாகும். "எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும் மன்னிய சீர்ச் சங்கரன்தாள் மறவாமை பொருள்" என்பதனை மனத்திற் பதித்துக் கொண்டால், அப்பர் சமண் சமயச் சார்பில் இருந்துழியும் சிவபிரானை மறவாத சிந்தையராக (Qualms of Conscience) இருந்திருத்தல் கூடும் என்பது தேற்றம். "விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயம் செய்து எரிவினாற் சொன்னாரேனும் எம்பிராற் கேற்றதாகும்" "யாதோர் தேவர் எனப்படுவார்க்கெலாம் மாதேவன் அலால் தேவர்மற் றில்லையே" என்பன போன்ற அப்பர் அருள்மொழிகளும் ஈண்டு இயைபு படுத்தி எண்ணி உணர்தற்குரியன.

மேலும் அப்பர் சைவராக மாறிய பிறகும் தயாமூலதன்மம் (6-20.6., 6.40.6) என்னும் தலைசிறந்த சமண் சமயத் தத்துவக் கொள்கையினை விடாமல் தழீஇக் கொண்டு, சிறப்புறக் குறிப்பிட்டிருத்தல் காண்கின்றோம். ஆதலின் அவர் சமணராக இருந்தபோதும், தாம் தோன்றிய குலம் குடும்பம் சுற்றம் சூழ்நிலை (Heredity and environment) முதலியனவற்றின் வினைவாற்றல் காரணமாகத் தமது பழைய சிவநெறிக் கொள்கைகள் பலவற்றைக் கைவிடாமல் ஓரோ வழி ஏற்ற பெற்றி போற்றியிருந்திருப்பார் எனத் துணிவதற்கு ஏது உள்ளது. ஆதலின், 'சிவனைமறந்து ஒருபோதும் இராத நிலைமையில் அவர் சைவரான பிறகே இருந்திருக்க முடியும்' என்றல் பொருந்தாது.

## 'வாழலுற்றால்...'

2. "'துணிந்தே யுமக்கு ஆட்செய்து வாழலுற்றால் சுடுகின்றது சூலை தவிர்த்தருளீர்' என்ற இடத்தில், முன் இரண்டு பாக்களில் சொன்னதைவிட வெளிப்படையாக, நான் துணிந்து சமண சமயத்தை விட்டுச் சைவனாகி உமக்குத் தொண்டு செய்து வாழ்கின்றேன். இந்நிலையில் எனக்குச் சூலைநோய் வந்ததே, இதைத் தவிர்த் தருள்வீராக! என்று தமக்குச் சூலைநோய் தோன்றியது எப்போது என்பதை அப்பர் வெளிப்படுத்துகின்றார். 'வாழலுற்றால்' என்றதனால் நோய் தோன்றுமுன் சிலகாலம் சைவராக வாழ்ந்தார் என்பது பெறப்படும்"—என ஆய்வுரையாளர் துணிகின்றார்.

'வாழலாற்றால்' என்ற சொல்லின் இயல்பு அவர் கருத்துக்கு ஆக்கம் தருவதன்று. அது 'செயின்' என்னும் வாய்பாட்டு வினையெச்சப் பொருளில் எதிர்காலத்தைக் குறிப்பிடுகின்றது. ஆதலின், அஃது அப்பர் இன்னும் சிவபிரானுக்கு ஆட்செய்து வாழலுறத் தொடங்கவில்லை என்பதனையே புலப்படுத்தும். 'துணிந்தே உமக்கு ஆட்செய்து வாழலுற்றால்' என்றதனால், அவர் சிவபெருமானுக்கு ஆட்செய்து வாழ்தற்கண் இன்னும் துணிவுகொள்ள இயலாது ஐயுறவு நிலையில் இருந்தார் என்பதே வெளிப்படும். எனவே, 'அப்பர் நோய் தோன்றுமுன் சில காலம் சைவராக வாழ்ந்தார்' என்பது பொருந்தாது.

மேலும் 'வாழலுற்றால்' என்னும் வினையெச்சம் 'சுடுகின்றது' என்னும் சொல்லோடு இயையாமல், 'தவிர்த்தருளீர்' (போக்கியருள்வீராக) என்னும் வினைமுற்றையே ஏற்று முடிவதாகக் கொள்ளுதல் வேண்டும். ஆய்வுரையாளர் அவர்கள் கொள்ளுமாறு போன்று, 'சுடுகின்றது சூலை' என்பதனைத் தெரிநிலை வினைமுற்றுத் தொடர் எனக் கொள்ளாமல், 'சுடுகின்றதாகிய சூலை நோய்' என இருபெயரொட்டுச் சொற்றொடர் எனவே கோடல் வேண்டும். தமக்குச் சூலைநோய் தீர்த்தருளினால், தாம் இனி அவர்க்குத் துணிந்து ஆட்செய்து வாழலுற ஒருப்படும் துணிவை உணர்த்தும் 'வேண்டுகோள் முறை' (நேர்த்திக் கடன்) இயல்பும் இதனால் இனிது விளங்கும். "ஆட்செய்து வாழலுற்றால் சுடுகின்றது சூலை" எனச் செய்யுளிற் கிடந்தவாறே பொருள் கொள்ளின், சூலைநோய் சுடுகின்றது போல வருத்துவதற்கு, ஆட்செய்து வாழலுறுவதே காரணம் என விபரீதப் பொருள்பட்டு, ஆட்செய்து வாழ்தலையே பயனின்று எனக் குற்றம் சாற்றியதாக (Indictment) முடியும்.

3. " 'உயர்ந்தேன் மனைவாழ்க்கையும் ஒண்பொருளும்...' 'வலித்தேன் மனைவாழ்க்கை மகிழ்ந்தடியேன்...' என வருவனவற்றுல் அப்பர் சமண மதத்தில் மாணி (பிரம்மசாரி)யாம் வேடம் தாங்கி இருந்ததை ஒழித்துச் சைவராகித் தமக்கையுடன் இல்லற வாழ்வில் இருந்த போது தான் சூலைநோய் தோன்றிற்று என்பது தெற்றெனத் தெரிகின்ற தல்லவா ? இவர் முன்னிருந்த சமண நிலையில் மனைவாழ்க்கை ஏது ?"—என ஆய்வுரையாளர் வினவுகின்ருர்.

சமண மதத்தில் மனைவாழ்க்கை இல்லை என்பதற்கோ, அல்லது அப்பர் சைவராக மாறியபிறகு மனை வாழ்க்கைதான் மேற்கொண்டிருந்தார் என்பதற்கோ தெளிவான போதிய சான்றுகள் இல்லை. சமணமதம் சார்ந்தவர்களிடையும் மனைவாழ்க்கை நிலையினராகிய இல்லறத்தார் (உலக நோன்பிகள்) உண்டு என்பதும், அவர்கள் சிராவகர் அல்லது சாவகர் எனப்படுவர் என்பதும்,

"வண்டுபடப் பழுநிய தேனுர் தோற்றத்துப்
பூவும் புகையும் சாவகர் பழிச்ச"

எனவரும் மதுரைக்காஞ்சி வரிகளானும், சமண் சமயம் சார்ந்து இல்லிருந்து விரதங் காத்தொழுகும் 'சிராவகர்'களுள் ஒருவனுகக் கோவலனை மாதரி குறிப்பிடுவதாகப் போதரும்,

"சாவக நோன்பிகள் அடிகள் ஆதலின்
நாத்தூண் நங்கையொடு நாள்வழிப் படூஉம்
அடிசில் ஆக்குதற்கு அமைந்தநற் கலங்கள்
நெடியா தளிமின் நீர்"

எனவரும் சிலப்பதிகாரம்'அடைக்கலக் காதை' வரிகளானும் ஐயுறவின்றி அறியப்படும்.

### உயர்ந்தேன்: வலித்தேன்

அன்றியும் மேலைத் தொடர்களுக்குரிய இயல்பானபொருள், ஆய்வுரையாளர் கருதும் பொருளின் அறவே வேறுபட்டதாகும். 'உயர்ந்தேன்' 'வலித்தேன்' என்பன ஈண்டுச் செருக்குற்று மயங்கினேன் என்னும் பொருட்குறிப்பு உடையனவாகும். இவ்வாறே 'மனைவாழ்க்கை' என்னும் தொடர் இல்லறவாழ்வு என்பதனைத் தான் ஈண்டுக் குறித்ததா? என்பதும் ஐயத்திற்குரியது. 'உயர்ந்தேன் மனையும்+வாழ்க்கையும்+ஒண்பொருளும் என அத் தொடரை உம்மை விரித்துப் பொருள் கொள்ளுதற்கும் இடனுள்ளது.

மாசில்மனத் துயர்ஒழிய மருள்நீக்கி யார் நிரம்பித்
தேசநெறி நிலையாமை கண்டறங்கள்செய்வாராய்க்
காசினிமேற் புகழ்விளங்க நிதியளித்துக் கருணையினல்
ஆசிலறச் சாலைகளும் தண்ணீர்ப்பந் தரும் அமைப்பார்
காவளர்த்தும் குளந்தொட்டும் கடப்பாடு வழுவாமல்
மேவினர்க்கு வேண்டுவன மகிழ்ந்தளித்தும் விருந்தளித்தும்
நாவலர்க்கு வளம்பெருக நல்கியும்நா விலத்துள்ளோர்
யாவருக்கும் தவிராத ஈகைவினைத் துறைநின்ருர்

எனச் சேக்கிழார் சுவாமிகள் பாடுவதுபோல, பசு புண்ணியங்கள் பலவற்றைச் செய்த தாம், பதி புண்ணியங்கள் செய்து முன்னரே இறையருள் பெறமுயலா தொழிந்த தம் இழிதக வினையே, அப்பர் 'உயர்ந்தேன்' 'வலித்தேன்' எனக் குறிப்பிட்டருளினுர் என்பதே சிவநெறிப் பேரறிஞர்கள் துணிபு.

அப்பர் தம் இளமைப் பருவத்திற் செய்த அறங்கள் இறை நினைவோடு இயையாத வெறும் பசு புண்ணியங்களே என்பது, 'மனத் துயர் ஒழிய' 'தேச நெறி—நிலையாமை கண்டு' 'புகழ் விளங்க' எனவரும் தொடர்களால் சேக்கிழார் பெருமான் குறிப்பிட்டருளியிருத்தல் பற்றி உணர்ந்து கொள்ளப்படும்.

எனவே. 'உயர்ந்தேன் மனைவாழ்க்கை' 'வலித்தேன் மனைவாழ்க்கை மகிழ்ந்தடியேன்' என்பனவற்றுல், அப்பரை இல்லற வாழ்வு மேற்கொண்டவராகக் கொண்டு, அவர் இத் திருப்பதிகம் பாடிய பொழுது சைவராகி விட்டிருந்தார் எனத் எணிதல் அமையாது.

### சூலைநோய் இருமுறை வந்ததா?

"முன்னம் அடியேன் அறியாமையினுல் முனிந்தென்னை நலிந்து முடக்கி

யிடப் பின்னை அடியேன் உமக்கு ஆளும் பட்டேன்' என வருவதனுல், முதலில் ஒருமுறை அப்பர்க்குச் சூலைநோய் தோன்றியதென்றும், அதனுல் அவர் சைவரானுர் எனத் தெரிகின்றதென்றும், இப்பாடல்களால் விளக்கப்படும் சூலைநோய் இரண்டாம்முறை வந்ததென்றும், அது 'Appendicitis' என இக்காலத்தில் கூறப்படுவதாக இருக்கலாம்'' என்றும் ஆய்வுரையாளர் அறிவிக்கின்ருர்.

இங்ஙனம் சூலைநோய் அப்பருக்கு இருமுறை வந்ததென்பது ஆய்வுரையாளரின் வெறும் உன்னமே (Figment of imagination) யன்றி, அதற்குச் சான்று வேறு எதுவும் இல்லை. அப்பருக்கு வந்த சூலைநோய் 'Appendicitis' என இக்காலத்தார் வழங்கும் நோய்தானு? என்பது குறித்தும், சான்றில்லாமையால் நாம் தெளிவாக எதுவும் துணிவதற்கில்லை. இன்னேரன்னவை 'தன்னுன் ஒருபொருள் கருதிக் கூறல்' எனவே அறிஞர்களாற் கொள்ளப்படும்.

அப்பரின் சூலைநோயை நம்போலியர்க்கு உடற்சார்பு பற்றிவரும் சாதாரண நோய்(Physical illness) போலவே வைத்து ஆய்வுரையாளர் எழுதிச் செல்லுகின்ருர். அது பெருந்தவறு. 'அன்னவனை இனிச் சூலை மடுத்தாள்வம்' எனத் திலகவதியார்க்குக் கனவின்கண் மொழிந்தபடியே இறைவன் விளைவித்த 'திருவருள் நோய்' (Blessed illness bestowed by Divine grace) அது, என்பதனை நாம் நம் கருத்தில் நன்கு பதித்தல் வேண்டும். 'தொண்டரை ஆளத் தொடங்கும் சூலை வேதனை' (50) 'கற்றை வேணியர் அருளே காணும் இது' (65) எனப் பல இடங்களிற் பெரிய புராணம் குறிப்பிடுதல் காண்க. 'பிணிகாட்டி ஆட்கொண்டு பிணிதீர்த்த ஆரூரர்' என வரும் அப்பர் திருமொழியும், 'இறைவன் அவ்ரை ஆட் கொள்வதன் பொருட்டுப் பிணி காட்டினுர்—ஆட்பட்டதும் பிணி தீர்த்தருளினுர்' என்னும் செய்தியைப் புலப்படுத்தி நிற்றல் தெளிக. அப்பரின் சூலைநோய் Appendicitis என இக்காலத்தார் கூறுவதாக இருக்கலாம் என்றும், அதனுல் அஃது இருமுறை வந்ததாகல் வேண்டும் என்றும் ஆய்வுரையாளர் துணிவது 'ஒன்றனை ஒன்று பற்றல்' (Petitio Principii) என்னும் தருக்கநூற் குற்றமாகும்.

**முன்னம்–பின்னை :**

அப்பருக்குச் சூலை நோய் இருமுறை வந்ததாகல் வேண்டும் என்பதனை நிறுவும் சான்ருக அவர் காட்டும் மேற்கோளுக்கு அவர் கருதும் பொருள் 'ஓர்த்தது இசைக்கும் பறை' என்பதற்கேற்ப வலிந்தும் நலிந்தும் கொள்ளப் படுவதாகும். அம் மேற்கோளில் அமைந்துள்ள 'முன்னம்' என்னும் சொல் 'அறியாமை' என்பதனைத் தழுவி நிற்க, அடுத்துவரும் 'பின்னை' என்பது அவ்வறியாமை நீங்கிய அறிவு நிலையினைச் சுட்டுகின்றது எனக் கொள்ளுதலே பொருத்தம். முன்னைய அறியாமை நிலை சிவபிரானுக்கு ஆட்படா தொழிந்த நிலை என்றும், பின்னைய அறிவுநிலை ஆட்பட்ட நிலை என்றும் கொள்ளுவதே இயல்பான உண்மைப் பொருளாகும்.

**பட்டேன்-படுவேன் :**

'பின்னை அடியேன் உமக்கு ஆளும்பட்டேன் என்புழிப் 'படுவேன்' எனற்பாலதே விரைவும் தெளிவும் பற்றிப் 'பட்டேன்' எனப் பெற்றதெனக் கோடல் வேண்டும்.

> வாராக் காலத்தும் நிகழும் காலத்தும்
> ஓராங்கு வருஉம் வினைச்சொற் கிளவி
> இறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல்
> விரைந்த பொருள என்மனூர் புலவர்.

என்பது தொல்காப்பியம். அன்றியும் கவிஞர் திரு. சுப்பிரமணிய பாரதியார் அவர்கள், நம் இந்தியப் பெருநாடு சுதந்திரம் அடைவதற்கு நெடுநாட்கு முன்னரே 'ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோம்' என்று பாடியிருத்தலும் பிறவும் ஈண்டுக் கருதி உணர்தற்குரியன.

எனவே, அப்பர் இத்திருப்பதிகம் பாடிய போது சமண் நெறியினின்று மீண்டு சிவநெறி சேர்தற்குரிய மனநிலையினை எய்தியிருந்தார் எனக் கோடலே வாய்வதாகுமன்றி, அவர் இதற்கு முன்னரே சைவராக மாறிவிட்டிருந்தார் என்று துணிதல் அமையாது.

**என்போலிகள்**

(5) "இறுதியாக மேற்சொன்னவைகளை யெல்லாம் உறுதிப்படுத்த அச்சாணி

அன்னதோர் வரி ஒன்பதாவது செய்யுளிற் காணப்படுகின்றது. அது யாதெனில் 'என் போலிகள் உம்மை இனித் தெளியார் அடியார் படுவ திதுவேயாகில்' என்பது. இங்கே நாவுக்கரசரின் கருத்து என்ன? 'என்போன்று பிற சமயத்தில் இருந்து சைவ சமயத்தைத் தழுவியவர்கள் படும்பாடு இதுவேயானல், இனி ஒரு போதும் எவரும் நீரே உண்மைக்கடவுள்-சைவசமயமே சமயம்' என்னும் கூற்றுக்களை ஒப்புக்கொள்ள மாட்டார்கள் என்பது அல்லவோ? இதில் இருந்து அவருக்குச் சூலைநோய் வந்தது சமண சமயத்தை விட்டுச் சைவரான பின்னரே என்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல விளங்குகின்ற தன்றோ?''—என ஆய்வுரையாளர் 'முடிந்தது முடித்தல்' ஆகத் துணிந்து கூறிவிடுகின்றார்.

'என் போலிகள்' என்பதற்கு 'என்னைப் போன்று பிற சமயத்தில் இருந்து சைவ சமயத்தைத் தழுவியவர்கள்' என ஆய்வுரையாளர் பொருள் கொள்ளுகின்றார். 'என்னைப்போன்ற தெளிவில்லாதவர்கள்' என்பதே நேரிய இயல்பான பொருளாகும். 'தெளியார்' எனப் பின் வருவதனல் 'என் போலிகள்' என்று சுட்டியது தெளிவில்லாதவர்களையே என்பது பெறப்படும்.

தெளிவில்லாதவர்களோடு தம்மையும் ஒருவராகச் சேர்த்துக்கொண்டு 'என் போலிகள்' என்றருளிச் செய்தமை, அப்பர் பெருமானின் 'தாழ்வெனும் தன்மை' ஆகிய சான்றாண்மைப் பண்பினை அறிவிப்பதாகும். இவ்வாறன்றி இச் சொற்கிடக்கை முறையில், ஒரு சமயஞ் சார்ந்ததும் பிறிதொரு சமயத்தை விடுத்ததுமாகிய குறிப்பெதுவும் பெறப்படவில்லை.

## தெளியார் என்றதன் செம்பொருள்

அறிவுடையவர்கள் தாம் அனுபவிக்க நேரும் துன்பங்களுக்கு, முன்னர்த் தாம் செய்த தீவினையே காரணம், அவற்றிற்கு இறைவன் பொறுப்புடையவன் ஆகான் என உணர்ந்து, அத் துன்பங்களை அனுபவியா நின்றுகொண்டே இறைவனுக்கு, அடிமை செய்துகொண்டொழுகுவர். ஆனல்,

தீதும் நன்றும் பிறர்தர வாரா
நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன

என்னும் தெளிவுணர்வைப் பெருதவர்கள், அவ்வாறு ஒழுகாமல் தம் துன்பங்களுக்கெல்லாம் காரணமாக இறைவனையே பழித்துக் கூறுவார்கள். ஆதலின், அடியேனுகிய யான் படும் சூலை நோயின் கொடுமை இத்தகையதாயின், இதனையே எடுத்துக் காட்டி 'இறைவழிபாட்டாற் பயனில்லை எனத் தெளிவில்லாதவர்கள் இறைவனுகிய நின்னைப் பழித்துரைப்பார்கள்' என்னும் கருத்திலேயே, அப்பர் பெருமான் 'என் போலிகள் உம்மை இனித்தெளியார் அடியார் படுவது இதுவேயாகில்' என்று அருளிச் செய்தனர் என உணர்ந்து கொள்ளுதலே, ஈண்டைக்கு ஏற்புடையதாகும்.

## ஆய்வுரையின் குறைபாடுகள்

ஆய்வுரையாளர் கருத்தின்படி 'அப்பர் சைவராக மாறிய காலத்தில்தான் அவருக்குச் சூலைநோய் உண்டாயிற்று' எனத் துணிந்து கூற முற்படுவது, சைவ சமயத்திற்குக் களங்கம் கற்பிப்பதாகவே முடியும்.

அன்றியும் சமணராக இருந்த அப்பர் சைவராக மீண்டதற்குரிய காரணமும் சூழ்நிலையும் அதனல் விளங்காமற்போகும். 'பிணி காட்டி ஆட்கொண்டு பிணி தீர்த்த ஆரூரர்' 'ஆமயந் தீர்த்து அடியேனை ஆளாக் கொண்டார்' 'பொல்லா என் நோய்தீர்த்த புனிதன் தன்னை' என்பன போன்று அப்பர் பாடல்களில் ஆங்காங்குப் போதரும் அகச் சான்றுகள் புறக்கணிக்கப்பட்டுப் பொருளிழந்து பொலிவழியும்.

ஆய்வுரையாளர் கூற்றின்படி, அப்பர்க்குச் சூலைநோய் இருமுறை வந்ததெனின், அஃது அருளாற் போந்த நோய் எனப்படா தொழியும். அப்பர் முதன்முறைச் சூலை நோயால் சைவராக மாறியிருந்த காலத்தில்தான் இரண்டாம் முறைச் சூலைநோய் வந்ததெனக் கொள்ளின், அப்பர் முதன்முறைச் சூலை நோயால் சைவராக மாறியமை பயனில்லாச் செயலாக மதிக்கப் படும்.

அப்பருக்குச் சூலைநோய் ஏற்பட்டமை இறையருட் செயலே என்பதனையும், அப்பர் சைவராக மாறியமை தமிழக வரலாற்றில் ஒரு மாபெருஞ் சிறப்பு நிகழ்ச்சி (Historic incident) என்பதனையும், நேர் முகமாக இல்லையாயினும், மறைமுகமாக மறுத்துரைக்கும் குறிப்பு, ஆய்வுரையாளரின் கட்டுரைப் போக்கில் அமைந்துள்ளது.

இவ்விரு பேருண்மைகளையும் குறிப்பாக வேனும் மறுத்துரையாடுதல், முறையே இறை யுணர்வும் வரலாற்றுணர்வும் இல்லாதவர் கட்கே ஏற்புடைத்தாகுமன்றி, மிகச் சிறந்த நல்ல பேரறிஞராகிய ஆய்வுரையாளர் அவர் கட்கு ஏற்புடைத்தாகாது.

## மனமாற்றமும் மதமாற்றமும்

அப்பரின் சூலைநோய் ஒருபுறம் இருப்ப, அவர் தம் சமயமீட்சி குறித்து வேறு சிலவும் கூறுதல், இக்கால நிலையில் ஈண்டு மிகவும் இன்றியமையாததாகும். சமயம் அல்லது மதம் எனப்படுவது தனித்ததொரு பொருளன்று. அஃது ஒரு நாட்டு மக்களின் வாழ்க்கை-மொழி-நாகரிகம்-பண்பாடு-அரசியல் முதலிய பலவற் றோடும் பிரிவற விரவிப் பிணைந்து கலந்து நிற்பது. எனவே, அப்பர் பெருமான் தாம் இடையிற் புகுந்த வேற்றுச் சமயத்தினின்று மீட்டும் சிவ நெறிக்குத் திரும்பியமை, தமிழ்நாடு தமிழ் மொழி தமிழினம் தமிழ்ப் பண்பாடு தமிழ்க் கொள்கை தமிழ் நாகரிகம் தமிழ்நாட்டரசியல் முதலியவற்றின் நலங்களுக்குத் தாம் புதிது புகுந்த சமயச் சூழ்நிலை மாறுபட்டதாதலை நன் கினிது கண்டுணர்ந்த அனுபவத்தின் விளைவே யாகும்.

ஆதலின் அப்பர் மீண்டும் சிவநெறி சேர்ந் தமை மனமாற்றமே யன்றி மதமாற்றம் அன்று எனத் தெளிதல் வேண்டும். மனமாற்றம் பெரி யோர் செயல். மதமாற்றம் சிறியோர் செயல். இரண்டிற்கும் இடையீடு மிகமிகப் பெரிது என் றுணர்க!

'புந்திவட் டத்திடைப் புக்குநின்
றானையும் பொய் என்பனே?

என இரண்டிடங்களில் அருளிச் செய்திருத்த லால், அப்பரின் மனச் சான்றுடைய பண்பின் மாண்பு இனையதென நாம் எண்ணியுணரலாம்.

"கூவ லாமை குரைகடல் ஆமையைக்
கூவ லோடொக் குமோ கடல் என்றல்போல்"

என்பது போன்று வரும் திருமொழிகளால், அப் பர் பெருமான் சமயங்களுள் உயர்வு தாழ்வு கரு தும் தன்மையர் அல்லர் என்பதும் தெளிவாம்.

## அப்பரின் தமிழியற்பற்று

தமிழ்நாட்டுப் பற்று தமிழ்மொழிப் பற்று தமிழினப் பற்று தமிழ் நாகரிகப் பண்பாட்டுப் பற்று முதலியனவே அப்பரின் மனமாற்றத்துக் குக் காரணம் என்பதனை நாம் ஆராய்ந்துணர் தல் வேண்டும்.

"பற்றிலா வாழ்க்கை வாழ்ந்து
பாழுக்கே நீர்இ றைத்தேன்
உற்றலாற் கயவர் தேரூர்
என்னும்கட் டுரையோ டொத்தேன்"

"தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்"

என்பன போன்று வரும் அப்பரின் அருண் மொழிகள் அவர்தம் தமிழியற் பற்றினை விளக் கப் போதியசான்றாகும். ஆகவே, அப்பர் சமண ராக இருந்து சைவராக மாறினர் என்று கூறு தலை விடத் தமிழராக மாறினர் எனக் கூறு தலே மிகவும் பொருந்துவதாகும் எனலாம்.

பிற்காலத்தில் தமிழ்நாட்டில் வாழ்ந்து விளங்கிய சமண பௌத்தச் சான்றோர்கள் பல ரும், தாம் மதத்தால் வேறுபடினும் இனத்தால் தமிழர் எனத் தம்மை உணர்ந்துகொண்டு, தமிழ்த் தொண்டுகள் பலவும் ஆற்றுதற்கு வழி கோலிய பெருமை, இவ்வாற்றல் அப்பரடிக ளார்க்கே யுரியதாகும்.

## அப்பர் தமிழ் நாட்டுத் தந்தை :

இற்றைய நாளில் நாம் காந்தியடிகளை நம்தேசபிதா—நாட்டின் தந்தை-பாபுஜி 'The Father of the Nation' என்றெல்லாம் எவ் வெச் சிறப்புகள் குறித்துப் பாராட்டுகின் றோமோ, அவ்வச்சிறப்புகள் குறித்தே திரு ஞான சம்பந்தப் பெருமான் திருநாவுக்கரசரை 'அப்பர்' (தமிழ் நாட்டுத் தந்தை) எனப் பாராட் டிப் போற்றியருளினர் போலும்! "தேசம் உய்ய வந்தவர்" (31-21) தமிழ்மொழித் தலைவர் (34-598) எனச் சேக்கிழார் சுவாமிகள் திரு நாவுக்கரசரைப் பாராட்டிக் குறிப்பிடும் புக ழுரைகளும் ஈண்டுக் கருதி யுணர்தற்குரியன.

## முடிப்புத் தொகுப்புரை :

இதுகாறும் கூறியவாற்றல், அப்பர் சமண் சமயம் சார்ந்து இருந்தபோதுதான் அவருக்குச்

# அருந்துணை ஆவன அப்பர் பாடல்கள்

டாக்டர் திரு. மொ. அ. துரை அரங்கசாமி, M.A., M.O.L., Ph.D.

அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவரும் பாடிய பாடல்களைத் தேவாரம் என்று வழங்கி வருகிறோம். இவ்வழக்கும் பதினாறும் நூற்றாண்டிலிருந்து தொடங்கியதே ஆகும். பதினைந்தாம் நூற்றாண்டினதான சிவப்பிரகாசப் பெருந்திரட்டில் அப்பர் பாடல்களே தேவாரம் என்று குறிக்கப்பட்டுள்ளன. சம்பந்தர் பாடல்கள், திருக்கடைக்காப்பு என்றும், சுந்தரர் பாடல்கள் திருப்பாட்டு என்றுமே குறிக்கப்பட்டுள்ளன. பதினைந்தாம் நூற்றாண்டிற்கு முற்பட்ட பழையவர்களாகிய பட்டினத்தடிகளாலோ, நம்பியாண்டார் நம்பியாலோ, சேக்கிழாராலோ மூவர் பாடல்கள், தேவாரம் என்று குறிக்கப்படவில்லை. தேவாரம் என்ற சொல்லையே அவர்கள் ஆளவுமில்லை. இது எவ்வாறாயினும் அப்பர் பாடல்களே முதல் முதல் தேவாரம் என்று வழங்கப் பட்டன என்பது வரலாற்று உண்மையாகும்.

தேவாரம் என்ற சொல் பழந் தமிழ்க் கல்வெட்டுக்களில் பயின்று வருதலைக் காண்கின்றோம். கோயில்களுக்குச் சென்று அனைவரும் ஒருசேரப் பொதுவாக வழிபாடு ஆற்றுகின்றோம். அதனொடு, வீடுகளில் பூசை அறை அமைத்துத் தனி வழிபாடும் ஆற்றுகின்றோம். இங்ஙனம் ஆற்றும் தனி வழிபாடு அல்லது தனி வழிபாட்டிற்குக் கொள்ளும் உருவத் திருமேனி (மூர்த்தி) யையே தேவாரம் என்ற சொல் குறிப்பதாகும் என்பது பண்டைத் தமிழ்க் கல்வெட்டுக்களில் இருந்து புலனாகின்றது. தனி வழிபாட்டிற்கு, உள்ளங்கனிந்து பாடும் பாடல்கள் உறுதுணை ஆவனவாகும். தேவாரமாகிய வழிபாட்டிற்கு உறுதுணையாக அப்பர்பாடல்களே முதல் முதலில் மக்களால் விரும்பிக் கொள்ளப்பட்டன எனலாம். எனவே, தேவாரத்திற்கு உறுதுணையான அப்பர்பாடல்கள் தேவாரம் என்றே வழங்கப் பட்டன எனலாம். இதனால் அப்பர்

---

அப்பரைப் பற்றிய ஓர் ஆய்வுரை......

சூலைநோய் தோன்றியது என்றும்; கொல்லாது சூலைநோய் குடர்முடக்கத் தீராது என்று சமணர் எல்லாம் கைவிட்டதனால்தான், 'ஒவ்வா இப் புன்சமயத்து ஒழியாத இத்துயர் ஒழியச் செவ்வாறு சேர் திலகவதியார் தாள்சேர்வேன்' என்று அப்பர் திருவதிகை வீரட்டானம் அடைந்து, 'கூற்றாயினவாறு விலக்ககிலீர்' என நீடிய கோதில் திருப்பதிகம் பாடினார் என்றும்; அத்திருப்பதிகம் பாடிய பின்னரே அவருக்குச் சூலை நோய் தீர்ந்தது என்றும்; அச்சூலைநோய் அப்பருக்கு இறையருளால் விளைந்ததே என்றும்; அஃது அவருக்கு இருமுறை வந்தது என்பதற்குச் சான்றில்லை என்றும்; அப்பரை இறைவன் சூலை மடுத்துச் சிவநெறி மீளச் செய்த திருவருட் செயல், தமிழ் நாட்டின் வளர்ச்சிக்கும் சிறப்புக்கும் பல்லாற்றானும் நன்மை விளைத்தது என்றும்; அப்பர் பெருமான் தமிழர் அனைவராலும் "தமிழ் நாட்டுத் தந்தை" எனப் போற்றிப் புகழத் தகுந்த சிறப்புடையவர் என்றும் இனிது தெளியலாம்.

சூலைநோய் தலைக்கீ டாகத்
தொல்சிவ நெறிக்கு மீண்டு
மூலையும் முடுக்கர் தோறும்
முத்தமிழ் முழங்கும் வண்ணம்
சாலநற் புரட்சி செய்த
'தமிழ் நாட்டுத் தந்தை' யாகும்
சீலமார் அப்பர் பெம்மான்
சிறப்பெலாம் போற்றி யுய்வாம்

—ந. ரா. முருகவேள்,

பாடல்களின் சிறப்புச் சொல்லாமலே விளங்குவதாகும். பின்னர் சம்பந்தர் பாடல்களும் சுந்தரர் பாடல்களும் வழிபாட்டிற்குக் கொள்ளப் பட்டனவாதல் வேண்டும். எனவே, அவைகளும் தேவாரம் என்ற வழக்குப் பெற்றனவாதல் வேண்டும். தனிவழிபாட்டிற் கன்றிக் கோயிலிற் பொது வழிபாட்டிற்கும் மூவர்பாடல்களும் தேவாரம் என்ற வழக்கோடு ஆளப்பட்டனவாதல்வேண்டும்.

நான்-எனது என்னும் செருக்கு மக்களுக்கு இயற்கையாக ஏற்படுவதாகும். இச் செருக்கால் விளைவது துன்பமே. துன்பத்தைப் போக்கிக்கொண்டு இன்பத்தையடைய விரும்புவதும் மக்களுக்கு இயற்கையாகும். முயற்சியால் அதையடைய முற்படுகின்றோம். முயற்சி ஒன்றாலேயே அதையடைய முடியாது போவதைக் கண்டு திகைப்படைகின்றோம். ஆண்டவன் அருட்டுணையோடு கூடிய முயற்சியால் ஆகாதது இல்லை என்று சான்றோர் எனப்படும் குருமார் உணர்த்த உணர்ந்து அவ்வகையில் முயன்று வெற்றியுற்று மகிழ்ச்சி எய்துகின்றோம். மக்களுடம்பு எடுத்த ஒவ்வொருவருடைய வாழ்க்கையிலும் இவ்வுண்மையைக்காணலாம். வாழ்க்கையில் வளர்ச்சி பெற்றுப் பிறப்பறுக்க விழைபவர் ஆண்டவன் அருட்டுணையை நாடிநின்று முயன்று பிறப்பறுத்துப் பேரின்பம் கூடுவர். மற்றவர் தம் அறியாமையால் அத்துணையை நாடாமல் செருக்கால் அல்லற்பட்டுப் பிறந்திறந்துழல்வர்.

பிறந்த நாள் தொடங்கியே கல்விகேள்வி அறிவு ஒழுக்கம் ஆகியவற்றில் வளர்ச்சியுற்றுச் சிறப் பெய்தியவர் அப்பர் என்பதில் ஐயம் இல்லை. குடிப் பெருமை சான்ற வேளாளர் மரபில் அவர் பிறந்தார். மேலும் மேலும் ஆக்கம் பெற்றுச் சிறப்பதென்ற ஆமூரே அவர் பிறந்த ஊர். திருமுனைப் பாடிநாட்டைச் சார்ந்த திருவாமூர் அதுவென்றால், அவர் பிறந்த ஊர் அவருக்கு எல்லா ஆக்கமும் அளிப்பதாம் என்பது சொல்லத் தேவையில்லை. புகழுக்கு உறைவிடமாகிய புகழனாரே அவருடைய தந்தையார். மாதர் கட்கெல்லாம் இனியாரான மாதினி யாரே அவருடைய தாயார். குடி, ஊர், பெற்றோர் ஆகிய சூழ்நிலைகளின் சிறப் பெய்தியவராதலால் பிறப்பிலேயே மருள் நீக்கியார் அவர் என்று எண்ணி எண்ணி அவருக்கு மருள் நீக்கியார் என்று பெயரிட்டுக் களிப்பெய்தினர் அவருடைய பெற்றோர். ஆனால் வயதேற ஏறத் தம் கல்வி ஒழுக்கச் சிறப்புகளால் அவர் செருக்கின் வலையில் சிக்குண்டார். தந்தையார் புகழனார் இறந்தார்; தாயார் மாதினியார் உடன் கட்டை ஏறினார். இனி அவருக்கு இருப்பவர் தமக்கையார் திலகவதியார் ஒருவரே. அவரை மணக்க இருந்த கலிப்பகையார் போர்க்களத்தில் மாண்டார். எனவே, திலகவதியாரும் உடன்கட்டை ஏற ஏற்பாடு செய்தார். தம்பியார் மருள் நீக்கியார் கதிகலங்கினார்; தமக்கையார் இறந்தால் தாமும் இறப்பதாக முடிவு செய்து தமக்குத் தந்தையாகவும் தாயாகவும் கடமையாற்றிக்காக்க உடன் கட்டை ஏறலை விட்டுவிட வேண்டும் என்று கதறித் தமக்கையிடம் முறையிட்டார். கணவ னிழந்ததால் திலகமிழக்கின்ற திலகவதியார், இனி தமக்கு என்றும் பிரியாத தலைவன் இறைவனே என்று உறுதி பூண்டு, என்றும் திலகமிழவாத் திலகவதியாராய்ச் சைவம் தழைக்கவும், தம்பியால் அது என்றென்றும் நிலைத்து நிற்கவும் அருள் செய்ய வேண்டுமென்று, இறைவனை வேண்டிக் கொண்டு உடன் கட்டை ஏறலைக் கைவிட்டுத் தம்பியை ஓம்பிக் காப்பாராயினர். இடிமேல் இடி விழுவதுபோல் இவ்வளவு இடுக்கண் உற்றும் சைவ நன்னெறியில் நிலைத்து நிற்கும் ஊற்றத்தைக் கைவிட்டு விஷப்பரீட்சை செய்ய முற்படுவது போல் கல்வியிலும் ஒழுக்கத்திலும் வெளிப் பகட்டுக் கொண்டுள்ள சமணசமய நெறியின் உண்மையை அறியவேண்டிச் சமணர் சூழலில் அப்பர் புகுந்தார். சமண சமய நுண்மைகளை ஐயந் திரிபற உணர்ந்தார்; தருமசேனர் என்ற பட்டமும் பெற்றுச் சிறப் பெய்தினர். கருவுற்ற நாள் முதலாக இறைவனை மறவாது போற்றிவந்த அப்பர், சமண சமய மயக்கத்தால் இறைவனை மறந்தார். முயற்சியாலும் ஒழுக்கத்தாலும் பிறப்பற்றுப் பேரின்பம் உறலாம் என்பது சமண சமயக் கொள்கையின் முடிவாகும். இறைவன் ஒருவன் உண்டென்பதே சமண சமயத்தாருக்கு உடன்பாடன்று. எனவே, மருள் நீக்கியாரான அப்பர் இறைவனை மறந்ததில் வியப்பில்லை. தம்பியால் சைவம் தழைக்கவும் நிலைபெறவும் வேண்டும் என்பதற்காகவே உடன்கட்டை ஏறாமல் உயிர் வாழ முற்பட்ட திலகவதியார் உள்ளம் எவ்வளவு புண்பட்டிருக்கும் என்பது கூறவும் வேண்டுமோ திருவதிகை வீரட்டானத்தை அடைந்து தம்

பிணியைத் தடுத்தாட் கொள்ள வேண்டுமென்று ஆண்டுறையும் இறைவனிடம் திலகவதியார் ஓலமிட்டார். எல்லா அருளும் உடைய இறைவன் தன்னையே பற்றுக் கோடாகப் பற்றியிருக்கும் திலகவதியார் துன்பத்தைக் கண்டு வாளா இருப்பனோ? தண்டத்தாலன்றி அப்பரை வழிப்படுத்தல் ஒல்லாதென்று இறைவன் திருவுளங்கொண்டான்; அவருடைய வயிற்றில் சூலைநோயை உண்டாக்கினன். சமணர்கள் மணிமந்திர மருந்துகளைக் கொண்டு தங்கள் முயற்சியால் சூலை நோயைப்போக்க அரும்பாடு பட்டும் முடியாமல் அப்பர் தமக்கையாரை அடைக்கலம்புகுந்தார். அன்னையும் தந்தையுமாக இருந்தவர் குருபீடமேறித் தம்பிக்கு ஐந்தெழுத்தின் உண்மையையும் திருநீற்றின் உண்மையையும் தெளிவித்து ஆண்டவனை நினைந்து பாடுமாறு கட்டளையிட்டார். மறந்த இறைவனை நினைந்து உருகி உருகிப் பாடிய அப்பருடைய சூலைநோய் வெயிலிற்பட்ட பனி போல் மறைந் தொழிந்தது. தெளிவு பெற்ற அப்பர் தலங்கள் தோறும் சென்று இறைவன் புகழ்களையும் அருட்டிறங்களையும் உளங் கசிந்து பாடுவாரானர். சைவம் தழைப்பதைப் பொருமல் தம் செல்வாக்கால் சமணர்கள் அப்பரை நீற்றறையில் இட்டும், கல்லிற் கட்டிக் கடலில் எறிந்தும், யானைக்காலில் இடற ஏற்பாடுசெய்தும் அப்பரை ஒறுக்கத் தலைப் பட்டனர். அவ்வற்ருலெல்லாம் சிறிதும் அல்லலுருமல் இறைவன் அருளால் உய்ந்து அப்பர் மகிழ்ச்சியே எய்தினர். தம்வாழ் நாளின் இறுதியில் மண்ணாசை பெண்ணாசை பொருளாசை முதலியவற்ருல் இறைவன் மயக்கத் தலைப்பட்ட போதும் ஐந்தொழில்களுள் மறைக்கும் தொழிலும் இறைவனுடையதே எனத் தெளிவு பெற்றுச் சமநோக்கம்எய்திநின்ற அப்பர் அவனருளே துணையாகக் கொண்டு அவற்றிலிருந்து தப்பிப் பிறப் பறுத்துப் பேரின்பம் எய்தினர். எனவே மக்களுடம்பு எடுத்தவர் இயற்கையாகஎய்தும்இடுக்கண்களை யெல்லாம் எய்திப் பின் தெளிவு பெற்று இறைவனருளொன்றையே நாடிக் கசிந்து கசிந்துருகிய அப்பர் பாடல்கள் தேவாரம் என்று முதல் முதலாக வழக்குப் பெற்றதும், தனி வழி பாடாற்று வதற்குத் துணையாகக் கொள்ளப் பெற்றதும் பொருத்தமேயாம் என்பது தெளிவாகும்.

இனி அப்பர் பாடல்களுள் பொறுக்குமணியான சிலவற்றை நாம் ஈண்டு நினைவு கூர்தல் மிக்க நலம் பயப்பதாகும்:

சிவனெனும் நாமம் தனக்கே யுடைய செம்
[மேனியம்மான்
அவனெனை ஆட்கொண்டளித்திடு மாகில் அவன்
[றனையான்
பவனெனும் நாமம் பிடித்துத் திரிந்துபன்
[னாளழைத்தால்
இவனெனைப் பன்னாள் அழைப்பொழி யானென்
[றெதிர்ப்படுமே.
(4 : 112 : 9)

இப்பாடலால் சிவபெருமான் தமக்குக் காட்சியளிக்கும் வழிவகையை அப்பர் நமக்கு அறிவுறுத்தியிருப்பதைக் காணலாம். செக்கச் செவேலென்ற செம்மேனியை உடையவன் அந்தமாதியாகிய இறைவன் என்பதும், அதனல் சிவன் என்னும் நாமம் தனக்கே உரிமையாக உடையவன் என்பதும், அவனே நம் எல்லார்க்கும் தலைவன் என்பதும், அவன் நம்மை ஆட்கொண்டு அருள்செய்தால் தான் அவனை வாழ்த்துவதும் வணங்குவதும் நினைப்பதும் கூடும் என்பதும், அங்ஙனம் ஓதும் முயற்சியே மேற்கொள்ளற் குரிய தென்பதும், அம் முயற்சியும் அவனருளால் தான் கடைப் பிடிக்கற் பாலதென்பதும், பிறப் பறுக்கும் பவன் அவனுதலால் அவனுடைய ஆயிரமாயிர நாமங்களுள் பவன் என்ற அந்நாமத்தைப் பற்றுக் கோடாகப் பிடித்துக் கொண்டு பன்னாளும் இரந்திரந்தழைத்தல் வேண்டும் என்பதும், அங்ஙனம் பன்னாளும் இடைவிடாதழைத்தால், "இவன் எனைப்பன்னாளும் அழைத்தலைக் கைவிட்டு ஓய்வு கொள்ளமாட்டான்" என்று இறைவன் எதிர்ப் பட்டுக் காட்சி நல்கி விடுவான் என்பதும் அக்காட்சி தந்தபின் அவனே மெய்யுணர்வு நல்கி வீடுபேறு அருளுவன் என்பதும் பிறவும் ஆன உயர்ந்த உண்மைப் பொருள்களை அப்பர் நமக்குத் தெளிவு படுத்தி யுள்ளதை உணரலாமன்றே! இதனல், இறைவனைக் காண்டல் மிக மிக எளிதாம்: அவற்கு இடையீடின்றிய முழு அன்பால் அவன் நாமத்தை ஓதுதலே வழியாம் என்பது விளக்கம் ஆகின்ற தன்றே!

இனி அவன் காட்சி எவ்வாறிருக்கும் என்பதுணர்த்தும் ஒரு பாடலை நோக்குவோம்:

"பவளத் தடவரை போலும் திண் தோள்கள் [அத்தோள் மிசையே
பவளக் குழைதழைத் தாலொக்கும் பல்சடை [அச்சடைமேல்
பவளக் கொழுந் தன்ன பைம் முக நாகம் அந் [நாகத்தொடும்
பவளக்கண் வால மதியெந்தை சூடும்பனிமலரே"
(4 : 113 : 1)

என்ற உயிரோவியத்தைக் காண்க.

படைத்தல், காத்தல் அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்தொழிலும் இறைவனுக்கு உரியனவாகும். இவற்றுள் அருளொன்றையே விரும்பி ஏனையவற்றை வெறுப்பது மக்களியற்கையாகும். ஐந்தொழில்களும் அவனுடையவை என்றால் அவற்றுள் ஒன்றற்கொன்று ஏற்றத் தாழ்வு பாராட்டுவது தவறாகும். அவனை இடைவிடாமல் நினைத்தற்கு அவன் அருள் வேண்டும் என்பது உண்மையே. ஆனால், அவனை நினைக்கப் புகுமிடத்து உடனே அவனை மறந்து வேறொன்றை நாடுவதே மக்களாகப் பிறந்தவர்களின் மனவியல்பாகும். ஆனால் உண்மையாக நோக்குமிடத்து அவனைமறப்பதும் அவனுடைய மறைத்தல் தொழிலால் ஆவதேயாகும் என்று அவனை அடைக்கலமாகக் கொண்டால் அவன் கைகொடுத்து ஆட்கொள்வான் என்பது உறுதி. இவ்வுண்மையை அப்பர் பெருமான் நகைச் சுவை தோன்றப் பாடியிருக்கும் திறன் வியந்து வியந்து பாராட்டுதற்கு உரியதாகும்.

"நின்னைப் போதும் நினைய வொட் டாய்நீ; [நினையப்புகில்
பின்னை அப் போதே மறப்பித்துப் பேர்த்தொன்று [நாடுவித்தி;
உன்னைப் போதும் மறந்திட் டுனக்கினி [தாயிருக்கும்
என்னை ஒப் பாருள ரோசொல்லு வாழி [இறையவனே"
(4 : 112 : 4)

இங்ஙனம் அப்பருடைய பாடல்கள் தொட்ட இடந்தோறும் இனிமையும் உயர்ந்த உண்மையும் நல்குவனவாகும்.

வணங்குவார் இடர் தீர்ப்பர் (5 : 38 : 7); பரவுவார் இடர்தீர்ப்பார் (5 : 38 : 8); ஏத்தார்க்கு என்றும் இடரே துன்பம் ஈவான் (6 : 15 : 3); பழையதம் அடியார் செய்த பாவமும் பிழையும் தீர்ப்பர் (5 : 38 : 1); தன்னை நோக்கித் தொழுதெழு வார்க்கெல்லாம் பின்னை என்னார் பெருமானடிகளே (5 : 38 : 2); பொய்யனைத்தையும் விட்டவர் புந்தியுள் மெய்யன் (5 : 48 : 9); காண்டற் கரிய கடவுள் கண்டாய் கருதுவார்க் காற்ற எளியான் கண்டாய்; வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய் (6 : 23 : 1); காதலித்து நினையாத கயவர் நெஞ்சில் வாரானை, மதிப்பவர் தம் மனத்துளானை (6 : 66 : 3); உருகு மனத் தடியவர்கட்கு ஊறுந்தேன் (6 : 84 : 3); அஞ்செழுத்தை வாய் நவில வல்லோர்க் கென்றும் சிறந்தான் (6 : 66 : 6); என்றெல்லாம் இறை பற்றி அப்பர் உணர்த்தியுள்ள சில பொறுக்கு மணிகளைத் துணையாகப் போற்றிக் கடைப் பிடித்தாலும் பிறப்பறுத்துப் பேரின்பம் பெறலாம் என்பது உறுதியாகும். எனவே, அரிய உயர்ந்த உண்மைகளை ஓவியக் காட்சிகளாகக் காட்டிய அப்பர் பாடல்கள் என்றென்றும் நிலைபெற்று வாழ்க என வாழ்த்தி அவற்றை நாம் உயிர்க்குறுதி பெறுவதற்குக் கடைப்பிடிப் போமாக! அருந் துணையாவன அப்பர் பாடல்கள் என்று போற்றுவோமாக.



# SOME PHILOSOPHICO - RELIGIOUS ASPECTS
## as Gleaned from the songs of Saint Thirunavukarasar

Sri. C. RAMALINGAM, M.A.
*Department of Philosophy, Annamalai University.*

Twelve books are reckoned as Canonical, Saiva Scriptures. Fourth, Fifth and Sixth books comprise the outpourings of a divinely inspired saint by name Appar or Thirunavukarasar. The fourth book is full of songs characterised by literary charm; the Fifth is replete with precepts; the Sixth is a veritable treasure of Philosophic and religious wisdom.

SIVAGNANAMUNIVAR, an erudite commentator on SIVAGNANA BODHAM, has brought out in a memorable verse the features that come up to one's mind, spontaneously the moment Saint Appar is thought of or spoken of. Great devotion that the Sivagnana Munivar had for saint Appar is borne out by the following verse and it is translated as under;

" இடையருப் பேரன்பும் மழைவாரும்
இணைவிழியும் உழவாரத்திண்

படையருத் திருக்கரமும் சிவபெருமான்
திருவடிக்கே பதித்த நெஞ்சும்

நடையருப் பெருந்துறவும் வாகீசப்
பெருந்தகைதன் ஞானப் பாடல்

தொடையருச் செவ்வாயும் சிவவேடப்
பொலிவழகும் துதித்து வாழ்வோம் "

Uninterrupted is the flow of his benign love,
Unceasing is the flow of tears from the two eyes,
(Heart intensely moved by the ways of His Grace).
Armed with a spade, (UZHAVARAM) a sight that [is never missed.
A heart resigned to the will of the Lord Siva
Great is His renunciation, unswerving in the [pursuit of ascetic ideal
Eternal is the outpourings of the heart,
Glories of the Lord, Constant on the lips of the [Great Saint.
Let this enchanting, graceful form born of true, [pure, devotion be meditated upon.

Four are the Saiva Samayacharyas — THIRUGNANASAMBANDAR, THIRUNAVUKARASAR, SUNDARAR AND MANICKAVASAGAR. Tradition has it that the lives of these Saiva preceptors and Saints exemplify the four well-known paths of CARYA (action) KRIYA (Devotion) YOGA (Meditation) and GNANA (knowledge). These paths are also referred to as Dasa Marga, Satputra Marga, Saha Marga and San Marga.

Carya is the unfailing discharge of the activities connected with the cleanliness of the precincts of the temple and the worship of the deity. KRIYA is personal devotion such as the performanance of the rituals connected with the Lord of adoration. YOGA is meditation. This marks the transition from the outer to the inner aspects of devotion. GNANA is the path of knowledge. It is knowledge supreme. This analysis of the paths, is undoubtedly a good approach to Saiva Sadhana. The four paths of Carya, Kriya, Yoga and Gnana outlined above are not characterised by inflexibility. These overlap considerably. These are not four diverse paths. These constitute the necessary rungs in the ladder of spiritual evolution for every aspirant. Traditional treatment of the Sadhana is there for the purposes of intelligibility. We should desist from a wholesale application of this analysis to the lives of the Great Saints lest we should miss the true significance of their life and mission.

The lives of Saint Appar, Thirugnanasambandar, Sundarar, and Manickavasagar

are said to illustrate the paths of 'Dasa' 'Satputra', Saha and Sanmarga respectively. Dasa Marga is the path of servitude, the relation that exists between a master and a servant. Satputra Marga is the path of affection that well-behaved, dutiful, devoted son enjoys in the hands of his father. Saha-Marga is the path where intimacy is discernible between people bound by ties of friendship. San Marga is the path of righteouness. It is analogous to the relation that exists between a husband and a wife. The lives of these four saints contain facts that explain the four paths mentioned above respectively. But we should probe deeper and find the spiritual heights scaled by these men of God beyond those signified by the paths.

Saint Thirunavukarasar has sung a beautiful song bringing out the longing of the heart of the beloved. It is an autobiographical note. The gradual transformation that takes place in the spiritual life of Thirunavukarasar is also testifed to by the song which is given below with its translation.

முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள்,
மூர்த்தி யவனிருக்கும் வண்ணங் கேட்டாள்,
பின்னை யவனுடைய ஆரூர் கேட்டாள்,
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி யானாள்,
அன்னையும் அத்தனையும் அன்றே நீத்தாள்,
அகன்றாள் அகலிடத்தார் ஆசா ரத்தைத்
தன்னை மறந்தாள், தன்னாமங் கெட்டாள்,
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே.

Saint Appar enquires the name of the Lord who had stolen her (Saint's) heart. She desired to know His form or nature; His dwelling place. On learning the answers She renounced immediately Her relation and all her possessions. She gave up the practice of activities attendant upon rituals associated with mundane life. She lost herself completely in devotion. She forgot herself so fully that she lost her identity. The maiden now is merged as it were into the feet of the Lord who captivated her heart or who has won her over completely. There is the loss of her personality in that of the Lord, who is conceived as the Love Absolute.

This song characterises the last stage in the ladder of spiritual evolution, Gnana or Sanmarga. Tradition has it that the life of the Saint is an illustration of the path of servitude. But the song translated above brings out the evolution of the spiritual life of the Saint.

Let us consider passages which bring out the philosophic and religious truths contained in the compositions of the Saint.

GOD IS ENDOWED WITH ALL ATTRIBUTES THAT THE HUMAN INTELLECT IS CAPABLE OF CONCEIVING. He *transcends* the world and all that the world is. He is not the sun with many rays; the moon; the Vedic injunctions; the Akasa; the earth; the air that pervades; the flame that rises high; the clear water that flows.

He is neither the male nor the female. He is that Effulgent life that shines supreme. He is the 'Beyond'.

God is *immanent* in the things of the world. He is the cream in milk; He is the fire in the wood; He is the latent force. He is accessible to those that see him with sincerity and resoluteness.

He is *endearing* to those that are earnest in thir devotion. He is all-knowing. No fact is inaccessible.

He knows the innermost thoughts-even the thoughts supposed to be locked up in the privacy of one's life. One cannot delude oneself into thinking that he has successfully kept secret certain thoughts or traits of his character.

He is the **eternal witness**. He knows all that takes place in the bosom of one's mind.

God has his abode in the human consciousness. He who has experienced the presence of God bears witness to the existence of

God. Saint Appar has had that experience. So he says that the Lord's presence is keenly felt by him and so undeniable. God finds his dwelling place in the consciousness of the person who adores him supreme. He is in the mind of the aspirant. He is among the devotees. He is not comprehensible. He is beyond the categories of thought and understanding. He is illimitable. He constitutes the beginning and the end. He is beginning, the reason. He is the source, Middle and the end. They that seek to know him through ratiocination gains clear vision. It is this clarity gained that has to be interpreted as an act of Grace. He shall free us from the afflicting disease of body or mind. He is our intimate companion who will not desert us. He is the solace of the destitute.

Earnest and sincere prayers never go unanswered. If the prayers offered are incessant and unfailing born of pure heart, strengthened by fervour and sincerity of devotion with a keen desire to have His Darshan, the fact that you are sincere and persistent will move him and make him present himself immediately.

What is His nature? What is His colour? What is His form? It is not possible to say what his nature, colour or form is. One cannot attempt at a portrayal of his form or colour or nature, because he is beyond our speech and conception He is without equal, beyond compare.

What is the purpose of this existence or significance of this life? It is a splendid opportunity that we are blessed with in this life when we are born as human beings. This life is invaluable. Is not a dedicated life to Lord Nataraja that is expected of us. Verily it is our duty to worship the cosmic dancer, Nataraja. This earthly life is fraught with many a danger. One can be free from worries or wants if he worships the feet of the Lord. Is this life despicable? The answer is that the worthiness or otherwise of this life depends on our attitude towards it. Many cases of insanity are traceable to unhealthy, maladjustments in life. If one were to be blessed with the ecstatic vision of the Lord at Thillai one can unhesitatingly long for this life in the human frame despite the inconveniences that it is heir to. A beatific vision is not vouchsafed to any other plane of existence or type of birth.

How to know or experience the Lord? It is by arduous penance and the power born of such unflinching observance of austerities that one can subjugate the senses: This facilitates the tranquillity of mind conducive to meditation. What is to be prayed for ? Neither the earthly pleasures nor the heavenly ones should form the substance of our prayers in short. It should not be a petitionary prayer. The saint has guided us. In his words, ' Lord ! Even if I be born a worm, Thy sacred feet should never fail to be present in my conciousness. If I should be born again I shall never forget the name of the Lord.

In the case of the lives of chosen men such as our Saint God's grace has been there even from the days of their pre-natal existence. As the Saint has put it from the days of his pre-natal existence, he has been longing for the experience of His presence. The saint has brought out in another oft-quoted verse that 'it is the duty of the Lord to support and sustain him while his duty is that of dedicated service, without the thought of the recompense, resigning the fruits thereof to him.'

In the opinion of the Saint the Lord maintains an account of the lives of men. Entries are there in his ledger of those that are steadfast in their devotion and have a burning desire for His Darshan. Those who while away their time and are indiffirent cannot escape His attention. He is dearer to us than we ourselves could possibly be even with regard to ourselves. He is sweeter than the fruits or the sugarcandy. He is more loving than the woman who have endeared them-

selves. He is more attractive than the empire under the reign of a monarch. The Saint after expressing these thoughts questions us if we are capable of relishing the fruit—verily the Lord. The Sacred feet of the Lord is sweet, more sweet than sugarcandy, the love of a woman and a vast empire. He is the bliss. He is free from sorrow. He shoulders the responsibilities of the devotees, the cares and anxieties of those that have dedicated their lives to Him. He is the end, worthy of pursuit, the supreme goal of all our endeavour. He is at the same time our efforts as well.

Saint Appar is highly critical of the formalism in religion or externalism i.e., worship. Bhakti movement is characterised by some scholars as a protest against the paraphernalia of religion. It underlies the need for sincerity and earnestness in our spiritual life. In religion the whole of mind and spirit are involved. It is not merely a matter of rites and ceremonies and even of dogmas and doctrines. The essence of religion is the surrender of human will to the divine will. Saint has sung quite a few song bringing out the true significance of religious activities such as the observance of austerities, baths in holy rivers, mastery of Sastras, and recitation of the Mantras.

Of what use is a bath in the Holy Ganges, Kaveri or Kumari or the deep sea;

Of what benefit is proficiency in sastras or punctual attendance at Lecture halls where great truths form the subject of discourse; or the mastery of Dharma sastra or those portions that form the adjuncts of Vedas;

Of what avail is the mortification of the flesh or the observance of the Vedic injunctions?

This is the message in brief conveyed by the verses of the saint freely rendered into English.

Bath in the Holy waters, meticulous performance of the duties enjoined in the Vedas; mastery of the Sastras; pursuit of ascetic ideals all these become significant only if the aspirant or the devotee has a burning zeal for His grace. Outward conformity to Sastraic commandments such as those outlined above, unaccompanied by sincerity or eartnestness in pursuit of truth is mere show. The core of religious life is the same as that of science, it is unswerving devotion to truth, religion should permeate life in all its aspects. There should not be any dichotomy between precept and practice or one's professions and actions. Religious life is an integrated one. It does not permit compartmentalisation.

The life and composition of Saint Appar is full of lessons for us. I have endeavoured to bring out the essential message for us to day. What we deplorably lack in our life, religious or non-religious is sincerity and fidelity to great truths. We should rededicate ourselves to the great task that Saint Appar has laid before us. Let us do our duties sincerely and look up for the Grace of the Lord which is unfailing. What is called for is persistence in our efforts and earnestness of purpose. May the Grace of Lord Siva and blessings of the Saint help resuscitation of the great ideals for which Saiva Religion has stood.



# நகைச்சுவை

பேராசிரியர் திரு. கோ. சுப்பிரமணியம், எம்.ஏ.,பி.எல்., அண்ணுமலைப் பல்கலைக் கழகம்.

திருநாவுக்கரசர் நல்ல நகைச்சுவையுள்ளவர். ஒரு நாள் அவர் திருவாரூருக்குச் சென்ருர். கோயிலுட் சென்று இறைவனை வணங்கிவிட்டு வெளியே வந்து, தெருவழியே சென்று கொண்டிருந்தார். அவர் காதில் 'ஆரூரா ! ஆரூரா !' என்ற கூக்குரல்கேட்டது. அது 'ஆரூராய்? ஆர் ஊரில் உள்ளாய்?' என்று கேட்டுப் புலம்புவதுபோல அப்பருக்குத் தோன்றியது. யார் அப்படிக் கூப்பிடுவது என்று அப்பர் நோக்கினுர். வேறு யாரும் இல்லை, திருமாலும் பிரமனுமே அவ்வாறு இறைவனைக் கூவித் தேடிக் கொண்டிருந்தார்கள். இவர்கள் ஏன் கோயிலுட் சென்று இறைவனைக் காணுது தெருவிற் கிடந்து திண்டாடுகிருர்கள் என்று எண்ணினுர். அவர்கள் 'ஆரூரா' என்பது "இறைவன் யாருடைய ஊரில் இருக்கிருன்? எந்த ஊரில் இருக்கிருன்? எங்கே இருக்கிருன்?" என்று கேட்பதுபோன்றிருந்தது. அப்பருக்கு உடனே சிரிப்பு வந்துவிட்டது. அவரும் உடனே இறைவனை நோக்கி "நீ ஆரூராயே" என்று இருபொருள்படப் பாடினுர். அதாவது "இறைவனே ! திருமாலும் நான்முகனும் 'ஆரூராய்? ஆரூராய்?' என்று உன்னை வினவுகின்ருர்கள். நீ ஆரூராயே?—நீ யார் ஊரில் இருக்கிருய் ? —நீ ஆரூராயே—நீ திருவாரூரிலேயே இருக்கிருய்" என்று வினவையும் விடையையும் ஒரு சொல்லிலேயே அடக்கி வேடிக்கை தோன்றப் பாடியுள்ளார் :—

" நீருருஞ் செஞ்சடையாய் நெற்றிக் கண்ணுய்
நிலாத்திங்கள் துண்டத்தாய் நின்னைத் தேடி

ஓருரும் ஒழியாமே ஒற்றித் தெங்கும்
உலகமெலாந் திரிந்து நின்னைக் காண்பான்

தேருரு நெடுவீதி பற்றி நின்று
திருமாலும் நான்முகனுந் தேர்ந்துங் காணுது

ஆரூரா ஆரூரா என்கின் ருர்கள்
அமரர்கள்தம் பெருமானே யாரூ ராயே."

திருமாலும் நான்முகனும் ஓர் ஊரும் விடாமல் உலகமெல்லாம் நன்ருகத் துருவித் தேடிவிட்டுத்தான், திருவாரூர்த் திருவீதியில் நின்று "ஆரூரா ! ஆரூரா !" என்று ஓலமிட்டார்களாம். அண்டசராசரங்களெல்லாம் நீக்கமற நிறைந்து, ஓரூர் என்றில்லாமல் எவ்வூரையும் தன் சொந்த ஊராகக்கொண்டு இலங்கும் இறைவனை "ஆரூரா?" என்று இவர்கள் தேடுகின்ருர்கள் என்ருல் சிரிப்பு வராதா ? இது போன்று எளிதில் நகைச்சுவை தோன்றப் பாட வல்லவர் அப்பர் சுவாமிகள்.

இவ்வாறு மாலும் பிரமனும் சிவனுடைய அடி முடியை இன்னும் காணுது திண்டாடுவது அப்பருக்கு வேடிக்கையாகவே இருந்தது. முதல் தேவர்கள் என்று சொல்லிக்கொள்ளும் இவர்களால் சிவன் திருவடியைக் காணமுடியவில்லை என்ருல் என் சொல்வது ? கூற்றுவன் கூட மார்க்கண்டன்மேல் பாசக்கயிற்றை வீசிய அக்கணமே சிவன் திருவடியைக் கண்டு கொண்டானே. அப்படியாவது இவர்கள் ஏதேனும் செய்யக் கூடாதா என்பதுபோன்று நகைதோன்றவும் பாடியுள்ளார் :—

"மேலு மறிந்தில னுன்முகன் மேற்சென்று
கீழிடந்து
மாலு மறிந்திலன் மாலுற்ற தேவழி பாடுசெய்யும்
பாலன் மிசைச்சென்று பாசம் விசிறி மறிந்த
சிந்தைக்
காலன் அறிந்தான் அறிதற் கரியான் கழலடியே."

கூற்றுவனைப் போற் செய்யும் ஆற்றல் இவர்களுக்கு இல்லாவிடினும், இராவணனையாவது பின்பற்றியிருக்கக் கூடாதா ? அவ

னுவது கயிலைமலையை அசைத்தவுடன் சிவன் திருவடி எப்படியிருக்கும் என்று கண்டுகொண்டான். அழுங்கி அலறி அலமந்த அவ்வரக்கனுக்கும் இரக்கம் காட்டி ஆனந்த அருளைப் புரிந்தான் புரம் எரித்த விரிசடையோன். அந்தச் சிறப்புக் கூடத் தங்களுக்குக் கிடைக்கும்படியான ஞானம் கிட்டாமல் பறவையும், பன்றியுமாய் இழிவெய்தி இடர்ப்பட்டார்களே என்று பகடி பண்ணியும் அப்பர் பாடினுர்:—

“ஏனமா யிடந்த மாலும் எழில்தரு முளரியானும்
ஞானந்தா னுடைய ராகி நன்மையை யறிய
மாட்டார்
சேனந்தா னிலா வரக்கன் செழுவரை யெடுக்க
வூன்றி
ஆனந்த வருள்கள் செய்தார் அவளிவணல்
லூராரே.”

இங்கு அறிஞர்கள் ஊன்றிச்சிந்திக்கவேண்டியது ஒன்று உண்டு. கீழ்மையான இராவணனுக்குக் கூட சிவனது ஆனந்த அருள் கிடைத்தது. அது திருமாலுக்குக் கிடைத்திலது என்று வருந்தியே அப்பர் இவ்வாறு பாடியுள்ளார். திருமால் இராமனுக இராவணனைக் கொன்றெழித்த கதையும் அப்பருக்குத்தெரியும். அறத்தின் நாயகனுய் அவதரித்த இராமனை யாவரும் போற்றுகிருேம். அப்பரும் போற்றியுள்ளார். ஆயினும், சிவன் செயலை நோக்க இராமனின் செயல் எத்தகையது என்பதை ஒரு பாடலில் அப்பரடிகள் சிறிது நகைச்சுவை தோன்றப் பாடியுள்ளார். அது வேடிக்கையாகப் படித்து, இலக்கியச் சுவையை நுகர்ந்து அந்தமட்டில் மகிழ்ந்து அமையவேண்டிய முறையில் அமைந்துள்ளது. முதலில் அப்பாடலைக் காண்போம்:—

“செங்கண்மால் சிலைபிடித்துச் சேனை யோடுஞ்
சேதுபந் தனஞ் செய்து சென்று புக்குப்
பொங்குபோர் பலசெய்து புகலால் வென்ற
போரரக்கன் நெடுமுடிகள் பொடியாய் வீழ
அங்கொருதன் திருவிரலால் இறையே ஊன்றி
அடர்த்தவற்கே அருள்புரிந்த அடிகள்
இந்நாள்
வங்கமலி கடல்புடை சூழ் மாட வீதி
வலம்புரமே புக்கங்கே மன்னி னரே.!

தனது அடியவனுய் இருந்து செய்த தவற்றுக்காகச் சபிக்கப் பெற்று, அரக்கனுய்ப் பிறந்தவன் இராவணன். அவன் நன்றி கொன்று அறந்தின்று மறம்பெருக்கித் தலை தருக்கித் திரிந்தான். அவனை அடக்கி மீட்க எண்ணினுன் திருமால், பாற்கடலிற் படுத்த படியே பங்கயக் கண்களைப் பரப்பி விழித்தார். அவருக்குக் கோபம் வந்தது. அதனுல் கண்கள் சிவந்தனவாம். அதனை அப்பர் ‘செங்கண் மால்’ என்று குறிப்பிடுகிருர். முன்னெருகால் சிவபெருமான் கண்ணை விழித்துக் காமனைச் சினந்தார். அவன் சாம்பலாகிவிட்டான். ஆனுல் திருமால் சினந்ததால் அவர் கண்கள் சிவந்தனவேயொழிய இராவணன் பொடியாகவில்லை. உடனே திருமால் திருப்பாற்கடலை விட்டு மண்ணிலே வந்து இராமனுக அவதரித்தார். அவ்வாறு தெய்வத் தன்மையைவிட்டு மனிதனுக வந்து இறங்கியும் கூட இராவணன் அடங்கவில்லை. அவர் கையிலுள்ள சக்கரமும் உதவவில்லை. சிவன் படைத்துக் கொடுத்த சக்கரம் சிவனடியான் மேற் செல்லாது என்று வில்லைக் கையிற் கொண்டு விசுவாமித்திரன் பின் சென்று வில்வித்தை பயின்ருர். இதனை, ‘சிலை பிடித்து’ என்று அப்பர் கூறியதால் அறியலாம். திருமால் இராமனுக வந்து கையில் வில்லேந்தியபின்னுவது இராவணன் பணிந்திருக்கலாம். அவன் அதற்கும் அஞ்சியடங்கவில்லை. சீதையைச் சிறையெடுத்துச்சென்றுவிட்டான். அதனுல் திருமால் கால் கடுக்கக் காடு நடந்து மனையாளைப் பிரிந்து குரங்குப் படைகளைத் திரட்டினுராம். இதனை அப்பர் ‘சேனையோடும்’ என்று குறித்தார். இவ்வாறு சேனை திரண்ட பிறகும் இராவணன் ஒடுங்கவில்லை. கடலும் ஒதுங்கவில்லை. ஆகவே திருமால் அணை கட்டினுராம். இதனை அப்பர் அடிகள் ‘சேது பந்தனம் செய்து’ என்று சுட்டுகிருர். அதனைக் கட்டியபின்பாவது அடங்கினுனு அரக்கன்? இல்லை. அதனுல் திருமால் இலங்கைக்குச் சென்று கோட்டை வாயிலுக்குட் புகுந்தாரம். இதனை அப்பர் ‘சென்று புக்கு’ என்ற இரண்டு சொற்களாற் குறிப் பிடுகிருர். இவ்வாறு எதிரே வந்துங் கூட இராவணனை அடக்க முடிய வில்லை. அவன் கோட்டைக்குள் பதுங்கிக் கொண்டான். திருமால் பல நாள் போர்புரிய நேர்ந்ததாம். இதனை அப்பர் ‘பொங்கு போர் பல செய்து’ என்ருர்.

இராமனுக்கும் இராவணனுக்கும் நடந்த போர் பதினெட்டு மாதம் நடந்ததாம். தேவாசுரப் போர் பதினெட்டு ஆண்டிலும், இலங்கைப்போர் பதினெட்டு மாதத்திலும், பாரதப்போர் பதினெட்டு நாளிலும், செங்குட்டுவனும் கனக விசயரும் செய்த குயிலாலுவப் போர் பதினெட்டு நாழிகையிலும் முடிந்ததாக இளங்கோ அடிகள் கூறியுள்ளார். இதனை—

"உயிர்த்தொகை யுண்ட வொன்பதிற் [றிரட்டியென்
றியாண்டும் மதியும் நாளுங் கடிகையும்
ஈண்டு நீர் ஞாலங் கூட்டி யெண்கொள"

என்ற சிலப்பதிகாரம், நீர்ப்படைக் காதை அடிகளாலும் அவற்றுக் கெழுந்த அரும் பதவுரையாலும் அறியலாம்.

இவ்வாறு பதினெட்டு மாதங்கள் போர் நடந்தும், போரின் வலிமையால் மட்டும் திருமால் இராவணனை வெல்ல முடிய வில்லை. இதற்காக எத்தனையோ சூழ்ச்சிகள், மந்திராலோசனைகள் எல்லாம் செய்யவேண்டியிருந்தன. பலருடைய உதவிகளைப் பெறவேண்டியதாயிற்று. சுக்கிரீவன் உதவியுடன் குரங்குப்படை திரட்ட வாலியை மறைந்து கொல்ல வேண்டி இருந்தது. கண்ணீர் பல வடிக்க நேர்ந்தது. கடலையும் தஞ்சம் புகுந்து பாடு கிடக்க வேண்டியிருந்தது. எதிரியிடமிருந்து பலரைப் பிரித்துத் தமது பக்கம் இழுக்க வேண்டி யிருந்தது. வீடணன் உதவி பெரிதும் தேவைப்பட்டது. உளவறிந்து ஒற்றுாட வேண்டியிருந்தது. அனுமன் மருத்து மலையைச் சுமக்க வேண்டி யிருந்தது. கருடன் வந்து நாக பாசத்தைக் களையவேன்டி இருந்தது. இத்தனையையும் குறிக்க அப்பர் ஒரே ஒரு சொல்லைக் கையாளுகிறார். 'புகலால் வென்ற' என்கிறார். 'புகல்' என்ற சொல் தஞ்சம், சூழ்ச்சி செய்தும் வென்ற வெற்றி உண்மையான வெற்றியாகுமா? அது உள்ளீடு இல்லாத புகலான வெற்றிதானே? அப்படி வென்றும் இராவணனைத் திருமாலால் அடக்கமுடிந்ததா? இல்லை. ஆகவே திருமால் இராவணனைக் கொன்று விட்டார்.

இவ்வாறு நிகழ்ந்த திருமால் சேவகம் ஒரு புறம் இருக்க, சிவன் சேவகம் எப்படிப்பட்டது? போர் புரிய மனம் இல்லாது ஒதுங்கிப் பதுங்கியிருந்த இராவணனைப் போர்க்கோலம் கட்டி, வலிதில் தேடிக்கொண்டு சென்று, பெரிது முயன்று அரிதிற் கொன்றார் திருமால். ஆனால் அதே இராவணன் சிவனோடு நேரில் போருக்கு வந்தான். அவன் அப்படி வந்த இடந்தான் கயிலைமலை. அரக்கன், வந்து இடந்தான் கயிலையை இதனை அப்பர் 'போரரக்கன்' என்று குறிப்பிடுகிறார். அங்ஙனம் வந்து மலையைத் தூக்க முயன்ற இராவணனைச் சிவபெருமான் இருந்த இடம் பெயராமல், மனைவியை விட்டு பெயராமல், கவலை கொண்டு வாடாமல், உதவி எதுவும் எடாமல், ஆயுதம் கையில் தொடாமல், அவதாரம் எதுவும் எடுக்காமல், அம்பை வில்லில் மடுக்காமல் தனது காலின் ஒரு விரல் நுனியால் இருந்தபடியே ஊன்றினாராம். அங்ஙனம் ஊன்றிய மாத்திரத்தில் அவன்பத்துத் தலைகளும் பொடியாய் உதிரும்படி, மலையின் அடியில் அகப்பட்டு நசுங்கினனும். இதனை அப்பர் 'நெடுமுடிகள் பொடியாய் வீழ அங்கொரு தன் திரு விரலால் ஊன்றி' என்றார். அவன் முற்றிலும் சிதைந்து உயிரிழந்து விடக் கூடாது என்றி பெருங் கருணையால், கால் விரலை மெதுவாக ஊன்றினாராம். இதனை 'இறையே ஊன்றி' என்று அப்பர் குறிப்பிடுகிறார். கொஞ்சம் வலிதாக அழுத்தி மிதித்திருந்தால், இராவணன் உயிரையே இழந்திருப்பான். இதனை இன்னொருபாடலில் அப்பர் எவ்வாறு கூறுகிறார் பாருங்கள் :—

"கருத்தனாய்க் கண்சிவந்து கயிலைநன் மலையைக் [கையால்
எருத்தனா யெடுத்தவாறே யேந்திழை யஞ்ச ஈசன்
திருத்தனாய் நின்றதேவன் திருவிரல் ஊன்ற [வீழ்ந்தான்
வருத்துவான் ஊன்றினனேல் மறித்துநோக் [கில்லை யன்றே."

சிவபெருமான் அரக்கனைத் திருத்த வேண்டும் என்று நினைத்தாரே தவிர, அழிக்க வேண்டும் என்று நினைக்கவில்லை. கொன்று விடுவது மிக எளிது. அவனை அடக்கித் திருத்தி அறிவு கொளுத்தி நல்வழிப் படுத்தி அருளை நல்குவது மிகச்சிறந்த அரியசெயல், தனக்கு இன்னா செய்தவனுக்கும் இனியவே செய்வது இறைமைக்குணம். ஆகவே சிவ பெருமான் இராவணனுக்கு அருள்புரிந்தாராம். இதனை, 'அடர்த்து அவற்கே அருள்புரிந்த அடிகள்' என்று குறிப்பிடுகிறார். இவ்வாறு சுவை பலமல்க, சொற்சுவை பொருட்சுவையோடு கருத்தாழம் கொண்ட பாடல்களைப் பாடவல்லவர் திருநாவுக்கரசர். இதனால் "சொற்குறுதிக்கு அப்பர் எனச் சொல்" என்று ஆன்றோர் கூறுவர்.

★

# திருநாவுக்கரசுதேவர்

# திரு ஏகாதச மாலை

திரு. க. வெள்ளைவாரணர்,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

சோழ மன்னனது ஆதரவு கொண்டு தேவாரத் திருமுறைகளைத் தேடித் தொகுத்து ஏழு திருமுறைகளாக வழங்கச் செய்தவர் திருநாரையூரில் பொல்லாப் பிள்ளையார்பால் நல்லருள் பெற்ற நம்பியாண்டார் நம்பிகள் என்பதைச் சைவவுலகு நன்குணரும். தென் தமிழ்ப் பயனாய் வந்த திருத்தொண்டத் தொகைக்கு வகைநூலாக நம்பியாண்டார் நம்பியருளிய திருத்தொண்டர் திருவந்தாதி, அருண்மொழித் தேவராகிய சேக்கிழார் அருளிய திருத்தொண்டர் புராணமாகிய விரிநூலுக்கு இன்றியமையாத அரும்பொருள்களைத் தன்னகத்தே கொண்ட தனிச் சிறப்புடையதாகும். தேவார ஆசிரியர் மூவருள் ஆளுடைய பிள்ளையாரைத் திருவந்தாதி, திருச்சண்பை விருத்தம், திருமும்மணிக்கோவை, திருவுலா மாலை, திருக்கலம்பகம், திருத்தொகை என்னும் ஆறு பிரபந்தங்களாற் பரவிப் போற்றிய நம்பியாண்டார் நம்பிகள் அவ்வாறே திருநாவுக்கரசரைக் குறித்தும் நம்பியாரூரரைக் குறித்தும் பல பிரபந்தங்களைப் பாடியிருத்தல் கூடும். நம்பியாரூரரைக் குறித்தனவாகத் திருத்தொண்டர் திருவந்தாதியில் சருக்கத்துக்கு ஒரு பாடல் என்ற முறையில் பதினொரு திருப்பாடல்கள் உள்ளன. அம் முறையில் திருநாவுக்கரசடிகளாரைப் போற்றும் பதினொரு பாடல்களால் இயன்ற பனுவலாக அமைந்தது, திருநாவுக்கரசு தேவர் திரு ஏகாதச மாலை என்னும் இப்பிரபந்தமாகும். ஏகாதசம்—பதினொன்று. திருநாவுக்கரசு தேவரைப் போற்றிப் பரவும் பதினொரு பாடல்களையுடைய செந்தமிழ் மாலையாகத் திகழ்வதாதலின் இது, திருநாவுக்கரசுதேவர் திரு ஏகாதச மாலை என்னும் பெயருடையதாயிற்று.

இதன்கண் உள்ள பதினொரு திருப்பாடல்களும் பல்வகைச் சந்தங்களில் அமைந்துள்ளன. இப்பனுவல் அளவாற் சிறியதாகத் தோன்றினும் திருநாவுக்கரசரடிகளாரின் வரலாற்றில் அமைந்த சிறந்த உண்மைகளையும், அப்பெருந்தகையாரது தவ மாண்பினையும் சிவ பத்தித் திறத்தினையும், எத்தகைய இடர்கள் அடுக்கிவரினும் அஞ்சாத உள்ளத்துறுதியினையும் அவரருளிய திருப்பதிகங்களின் சிறப்பினையும், அப்பெருந்தகையாரை வழிபட்டுத் 'திருநாவுக்கரசு' என்னும் அவரது திருப்பெயரினைச் சொல்லித் துதித்தலால் உளவாகும் பெருநலங்களையும் திறம்பட விளக்கும் நிலையில், தனிச் சிறப்புடைய பெருநூலெனவே கொள்ளத்தக்கதாகும்.

"ஐம்புலன்களின் வழியே அலைந்து திரியும் மனமுடைய மாந்தர் செய்யும் குற்றங்களை நீக்கியருளும் தூய பேரன்போடு தம் தமக்கையாராகிய திலகவதியாரைப் பணிந்து, அவர் திருவைந்தெழுத்தோதிக் கொடுத்த ஒளிமிக்க திருவெண்ணீற்றினை அணிந்து, சூலை நோய் தீர்ந்து அமண் சமயத் தொடர்பினை அறவே அகற்றிய உறுதிப்பாட்டுடன் திருவதிகை இறைவனது திருவருட் பெருவெள்ளத்திலே திளைத்த தவப்பெருஞ் செல்வர் திருநாவுக்கரசர் ஆவர். மெய்ப்பொருளைப் பரவிப்போற்றிய திருப்பாடல்களில், உலகினரது பாசம் நீங்குதற்குரிய பேருண்மைகளை நிறைய வெளியிட்டருளிய அப்பெருந்தகையார், அளவிலா ஞானப் பெருங்கடலிடையே திகழும் பேரமிழ்தமாகிய சிவப்பேரொளியிற் புகுந்து இன்புறும் பெருவாழ்வினை அடியேங்களுக்கு வழங்கியருளினர்" எனத் திருநாவுக்கரசரது பெருஞ்சீர்த்தியினை நம்பியாண்டார் நம்பிகள் விரித்துரைத்துப் போற்றும் முறையில் அமைந்தது,

புலனெடாடித் திரிமனத்தவர்
பொறிசெய் காமத் துரிசடக்கிய
புனித நேசத் தொடு தமக்கையர்
புணர்வினுலுற் றுரைசெயக்குடர்
சுலவு சூலைப் பிணிகெடுத்தொளிர்
சுடுவெ ணீறிட் டமணகற்றிய
துணிவினுன் முப்புரமெரித்தவர்
சுழலிலே பட்டிடு தவத்தினர் ;
உலகின் மாயப் பிறவியைத் தரும்
உணர்விலா அப் பெருமயக்கினை
ஒழிய வாய்மைக் கவிதையிற்பல
உபரியாகப் பொருள்பரப்பிய
அலகில் ஞானக் கடலிடைப் படும்
அமிர்தயோகச் சிவவொளிப்புக
அடியரேமுக் கருளினைச் செயும்
அரையதேவத் திருவடிக்களே.

எனவரும் இதன் முதல் திருப்பாட்டாகும். இதன்கண் அரையதேவத் திருவடிகள் என்றது திருநாவுக்கரசரடிகளாரை. இறைவனது திருவடி ஞானத்தால் உயர்ந்த சிவஞானிகளைத் ' திருவடிகள் ' எனப் போற்றும் மரபுபற்றி அப்பரடிகளை அரையதேவத் திருவடிகள் எனப் போற்றினுர் நம்பியாண்டார் நம்பிகள். திருவடிகள் எனற்பாலது சந்தநோக்கித் 'திருவடிக்கள்' என வல்லொற்று மிக்கது. அரையதேவத் திருவடிகள், முப்புரமெரித்தவர் சுழலிலேபட்டிடு தவத்தினர் என முடியும்.

திருநாவுக்கரசர்க்கு அடியராயினுரது இயல்பினை விளக்கும் முறையில் அமைந்தது.

" திருநாவுக் கரசடி யவர்நாடற் கநிநிதி
தெளிதேனெுத் தினியசொல் மடவாரூர்ப் பசிமுதல்
வருவானத் தரிவையர் நடமாடிச் சிலசில
வசியாகச் சொலுமவை துகளாகக் கருதிமெய்
உருஞானத் திரள்மன முருகாநெக் கழுதுகண்
உழவாரப் படைகையில் உடையான் வைத்தன
தமிழ்
குருவாகக் கொடுசிவன் அடிசூடத் திரிபவர்
குறுகார் புக்கிடர்படு குடர்யோனிக் குழியிலே "

எனவரும் இரண்டாவது திருப்பாடலாகும்.

" திருநாவுக்கரசர்க்கு அடித்தொண்டராகிய அடியார்கள், தேடுதற்கரிய பெருஞ் செல்வத்தையும் தெளிந்த தேன்போலும் இனிய மொழிகளைப் பேசவல்ல வானுலக மகளிராகிய ஊர்வசி முதலியோர் பாடியாடித் தம்மை வசப்படுத்தற் பொருட்டுக் கூறிய நயவுரைகளையும் தூசென ஒதுக்கித்தள்ளிவிட்டு, ஞானத்திரளாய் நின்ற புகலூர்ப் பெருமானை நினைந்து நெஞ்சம் நெக்குருகக் கண்களில் நீர்ததும்ப உழவாரப் படையினைக் கையிற் கொண்டு திருப்பணி புரிந்த அப்பெருந்தகை திருவாய் மலர்ந்தருளிய திருப்பதிகங்களை அருட்குருவின் உபதேச மொழிகளாகக் கொண்டு, சிவபெருமானே எளிவந்து திருவடிகளை (த்தம்முடியிற்) சூட்டியருளப் பேரின்பப் பெருவாழ்வில் திளைத்துத் திரிவார்கள் ; துன்பத்திற்குக் காரணமாகிய பிறவிச் சூழலில் ஒருஞான்றும் அணுகமாட்டார்கள் " என்பது இத்திருப் பாடலின் பொருளாகும். உழவாரப் படையாளியாகிய திருநாவுக்கரசுப் பெருமானை வழிபட்டு அவர் திருவாய் மலர்ந்தருளிய திருப்பதிகங்களைக் குருவின் உபதேச மொழிகளாகக் கொண்டு சிவபரம் பொருளைப் போற்றுதலே மக்கள் தம் பிறவிப்பிணியைப் போக்குதற்குரிய அருமருந்தாகும் என்பது இத்திருப்பாடலின் கருத்தாகும்.

உலக வாழ்க்கையில் அழுந்தி அலமரும் நெஞ்சத்தை நோக்கி, அதன் கலக்கந் தவிர மருந்துரைப்பதாக அமைந்தது இதன் மூன்றுந் திருப்பாடலாகும். " மனமே! ஏழு ஏழுநூறு (நாலாயிரத்துத் தொளாயிரம்) அரும்பதிகங்களாகிய பெருநிதியத்தை வழங்கியருளிய எங்கள் திருநாவுக்கரசினை நினைந்து போற்றுவாயாக. இதுவேநின் தளர்ச்சியைப் போக்கும் அருமருந்தாகும். இதுவன்றி நின்மயக்கந் தவிர மருந்து பிறிதில்லை " என ஆசிரியர் நெஞ்சத்திற்குக் கூறும் அறிவுரை நம்மனோரால் என்றும் மறவாது போற்றுதற்குரியதாகும்.

திருவதிகைப் பெருமான் அடிகளுக்கு வழங்கியருளிய ' திருநாவுக்கரசு ' என்ற திருப்பெயரின் சிறப்பினையும் அதனை மந்திரமாகக் கொண்டும் ஓதும் அடியார்கள் பெறும் பெருநலங்களையும் அறிவுறுத்தும் முறையில் அமைந்தது,

' இலைமா டென்றிடர் பரியார், இந்திர
னேயொத் துறுகுறை வற்றாலும்

நிலையாதிச் செல்வமெனவே கருதுவர்,
நீள்சன்மக் கடலிடையிற் புக்
கலையார், சென்றர ளெறியாகுங்கரை
அண்ணப் பெறுவர்கள், வண்ணத்திண்
சிலைமாடந்திகழ் புகழ் ஆமூருறை
திருநாவுக்கரசென்போரே.''

எனவரும் நான்காந் திருப்பாடலாகும். ''நிறந் தீற்றிய திண்மைமிக்க மலையினைப்போன்று மாளிகைகள் உயர்ந்து விளங்கும் புகழ்மிக்க திருவாமூரில் அவதரித்தருளிய பெருமான் திருநாவுக்கரசு என அப்பெருந்தகையாரது திருப்பெயரை அன்பினுல் ஓதுவோர், 'நம் மிடத்துச் செல்வம் இல்லையே' என இடருற்று வருந்தமாட்டார்கள்; வானுலக வேந்தனுகிய இந்திரனேபோன்று குறைவின்றி நிரம்பிய செல்வமுடையராகத்தாம் இருந்தாலும், 'இச் செல்வம் அனைத்தும் நிலையுடையதன்று' என்று அதன்கண் பற்றின்றியொழுகும் மெய் யுணர்வினராகவே திகழ்வார்கள்; எனவே பிறவியாகிய பெருங்கடலுள் விழ்ந்து துன்புற மாட்டார்கள். அத்துன்பத்தினின்றும் நீங்கிச் சிவனது திருவருள் நெறியாகிய இன்பக்கரை யினை அடைந்து மகிழ்வார்கள்'' என்பது இதன் பொருளாகும். இதன்கண் திருநாவுக் கரசர்க்குத் தொண்டுபூண்ட அடியார்களின் இயல்பாகச் சொல்லப் பெற்றனயாவும் நாவர சரைத் தம் குலதெய்வமாகக் கொண்டு போற் றிய அப்பூதியடிகளாரின் பெருமாண்பினை நினைவுபடுத்துவனவாக அமைந்துள்ளன. இந் நுட்பத்தினை உளங்கொண்ட துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் தாம் இயற்றிய நால்வர் நான்மணி மாலையில்,

''உற்றுனலன் தவம், தீயினின்றுனலன், [ஊன்புனலா
அற்றுனலன் நுகர்வும், திருநாவுக்கரசெனுமோர்
சொற்று னெழுதியுங் கூறியுமே யென்றுந் [துன்பில்பதம்
பெற்றுன் ஒருநம்பி அப்பூதியென்னும் பெருந் [தகையே.''

என அப்பூதியடிகளாரை உளமுருகிப் போற்று முகமாகத் 'திருநாவுக்கரசு' என்னும் திருப் பெயரின் மாண்பினை விளக்கிய திறம் இங்கு ஒப்புநோக்கி யுணரத்தக்கதாகும்.

அன்புருவாகிய திருநாவுக்கரசர்பாற் பற் றுடையராய் நறுமலர்களால் அருச்சனை புரிந்து வழிபடாதவர் நிலையாத யாக்கையினை நிலை யென நம்பி வயிற்றுக் கிரைதேடியுழலும் பித்த ராவர் என்பது ஐந்தாம் திருப்பாடலின் கருத் தாகும்.

சிவபூசை கற்ற தூய பேரறிவினையுடைய ராய் இவ்வுலகிலேயே வீடுபேற்றின்பத்தை நுகர்ந்த திருநாவுக்கரசர், பிறவியாகிய பெருங் கடலிலே நெல்லாகிய உணவின் துணை கொண்டு மிதந்து உழலாமல் திருவைந்தெழுத் தினை ஓதிக்கல்லே தெப்பமாகக் கொண்டு கரையேறிய வித்தகராவர். அவர் திருவாய் மலர்ந்தருளிய தமிழ் மாலையாகிய திருப்பதிகங் கள்யாவும் காதலாகி ஓதும் அன்பர்களுக்குப் பெருநிதியங்களாக அமைந்து நற்பயன் விளைப் பன என அறிவுறுத்துவது இப்பனுவலின் ஆருந் திருப்பாடலாகும்.

'பதிகம் ஏழு எழுநூறுபகரும் மாகவி யோகி' யாகிய நாவரசருடைய திருவடிகளைத் தலைமேற்கொண்டு வழிபடும் மெய்யன்பர்கள், செல்வம், புகழ், மெய்ந்நெறி, வினைமாசுகழிந்த தூய்மை, மெய்ஞ்ஞானம், சிவனடித்தொண்டு, துறக்கவாழ்வு, தலையாய மனிதர்க்குரிய சால்பு ஆகிய எல்லா நலங்களையும் பெற்று இன்புறு வர் என ஏழாந்திருப்பாடல் கூறும்.

''என்னைக் குடிமுழுதுய்யக் கொண்ட திருநாவுக்கரசடிகளின் திருவடிமலர்கள், சார்ந்த அடியார்களின் இடர்களை அகற்றுவன; தாயினும் பரிந்து அருளும் பெருங்கருணை யுடையன; களங்கமே யில்லாத நிறைவெண் டிங்கள் பத்து ஒன்ருகக்கூடி நிலவொளி பரப் பினுற்போன்று தண்ணொளி பரப்புவன; தூய்மையே யுருவாகத் திகழ்வன; தவமுனிவர் கள் தொழுது போற்றுவன; குற்றமற்ற பெருங் குணங்களுக்கெல்லாம் நிலைக்களமாகத் திகழ் வன'' என இப்பனுவலின் எட்டாந் திருப் பாடலில் ஆசிரியர் பரவிப் போற்றியுள்ளார்.

'தேவர்க்கும் அரிதாகிய சிவலோகக்கதி திருநாவுக்கரசர் அருளால் அடிநாயாகிய எளியேற்கு எளிதிற் கைவந்தது' என நெஞ்ச நெக்குருகிப் போற்றுவதாக அமைந்தது இதன் ஒன்பதாந் திருப்பாட்டாகும்.

'திருநீற்றுக் கவசம் அணிந்து சிவனடியே சிந்திக்கும் மனமுடையராய்ச், சமணர்கள்

அமைத்த நீற்றறையிலே இனிதுதங்கிக் கந்தை மிகையாங் கருத்துடையராய் விளங்கிய திருநாவுக்கரசர், வஞ்சனையின்றித் தம்மை வழிபடும் அடியார்களுக்குப் பசுபந்தத்தினை நீக்கும் பரிசினைப் பணித்தருள் புரியும் பேரருளாளராவர்' என அறிவுறுத்துவது இப்பனுவலின் பத்தாந் திருப்பாடலாகும்.

திருநாவுக்கரசரின் திருவடிகளை வழிபட்டு அவர்தம் திருவருளை நிரம்பப் பெற்ற திருவருட் செல்வராகிய நம்பியாண்டார் நம்பிகள், "திருநாவுக்கரசராகிய அப்பெருந்தகையார் தம் இணையடித் தாமரைகளை எம் தலைமேற் கொண்டு உய்வதன்றி இப்பிறவிப் பெருங் கடலைக் கடத்தற்கு வேறொரு சாதனமும் கண்டிலோம். மற்றுள்ளன எவற்றையும் எமக்குத்துணையாக வேண்டுவோம் அல்லோம். ஆதலால் எக்காலத்தும் முடிவில்லாத இம்மை மறுமைப் போகங்களிற் சிக்கி ஐம்புலன்களின் வழியே சென்று இறப்பார் செல்லும் தீய வழிகளில் யாம் செல்லமாட்டேம்" எனத் தாம் பெற்ற அநுபவத்தினை உலகமக்களுக்கு அறிவுறுத்துவதாக அமைந்தது,

"நன்று மாதர நாவினுக் கரைசடி
நளினம் வைத்துயின் அல்லால்
ஒன்று மாவது கண்டிலம் உபாயம் மற்
றுள்ளன வேண்டோமால்
என்றும் ஆதியும் அந்தமு மில்லதோர்
இகபரத்திடைப் பட்டுப்
பொன்று வார்புகுஞ் சூழலிற் புகேம்புகிற்
பொறியிலைம்புலனேடே"

எனவரும் இப்பனுவலின் பதினொராம் திருப்பாடலாகும். பதினொரு பாடல்களால் அமைந்த இத் திருவேகாதச மாலை திருநாவுக்கரசரது கீர்த்தியினையும் அவரைவழிபட்டு அவர் அருளிய திருப்பதிகங்களை அன்புடன் ஓதிப்போற்றுவோர் எய்தும் பெருநலங்களையும் இனிது விளக்கும் இலக்கியமாகத் திகழ்வதாதலின், இதனை நாள் தோறும் ஓதி மகிழ்தல் சைவமெய்யன்பர்களின் கடமையாகும்.

---

கூற்றாயினவாறு விலக்ககிலீர்
கொடுமை பல செய்தன நானறியேன்

ஏற்றா யடிக்கே யிரவும் பகலும்
பிரியாது வணங்குவ னெப்பொழுதும்



தோற்றா தென் வயிற்றினகம் படியே
குடரோடு துடக்கி முடக்கியிட



ஆற்றே னடியே னதிகைக் கெடில
வீரட்டானத் துறை யம்மானே.



# வேண்டும் அஞ்சாமை

பேராசிரியர் திரு. அ. மு. பரமசிவானந்தம் M.A., M Litt.,

இருபதாம் நூற்றுண்டுக்கு இடையில் வாழும் மனிதன் எதெதற்கோ அஞ்சி அஞ்சி வாழ்கின்ருன். 'அஞ்சுவது அஞ்சாமை பேதைமை' என்று வள்ளுவர் கூறியுள்ளார். அதற்கு விளக்கம் தந்த அறவோர் பகை, பழி, பாவங்களுக்கு மனிதன் அஞ்சி நடக்கவேண்டு மெனவும், அவ்வாறு நடப்பார் நல்உள்ளத்திலே அன்பும் அருளும் சுரக்கும் எனவும் விளக்கிச் சென்றுள்ளனர். ஆனுல் இன்று மனிதன் அவற்றிற்கெல்லாம் அஞ்சவில்லை. பகையையும் பழியையும் பாவத்தையும் தானே வலிந்து சென்று வரவேற்கின்ருன். அதனுலேயே உலகிலும் நாட்டிலும் ஒரு பலகோடி இன்னல்கள் உண்டாகின்றன.

தனி மனிதனுயினும் சரி - சமுதாயமாயினும் சரி - தாம் தாம் வழுக்கிவிழாமல் செல்லத்தக்க நல்ல வழியினை வகுத்துக்கொள்ள வேண்டும். அவ்வாறு நல்ல வழியில் செல்லாத—செல்ல நினைக்காத யாரும் எதுவும் விரைவில் நிலை கெட்டு அழிவுப்பாதைக்கே செல்ல நேரும் என்பதை வரலாறு நன்கு காட்டுகிறது. இன்று நாட்டிலே பட்டம்பதவிகளாலே—செல்வம் அதிகாரம் முதலியவற்ருலே—ஒருசிலர் மற்றவர்களை அடக்க நினைக்கின்றனர். ஆம்! மற்றவரும் அவற்றிற்கெல்லாம் அஞ்சி அஞ்சிச் சாகின்றனர். 'அவர் அஞ்சாத பொருள் இல்லை அவனியிலே' என்று அவர்களுக்காக இரங்கிப் பாடிச் சென்ருர் பாரதியார். இவர்களது 'அஞ்சும்' தொழில் மனித சமுதாயத்தையே எங்கோ அழிவுப்பாதைக்கு அழைத்துச் செல்கின்றது. ஆம்! அப்பாதை மாற்றப்பட வேண்டுமானுல் 'அப்பரது அஞ்சாமை' வாழ்வில்—சமுதாயத்தில்—உலகில் அரும்பி மலர வேண்டும். மலருமா?

நாடெலாம் கட்டிஆண்ட பல்லவமன்னன் 'வருக' என்று ஆணை தந்தான். தான் செய்யாத தவறுக்குத் தண்டனை தரவும், பிற கொடுமைகள் இழைக்கவும், அறம் மாற்றி மறம் வளர்க்கவும் முன்னின்று அதற்குத் தன்னைப் பலியிடப் பல்லவன் எண்ணினுன் என்பதை உணர்ந்தார் அப்பர். 'நாமார்க்கும் குடியல்லோம்' என்ற வீர உரை அவரிடம் உண்டாயிற்று. 'நாவலந் தீவகத்தினுக்குக் காவலரான நாதரே ஏவி விடுத்தாரேனும் கடவமல்லோம்' எனப்பதி லிறுத்தார். கொடுமைக்கு—பதவிக்கு—பட்டத்திற்கு—அதிகார ஆணவத்துக்கு அவர் அஞ்சவில்லை. அவற்றை எதிர்த்துத் தலைநிமிர்ந்து நின்ருர். பலன் என்ன? பல்லவன் அவருக்குப் பல கொடுமைகள் இழைத்தான் என்பது வரலாறு. ஆனுல் அக்கொடுமைகளை அவர் இன்முகத்தோடு வரவேற்ருர். அக்கொடுமைகள் அவரைக் கண்டு அஞ்சின. அவரோ 'அஞ்சுவதியாதொன்று மில்லை; அஞ்சவருவதும் இல்லை' என்று பாடி மகிழ்விலே—இறையன்பிலே ஒன்றியிருந்தார். இந்த அஞ்சாமை நாட்டில் வாழவேண்டும். வாழ்கின்றதா?

அப்பரது அஞ்சாமை மனிதர் அளவிலே நிற்கவில்லை. இயற்கையே எதிர்த்து நின்ருலும் அஞ்சாத வாழ்வு அவருடையது. வானும் மண்ணும் வையமும் பிற இயற்கை நிலைகளும் தத்தம் நிலைமாறித் திசைகெடினும் தாம் அஞ்ச வேண்டுவதில்லை எனத் திட்டவட்டமாக அறிவிக்கின்ருர் அப்பர். ஆம்! ஒருவர் செல்லும் நெறி செம்மையுடையதாக—வையத்தை வாழவைப்பதாக—மறந்தும் தீங்கு செய்யாததாக அமையின் அவர்கள், எதற்கும் அஞ்சவேண்டுவதில்லை. அவரைக்கண்டு கொடுமை நினைக்கும் பிறவிலங்குகளும் கூட அக் கொடுமை செய்ய அஞ்சி அகலும். இவ்வுண்மையை, அப்பர் வாழ்வை விளக்க வந்த சேக்கிழார் 'தீயவாய விலங்கும் வன்தொழில் செய்ய அஞ்சின' எனப்பாடுகிருர். எனவே அப்பரது அஞ்சாமை கொடியவரையும் கொடியவற்றையும் நன்னிலைக்குக் கொண்டு வந்தது.

அப்பர் எதற்கும் அஞ்சாது செம்மை முறையில் சென்றதற்கு அவர் காட்டும் காரணம் அவர் பெற்ற இறையுணர்வேயாம். அன்பு குலாய ஆண்டவனிடம் மெய்யன்பைச் செலுத்தும் நல்லடியார் யாரும் எதற்கும் அஞ்சவேண்டுவதில்லை என அவரே பாடுகிறார்.

‘மண்பாதலம் புக்கு மால்கடல்
மூடி மற் றேழுலகும்
விண்பால் திசை கெட்டு இருசுடர்
விழினும் அஞ்சல் நெஞ்சே
திண்பால் நமக்கொன்று கண்டோம்
திருப்பாதிரிப் புலியூர்க்
கண்பாவு நெற்றிக் கடவுட் சுடரான்
கழலிணையே’

என்றும்,

‘வானந் துளங்கிலென் மண்கம்ப
மாகிலென் மால்வரையும்
தானந் துளங்கித் தலைதடு
மாறிலென் தண்கடலும்
மீனம் படிலென் விரிசுடர் வீழிலென்
வேலை நஞ்சுண்டு
ஊன மொன்றில்லா ஒருவனுக்
காட்பட்டஉத்தமர்க்கே’

என்றும் அவர் பாடும்போது நம்மை நாம் மறக்கின்றோம். உள உரமும், உற்ற தலைவனிடம் மாறா நம்பிக்கையும் கொண்ட நல்ல அடியவர்கள் எத்தகைய கொடுமைகளுக்கும் அஞ்ச வேண்டா என்ற உண்மையை இவை எடுத்துக் காட்டுகின்றன வன்றோ!

மனிதன் செம்மை வாழ்வில் தலை நிமிர்ந்து செல்லும்போது பல இடர்ப்பாடுகள் உண்டாவது இயற்கை. அது தான் முறையும் கூட. எப்போதும் எதிர்பாராத இன்னல்கள் நல்லவர்களுக்கே, இறைவன் அடியவர்களுக்கே அதிகமாக உண்டாவதை எல்லாச் சமய நெறிகளிலும் காண்கிறோம். சமுதாய வாழ்விலும் இந்த நிலைமையே இடம்பெறுகின்றது. ஆனால் நல்லவர்கள் அஞ்சாத வீரர்கள் அவற்றைப் பொருட்படுத்தாது, கடமை வழுவாது, மெய்ம் முறையினின்றும் விலகாது தத்தம் பணியினைச் செம்மையாகவே செய்து கொண்டிருப்பார். இடுக்கண்வரின் சிரிப்புடன் வரவேற்பர். அந்த வரவேற்பில் இடும்பைக்கு இடும்பைபடுப்பர். அத்தகைய பெருநிலையில் வாழ்ந்த மெய்யடியார் அனைவரும் ஆண்டவனை ஒத்துக் காலம் கடந்து வாழ்வர்-வாழ்கின்றனர். அந்த அன்பர் வரிசையில் அடியவர் எண்ணிக்கையில் அப்பர் பெருமான் முதலிடம் பெறுகின்றனர். அப்பர் போற்றிய மெய்ச் சமய வழியில் வந்த நாம் அவர் வாழ்ந்த வழி மறந்து எங்கெங்கோ செல்லுகிறோம். வேண்டாதவற்றை நாடி, வேண்டாதவரைத் தேடி, வேண்டாத அச்சத்தை வேண்டி ஏற்று வீணே கழிக்கின்றோம். மனிதன் உண்மையில் மனிதனாக வாழவேண்டுமானால் இந்தக் கயமை வாழ்வில் செல்லும் கொடுமையைவிட்டு, ‘எது வரினும் வருக அல்லது எது போயினும் போக, எனது நேர்மையை விடமாட்டேன்’ என்ற உணர்வில் எதற்கும் யாருக்கும் அஞ்சாது தலை நிமிர்ந்து வாழவேண்டும். ‘அச்சமே கீழ்களது ஆசாரம்’ என்ற பொய்யா மொழியின்படி அற்பர் அச்சத்தைப் பற்றிக் கிடந்து பரிதபித்துச் சாகட்டும். ஆனால் சமுதாயம் அவர்களைப் பின்பற்றலாகாது. அஞ்சாது வாழ்ந்த அறவோர் அப்பர்போன்ற பெருமக்கள் அச் சமுதாயம் வாழ வழிகாட்டிச் சென்றுள்ளனர். சமுதாயம் முதலில் பெறவேண்டுவது ‘அஞ்சா உணர்வு! ஆம். ஒவ்வொருவரும் அப்பரைப் போன்று ‘நாமார்க்கும் குடியல்லோம்’ என்று வீர உரை கூறி, அதை உணர்ந்து, செயலாற்ற வேண்டும். இன்று மனித சமுதாயம் அழிவுப் பாதையிலிருந்து விலகி, அன்பால் வையத்தை வாழவைக்க இன்றியமையாது வேண்டுவது அஞ்சாமையே.



# அப்பர் அருட்டிறன்

திரு. K. சுப்பராயலு, செயலாளன், அப்பர் இல்லம், திருவதிகை.

ஏழாம் நூற்றாண்டின் தமிழக அரசியல், சமூக, ஆத்மீக வாழ்விலே பின்னிப் பிணைந்த-ஏன்? தமிழகத்தின் அன்றைய வாழ்வையே உருவாக்கிய புண்ணிய மூர்த்தியாய், புரட்சித் தலைவனாய், புல்லறிவாளரையும் பொல்லா அமணரையும் செயல் இழக்கச் செய்த செம்மலாய், ஞானதீபமாய், அஞ்சாமையை அழுத்தமாய்ப் பேசி அருள்வழி காட்டிய அமரனாய்த் திகழ்ந்தவர் நமது அப்பர் மூர்த்திகள்.

பல்லவனுக்கு அமைச்சராகப் பணியாற்றித் தருமசேனர் எனப் பட்டமும் பெற்றுச் சமண சமயத்தினராக இருந்த அவருக்கு ஏற்பட்ட சூலை நோயைச் சமண குருக்களாலும், மருத்துவர்களாலும் போக்க முடியாத நிலையிலே திருவதிகை வந்து "கற்பின் இலக்கணமாய்த் திகழும் தமக்கை திலகவதியார் திருநீறு அளிக்க திருவீரட்டானப் பெருமான் சந்நிதியில் 'கூற்றாயினவாறு விலக்ககிலீர்' என்றுதொடங்கி கசிந்து கசிந்து கண்ணீர் மல்கிப் பாடிப் பதிகம் முடிக்கவும் சூலை நோயும் தீர்ந்தது" என்ற வரலாறு யாவரும் அறிந்ததே. சமண சமயம் வளரப் பேருதவியாய் இருப்பார் என்று பல்லவனும் சமணர்களும் நம்பி இருந்த தருமசேனர், நாவுக்கரசராய் சைவ சமயம்தழுவத் தொடங்கிவிட்டார் என்றசெய்தி சமணர்களைப் பேரதிர்ச்சி கொள்ளச் செய்தது. அதன் பயனாய் அவர்கள்பால் மதவெறி தலைவிரித்தாடத் தொடங்கியது.

சாக்ரடீசை விஷமூட்டியும், ஏசுநாதரைச் சிலுவையில் ஏற்றியும், காந்தியடிகளைத் துப்பாக்கியால் சுட்டும் கொன்றது எந்த மதவெறியோ அதே மதவெறி 7-ம் நூற்றாண்டிலும் நமது ஞானச் சுடர் விளக்காய்த் திகழ்ந்த அப்பர் மூர்த்திகளையும் துன்புறுத்தியது. ஆனால் அவரது மதநெறி சமணர்களின் மதவெறியைத் தகர்த்தெறிந்து விட்டது.

சுண்ணாம்புக் காளவாயிலே ஏழு நாட்கள் வைத்துச் சுடுகிறார்கள். பரமசிவன் பாதம் தரித் துயர்ந்த வாகீசப் பெருந்தகையை நீற்றறைச் சூடு என்ன செய்யும்? 7-ம் நாள் திறந்து பார்க்க அழகிய திருமேனியராய் பூரணப் பொலிவுடன் வெளிவந்தார். அப்ப மூர்த்திகள் அருந்துணையாகப் பற்றிய அடியார் தம் அல்லல் தீர்க்கும் அருமருந்தாம் இறையருள் திறத்தால் அந்த நீற்றறை அனுபவம் அவருக்கு இன்பகரமாக மாறிவிட்டது. அது சுடவில்லை; அதுமட்டுமா! குற்றமற்ற யாழிசையையும், வெண்ணிலாவையும், வீசுகின்ற தென்றற் காற்றையும், விம்மிப் பூரித்த இளவேனிற் சோலையையும், வண்டுகள் மொய்த்துப் பாடுகின்ற மலர்ப் பொய்கையையும் ஒத்து இருந்ததாம் அந்த நீற்றறை. இறைவனுடைய திருவடிகளில் தமது நெஞ்சை இணைத்துப் பெற்ற பேரின்பத்தை நமக்கு எப்படி உணர்த்துகிறார் பாருங்கள்.

'மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும்
போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே'

தமிழ் இன்பத்தையும் இறை இன்பத்தையும் குழைத்தல்லவோ தருகிறார் நம் நாவுக்கரையர்.

நீற்றறையில் வெந்து ஒழியாது பிழைத்ததால் சமணர்கள் கொடும் விஷம் கலந்த பாற்சோறு அளிக்க அதனையும் உண்டு இறவாதிருப்பதைக் கண்டு, மதங்கொண்ட களிற்றை ஏவுகின்றனர். அக்களிறும் வாகீசப் பெருந்தகையை வலம் வந்து சென்று ஏவிய சமணர்களையே மாய்த்தது. அதன்பின் கல்லில் கட்டிக் கடலில் போடுகிறார்கள்,

'கற்றுணைப் பூட்டியோர் கடலிற்
பாய்ச்சினும்
நற்றுணையாவது நமச்சிவாயவே'

என்ற பதிகம்பாடி அக்கல்லையே தெப்பமாகக் கொண்டு கரை ஏறுகிறுர். இங்கே தமிழக மக்கள் ஒன்று கவனித்தல் வேண்டும். தத்துவ மேதை சாக்ரடீசுக்கு விஷமளிக்கப்பட்டது. குடித்தார் மடிந்தார். அன்புவழியைப் போதித்த ஏசுநாதரை சிலுவையில் அறைந்தனர் கொடுங் கோலர்கள். அவர் ஆவி பிரிந்தது மடிந்தது. இம்மாமேதைகளை உலகம் போற்றுகிறது. நாமும் போற்றுகிறேம். போற்றுதல் அவசிய மும் கூட. ஏன் எனில் அவர்கள் தர்மம் பேசி ஞர்கள், அறவழியில் சென்றுர்கள்; உள்ளத்தே உண்மை ஒளி இல்லாத வேடதாரிகளைச் சாடி ஞர்கள் என்பதால். ஆனுல் இங்கே பட்டினத் தடிகளை ஏற்றிய கழுமரமே பற்றி எரிந்தது. கொல்ல ஏவிய களிறே அப்பமூர்த்திகளை வலம் வந்து ஏவியவர்களையே கொன்றது. சுண்ணும்புக் காளவாயில் 7 நாட்கள் வைத்துச் சுடப்பட்டும், விஷமூட்டப்பட்டும், கல்லினைக் கட்டிக் கடலில் பாய்ச்சியும் இறக்கவில்லை. ஏசுநாதர் — சாக்ரடீஸ் — அப்பமூர்த்திகள், இம் மூவரின் வரலாறுகளை வைத்துப் பார்க்கும் பொழுது தமிழகம் தந்த தவப்புதல்வர் அப்ப மூர்த்திகளின் பேரருட்டிறத்தை எண்ணி எண்ணித் தமிழக மக்கள் இறும்பூ தெய்த வேண்டாமா! 'நாவினுக்கரசு என்று உலகு ஏழினும் நின் பெயர் மன்னுக' என்று இறை வன் திருக்குரலெழுப்பினுரே—அந்த அருளா ளர் புகழை எல்லா நாட்டு மக்களும் அவரவர் மொழியில் படித்துப் பயன் பெற-நமது சமயச் சிறப்பை அறிந்து கொள்ளத் தமிழகத்தின் பன் மொழிப் புலவர்கள் பணியாற்ற வேண்டாமா?

அப்பமூர்த்திகளின் தேவாரப் பாடல்களில் சர்வசமய சமரசக் கருத்துகளைப் பரக்கக் காணலாம். இரண்டொன்று கூறலாம்.

'காலதிற் கழல்க ளார்ப்பக்
கனலெரி கையில் வீசி
ஞாலமும் குழியநின்று
நட்டமா தாடு கின்ற
மேலவர் முகடுதோய
விரிசடைதிசைகள் பாய
மாலொரு பாகமாக மகிழ்ந்த
நெய்த்தானனுரே'

என்பதிலும்,

'வெவ்வேருய் இருமூன்று
சமயமாகிப் புக்கானை
எப்பொருட்கும் பொதுவானுனை'

என்ற அடிகளிலும்,

'ஆரொருவர் உள்குவார் உள்ளத்துள்ளே
அவ்வுருவாய் நிற்கின்ற அருளும்
தோன்றும்'

என்ற அடிகளிலும் தெளிவாகக் காட்டுகிறுர்.

அப்பமூர்த்திகளின் சமயப்பற்று மாசுமறு வற்றது. ஆண்டான்—அடிமை, பிறப்பால் உயர்ந்தவன்—தாழ்ந்தவன் என்பன போன்ற ஏற்றத் தாழ்வுகளையும் குறுகிய எண்ணங்களை யும் தயவு தாக்ஷண்யமின்றிச் சாடுவோராய், பிறப்பால் இழிகுலத்தோராயினும் அவர்கள் சிவனடியார்களாயின் அவர்களே நாம் வணங் கத் தக்கவர்கள் என்பதனை அறுதியிட்டுக் கூறுகிறுர் பாருங்கள்.

'அங்கமெலாம் குறைந்தழுகு தொழுநோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராகில்
அவர்கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே'

ஆண்டான் அடிமை (தாஸமார்க்கம்) முறையை அப்பமூர்த்திகள் கடைப்பிடித்து 'என்கடன் பணிசெய்து கிடப்பதே' என்று கூறினுர். 'கடமையைச் செய். பலனை எதிர் பாராதே' என்று கீதையில் கண்ணன் கூறிய அறவுரையை இங்கே அப்பமூர்த்திகள் 'கிடப் பதே' என்ற ஒரு சொல்லில் எவ்வளவு தெளி வாகக் காட்டுகிறுர் என்பதைக் கவனித்தல் வேண்டும். ஆகவே தான் இறைவனும் வாசி யற்ற காசு நல்கி நம் நாவுக்கரசரின் தொண் டின் சிறப்பை உலகிற்கு விளக்கினுர்.

வீரம் செறிந்த அவரது தேவாரப் பாடல் கள் அச்சப் பேயை அடித்து விரட்டுகிறது. அடிமைப் புத்தியைத் தகர்த்தெறிகிறது. ஆண்மை யாளராக நம்மை மாற்றுகிறது.

'அஞ்சுவது யாதொன்றுமில்லை
அஞ்சவருவது மில்லை'

என்ற அடிகளும்,

'நாமார்க்கும் குடியல்லோம்
நமனை அஞ்சோம்'
'என்றும் நாம் யாவர்க்கும்
இடைவோ மல்லோம்'

என்ற வீர முழக்கமே

நம் அடிமை வாழ்வை எதிர்த்துப் பாரதம் நடத்திய மாபெரும் விடுதலைப் போரின் தேசியக் கவிஞுன வரகவி பாரதியை,

'அச்சமில்லை அச்சமில்லை அச்ச மென்ப
தில்லையே'

என்றும்,

'சொந்த நாட்டில் பிறர்க்கடிமை செய்தே
துஞ்சிடோம்
இனி அஞ்சிடோம்'

என்றும்,

'பூமியில் எவர்க்கும் இனி அடிமை செய்யோம்
பரிபூரணனுக்கே அடிமை செய்து வாழ்
வோம்'

என்றும் அனல் கக்கும் புரட்சிக் கவிதைகளைப் பாடச்செய்தது.

இப்படியாக அப்பமூர்த்திகளின் அருட்டிறன் எல்லாத் துறையிலும் சிறந்து விளங்குவதை நாம் நன்கு காண்கிறோம்.

அப்பமூர்த்திகள் அவதரித்த ஊர் திருவாமூர். தமக்கை திலகவதியார் இறைபணி செய்து வந்ததும் அப்பமூர்த்திகளுக்குச் சூலை நோய் தீர்த்ததும் தேவாரம் பிறந்ததுமான ஊர் திருவதிகைத் திருவீரட்டானம். இவ்விரு திருத்தலங்களையும் கொண்டது திருமுனைப்பாடி நாடு. இம்முனைப்பாடி நாட்டிலே வாழும் மக்கள் அவர் வாழ்ந்த காலத்திலே வாழாவிடினும், அவர் அவதரித்த இடத்திலே தமிழ்ப் பெருமக்களின் பேருதவியால் கட்டப்பட்டுள்ள திருமடத்தின் கும்பாபிஷேக காலத்திலாவது வாழ்கின்றோம் என்று பெருமை கொள்ளலாம். அந்தப் பெருமைக்குத் தகுதி உடையவர்களாக அவர் காட்டிய வழியிலே மக்கட்டொண்டு செய்தல் வேண்டும். தன்னலங் கருதாது பிறர் நலம் பேணும் பெரு நோக்கம் உடையவர்களாக வாழவேண்டும். தமிழகமெங்கும் ஏன்? தமிழ்மக்கள் வாழும் எல்லா நாடுகளிலும் அப்பர் இல்லங்கள் துவங்கிப் பன்னிருதிருமுறைகளைப் பள்ளி மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுத்து வீடுகள் தோறும், வீதிகள் தோறும், நகரங்கள் தோறும், நாடுகள் தோறும் எங்கும் தேவாரப் பாடல்கள் முழங்கும்படி செய்தல் வேண்டும். இந்தச் சீரியபணிக்கு—

நிதி மிகுந்தவர் பொற்குவை தாரீர்
நிதி குறைந்தவர் காசுகள் தாரீர்
அதுவும் அற்றவர் வாய்ச்சொல் அருளீர்
ஆண்மையாளர் உழைப்பினை நல்கீர்

வேண்டுகோள் விடுத்து இந்தப் புனிதப் பணிகள் தொடர்ந்து நடைபெற எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுகிறேன். வணக்கம்.

பரித்தறுப்பாம் பாசம் பரமசிவன் பாதந்
தரிந்துயர்ந்த வாகீசர் தாள்.

---



# நாமார்க்கும் குடியல்லோம்

திரு. மணலி S. இராமகிருஷ்ண முதலியார், B.A., சென்னை.

தமிழுலகில் தோன்றிய சமயச் சான்றோர் பலர். அவர்களுள் சமயகுரவர் எனச் சிறப்பிக்கப் பெற்றவர் நால்வரே. சமயகுரவர் யாவரெனில், "அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், திருஞான சம்பந்தர்" என்று ஐந்தாம் வகுப்பு மாணவனும் விரைவில் பதிலளிப்பான். அந்த அளவுக்கு அவர்கள் பெருமையை உலகம் அறிந்துள்ளது. அந் நால்வருள்ளும் முதலில் நிற்பவர் அப்பரே. அவர்தான் ஏனையவரைவிட வயதில் மூத்தவர்.

இறையன்பர், தம் மக்களுக்கு இறைவர் பெயரை வைத்தல் இயல்பு. ஆனால், அப்பூதியடிகளார் அதற்கு மாறாகத் திருநாவுக்கரசர் பெயரையே தம் மக்களுக்கும், தோட்டம், துரவு முதலியவற்றுக்கும் வைத்தழைத்தார் என்றால் அவர் கருத்து யாதாக இருக்க முடியும்? இறைவரோடு நாவுக்கரசருக்குச் சிறிதும் வேறுபாடு இருப்பதாக அவ்வன்பர் கருதினாரில்லை. இறைவனாகவே கருதினார்.

நாவுக்கரசர் பிறப்பால் மனிதராயினும் இறைவரோடு இடையறாதொன்றி இறை நிலையை யடைந்தார். ஊர் அங்கணநீர் உரவு நீரைச் சேர்ந்தபொழுது பேரும் பிறிதாகித் தீர்த்தமாகிறதெனில் இறையோடு சேர்ந்த இறையன்பர் அவர் இயல்பை அடைவார் என்பதில் ஐயமென்னை? அறிஞருலகம் இறைவரையும் அவர் அன்பரையும் வேறுபடுத்திக் காண்பதில்லை. இறையோடு ஒப்பவைத்தே போற்றி வந்திருக்கிறது; இறைவருக்குள்ள தகுதிகள் அனைத்தும் அவர்களுக்கும் இருப்பதாகக் கருதி வருகிறது.

உயிரினங்கள் எல்லாம் ஓயாதுழைப்பதைப் பார்க்கிறோம். அவை எதன் பொருட்டு உழைக்கின்றன? இன்பத்தைப் பெறுதற் பொருட்டல்லவா? தாம் கருதிய இன்பத்தை அவை பெற்றதுண்டோ? பெற்றவையும் அச்சமின்றி அதை நுகர்ந்தனவோ? இல்லையே. காரணமென்ன? நிலையான இன்பம், அதுவும் அச்சமற்ற இன்பம் இறையன்பர்க்குத் தவிர, பிறர்க்குண்டாவதில்லை. இறைவன் இன்ப வடிவாக விளங்குபவன். அவனைச் சார்ந்தவர்தாம் முழு இன்பத்தை அடைய முடியும். பிறர் எத்தகைய நல்ல வாய்ப்புக்கள் பெற்றிருந்தாலும் அவர்கள் அரசனுக்கும் பிறர்க்கும், நோய் நொடிகளுக்கும் அஞ்சி அஞ்சித்தான் வாழ வேண்டும். இறையன்பர் அவ்வாறு அஞ்ச வேண்டுவதில்லை. அவர்களுக்கு எந்நாளும் இன்பமே தவிரத் துன்பமில்லை. அதை நம் நாவுக்கரசர் காரணகாரியத்தோடு அனுபவ வாயிலாகத் தெரிவிக்கின்றார்.

அப்பர் அருகமதம் புகுந்து தென்னாடுடைய சிவனால் ஆட்கொள்ளப் பெற்று, அவனருளுக்குரியவரானார்; சைவரானார். அதை உணர்ந்த அருக முனிவர் வயிறெரிந்து மன்னனிடம் குறை கூறினர். அவன் சீறி எழுந்தான்; அப்பரை உடனே அழைத்து வரும்படி காவலரைப் போக்கினான். அவர்கள் நம் நாவுக்கரசரை அண்மி அச்சத்தோடு மன்னன் கட்டளையைக் கட்டுரைத்தனர்.

அரசன் கட்டளையைக் கேட்டதும் அப்பர் எந்நிலையை அடைந்திருக்க வேண்டும்? அஞ்சி நடுக்குற்றன்றோ விழித்திருக்க வேண்டும்? நாமாக இருந்தால் அவ்வாறுதானே இருந்திருப்போம்? அஞ்சுதற்கு மாறாக அப்பர் புன்முறுவல் பூத்து உவகை கொண்டார். தன்னை வருமாறு பணித்தற்கு அரசனுக்கு என்ன உரிமை இருக்கின்றது? தாம் அவனுடைய குடிமகன் அல்லவே? குடிமகன் அல்லவா அவன் ஆணை வழி ஒழுகவேண்டும்? இதனையறியாது ஆள் போக்கினன் அவ்வரசன் என்று கருதினார். உடனே தாம் அவன் கட்டளைப்படி ஒழுகுதற்குரியவரல்லர் என்பதை,

"நாமார்க்கும் குடியல்லோம்"

என்ற தொடரால் குறிப்பிட்டார்.

மேலும் அரசன் தம்மை அழைத்து வருமாறு ஆள் போக்கியதற்குக் காரணம் தான் ஓர் அரசன் என்னும் செருக்கல்லவா? எத்தகையவரையும் என்ன வேண்டுமானுலும் தன்னுல் செய்யக்கூடும் என்றெண்ணும் ஆணவமல்லவா? அரசன் வெகுண்டால் அளிக்கக்கூடிய பெரிய தண்டனை கொலைத் தண்டனையைத் தவிர வேறு யாதாக இருக்க முடியும்? அக் கொலைத் தொழிலுக்கே உரிய கூற்றுவனே தம்மை நெருங்க அஞ்சும்பொழுது தாம் ஏன் அரசனுக்கு அஞ்ச வேண்டும்? ஆகையால் அரசனுக்கே யன்றிக் கூற்றுவனுக்கும் அஞ்சோம் என்பதை,

"நமனை அஞ்சோம்"

என்ற தொடரால் விளக்கினுர்.

அதோடு அரசனது தண்டனைக்குரியவர் தீச்செயல் பல புரிந்த தீயவர்களே. நரகத்தில் இடர்ப்படுதற்குரியவரும் அவர்களே. தம்மைப் போன்ற அருள் நெறியாளர் அவையிரண் டனுக்கும் உரியவரல்லர் என்பதை,

"நரகத்தில் இடர்ப்படோம்"

என்ற தொடரால் தெளிவாக்கினுர்.

மனிதனுகப் பிறந்தவர் எவ்வாறு குற்ற மற்றவராக இருக்க முடியும்? குற்றம் புரிதல் மாந்தர் இயல்பல்லவா? என்று கருதலாம். குற்றத்திற்கெல்லாம் காரணம் மனத்தின் மாசுடைமையே. மாசு இன்றெனின் உள்ளம் அறத்திற்கு இருப்பிடமாகிறது. 'மனத்துக்கண் மாசிலன் ஆதல்; அனைத்தறன்', என்பது பொய்யா மொழி. தம் உள்ளத்தில் மாசு என்பது இல்லை. அதனுல் வரக்கூடிய தீய செயல்களும் தம்மால் நிகழ்தற்கில்லை. எனவே அரசனது தண்டனைக்குத் தாமுரியவரல்லர் என்பார்,

"நடலை இல்லோம்"

என்ருர்;

மேலும் அவர், தாம் இன்பத்தில் திளைத் தற்குரியவரே அன்றித் துன்பச் சூழலில் சிக்கி இடர்ப்படுபவர் அல்லர் என்பதை "ஏமாப் போம்" என்ற தொடராலும், இடையருது தொடர்ந்து வரும் பிறவித் துன்புங்களும் தம்மை அணுகமாட்டா என்பதைப் "பிணி யறியோம்" என்ற தொடராலும், இத்தகுதிகள் வாய்ந்த தாம் என்றும் பிறருக்குப் பணியத் தேவை இல்லை என்பார் "பணிவோம் அல்லோம்!' என்ற தொடராலும், இறுதியாகத் தமக்கு எந்நாளும் இன்பமேயன்றித் துன்ப மில்லை என்பதை "இன்பமே எந்நாளும் துன்பமில்லை" என்ற தொடராலும் பெற வைத்தமை அறிந்து மகிழ்தற்குரியதாகும்.

இறுதியாகத் தாம் முதன் முதலில் குறித்த "நாமார்க்கும் குடியல்லோம்" என்பதற்குப் பிறிதோர் தக்க காரணத்தையும் கூறுகின்ருர். யாருக்கும் குடிமகனல்லாத தலைவனுக விளங்கு பவன் சிவபெருமான். அவனுக்கு ஆளாகி, அவன் திருவடி நீழலில் இனிதுறையும் தாம் எவ்வாறு பிறனுக்குக் குடிமகனுக முடியும்? என்பதை,

"தாமார்க்கும் குடியல்லாத் தன்மை யான
சங்கரன்நற் சங்கவெண் குழையோர் காதில்
கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி
னேமே"

என்ற தொடர்களால் விளக்கினுர். தான் வணங்கும் கடவுள் சக்தியும் சிவமுமாக விளங்கு பவன் என்பார் "சங்கவெண் குழையோர் காதிற் கோமான்" என்ருர். முழுப்பாடல் பின்வருமாறு:

"நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலை இல்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்
இன்பமே எந்நாளும் துன்ப மில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான
சங்கரன்நற் சங்கவெண் குழைஒர் காதிற்
கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி
னேமே."

இத்தகு பெருமை வாய்ந்த அப்பர் சுவாமி களின் திருத்தொண்டிற்கு மணலி, இலக்குமண சாமி முதலியார் அறநிலையச் சார்பில் யானளித்த சிறு தொகையாகிய இரண்டாயிரம் வெண் பொற்காசுகளையும் பயன்படுத்திக் கொண்ட இறைவன் கருணைத் திறத்தை என்னென்று புகழவல்லேன்? ★

# தாங்கலும் கிடத்தலும்

திரு. நல். முருகேச முதலியார், B.A., சென்னை.

அப்பருக்கொரு கோயில் கட்டினோம். அது அன்பு நிலையமாக வேண்டும். அப்பரை அன்பில் அணைத்துவைக்க வேண்டும். அவர் வளர்த்த திருத்தொண்டின் நெறியில் வாழ வேண்டும். அந்நெறி மக்களிடத்தில் பரவ வேண்டும். அப்பரின் உழவாரங் கொள்கையே அவருக்கு சிவபோகத்தை உரிமையாக்கியது: இது நாம் சொல்வதல்ல. தாயுமானூர் வாய் மலர்ந்தருளியது. உழவாரம் எதைக் குறிக்கிறது? உழவாரம் தாங்காத வரை நாமும் இறைவனை அறிவதில்லை. இறைவனும் நம்மை யறிவதில்லை. உழவாரம் அடிமையின் சின்னம், அன்பின் அடையாளம். உழவாரம் ஏற்பது ஒரு புதுப் பிறப்புபோல் ஆகும். அதுவரை சோடையாய் இருந்த நாளாகும். இதைத்தான் அப்பர் குறிப்பது பின்வரும் தேவாரத்தில்,

என்னை யேதும் அறிந்திலன் எம்பிரான்
தன்னை நானுமுன் ஏதும் அறிந்திலேன்
என்னைத் தன்னடி யானென் றறிதலும்
தன்னை நானும் பிரானென் றறிந்தெனே.

சிவன் நமக்குப் பிரான் என்று அறிதலுமே பொறுப்பு இறைவன்பாலதாய் ஆய்விடுகிறது. நமக்கு ஞானத்தைக் காட்டுவான், நன்னெறியைக் காட்டுவான். நாமடைய வேண்டிய ஸ்தானத்தையும் காட்டுவன். அந்த வேலையெல்லாம் அவனுடையது. ஆனால் அவனுக்கு அடிமையென்று அறியவேண்டுமே! அதுதான் எளிதாகிய காரியமல்ல. அதற்குத் தவம் வேண்டும். அவனை அடைந்துவிட்டால் பாவங்கள், அல்லல் நோய்கள், அருவினைகள், நல்குரவு ஒன்றும் நம்மை யணுகா. அலைந்து கெட்டவனுக்கு அன்னம் கிடைத்தால் வேறொன்றையும் வேண்டானே. அதுபோல் சுகம் பெறலாம். அதற்கு வழி என்ன? துணையென்ன? 'தொண்டலாது துணையுமில்லை'யென்று அப்பரே சொல்கிறார். தொண்டிற்கு முதல் தேவை மனத்தினுள் மாசு தீர்தல். அதற்கு வழி புலனடக்கம். அதுமட்டும் போதாது. புத்தியை ஒருங்க வைக்கவேண்டும். சினங் களைய வேண்டும். மெய்வருத்தம் பார்க்கக்கூடாது. இவைகளையெல்லாம் அப்பர் வாழ்வில் நாம் காண வில்லையா? அப்பரின் துறவு மேலான துறவு. நாசமாய குலநலஞ் சுற்றங்கள் முதலான பாசங்களைக் களைந்தார். நெஞ்சிருள் கூரும்பொழுது ஐந்தெழுத்தின் நிலாப் பாரிப்பு அவ்விருளைக் கெடுத்தது. நீற்றறை, விடம், கஜம், கடலாழம் முதலியன ஒன்றும் அப்பரைத் தாக்கவில்லை. ஏன்? இறைவன் அப்பரைத் தன்பணியருளால் ஆகம் வைத்தான்.

இறைவன் அப்பரைத் தாங்கினான். எல்லாரையுந்தான் இறைவன் தாங்குகிறான். பணிந்தவரையும் தாங்குகிறான். பணியாதவரையுந்தான் தாங்குகிறான். இதில் என்ன வித்தியாசம்? ஒருதாய் தன் குழந்தைக்கு நல்ல கயிறுகொண்டு ஏணை கட்டுகிறாள். குழந்தையைத் தாங்குவது கயிறு. ஆனால் அதைக் கட்டியவள் தாயே. தாய் குழந்தை அழும்போது கையில் தாங்கித் தான்வேறு குழவி வேறனது கூடி அழுவதுபோல் அழுது, முத்தமிட்டுப் பால் தருகிறாள். பால் அருந்தியபின் குழந்தை தரையில் தவழ முயன்றாலும் கட்டித் தாங்குகிறாள். இது ஒரு உதாரணம்தான். இறைவன் ஆட்பட்டாரைத் தாங்குகிறான். அது இறைவனுக்குத் தன் கடனாகும். தாங்குதல் என்றால் ஆதரவளித்தல் என்பது பொருள்:

அப்பரின் வாழ்க்கைக் குறிக்கோளே இறைவன் தம்மைத் தாங்க வேண்டும் என்பது தான். அதற்குத் தாம் என்ன செய்தார்? பணி செய்து கிடத்தலே.

'நங்கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்கடம்பைத் திருக்கரக் கோயிலான்

தன்கடனடி யேனையுந் தாங்குதல்
என்கடன்பணி செய்து கிடப்பதே’

ஆம். பணி செய்து கிடக்கவேண்டும். அதைக் கடமையாகச் செய்யவேண்டும். கடன் என்பது அன்புடன் செய்யும் முறைமை. பணிந்தால் போதாதா? பணி செய்ய வேண்டுமா? சரி, பணி செய்தால் போதாதா? பணி செய்து கிடக்க வேண்டுமா? கிடத்தல்தான் அன்பைக் குறிக்கும். தொண்டுக்கும் பணிக்கும் என்ன வித்தியாசம். பணிவது மனத்தால்மட்டும் செய்யலாம். தொண்டு மனமொழி மெய்யால் செய்ய வேண்டியது. ஞானிகளால் மற்ற மனிதர்களுக்குப் பயனில்லை, அவர்களால்மட்டும் இறைவன் புகழ் நிலவாது. தொண்டு வேண்டும். ‘தொண்டாகிப் பணிவார்க்குத் தொல்வான் ஈய வல்லான்’ இறைவன். தொண்டிசைத்து அடிபரவ வேண்டும். தொண்டு செய்யாதவர்கள் ‘பிறந்து வாளா தொல்வினைக் குழியில் வீழ்ந்தது பிண்டமே சுமந்து நாளும் பெரியதோர் அவாவில்’ பட்டவர்களாவார்கள். தொண்டு என்பது ஈசனுக்கும் ஈசனடியார்களுக்கும் அன்பினுல் செய்ய வேண்டிய பணிகள். சரியை கிரியை யோகம் என்ற முறைகளில் விதிக்கப்பட்ட செயல்களுமாம்.

கடனைப் பணியாகச் செய்ய வேண்டுமா, அல்லது பணியைக் கடனுகச்செய்யவேண்டுமா என்பது ஓர் பெரிய பிரச்சினை. பின் சொன்ன முறை கீதையில் குறிக்கப்பட்ட முறையாகும். அதை நிஷ்காமியம் என்பார்கள். அது வருணுசிரமம் முதலியவைகளால் ஏற்பட்ட பணிகளைப் பயன் கருதாது இறைவனுக்கு அர்ப்பணமாகச் செய்தல். இது சாமானியம் அப்பர் நெறியில் அன்பையே பணிவாக மாற்றுவது. எந்தெந்த விதங்களில் இறையன்பு உருவகப்படலாமோ அந்த விதங்களிலெல்லாம் பணி செய்வது. இது ஒரு புரட்சிக் கொள்கை. அப்பர் நெறியில் பணிகளைச் செய்யவேண்டும். துறவுபூண்டு பணியற்று நிற்க வேண்டியதில்லை. பணிகள் புரிந்தால்தான், தான் உய்வு பெறுவது மட்டுமின்றி மற்றைய மக்களும் உய்வு பெறுவார்கள். அப்பர் வாழ்க்கை வரலாறே இதை விளக்குகிறது. துறவித் தொழிலை மறவித் தொழில் என்கிறுர் அப்பர்.

‘துறவித் தொழிலே புரிந்துன் சுரும்படியே
[தொழுவார்
மறவித் தொழிலது மாற்று கண்டாய்.’

உடம்பால் தொண்டு செய்வோர்களை வாழ்விக்க வேண்டுமென்று இறைவனை வேண்டுகிருர்.

‘உடம்பைத் தொலைவித் துன்பாதந் தலைவைத்த
[உத்தமர்கள்
இடும்பைப் படாமல் இருத்து கண்டாய் ’

என்கிருர்.

இறைவனை ஒன்று கேட்க வேண்டுமென்று அப்பருக்கு வெகு ஆவல். ஆனுல் அதைச் சொல்வதற்குத் தைரியம் இல்லை. ஆனுல் துணிந்து கேட்கிருர்.

“சொல்லக் கருதிய தொன்றுண்டு கேட்கில்
[தொண்டாயடைந்தார்
அல்லற்படக்கண்டு பின்னென் கொடுத்தி?”

என்று வினவுகிருர். எனவே அப்பரின் சித்தாந்தம் கடனைப் பணியாகச் செய்யவேண்டும். செய்வதென்ருல் செவ்வைப்படுத்தல் என்பது பொருள். பணித்தல் என்பது வெறும் வேலை செய்தல். ஒருவன் வேலை பண்ணுகிருன், தர்மம் செய்கிருன் என்று பேசுகிருேம். வித்தியாசம் வெளிப்படை.

கடனைப் பணி செய்வதென்பது சரி; ஆனுல் அப்பர் பணி செய்து ‘கிடக்க வேண்டு’ மென்கிருரே? அதென்ன பொருள்? கிடப்பது என்பதுதான் சைவ சித்தாந்தத்தின் சீரிய உண்மையை உணர்த்துகிறது. கிடந்தவர்களைத்தான் இறைவன் தூக்குவான். பரசமயக் குழியில் விழுந்து மீண்டபின் இனி மயங்காது உய்ந்து கரை ஏறு நெறி கூற வேண்டுமென்று அப்பர் திலகவதியாரைக் கேட்டபோது கீழே வீழ்ந்து கிடந்தார். தமக்கையார் ‘எழுந்திரீர்’ ‘பணிசெய்வீர்’ என்றுதான் சொன்னுர். கிடத்தல் ஆணவ முனைப்பு ஒடுங்கி நிற்பதைக் குறிக்கும். தனது இச்சை சுதந்திரம் ஒன்றுமில்லாது சிவன் செயலே எல்லாம் என்று உணர்ந்து நிற்றல். இது அருள்வழி நிற்கும் முறையாகும். பணி செய்வதால் வரும் விருப்பு வெறுப்பு இல்லாமல் இருப்பதுதான் கிடத்தல். இதுதான் சும்மாயிருக்கும் தத்துவம். இல்லையேல் பணி பிழையாகும், குற்றமுற்றதாகும். அத்தகைய பணிதான் இறைவன் பணிவித்த பணியாகும். நாமார்க்கும் குடியல்லோம் என்று வீர சுதந்திரம் அறைகூவிய அப்பர், இறை

பணியில் வேறு தத்துவத்தைக் கடைப்பிடிக்கிருர். தான் இறைவனுக்கு ஆட்பட்டுவிட்டால், இறைவனே எல்லாவற்றிற்கும் முன் நிற்கிருன்.

**குடிசெய்வல் என்னும் ஒருவருக்குத் தெய்வம்**
**மடிதற்றுத் தான் முந்துறும்**

என்பர் பொய்யிலாப் புலவர்.

இதுதான் சைவ சித்தாந்தத்தில் கூறும் ஏகனுகி இறைபணி நிற்கும் தத்துவம். இது தான் மலமாயைகளின் சார்பறும் செயல். அப்போது இறைவன் அவனே தானுகிருன். அந்நிலை மாறுபடாமல் நிற்பதற்கு இறைபணி உதவுகிறது. இதுதான் ஞானத்திறம். இது செவ்விய அன்பில்தான் தலைப்படும்.

திருவாரூர் கோயில் பணிசெய்து கிடக்கும் தத்துவத்துக்கு ஓர் அறிகுறியாக விளங்க வேண்டும். அதில் ஈடுபடுபவர்கள் பணி செய்பவர்களாக இருக்க வேண்டும். பணிசெய்து கிடக்கவேண்டும். இதுதான் தொண்டின் திறம். பேரும் புகழும் நாடுபவர்களுக்குத் திருவாரூர் சில தினங்களுக்குத்தான் பயன்படும். ஆரவாரங்கள் அடங்கிய பின், அப்பரும் திருவாரூரும் மறக்கப்படும். திருவாரூரில் தொண்டர்களைப் பயிற்சிக்க ஏற்பாடுகள் செய்யவேண்டும். தொண்டு மனப்பான்மையுள்ள தூய பக்தியுள்ள இளைஞர்களுக்குப் பயிற்சி தரவேண்டும். சைவ சித்தாந்தம் கற்பிக்க வேண்டும். கல்வித்துறையில் ஈடுபாடுடையவர்கள் கல்வி தானம் செய்யவேண்டும். மருத்துவம் தெரிந்தவர்கள் மருத்துவ உதவி செய்யவேண்டும். சாத்திரம் அறிந்தவர்கள் சாத்திரம் சொல்லித் தர வேண்டும். இசை அறிந்தவர்கள் தேவாரப் பயிற்சி செய்விக்க வேண்டும். இந்தத் தொண்டர்களின் சத்சங்கம் வளர வேண்டும். ஆல்பர்ட் ஷுவைட்சர் என்ற மேதாவி மத்திய ஆப்பிரிக்காவில் பணிபுரிந்து வருகிருர். அவர் வயித்தியர். தத்துவ நிபுணர். சங்கீதத்தில் மேதை. தொழுநோ யுடையவர்களைத் தொட்டுப் பணி புரியும் மேன்மை வாய்ந்தவர். இது மாதிரிதான் அப்பரின் உழவாரப்படைத் தொண்டு சிறக்க வேண்டும். இதற்கு ஒரு தலைவர் வேண்டுமே? அவர்கீழ் பத்து தியாக புத்தியுள்ள அப்பர் பக்தர்கள் சேர்ந்தால்கூடப் போதும். விவேகாநந்தர் நாட்டைச் செம்மைப் படுத்த நூறு இளைஞர்கள்தான் தேவையென்று கூறினுர். அப்பருக்குப் பத்து போதும். ஏசுநாதர் சிலுவையை ஏந்தினுர். மக்களின் பாவத்தை ஏற்றுக் கொண்டார். அப்பர் உழவாரப் படையைத் தாங்கினுர் சைவ உலகம் உய்ய! நாம் அவருக்கு ஆட்படுவோமா? பணிசெய்து கிடப்போமா? உள் நெஞ்சு பதில் கூறவேண்டும்.

---

பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்
நாக்கைக் கொண்டரன் நாமம் நவில்கிலார்
ஆக்கைக் கேஇரை தேடி அலமந்து
காக்கைக் கேஇரை யாகிக் கழிவரே.

— அப்பர் சுவாமிகள்.

# அருள் வழக்கம்

சிவத்திரு. மாணிக்கவாசக ஞான தேசிக சுவாமிகள்,
சிவராஜ யோக மடம், மேலையூர்.

பாமர மக்கள் திருவருளை நம்பிப் பிரார்த்தனை செய்து உலக இடையூறுகளுக்குப் பரிகாரம் தேடிக்கொண்டு அமைந்து விடுகின்றனர். அறிவுடையார் தத்துவ உண்மைகளை ஆராயும் முயற்சியோடு தெய்வ வழிபாடு செய்கின்றனர். திருவருளை அனுபவத்தில் உணர்தல் இவற்றுக் கெல்லாம் மேம்பட்ட நிலையாகும். அப்படி அனுபவத்தில் உணர்ந்தவர்களும் கூட பிறருக்கு அதனை உணர்த்தும் ஆற்றல் பெற்றவர்களாக இருத்தல் அரிது. ஆதலால் திருவருளைத் தாம் உணர்வதோடு மட்டும் அமையாமல் பிறருக்கும் உணர்த்தும் ஆற்றல் பெற்றவர்களே சமயத் தலைவர்களாக இருக்கத் தக்கவர்கள். அவர்களைத் தான் ஆசிரியர்களாக உலகம் ஏற்றுக் கொள்ளும்.

திருவருளை உணர்வதற்குரிய சாதனங்கள் பல. கும்பாபிடேகம் முதலிய செயல்களால் அருட் சக்தியைக் காண்பது ஒருவகை. தனியிடத்தே இருந்து மனம் ஒருங்கித் தியானித்து நிட்டை கூடித் திருவருளைக் காண்பது மற்றொரு வகை. முதிர்ந்த அன்பினால் தொண்டுசெய்தே திருவருளைக் காண்பது பிறிதொரு வகையாகும். இவற்றுள் மூன்றுவதாகச் சொல்லிய தொண்டு நெறி பக்தி மார்க்கம், திருநெறி என்றெல்லாம் சொல்லப்படுவது. இந் நெறிதான் எல்லோரும் எந்த நிலையிலும் பின்பற்றத்தக்க எளிய நெறியாகும். இருந்த போதிலும் இந் நெறியில் உறைத்து நின்று பயன் காண்பதற்கு முன்னைய புண்ணியமும் வேண்டும். நல்ல சிவ தன்மத்தால் — நல்ல சிவ கன்மத்தால் — நல்ல சிவ ஞானத்தால் நானழிய ஆரேனும் அன்பு செய்யின் அங்கே அரன் வெளிப்படுவான் எனத் திருக்களிற்றுப்படியார் கூறுகின்றது.

### திலகவதியார்

தம்பியார் உளராக வேண்டுமென வைத்த தயா காரணமாக உயிர் வாழ்ந்த திலகவதியார் வாளா காலம் கழிக்க வில்லை. அவர் நிலையில் செய்யத்தக்க திருத்தொண்டுகளைத் தேர்ந்தறிந்து திருவதிகைத் தலத்தில் தங்கி அத்தொண்டுகளைச் செய்து வந்தார். திருக்கோயிலை நாள்தோறும் அலகிட்டு மெழுக்கும் இட்டுப் பூமாலை புனைந்தேத்தி இறைவனை வழிபட்டு வந்தார். அவர் செய்த தொண்டு, அவர் செய்த வழிபாடு சிறந்த தவமாகும் என்று ஆசிரியர் சேக்கிழார் அறிவிக்கின்றார். மங்கல நாண் தாங்காமல் நெஞ்சகத்தே அனைத்துயிர்க்கும் அருள் தாங்கிச் செய்த தவம் எனவும், உலகோர் அனைவரையும் செய்யும்படி தூண்டிய தவம் எனவும் அத்தவத்தை ஆசிரியர் சேக்கிழார் கூறுகின்றார். திலகவதியாரைத் தூண்டுதவ விளக்கு எனவும், இறைவனை அவ்விளக்கினிடமாக நின்று பிரகாசிக்கும் சுடரொளி எனவும் உருவகப்படுத்தியதும் மிகவும்நயப்பாடுடையது

நீறணிந்தார் அகத்திருளும் நிறைகங்குற் புறத்திருளும் மாறவரும் திருப்பள்ளி யெழுச்சி நேரம் அது. திருவலகு திருமெழுக்குத் தோண்டியுடன் அதிகைப் பெருமான் திருக்கோயிலுக்குச் செல்லுகின்றார் திலகவதியார். சூலை நோயுடன் வந்த மருள்நீக்கியார் அப்போது வந்து திலகவதியார் பாதத்தில் வீழ்ந்து வணங்கிச் சூலைநோயின் கொடுமை நீங்குமாறு அருள் செய்ய வேண்டும் என்று வேண்டிக் கொள்கின்றார். இறைவன் திருவருளைச் சிந்தித்துத் திருநீற்றினை வழங்கி, ''கொள்கையில்லாத பரசமயக்குழிவீழ்ந்து கொடுந் துன்பத்திற் காளானீர். எல்லாம் சிவபெருமான் திருவருளாதலால் அவர்

திருவடிகளைப் பணிந்து நன்மை பெறுவீராக ” என அருள் மொழி கூறி இறைவன் சந்நிதிக்கு அனுப்புகிறுர். ஆசிரியன் மாணவனுக்கு இறைவனை உணர்த்த எவ்வளவோ கிரியைகளும் தீட்சா முறைகளும் நூல்களில் விதிக்கப்டுள்ளன. முனிவர்கள் இறைவனைக் காண்பதற்குக் கடுந் தவம் புரிகின்றனர். — இப்படிப் பட்ட செயல்கள் ஒன்றுமின்றித் திலகவதியார் பேரன்போடு தொண்டு செய்தே இறைவன் திருவருளைப் பெற்று மருள்நீக்கியாருக்கும் அவ்வருளை வழங்கி அவரைத் திருநாவுக்கரசராக்கினரென்ருல் அவ்வம்மையார் பெருமையினை நம்மனோர் அளவிட்டுரைக்க முடியுமோ !

நமது சமயத் தலைவர்கள் அனைவரும் நம்மனோர்க்கு அருள்வழங்க வந்த வள்ளற் பெருமக்களாகும். திருநாவுக்கரசு நாயனுரை நமக்கு வழங்கியவர் திலகவதியாராகும். சமணர்கள் அளவற்ற கொடுமைகளைச் செய்தபோதும் அப்பர் பெருமான் அவர்களைப் பற்றிய சிந்தனையேயின்றி இறைவன் திருவடிகளையே சிந்தித்திருந்தார் என்பது பெரிய புராணத்தால் அறியக் கிடக்கின்றது. நீற்றறையிலிட்டுப் பூட்டி வைத்தும் கருங்கற் பாறையோடு கட்டிக் கடலில் தள்ளி இவ்வளவு பெருங் கொடுமைகளைத் துணிந்து செய்த அவர்களைப்பற்றி ஒன்றுமே சிந்திக்காத பெருநிலை எளிதில் வரக்கூடிய பண்பா என்று சிந்தித்துப் பாருங்கள் அன்பர்களே ! திருவருளை நம்பிய பெரியவர்கள் பலர் உலகத்தார் எதிர்ப்புக் கிரையாகி மாய்ந்து போனுர்கள் என்பதை நாம் அனைவரும் அறிவோம். ஆனுல் திருநாவுக்கரசர் முதலிய நமது சமயத் தலைவர்கள் திருவருளை முழுமையாகப் பெற்று உலகத்தாரையும் பூத சக்தியையும் எதிர்த்து நின்று நிருபித்த பெருமை சான்றவர்கள். அப்பர் சுவாமிகள் மனங்கனிந்து நம்மனோரை அழைத்து உபதேசம் செய்வதைத் தேவாரப் பாடல்களால் அறியலாம்.

கற்றுக் கொள்வன வாயுள நாவுள
இட்டுக் கொள்வன பூவுள நீருள
கற்றைச் செஞ் சடையான்உளன் நாம் [உளோம்
எற்றுக் கோநம னல்முனிவு உண்பதே

நடலை வாழ்வுகந் தென்செய்தீர் நாணிலீர்
சுடலை சேர்வது சொற்பிர மாணமே
கடலின் நஞ்சமு துண்டவர் கைவிட்டால்
உடலி னர்கிடந் தூர்முனி பண்டமே

என்பன போன்ற எண்ணிறந்த பாடல்களால் நமக்கு உபதேசம் செய்து அருளை வழங்கவந்த அப்பெருமான் திருவடிகளை வாழ்த்தி வணங்கி நலம்பெறுவோமாக.



வெய்யநீற் றறையதுதான் வீங்கிளவே னிற்பருவம்
தைவருதண் தென்றலணை தண்கழுநீர்த் தடம்போன்று
மொய்யொளிவெண் நிலவலர்ந்து முரன்றயாழ் ஒலியினதாய்
ஐயர்திரு வடிநீழல் அருளாகிக் குளிர்ந்ததே !

— பெரியபுராணம்.

# திருநாவுக்கரசர் தொண்டுநெறி

திருக்குறள்வேள் திரு. ஜி. வரதராஜன், பி.ஏ., புத்தூர்.

பண்டைக்காலத்தில் உலகியலில் அந்தணர் வேள்வி ஓம்பினர்; அரசர் நாடு காத்தனர்; வணிகர் வாணிகம் செய்தனர்; வேளாளர் வேளாண் தொழில் புரிந்தனர். நால்வகையினரும் நான்கு வகையான நெறியிற் சென்று பொருளை ஈட்டினர். ஆனல் இன்பமடைதல் ஒன்றே அவர்கள் குறிக்கோளாகும். அதைப் போல ஆன்ம இயலில் சரியையாளர் தொண்டு புரிந்தனர்; கிரியையாளர் பூஜை இயற்றினர்; யோகியர் யோகம் செய்தனர்; ஞானியர் நூல்களைக் கற்றனர். நால்வகையினரும் நான்கு வகையான நெறியிற் சென்று மெய்ப்பொருளை நாடினர். ஆனல் பேரின்பம் பெறுவது ஒன்றே அவர்கள் குறிக்கோளாகும்.

அதிகாலையில் திருக்கோயிலை வலம் வருதல் அலகிடுதல், மெழுகுதல் பூமாலை புனைதல்; கும்பிடுதல், கூத்தாடுதல் முதலியன தொண்டின் பாற்படும். இவை உடலாற் செய்யப்படுவனவாதலால் புறவழிபாடாகும். இந்நெறியில்நின்று இறைவனை வழிபடுவோரைச்சரியையாளர் என்பர். இனி, இறைவனைப் புறத்திலே இலிங்கத்திலே வைத்து விதிப்படி வழிபட்டுப் பின்னர் அகத்திலே இலிங்கத்தை அமைத்து மானதமாக வழிபடுவது பூசையின்பாற்படும். இவை உடலாலும் மனத்தாலும் செய்யப்படுவனவாதலால், அகப்புற வழிபாடு எனப்படும்- இந்நெறியில் நின்று இறைவனை வழிபடுவோரைக் கிரியையாளர் என்பர். அடுத்து மனத்தை இந்திரியங்களின்வழி புறத்தே ஓடாது தடுத்து, அகத்தே ஒருநிலைப் படுத்தி இறைவனைத் தியானித்தல் முதலியன யோகத்தின் பாற்படும். இவை மனத்தால்மட்டும் செய்யப்படுவனவாதலால் அகவழிபாடு எனப்படும். இந்நெறியில் நின்று இறைவனை வழிபடுவோரை யோகியர் என்பர். நான்காவதாக ஞான நூல்களைக் கற்று அறிவிலே தெளிவு உண்டாகி இறைவனை அங்கிங்கெனுதபடி எங்கும் பிரகாசமாய்க் காண்பது ஞானத்தின் பாற்படும். இவை அறிவிலே நிகழ்வனவாதலால் அறிவு வழிபாடு எனப்படும். இந்நெறியில் நின்று இறைவனை வழிபடுவோரை ஞானியர் என்பர்.

இந்நான்கு நெறிகளில் திருநாவுக்கரசருக்குத் தொண்டு நெறி மிக உகந்ததாகும். தொண்டு நெறியைக் கூறவந்த சாத்திரம்,

'தாதமார்க் கஞ்சாற்றிற் சங்கரன்றன் கோயிற்
றலமலகிட் டிலகுதிரு மெழுக்குஞ் சார்த்திப்
போதுகளுங் கொய்துபூந் தார்மாலை கண்ணி
புனிதற்குப் பலசமைத்துப் புகழ்ந்து பாடித்
தீதிறிரு விளக்கிட்டுத் திருநந்த வனமுஞ்
செய்துதிரு வேடங்கண் டாலடியேன் செய்வது
யாதுபணி யிரென்று பணிந்தவர்தம் பணியும்
இயற்றுவதிச் சரியை செய்வோ ரீசனுல கிருப்பர்'

என்று தொண்டு நெறியிற் செல்வோர் செயலை விளக்கமாகக் கூறியது. இறைவனால் உயிர்களுக்கு அளிக்கப்பட்டது தனுகரணபுவன போகம் என்பனவாம். ஆதலால் அவைகளின் துணைகொண்டு இறைவனுக்கே ஆட்செய்ய வேண்டும் என்பது கோட்பாடு. நாயனுர் அருளிச் செய்த திருவாரூர்த் திருத்தாண்டகம் இவ்வுண்மையினை விளக்குவதாகவுள்ளது.

'நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலு மெம்பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்குமிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதி யென்றும்
ஆரூரா என்றென்றே அலரு நில்லே'

# நான் கண்ட நாவுக்கரசர்

திரு. S. வடிவேல் பிள்ளை, B.A.L.T.,
(சிறப்பு அலுவலர், பொதுக் கல்வி இயக்குநர் அலுவலகம், சென்னை.)

உலக மக்கள் உண்மை நெறியிலிருந்து மாறுபட்டுத் தவருன வழியில் நடக்கும் போது பெரியார்கள் தோன்றி வழி காட்டுகின்றனர். கருணைக் கடலாகிய இறைவனது ஆணையின் படி குறிப்பிட்ட சில பணிகளுக்காக உட லெடுக்கும் மேலான ஆன்மாக்களே அத் தகையவர்கள். அவர்களது பிறப்பே அவ தாரமெனப்படும். ஒரு காலத்தில் தளர்வுற்ற நமது சைவ சமயத்தை நிலை நாட்டிய திரு ஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தர மூர்த்தி சுவாமிகள், மாணிக்கவாசகர் என்ற சைவ சமயாசாரியார்கள் நால்வருடைய பிறப்புக்களும் திருவவதாரங்களேயாகும்.

அவர்களுள் திருநாவுக்கரசரது வரலாறு கூறப் புகுந்த சேக்கிழார், அவரது திருத் தொண்டின் நெறி வாழ வேண்டுமென்று தொடங்குகின்ருர். ஞானத் தவ முனிவரென்று அவரைக் குறிப்பிடுகின்ருர். திருநாவுக்கர சரை நினைக்கும்போது அவர் ஒரு சிறந்த தவ முனிவராகவும் தொண்டராகவும் நமது மனக் கண்முன் தோன்றுகின்ருர். தூய வெண்ணீ றணிந்த மேனியராய், சிவபெருமான் திருவடி களையே தமது உள்ளத்தில் இடையருது நினைந் தவராய், ஓயாது உள்ளம் நெக்குருகி மழைத் தாரை போல் விழிநீர் பெருக்கியவராய், விருப் புறு மேனி கண்ணீர் வெண்ணீற்று வண்ட லாடப் பெற்றவராய், கழுத்தில் தாழ்வட மணிந்தவராய், அங்கங்கள் அடங்கப் பெற்றவ ராய், உடல் புளகித்தவராய் 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்ற தமது கொள்கைப் படி திருத்தொண்டின் சின்னமாக உழவார மாகிய கருவியைக் கையில் தாங்கியவராய், ஞானப்பாடல் தொடையருச் செவ்வாயினை யுடையவராய் நமக்குக் காட்சியளிக்கிருர்.

சைவ சமய குரவர்கள் நால்வரும் நான்கு பெரு வழிகளைப் பின்பற்றி மக்களுக்கு நன் னெறி காட்டியதாக ஆன்ரோர்கள் கூறுவர். அவற்றுள் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணிய நெறியில் நாவுக்கரசர் சிறந்து விளங்கியுள்ளார். சிந்தையாலும், சொல்லா லும், செயலாலும் தொண்டு செய்ய வேண்டு மென்பதே அவரது நோக்கம்.

வாகீசர் சொல் நாமத் தமிழ் புனைந்து தொண்டு செய்வதற்காகவே ஒவ்வொரு தல மாகப் போகின்ருர். திருவுழவாரங் கொண்டு பெருத்தெழு காதலோடும் பெருந் திருத் தொண்டு செய்து கும்பிட்டுப் பாடும் பணி

---

திருநாவுக்கரசர் தொண்டுநெறி ... ...

நாயனுர் குழந்தைப் பருவத்திலே செல்வத் திலே பிறந்து செல்வத்திலே வளர்ந்தவர்கள்; பின்னர் பல்லவ சாம்ராஜ்ஜியத்தில் உயர்ந்த அரசியல் பதவி வகித்தார்கள். ஆனுல் செல்வ மும் பதவியும் நிலையாதன என்று உணர்ந்த னர். எளிய வாழ்க்கை மேற்கொண்டனர். இறைவனுல் ஆட்கொள்ளப் பட்டுப் பல தலங் களுக்குச் சென்று வழிபட்டார்கள்.

இறுதியாகத் திருப்புகலூரில் தங்கி உழவா ரப்பணி புரிந்து கொண்டிருந்தனர். அவ்வம யம் பல சோதனைகளுக்கு ஆளானுர். 'வீடும் வேண்டா விறலின் விளங்கினமையால் நாயனுர் ஓடும் செம்பொன்னும்' ஒக்கவே நோக்கினுர். இறுதியில் இறைவன் திருவடி நிழலை எய்தினுர்.

அவர் மேற்கொண்ட நெறி தொண்டு நெறி. இந்நெறியைப் பின்பற்றி நாமும் வீடுபெறுவோ மாக.



களும் செய்கின்றார். "நங்கடம்பனைப் பெற்ற வள் பங்கினன், தென் கடம்பைத் திருக்கரக் கோயிலான், தன் கடன் அடியேனையும் தாங்குதல், என் கடன் பணி செய்து கிடப்பதே" என்று சொல்லித் தம்மைப் பேணும் பாரத்தையெல்லாம் இறைவன்மேல் போட்டுவிட்டுத் தன்னலமற்ற தொண்டினையே தமது கடனாகக் கொள்கின்றார்.

படமாடுங் கோயிற் பகவன் பணியேயன்றி நடமாடுங் கோயில் நம்பர் பணியையும் நாவுக்கரையர் செய்கின்றார். சம்பந்தப் பிள்ளையாருடன் திருவீழிமிழலையை யடைந்த போது, வையம் எங்கும் வற்கடமாய் உலகோர் வருத்தமுற, அண்ணல் அருளால் படிக்காசு பெற்று, "அல்லார் கண்டத்து அண்டர் பிரான் அருளால் பெற்ற படிக்காசு, பல்லாறு இயன்ற வளம் பெருகப் பரமனடியாரானார்கள் எல்லாம் எய்தி உண்க", என்று இரண்டு பொழுதும் பறை நிகழ்த்திச் சொல்லால் சாற்றிச் சோறிட்டுத் துயர்கூர் வறுமை போக்குகின்றார்.

சிவபெருமான் திருவடிக்கே மீளா ஆளாய் அடியவர்களுக்கு எளியவராய் விளங்கிய நாவுக்கரசர், மண்ணகத்துக் கொற்றவனுக்கும் தென்னகத்துக் கூற்றுவனுக்கும் சிறிதும் அஞ்சாத மனவுறுதியுள்ளவராய்த் திகழ்கின்றார். சமணர்களது தூண்டுதலால்பல்லவன் அழைத்த போதும், "நாமார்க்குங் குடியல்லோம், நமனை யஞ்சோம்," என்றும் "நாம் யாவர்க்கும் இடைவோ மல்லோம், இருநிலத்தில் எமக் கெதிராவாருமில்லை, சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றேம்" என்று சொல்லி அரசனுக்குப் பணிய மறுக்கின்றார்.

அமைச்சரும் சேனை வீரரும் அடி வணங்கி வேண்டியதற்கிசைந்து அரசனிடம் சென்ற போதும் அவனது ஏவலால் தாம் பெற்ற தண்டனைகளை யெல்லாம் சிவபெருமான் திருவடிக்கே பதித்த நெஞ்சின் உறுதியால் பொருட்படுத்தாது இறைவனைத் துதித்து இனிதிருக்கின்றார்.

வாகீசர் உள்ளத்தில் உறுதியோடு வாக்கிலும் உறுதியுடையவராகப் பேசுகின்றார். "அல்லல் என் செயும்; அருவினை என்செயும்; தொல்லை வல்வினை தொந்தம்தான் என்செயும் தில்லை மாநகர்ச் சிற்றம்பலவனார்க்கு, எல்லையில்லதோர் அடிமை பூண்டேனுக்கே" என்கின்றார். "புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி என் மனத்தே வழுவாதிருக்க வரந்தர வேண்டு"மென்று வேண்டுகின்றார். "ஏழு பிறப்பும் உனக்கு ஆட் செய்கின்றேன்; துடைக்கினும் போகேன்" என்று பாடிக் கிடக்கின்றார். "பூவாரடிச் சுவடு என்மேற் பொறித்து வை; போகவிடில் மூவா முழுப்பழி மூடுங் கண்டாய்!" என்று இறைவனை எச்சரிக்கின்றார். "வெம்மை நமன்தமர் மிக்குவிரவி விழுப்பதன் முன், இம்மை உன்தாள் என்றன் நெஞ்சத்து எழுதி வை; ஈங்கு இகழில், அம்மை (மேலைப் பிறவி) அடியேற்கு அருளுதி என்பது இங்கு ஆரறிவார்?" என்று வழக்காடுகின்றார். "கண்ணினாலுமைக் காணக் கதவினைத் திண்ணமாகத் திறந்தருள் செய்ம்மின்" என்று உரிமைக்குரலோடு கதவைத் தட்டுகின்றார்.

மனவுறுதியும் சொல்லுறுதியும் காட்டுகின்ற நாவுக்கரையர் உடலுறுதியிலும் இளைத்தவரல்லர். அவ்வுடலுறுதியினையும் இறை பணிக்கே உரிமையாக்குகின்றார். இறைவனை வணங்கத் தலையையும் காணக் கண்களையும் புகழ் கேட்கச் செவிகளையும் மெல்லிய ஒலியால் எப்போதும் அவனைப் போற்றுதற்கு மூக்கினையும் வாழ்த்த வாயினையும் நினைக்க நெஞ்சினையும் கூப்புதற்குக் கைகளையும் அவன் கோயிலிற் புரண்டு வலம்வரக் கால்களையும் ஆண்டவன் நமக்கு அருளியுள்ளானென்பதை வாகீசப் பெருந்தகை திண்ணமாக வுணர்கின்றார். கால் நடையாகக் கயிலை யாத்திரையை மேற்கொள்ளுகின்றார். சாகமூல பலங்கள் துய்ப்பனவும் தவிர்த்து, தனித்து இரவு பகலாக இடைவிடாது செல்கின்றார். தாமரை போன்ற தாள்கள் பரட்டளவும் தேய, கைகளும் கரைந்து சிதைந்த பின், மார்பினால் வருந்தி உந்திச் செல்கின்றார். மார்பகமும் தசை நைந்து சிந்த, எலும்பு முரிந்திட, புரண்டு புரண்டு செல்கின்றார். மெய்ப்புறத்தில் உறுப்புகள் அழிந்த பின், மெல்ல உந்து முயற்சியும் தப்புறச் செயலின்றி வழியில் தங்குகின்றார்; இத்தகைய நிலையிலும் தம்மெதிரில் ஒரு முனிவராக வந்த பரமனிடம் வாகீச முனிவர், 'ஆளும் நாயகன் கயிலையில் இருக்கை கண்டல்லால் மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன்', என்று வீணே திரும்பிப் போக மறுத்து விடுகின்றார்.

இவ்வாறு தமது உடலை வருத்தி இறைவனது திருக்கோலங் காணும் முயற்சியானது, முன்னமே முனியாகிப், புற்றுமாய் மரமாய்ப் புனல் காலே உண்டியாய் வற்றி, இறைவனையடைய தவம் முயன்றதன் விட்ட குறை போலும்!

இனி, திருநாவுக்கரசர் யாம் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம் என்றபடி, மக்கள் இறைவனைத் தொழுது வணங்கி உய்ய வேண்டுமென்று தமது அனுபவங்களையும் தாமறிந்த உண்மைகளையும் உலகினருக்குப் பல வகையாக எடுத்துக் கூறுகின்ருர். தம்முடைய நெஞ்சுக்கே உபதேசம் செய்வது போல, ''நெஞ்சே, இடர் கெடுமாறு எண்ணினுல், நிலை பெறுமாறு எண்ணுதியேல், பற்றி நின்ற பாவங்கள் பாற்ற வேண்டில், பரகதிக்குச் செல்வதொரு பரிசு வேண்டில், ஆரூரா, அடல் விடையாய், ஆரமுதே, உற்றவரும் உறுதுணையும் நீயேயென்றும் உன்னையல்லால் ஒரு தெய்வம் உள்கேனென்றும், இரவினெடு நண்பகலும் ஏத்தி வாழ்த்திப், பிழைத்ததெல்லாம் பொறுத்தருள் செய் பெரியோய் என்றும் அணியாரூர் இடங் கொண்ட அழகா என்றும் குழற் சடையெங்கோனென்றும் கூறு'', என்று அறிவுறுத்துகின்ருர். மக்களையழைத்து, 'மனிதர்காள் இங்கே வம்மொன்று சொல்லுகேன், கனிதந்தாற் கனியுண்ணவும் வல்லிரே' என்று நயமாகப் பேசி, துன்பப்பட்டவர்களுக்கு ஈசன் எனும் கனி சாலவும் இனிதாக இருக்கும் என்று பதமாகச் சொல்கின்ருர். அடுத்தபடியாக, கனியைவிட இனிய பொருளையும் குறிப்பிடுகின்ருர். ''கனியினும் கட்டிபட்ட கரும்பினும், பனிமலர்க் குழல் பாவை நல்லாரிலும், தனி முடி கவித்து ஆளும் அரசினும் இடைமருதன் தன்னை யடைந்தவர்களுக்கு இனியன்'' என்று எடுத்தியம்புகின்ருர்.

திருநாவுக்கரசர் சாத்திர நூல்களிலிருந்து அரிதில் அறிந்து கொள்ளக்கூடிய தத்துவங்களைத் தமது தேவாரப் பாடல்களிலேயே எளிதாக எடுத்துக் கூறுகின்ருர். இறைவன் மின்னுருவாகவும், விண்ணகத்தில் ஒன்ருய், வீசுங்கால் தன்னகத்தில் இரண்டாய்ச், செந்தீயில் மூன்ருய், புனலில் நான்காய், தரணியில் ஐந்தாய் உள்ளானென்றும், ஆதியும் அறிவுமாகி அறிவினுட் செறிவுமாகிச் சோதியுட் சுடருமாகித் தூநெறிக்கு ஒருவனுகிப் பாதியிற் பெண்ணுமாகிப் பரவுவார் பாங்கனுகி இருக்கின்ருனென்றும்; ஓசையொலியெலாம் ஆனுனென்றும் உலகு ஒருவனுய் நின்ருனென்றும் எல்லாவுலகமும் ஆனுனென்றும், எனினும், மனத்திருந்து கருத்தறிந்து முடிப்பானென்றும் அவன் பொய்யேதும் இல்லாத மெய்யன் என்றும் நினைப்பவர் மனம் கோயிலாகக் கொள்வான் என்றும் அவனருளே கண்ணுகக் காணின் அல்லால் அவனை இப்படியன் இந்நிறத்தன் இவ் வண்ணத்தன் என்றெழுதிக் காட்டொணுது என்றும் இவ்வாருக இறைவன் உயிர்களுக்கு அருளும் வண்ணமும் ஆதி மாண்பும் எடுத்து விளக்குகின்ருர்.

வாகீசப் பெருந்தகை தன் ஞானப் பாடல் திறமறிந்து, மெய்ந்நெறி யுணர்ந்து நாடோறும் ஆண்டவனை வணங்கி, 'யாதொரு தெய்வங் கொண்டாலும் அத்தெய்வமாகி வந்து அருள் புரியும் மாதொரு பாகனுகிய அம்மையப்பனே!

கருவாய்க் கிடந்துன் கழலே
நினையுங் கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்துன்றன் நாமம்
பயின்றேன் உனதருளால்
திருவாய் பொலியச் சிவாய
நமவென்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நீ பாதிரிப்புலி
யூர் அரனே.

என்று வேண்டித் தொழுது அருள் பெற்று உய்வோமாக!



# அப்பரின் அற்புதச் செயல்கள்

திரு.K.E. அருணுசல முதலியார், M.A., B.Com.

சைவ சமய ஆசிரியர் நால்வருள் ஒருவராகிய திருநாவுக்கரசு நாயனர் என்பவர் இறைவன் திருவருளால் இவ்வுலகில் எண்பது ஆண்டுகள் வாழ்ந்து சைவ சமயத்திற்குத் தொண்டு செய்து இருள் கவிந்து கிடந்த சைவ சமயத்தை மறுபடியும் நம் மக்களிடையே மலரச் செய்த பெருமை உடையவர். சிவபெருமானல் "அம்மையே" என்று காரைக்கால் அம்மையார் அழைக்கப்பட்டது போல, சிவகுமாரராகிய திருஞான சம்பந்தரால் "அப்பரே" என்று போற்றப்பட்டார். நம்முடைய நாயனர் அவருடைய தமக்கையாராகிய திலகவதியாரால் சிவ தீக்ஷா அருள் விபூதிப் பிரசாதம் வழங்கப் பெற்றுப் புறச் சமயத் தீங்கும், சூலை நோயும் நீங்கப் பெற்ற பெருந் தவத்தோர் அப்பர் சுவாமிகள்.

சைவ சமய ஆசிரியர் நால்வருள் நமது அப்பர் பெருமானும் சுந்தரரும் தோன்றிய பெருமை திருமுனைப்பாடி நாட்டிற்கு உண்டு. வேறு சமயத்தில் சென்றிருந்த நமது அப்பர் பெருமானைச் சிவபெருமான் அருளால் சைவ சமயத்திற்குத் திருப்பிக்கொண்டு வந்து சேர்த்த திலகவதியார் அவதரித்த பெருமையும் அந்த நாட்டிற்கு உண்டு.

நமது பெருமானின் வாழ்க்கையில் பல அற்புதச் செயல்கள் நடந்திருக்கின்றன. அதைச் சிலர் கவனிக்காமல் இருந்து விடுவது உண்டு. அல்லது இந்த மாதிரி செயல்கள் எல்லாம் நடந்திருக்குமா? என்று சந்தேகப்படுவதும் உண்டு.

அப்பர் பெருமான் சமண சமயத்தை விட்டுச் சைவ சமயத்திற்குத் திரும்பி வந்த உடனே அந்தக் காலத்தில் அரசு புரிந்த பல்லவ மன்னன் சமண சமயத்தைச் சேர்ந்திருந்ததால் சமணர்களின் தீய எண்ணங்களுக்குச் செவி மடுத்து, நமது அப்பர் பெருமானுக்குச் செய்த தீங்குகள் பற்றி நமது பெருமானின் தேவாரப்பாடல்களிலும், சேக்கிழார் பெருமான் அருளிச் செய்த சான்றுகள் காட்டி நிரூபணம் செய்யலாம்.

நமது தெய்வச் சேக்கிழார் திருத்தொண்டர் புராணத்தில் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் அந்தக் காலத்தில் அவருக்குக் கிடைத்த சான்றுகளைக் கொண்டு மிகவும் நுட்பமாக ஆராய்ந்து வெளியிட்டிருக்கின்றார். அந்த அளவிற்கு நாம் நம்முடைய மனத்தைத் திடப்படுத்திக் கொண்டால் அப்பர் பெருமான் வாழ்க்கையில் நடந்த அற்புதச் செயல்களைப்பற்றி நாம் சிறிதும் ஐயுற வேண்டியதில்லை.

அவருக்குச் சமணர்கள் இழைத்த தீங்குகளை நினைத்தால் நமக்கே உடல் சிலிர்க்கும். முதலாவதாக அவரை நீற்றறையில் விட்டுக் கதவைப் பூட்டி விட்டார்கள். அப்பொழுது அவர் பாடிய தேவாரம் அவருடைய மனநிலையை நமக்கு எடுத்துக் காட்டுகிறது.

**" மாசில் வீணையும், மாலை மதியமும்**
**வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்**
**மூசு வண்டறை பொய்கையும் போன்றதே**
**ஈச னெந்தை யிணையடி நிழலே "**

சில நாட்கள் கழித்துத் திறந்து பார்த்தால் நமது பெருமானுக்கு ஒரு விதமான தீங்கும் நேரவில்லை. சமணர்களுக்கு மேலும் மனம் கொதித்தது. அடுத்தபடியாக விடத்தைக் கலந்து பால் உணவு கொடுத்தார்கள். சமணர்கள் தந்த நஞ்சும் அமுதமாகி நம்முடைய அரசுகளை ஒன்றும் செய்யவில்லை. சமணர்கள் அரசனிடம் சென்று அரசுகளுக்கு ஒரு விதமான தீங்கும் நேரவில்லை என்று முறையிட்டார்கள். அரசன் அப்பர் பெருமான் பேரில் மதயானையை ஏவவிட்டான். அது அவரைச் சுற்றி வலம் வந்து நிலத்தில் விழுந்து வணங்கி விட்டு அவர் பேரில் ஏவவிட்ட ஆட்களைத் துரத்திச் சென்றது. அதைக் கண்ட பிறகு கடைசியாக நமது பெருமானைக் கல்லில் கட்டிக் கடலில் போட்டு விட்டார்கள். அப்பொழுது தான் நம்முடைய அரசுகள் நமச்சிவாயப் பதிகத்தைப் பாடியருளினுர். அவரைக் கல்லில் பிணைத்துக் கடலில் போட்ட பொழுதும் கூட அவர் அஞ்செழுத்தை ஏத்தினுரேயன்றி அமணர்களையேனும் அவர்களோடு மதியிழந்து கொடுஞ் செயல் செய்வித்த மன்னனையேனும் ஒருசிறிதும் வெகுண்டு கூறவில்லை என்பது, இன்றைய பூசல் நிறைந்த உலகில் வாழும் நாம் எல்லோரும் கவனிக்கவேண்டிய ஒன்ருகும். இன்னும் ஒன்றிரண்டு அற்புத நிகழ்ச்சிகளையும் குறிப்பிடலாம். விடம் தீண்டி இறந்த அப்பூதி அடிகளின் மகனை இறைவன் திருவருளால் பிழைக்க வைத்தார். அவர் அன்று விஷம் தீர்க்கப் பாடிய பதிகம் இன்றும் விஷத்தைத் தீர்க்கக் கூடிய சக்திவாய்ந்ததாக இருக்கின்றது. திருமறைக்காட்டில் மூடிய கதவைத்திறக்குமாறு பாடினுர். திருவீழிமிழலையில் இறைவனிடம் காசு பெற்றுப் பஞ்சத்தைப் போக்க உதவினுர்.

அவர் பாடிய தேவாரம் எல்லாம் நம்முடைய வாழ்க்கைக்கு வழிகாட்டியாக இருக்கின்றன என்று சொன்னுல் மிகையாகாது. சைவத்திலே சிவபெருமானைச் சேர்வதற்கு நான்கு மார்க்கங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன, அதாவது சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பது. அதிலே அப்பர் பெருமான் சரியைமார்க்கத்தை எப்படி நாம் செய்ய வேண்டும் என்பதை நமக்கு ஐயம் திரிபறச் செய்து காண்பித்தார். சரியை மற்றமார்க்கங்களை விடக் கடைப்பிடிப்பது எளிதாகும். நம்முடைய சக்திக்குத் தகுந்த சிவத்தொண்டு செய்தால் அதனுடைய பலனை நாம் அடைய முடியும் என்பதை அடிகளுடைய வாழ்க்கையில் இருந்து நாம் தெரிந்து கொள்ளலாம். அடிகளுடைய சீரிய தொண்டிற்குச் சேக்கிழார் திருத்தொண்டர் புராணத்தில் வரும் பாட்டு நல்ல சான்ருகும்.

"தூயவெண்ணீறு துதைந்த
பொன்மேனியுந் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவரு
சிந்தையும் நைந்துருகிப்
பாய்வது போலன்பு நீர்பொழி
கண்ணும் பதிகச் செஞ்சொல்
மேய செவ்வாயுமுடையார்
புகுந்தனர் வீதியுள்ளே"

நமது அப்பர் பெருமான் அருளிய பல பாட்டுக்களில் நாம் இறைவனை வேண்டிக் கேட்க வேண்டிய வரம் போல அமைந்த பாட்டு ஒன்று இருக்கிறது. திருப்பாதிரிப் புலியூரிலே அவர் வேண்டிக் கேட்கின்ருர்.

"புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா
உன்னடியென்மனத்தே
வழுவாதிருக்க வரந்தரல் வேண்டும்
இவ் வைய கத்தே
தொழுவார்க் கிரங்கி யிருந்தருள்
செய் பாதிரிப் புலியூர்ச்
செழுநீர்ப்புனற் கங்கை செஞ்சடை
மேல்வைத்த தீவண்ணனே"

இதையே நாம் எல்லோரும் இறைவனிடம் வேண்டிக் கேட்போமாக.

---

# பழமொழிகள்: உவமை உருவகங்கள்

திருநெறிச்செம்மல். வித்துவான் திரு. சா. குருசாமி தேசிகர்,
தமிழ்ப் பேராசிரியர், பல்கலைக் கல்லூரி, தருமபுரம், மாயூரம்.

பழமொழிகளைத் தொகுத்தல் ஒரு நூலாக்கத்திற்கு ஒப்பாகும். நம் நாட்டில் வழங்கும் சிறந்த பொருள் பொதிந்த பழமொழிகளைக் கையாள்வதின் மூலம் நாம் சொற் சுருக்கம் பொருள் விளக்கம் இவற்றைப் பெறுகிறோம். பழமொழிகளை மேற்கோள்களாகக் கொண்டு பழமொழி நானூறு என்றொரு இலக்கியமும் இருக்கிறது. வாழ்க்கையில் பல சமயங்களில் பழமொழிகள் நமக்குப் பயன் அளிக்கின்றன. பாவலர் பலரும் பழமொழிகளின் மூலம் பல கருத்துக்களைத் தம் நூல்களுள் விளக்கிச் செல்வதில் தவறுவதில்லை. படித்தவர் முதல் பாமரர் வரை பழமொழி இலக்கியம் பரவியிருக்கிறது. பாமரர்கள் பழமொழிகளையே இலக்கியமாகக் கொண்டு வாழ்க்கையைக் கடைப் பிடிக்கின்றனர். இப் பழமொழிகள் பல திருநாவுக்கரசு சுவாமிகள் திருவாய் மொழியாக வெளிவந்துள்ளன. உவமை உருவகங்களும் இவ்வாறே நம் சிந்தையைத் தெளிவிக்கும் சிறப்போடு இலங்குகின்றன.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருவாரூர்த் திருப் பதிகம் ஒன்றைப் பழமொழிப் பதிகமாகவே பாடி அருளியுள்ளார்கள். பாடல்கள் தோறும் பழமொழிகளைக் கடைசியடியாகக் கொண்டு பதிகப் பாடல்கள் விளங்குகின்றன. மற்றும் பல திருப்பதிகங்களிலும் பழமொழிகள் பதிக்கப் பெற்றிருக்கின்றன.

இவற்றை ஒருங்கே எண்ணிப் பார்த்தல் நமக்கு நல்ல பலனை அளிக்கும்.

## அறமிருக்க மறம் விலைக்குக் கொள்ளுதல்

திருநாவுக்கரசர் இளமையில் சமண சமயம் சார்ந்தார். பிறகு திலகவதியாரின் வேண்டுகோளின் படி அதிகைப் பெருமான் சூலை மடுத்து ஆட்கொண்டார் அல்லவா? ''இளமையிற் புறச் சமயம் புகுந்தேன். பொய், பாவம் பெருக்கினேன். குண்டர்கள் சொல்லைக் கேட்டேன். இவ்வாறு புறம் புகுந்த எனது கள்ளம் போக்கி, சூலை மடுத்து ஆட்கொண்டான் ஆரூர்ப் பெருமான். ஆரூர்ப் பெருமான் அருகிருக்கும் ஊழ்இன்றிச் சிலகாலம் வாழ்ந்தேன். இந்நிலை அறம் இருக்க மறத்தை விலைக்குக் கொண்டதற்கு ஒக்கும். விலைக்குக் கொள்ளத் தக்க அறம் (புண்ணியம்) எளிதாய் இருக்க விலையின்றிக் கிடைப்பினும் வெறுத்தற்கரிய மறத்தை (பாவம்) விலை கொண்ட பேதைமையினை ஒக்கும் என்று அவரே கூறுகின்றார்கள். அப்பர் பெருமானை இறைவன் சூலை மடுத்து ஆட்கொண்டதற்கும் இப் பாடல் அகச் சான்றாக உள்ளது. இப் பாடலில் வழங்கும் பழமொழி இக் காலத்திலும் இப் பொருளில் உரு மாறி வழங்குகிறது.

''அருகுவித்துப் பிணிகாட்டி ஆட்கொண்டு
பிணிதீர்த்த ஆரூரர்தம்
அருகிருக்கும் விதியின்றி அறமிருக்க
மறம்விலைக்குக் கொண்டவாறே.

## ஆற்றிற் கெடுத்துக் குளத்தினில் தேடிய ஆதர் 4-97-6

இறைவன் நமக்கு அருள் வழங்க எல்லாத் திருக்கோயில்களிலும் எழுந்தருளி யுள்ளான். அங்குச்சென்று அவன் அருள் பெறுதல் எளிது. அதைவிடுத்து இறைவனிருக்கும் இடம் தேடி இயற்கையிலா? செயற்கையிலா? கடலிலா? காட்டிலா? மலையிலா? மரத்திலா? என்று ஆராய்ச்சி செய்து உலகெலாந் தேடி உழிதரும் துன்மதியாளருக்கு ஒரு பழமொழி கூறுகிறார்

அப்பர். ஆற்றில் போட்டுக் குளத்தில் தேடு வோரை, அறியாதவர் என்று தானே சொல்ல வேண்டும். அதுபோல இறைவனைக் கோயி லுக்குள் எழுந்தருளச் செய்து கோயிலுக்குட் சென்று காணுமல் புறவெளியில் காண முயலல் பயன் தருமா? என்றும் கேட்கிறுர்.

## இருட்டறையில் மலடுகெறந்து எய்த்தல் 4-5-6.

பிரவிருத்தியை வளர்க்கும் நூல்களை ஓதிப் பவணன் முதலிய பெயர்களோடு, பறித்த தலை யோடு திரிந்த என் உள்ளத்தில் எழுந்தருளி உறுதிப் பொருளை உணர்த்திஞன் இறைவன். இவ்வாறு எளிது ஆண்ட வள்ளலை எண்ணுது சமண மதத்தைச் சார்ந்து கடவுளைக் காண முயன்ற என் இளமை முயற்சி இருட்டறையில் மலட்டுப் பசுவைக் கறந்து வருந்தியதை ஒக் கும் என்று கூறுகிருர்.

## இருதலை மின்னுகின்ற கொள்ளிமேல் எறும்பு 4-75-6.

'இருதலைக் கொள்ளி எறும்பு' என்ற இத் தொடர் பலர் வாயிலும் பழமொழியாய் வழங்கும் தொடர் "இருதலைக் கொள்ளியின் உள் எறும் பொத்து நினைப்பிரிந்த விரிதலையேனை விடுதி கண்டாய்" என்பது திருவாசகம். கொள்ளி என்பது சிறுவிறகு. இருபுறமும் உள்துளை யுள்ள குச்சிகளில் சிலவேளைகளில் எறும்புகள் உள்ளே நுழைந்திருக்கும். அவற்றை அடுப் பிலே எரிக்கும்போது மற்ருெரு முனையில் உள்ள துளை வழியாக வெளிவந்து விடும். அவ்வாறு எறும்பு நுழைந்த குச்சி இருபுறமும் எரிய நேர்ந்தால் உள்ளே உள்ள எறும்பு இங்கு மங்கும் ஓடிஓடித் தப்பிக்க முயற்சித்து வருந் தும். இவ்வாறு மக்கள் துன்பங்களில் இரு புறத் தாக்குதல்களால் வருந்த நேரும். ஒரு துன்பத்திலிருந்து விடுதலை பெற முயன்ருல் மற்ருெரு துன்பம் முளைக்கும். இந் நிலையை விளக்குவது இருதலைக் கொள்ளி எறும்பு என்ற தொடர். இருதலைக் கொள்ளி எறும்பாய் உள் ளம் தடுமாறிஞல் எங்ஙனம் இறைவனைக் காண முடியும்?

"இருதலை மின்னுகின்ற, கொள்ளிமேல்
எறும் பென்
னுள்ளம் எங்ஙனம் கூடுமாறே"

## கரும்பிருக்க இரும்புகடித்து எய்த்தல் 4-5-10.

இராவணனது பத்துத் தோள்களும் இரு பது கைகளும் மனித ஆற்றலை விடப் பதின் மடங்கு அவனது ஆற்றலைக் குறிப்பது. அவ னது தாளும் தோளும் இறைவனுல் அழிக்கப் பட்டன என்ருல், அப்பெருமானது பராக்கிரமம் வெளிப்படும். பிரமனது தலையில் ஒன்றைக் கிள்ளிஞன் என்ற வரலாறு அப் பெருமானே படைத்தற்கும் கடவுள் என்பதை விளக்கும். ஆலாலமுண்டவன் என்ற அப்பெருமான் திருப் பெயர் அவனது கருணையை விளக்கும். இத் தகைய ஆற்றலும், மேலாந் தன்மையாய கருணையுமில்லாத கடவுளரை எண்ணி வாழ்தல் கரும்பிருக்க இரும்பு கடித்துச் சாறு பெருது வருந்து தலைப் போல்வதாகும் என்று கூறுகிருர் அப்பர் பெருமான்.

## கனியிருக்கக் காய்கவர்ந்த கள்வன் 4-5-1.

கனியிருப்பக் காய் கவர்ந்தவரை இன் சுவைக் கனி உண்ணும் ஊழ் இல்லாதவர் என்ரோ, அறியாதவர் என்ரோ கூறவேண்டும். திருக்குறளில் இன்சொல் இருக்க வன்சொல் கூறுதலுக்குக் கனியிருப்பக் காய் கவர்தல் உவமையாகப் பேசப் பெறுகிறது. பக்குவம் பெருத காய் போன்றன பிற சமயங்கள். உண் ணுதற்கு ஏற்ற பக்குவமும் சுவையும் உடையது சைவம். சைவமாம் சமயம் சாராது புறச் சம யம் சாரும் நிலைக்குக் கனியிருப்பக் காய் கவர் தல் உவமையாகக் கூறப்படுகிறது. திருநாவுக் கரசர் புறச் சமயம் சார்ந்த தன் தவறை உணர்ந்து வருந்தும் பாடல்களில் ஒன்று.

## கூவலாமையும் குரைகடலாமையும் 5-100-5.

கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பம் தெரியுமா? என்பது பழமொழி. கிணற்று ஆமை கடலாமையைப் பார்த்து, இக்குளத்தை ஒக்குமோ கடல் என்று கூறுவது போலப் பாவ காரிகள் சிவனது எல்லையிலாப் பெருந்தன் மையை நம் மனிதத் தன்மையுடன் ஒப்பிட்டுப் பேசுவர் என்று கூறும் பாடல் மிக இனிய கருத்து விளக்கமாகும்.

## கொத்தைக்கு மூங்கை வழி காட்டுதல் 4-99-2.

குருடனுக்கு ஊமை வழிகாட்டியது போல என்பது பழமொழி. இவ்வுவமை அப்பரடிகள் பிற சமயத்தவர் அஞ்ஞானிகளுக்கு வழிகாட்டப் புகுதற்கு உவமையாகக் கூறப்படுகிறது. அப்பரடிகள் இளமையில் வீட்டுநெறியை அறிய விரும்பிச் சமண் சமயம் சார்ந்தமைக்கும், அவருக்கு அம் மதபோதகர்கள் செய்த உபதேசங்கட்கும் இது உவமை. தன்னை அறிவுக் கண் பெருத குருடராகவும் சமணக் குருமார்களை இறைவன் திருவருள் பெறும் வழி உணர்த்தத் தெரியாத ஊமையராகவும் உவமை கூறப்படுகிறது.

## தோளாத சுரையோ தொழும்பர் செவி 5-90-3.

உள்துளையில்லாத செவிகட்கு உபதேசம் செய்து என்ன பயன்? இறைவனுக்குத் தாமும் ஆளாக மாட்டார். ஆளாகிய மெய்யடியார்களைச் சார்ந்து உய்யவும் மாட்டார். மீளா அடிமைத்திறமும் மெய்ம்மையுள் நிற்கும் இயல்பும் இலர். இத்தகையவர் எத்தனை உபதேசங்கள் கேட்டும் என்ன பயன்? பாவம்! பிறவிப் பயன் பெருது இறந்து மண்ணுக இருக்கின்ருர்களே என்று இரங்கிப் பாடுகிருர் அடிகள்.

## நரி வரால் கவ்வச்சென்று நல்தசை இழந்தது 4-27-5

நரி ஒரு சமயம் சிறிய ஆறு ஒன்றைக் கடக்க நேர்ந்தது. வாயிலே ஒரு தசைத் துண்டோடு வந்த நரி மெதுவாக ஆற்றைக் கடக்க முற்பட்டது. ஆற்றின் நடுவில் செல்லும் போது கொழுத்த வரால் மீனைக் கண்டது. ஆசை மேலும் பெருகிற்று நரிக்கு. இந்தத் தசையைவிட வரால் சுவையுடைய தாயிற்றே என்று எண்ணியது. தசைத்துண்டை உமிழ்ந்து வரால் மேல் தாவியது. வரால் தப்பி ஓடி விட்டது. ஊனையும் வராலையும் ஒருங்கே இழந்த நரியின் கதை உலகில் நல்ல உண்மைகளை வெளியிடுகிறது. உள்ளுயிர்க்கு உயிராய்த் திகழும்-பெருமானை எண்ணிக் கொண்டிருப்பவர் இடையிலே அத் தவநெறியைக் கைவிட்டுப் பாசப்பற்றில் ஈடுபடுதலை இக்கதை இப்பாடலில் காட்டுகிறது.

## நரி விருத்தம் 5-100-7.

நரி வரலாறு எனப் பொருள்படும் இத் தொடர் ஒரு பழைய கதையை எடுத்துக்காட்டுகின்றது.

காட்டில் வேடனெருவன் யானையைக் கொல்ல ஓர் அம்பை எய்து மற்ருெரு அம்பை வில்லில் பூட்டிவைத்துக் கொண்டிருந்தான். அவ்வேளையில் பாம்பு ஒன்று அவனைக் கடித்தது. தன்னைக் கடித்த பாம்பை வாளால் கொன்று தானும் இறந்தான். அவ்வழியே வந்த நரி ஒன்று அவற்றைக்கண்டு அளவற்ற மகிழ்ச்சி கொண்டது. யானை ஆறு மாதத்திற்கு உணவாகும். வேடனுடல் ஏழு நாட்களுக்கு உணவாகும். பாம்பை ஒருநாளுக்கு உணவாக வைத்துக் கொள்வோம். இப்போதுள்ள நம் பசிக்கு இவ்வேடன் கையில் இருக்கும் வில்லில் கட்டிய நரம்பு நாணைக் கடித்துத் தின்று பசியைப் போக்கிக் கொள்வோம் என்று எண்ணி வில்லில் பூட்டிய நாணை ஆவலோடு சென்று கடித்தது. அவ்வளவுதான். நாணறுந்தவுடன் வில் நிமிர்ந்தது. திடீரென வில் நிமிர்ந்த வேகத்தில் நரியின் வாய் கிழிந்தது. நரியின் எண்ணக் கோட்டைகள் இடிந்தன. நரியும் இறந்தது. மக்களின் மனக் கோட்டைகள் ஒன்று நினைக்க ஒன்ருய் முடிதலை இக்கதை விளக்குகிறது.

மிகப் பெரிய வேத வேள்விகளைச் செய்தவராயினும் வேள்வியில் எழும் தீ இறைவன் திருவுருவாதலை உணராதவர் இந் நரியின் நிலையைத் தான் அடைவார்கள் என்கிறது பாடல்.

## பனிநீரால் பரவைசெயப் பாவித்தல் 4-5-6.

பனிக்கட்டியால் செய்த பாவை வெயிலொளி கண்டதும் உருகி ஓடும். நிலைக்காது. சிவநெறியல்லாத பிறமத நெறிகளால் வீடு பெறக் கருதுதல் பனிப் பாவையைத்தான் ஒக்கும். நிலையற்ற பயனற்ற ஒரு செயலைச் செய்தல் போலத்தான் பிற சமய நெறிகளைச் சார்தல் என்ற கருத்தை இது காட்டுகிறது.

## பாழூரில் பயிக்கம் புக்கு எய்த்தல் 4-5-8.

பாழாய்ப்போன ஊரில் பிச்சை எடுக்கப் போய் இளைத்தல் என்ற பொருள் தரும் இத்

தொடர் இறையருள் பெறும் நெறியை இங்குச் சென்றுல் அடையலாம் என்று எண்ணிப் பிற மதங்களைச் சார்ந்து வருந்துதலுக்கு உவமையாகக் கூறப்படுகிறது.

### மத்தார் தயிர் (4-96-3) 4-52-9.

மனம் நிலை குலைந்து சுழலுவதற்கு எல்லோரும் எடுத்துக் கூறும் உவமை இது. ஐம்பொறிகள் மனத்தைத் தத்தம் வழி இழுத்தலால் மனம் சுழல்கிறது. இச்சுழற்சியை நிலைப்பிக்கும் ஆற்றல் இறைவன் ஒருவனுக்கு உண்டு. இதனைப் பிறிதோரிடத்தும் அப்பர் "பொத்தார் குரம்பை புகுந்திவர் நாளும் புகலழிப்ப, மத்தார், தயிர்போன் மறுகுமென் சிந்தை மயக்கொழிவி" என்று கூறுகின்றுர்,

### மன்றத்துப் புன்னைமரம் 4-26-8.

ஊர் நடுவில் பலர் கூடுமிடங்களில் உள்ள மரங்கள் அம் மக்களால் பலவகையாலும் இடர் உறும். பொதுவாதலால் ஒவ்வொருவரும், இலை, கிளை, பூ, காய் இவற்றைப் பயனின்றிப் பறித்தெறிவர். இம் மரம் மேலும் வெயில் காற்று நீர் நிழல் இவற்றுலும் துன்புறும். அது போலப் பழைய வினையால் துன்புற்று இறைவனை உணராமலும், அவனை உள்ளத்துள் எண்ணுமலும் இருந்தால் இயமன் அடுத்து, பிறப்புக்கு வழிசெய்து நம்மை அழைக்கும் போது அவனிடமிருந்து நாம் தப்புவதெவ்வாறு என்று கேட்கிறுர் அப்பர்.

### முயல்விட்டுக் காக்கைப் பின்போதல் 4-5-2

முயலைப் பிடிக்கச் செல்வது எளிது; நம்மால் இயல்வது. காக்கையைப் பிடிக்கப் போதல் பறத்தல் நம்மால் இயலாது. முயல் சைவ சமயத்திற்கும், காக்கை சமண் சமயத்திற்கும் இங்கு உவமை. ஒன்றைக் கைக் கொள்ளும் உணர்வோடு செல்பவன் அதை விடுத்து மற்ரென்றிற் போதல், அவன் மனம் நிலையின்றி இருத்தலையும், ஏலாத செய்ய எண்ணுவதையும் காட்டுகின்றது.

### மோத்தையைக் கண்ட காக்கை 4-75-7

பிணத்தைக் கண்டால் காக்கைகள் கூட்டம் கூட்டமாய் மொய்த்து அதனைப் பறித்து உண்ணும். அது போலத் தன் செயலின்றி வினைவழி நிற்கும் உயிருக்குப் பிணத்தையும், வினைகளுக்குக் காக்கையையும் உவமையாக வைத்து "மோத்தையைக் கண்ட காக்கைப் போல வல்வினைகள் மொய்த்துன், வார்த்தையைப் பேச வொட்டா மயக்க, நான் மயங்குகின்றேன்" என்று கூறுகிறுர் அடிகள்.

### விளக்கிருக்க மின்மினித் தீக்காய்தல் 4-5-7

கையில் விளக்கை வைத்துக் கொண்டு அவ்விளக்கினுல் தீவளர்த்துக்குளிர்காயும் அறிவின்றி மின்மினியால் தீக்காய்தற்கு முயல்வார் முயற்சியை என்னென்பது? அதுபோலத்தான் இறைவன் திருவருளைப் பெறும் எளிய வழியாக நம் சமயம் இருக்க, பிறவிக்குளிர் காய்தற்குச் சற்றும் ஏலாத பிறசமய நெறிகளில் ஈடுபட்டு மக்கள் இடர்ப் படுகின்றனர். இறைவன் பிறவி நோய் தீர்க்கும் இனிய மருந்தாகத் தேனுகத் திருவாரூரில் வீற்றிருக்கின்றுன். மருந்தும் இனியது. அதன் குணமும் உயர்ந்தது. அதனை விடுத்துப் போலிமருந்துகளைப் பயன்கொண்டால் பிறவி நோய் நீங்குமாறு எங்ஙனம்? என்று கூறுகிறது இத்திருப்பாடல்.

### வெங்கதிர்கண்ட புற்பனி 5-97-23.

சூரியன் தோன்றும்வரை புல்நுனிப்பனித்திரள் பலவர்ண ஜாலங்களோடு அழகான சிறு முத்துப்போல நம்மைக் கவரும். கதிரவன் தோன்றிய சில கணங்களில் அப்புற்பனி அழிந்தொழியும். அதுபோல இறையருளாகிய கதிரோன் தோன்றும்வரை நம்மைச் சூழ்ந்த பழவினைகள் நம்மை மயக்கும். இறையொளி சிறிதே தோன்றின் வினைகள் பொடிபடும்.

### காத்தாள்பவர் காவலிகழ்ந்து கயம்புக்கது 4-1-5

ஆழமான ஒரு நீர்நிலை. அதன் நீரைக்கெடுப்பாரைத் தடுத்தற்கும், ஆழந் தெளியாதவரும் நீந்தத்தெரியாதவரும் வந்து இறங்கநேரின் அவர்களை எச்சரித்தற்கும் என, அந்நீர் நிலைக்குக் காவலும் அமைக்கப்பட்டுள்ளது. நீந்தத்தெரியாத ஒருவர் காவற்காரரைப் பொருட்படுத்தாமலும் அவர் வாய்மொழி கேளாமலும் அந்நீர் நிலையில் இறங்கினுர். நிலைக்காத நீர்நிலை.

நீந்தவே தெரியாது. இந்நிலையில் அவர் தடுமாறுகிருர். சிறிது நேரத்தில் கரையில் நின்றவர்களும் இதன் ஆழம் தெரியாது நீயே இறங்கி ஆழங்காண் என்றனர். அவருக்கு யாரேனும் கைகொடுத்து உதவாவிடில் அவர் அந்நீர் நிலையிலேயே அழியநேரும். இப்படி ஒரு நிலைமை அப்பரடிகளுக்கு நேரிட்டது. ஆழமான நீர்நிலை சமணசமயம். அதன்கண் விழாது காப்பவரும் தமக்கு என நியமிக்கப் பட்டவரும் திலகவதியார். எச்சரிக்கை கேளாமை அந்த அம்மையாரின் வாய்மொழி கேளாமை. கரைநின்றவர் — பிறசமயத்தார். கயம்புகுதல் - சமணம் சார்தல். கைகொடுத்துதவ அழைக்கப்படுபவர்-சிவபிரான்.

## விண்ணுற அடுக்கியவிறகில் நெருப்பு 5-11-3

திருவைந்தெழுத்து நன்னெறி காட்டும் மகாமந்திரம். சித்தம் ஒடுக்கிச் சிவாயநம என்றிருந்தால் அத்தன் அருள் பெறலாம் என்பர். வினையும் நோயும் ஐந்தெழுத்தெடுத்து ஓத ஓத வெந்தழியும். பஞ்சாக்கரம் ஓதுவார் உள்ளத்தே இறைவன் மாசும் காணுனய் மகிழ்ந்திருப்பன். இத் திருவைந்தெழுத்து நாம் முற்பிறப்பிற் செய்தனவாய பாவங்கள் மலையத்தனையாக இருந்தாலும் அவற்றைப் பொடியாக்க வல்லது. இதற்கு ஒரு நல்ல உவமை உரைக்கிருர் அப்பர். வானமளாவும் வரை விறகுகளை அடுக்கி வைத்திருந்தாலும் அதன் கீழ் ஒரு நெருப்புப் பொறிவைக்கப் படுமேயாஞல், அவை அனைத்தும் எரிந்து பொடியாதல் போல்,ஐந்தெழுத்து நம் பாவத்தைக் கெடுக்கும் என்று கூறுகிருர்.

## உறுகயிறூசல் 4-26-6

மன அலைவுக்கு ஊசல் அலைவை ஒப்பிடுவர் புலவர். இங்குமங்குமாகக் கயிறூசல் அலைவது போல ஒன்று விட்டு ஒன்று பற்றும் மனத்திற்கு ஊசல் மிகப்பொருத்தமான உவமை. ஊசற்குரிய இயல்பாவது நின்ற இடத்திலிருந்து பிறிதோரிடம் செல்லல், மீண்டும் வருதல், பிறரிடம் செல்லல் ஆகிய செயல்கள் பிறிதோரிடம் பற்றுதல் உறுகயிறூசல் மீளத் தன்னிலை அடைதல் மறுகயிறூசல். கயிறு போல்வது பாசம்; ஆடுவது உயிர். ஊசலறுந்தால் அடைவது தரையை. அதுபோலப் பாசம் அற்ற உயிருக்கு நிலைக்களன் இறைவன் திருவடி.

## அகவிளக்கு 4-29-2, 4-75-4

உடம்பு = இடிஞ்சில் வீடு அல்லது அகல். உள்ளம் தகளி. உணர்வு (பசுஞானம்) நெய் உயிர்-திரி, ஞானம் (சிவஞானம்) தீ உடலாகிய வீட்டில் அறியாமை என்ற இருள் சூழ்ந்திருப்பதால் சிவமாம்பொருளை அறியாமலிருக்கின்ரேம். இப்படி அகலேற்றினல் அவனைக் காணலாம் என்கின்றன இப்பாடல்கள்.

## பாம்பின் வாய்த்தேரை 4-46-1.

திருஞான சம்பந்தப் பெருமான் பாம்பின் வாய்த் தேரையைப் பற்றிப் பாடிய பாடற் கருத்து இங்கே சிந்தித்தற்குரியது.

காட்டில் ஒரு யானை அவ்வழிச் சென்ரேன் ஒருவனைத் துரத்தியது. யானைக்குப் பயந்தோடிய ஒருவன் அங்கிருந்த ஒரு பாழுங் கிணற்றில் இறங்கினுன். கீழே ஐந்தலைநாக மொன்று அவனைக் கடிக்க இருந்ததைக் கண்டான். வெளியேறினுல் யானை, கீழே இறங்கினுல் ஐந்தலை நாகம். இந்நிலையில் ஒரு அருகம் புல்லைக் கைப்பற்றுகக் கொண்டு தொங்கினுன். அங்கிருந்த எலி ஒன்று புல்லை மெதுவாக அறுக்கத் தொடங்கியதாம். இந் நிலையிலிருக்கும் அவன் ஒரு துளி தேன் விரும்பி அங்குள்ள தேனடை யொன்றைப் பார்த்தானும்.

கருடன் வாயிலே ஒரு பாம்பு சிக்கியது. அப் பாம்பு ஒரு தேரையை வாயிலே பிடித்து வைத்துக் கொண்டிருந்தது. அத்தேரையின் வாயில் சிறு வண்டு. அதன் வாயில் ஒரு துளி தேன். இப்படித்தான் இருக்கிறது, உலக வாழ்வில் பெறும் இன்பம் அத்தனையும்.

"செடிகொள் நோய் யாக்கையை உடைய ஐந்தலைப் பாம்பு அதன் வாயில் தேரை. அதன் வாயிலே சிறு வண்டு அது எண்ணுகிறது பூந்தேன் சுவைத்து இன்புறலா மென்று. வண்டைத் தேரை உண்ண, தேரையைப் பாம்புண்ண, பாம்பை நோயுண்ண இப்படி ஒன்று மற்ருென்றிற்கு இரையாதலை உணராத நிலை போலுள்ளது உலக வாழ்வு. பாம்பின் வாய்த் தேரைபோல் பலபல நினைத்தலும் இது போன்றதே.

# ஸ்ரீ சங்கர பகவத் பாதரின் சிவபரத்வம்

திரு. K. பாலசுப்பிரமணிய ஐயர், B.A.,B.L., M.L.C.

திருஆமூர் ஆலய கும்பாபிஷேக வைபவத்தில் வெளியிடப்படும் மலரில் எழுத எனக்கு அளிக்கப்பட்ட வாய்ப்பிற்காகத் தருமை ஆதீனத்திற்கு எனது நன்றியையும் மகிழ்ச்சியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

பாரத நாட்டில் வழிபடப்படும் ஆறு சமயங்களைச் சார்ந்த தெய்வங்களுக்கான தோத்திரங்களையும் ஸ்ரீ சங்கர பகவத் பாதர் அருளியுள்ளார். எல்லாச் சமயங்களுக்கும் இவ்வகையில் உதவிசெய்தவரே ஆவர் ஸ்ரீ சங்கரர். ஆயினும் அவர் சிவபொருமானைப் பற்றின பெரும் நோக்கைக் கொண்டவரே.

ஸ்ரீ அப்பர் சுவாமிகளும் இன்னம்பர் ஈசனைப் பற்றிப் பாடும் போது கூறலானார். "ஆறு சமயத் தவரவரைச் சென்னெறிக்கே ஏற்றும் தகையினர்" என்பதாக. ஆகவே எல்லாச் சமயங்களுக்கும் மூல காரணமாக உள்ளவர் சிவபெருமான் என்பது இங்குப் புலனாகிறது.

உபநிஷத்துக்களால் அறிவிக்கப்படுகின்ற பிரம்மம் தான், சிவபெருமான் என்பதாகத் தன்னுடைய கருத்தை நன்றாக வெளியிட்டிருக்கிறார் ஸ்ரீ சங்கர பகவத் பாதர். அந்த நிர்க்குண பிரம்மம் உபாஸகர்களின் ருசிக்குத்தக்கவாறு பலவகையான ஸகுணப்ரம்ம உருவைக் கொண்டுள்ளது என்பதே சங்கரரின் கருத்து. அதற்கான பல சான்றுகளையும் தனது பாஷ்யத்தில் ஆங்காங்கே காட்டியுள்ளார். சிவபிரானே அந்த பிரம்ம ஸ்வரூபம் என்றும் விளக்கியிருக்கிறார். சிவபிரான் பிரம்மஸ்வரூபம் என்பதாக உறுதிப்படுத்தியதிலிருந்தே ஸ்ரீசங்கரரின் சிவபரத்வம் வெளியாகின்றது.

---

### மனத்தோணி 4-46-2.

இறக்கும்போது இறைவன் நினைப்பு வருதலுக்கு இடைவிடாது அவன் திருநாமத்தைச் சொல்லிக் கொண்டிருத்தல் இன்றியமையாதது. "துஞ்சும் பொழுதும் நின்னுமத் திரு வெழுத் தஞ்சும் தோன்ற அருளும்" 5-27-3 "நமச்சிவாய என்னும் அஞ்செழுத்தும் தாம் அன்று உரைக்கத் தருதி கண்டாய்" 4-103-3 என்றெல்லாம் அப்பரடிகளே இறைவனை வேண்டுகின்றார்.

உயிர்நிலை தடுமாறும் நேரத்தில் இறைவனை எண்ணுதல் அரிது. மனம் - தோணி, அறிவு - ஊன்று கோல், சினம் - அத் தோணியில் ஏற்றிய சரக்கு. இதனை ஏற்றிக் கொண்ட மனத் தோணி எண்ணக் கடலைக் கடக்க முயற்சிக்கிறது. மதன் என்ற பாறை, தோணியைத் தாக்கிக் கவிழ்க்கிறது.

### நெஞ்சமும் வஞ்சமும் (5-27-3)

நெஞ்சம் ஆழமான நீர் நிலை. அதில் எத்தனை எத்தனையோ எண்ண அலைகள். அதில் வஞ்சம் என்னும் பெருஞ்சுழி. அச்சுழியில் அகப்பட்டார் கரையேறல் அரிது. அதனிடை அகப்படுவோரைக் கரையேற்ற வல்லது திருவைந் தெழுத் தொன்றே.

### ஏணியும் தோணியும் (5-33-7) 6-46-4.

மனத்தை ஏணியாகவும் இறைவனைத் தோணியாகவும் கூறும் பாடலும், இறைவனை அடியார்க்கு முத்தி காட்டும் ஏணியாகவும், இடர்க் கடலினின்று கரையேற்றும் தோணியாகவும் கூறும் பாடல்கள், சிறந்த கருத்துக்களைத் தெரிவிக்கும் செந்தமிழ்க் கவிதைகளாகும்.

ஸ்ரீ சிவா நந்த லஹரீ ஸ்தோத்திரத்தில் பகவத் பாதர் கூறுகிருர்—; "ஹரியும் நான்முகனும் சுலபமாகத் தெரிந்து கொள்ள முடியாத சம்புவினுடைய பாதார விந்தங்களைத்தான் அடைய வேண்டும்" என்று.

" திருமாலும் நான்முகனும் தேடொணுத் தேவனை என் உள்ளே தேடிக் கண்டு கொண்டேன்" என்று அழகாகப் பாடியுள்ளார் அப்பர் சுவாமிகள்.

ஸ்ரீ சங்கர பகவத் பாதரின் சிவபரத்வத்திற்குச் சான்ருக உள்ள ஒன்றை மட்டிலும் இக்கட்டுரையில் விவரிப்போம்.

பத்து உபநிஷத்துக்களில் இரண்டாவது கேநோபநிஷத் என்பது. அதில் பிரம்மத்தைத் தெரிந்து கொள்வதற்கான ஒரு சிறு கதை சொல்லப்பட்டு, அதன் பெருமை விளக்கப் பட்டிருக்கிறது. பிரம்மம் ஒரு யக்ஷன் உருவில் ஆவிர்ப்பவித்தது அதை யார் என்று அறிய எண்ணி அக்னி, வாயு, இந்திரன் இவர்கள் அதன் சமீபம் சென்று, உற்று நோக்கி, தொட்டும் பார்க்கின்றனர். அக்னியினுலோ, வாயுவினுலோ அதை யார் என்று அறிந்து கொள்ள முடியவில்லை. தேவர்களின் அரசனுன இந்திரன், அதன் அநுக்கிரஹத்தினுலேயே அதை அறிய முற்பட்டான். பிரம்மத்தை அறிவிக்கும் வித்யை பிரம்ம வித்யை. உமை பிரம்மவித்யை உருக் கொண்டு ஆகாயத்தில் தோன்றலானுள். சிவபெருமானின் பத்தினியும், பிரம்ம வித்யா ரூபிணியுமான உமையினுடைய சகாயத்தினுல் இந்திரன் அந்த யக்ஷனை பிரம்மம் என்பதாக அறிந்தான்.

சிவபெருமானுடன் சேர்ந்தே ஒருருவமாக சதா இருந்துவரும் சிவசக்தியான உமை பிரம்மவித்யையாக வந்து அந்த பிரம்மத்தை இந்திரனுக்கு விளக்கினுள். இதிலிருந்து பிரம்மம்தான் சிவபெருமான், சிவபெருமானே பிரம்மம் என்பது நன்ருகப் புலனுகிறது என்பதாக ஸ்ரீ சங்கர பகவத் பாதர் கூறுகிருர். இவ்வாறு இதனை விளக்கியதிலிருந்தே ஸ்ரீ சங்கர பகவத் பாதர் சிவபரத்வ உண்மையை, இந்த உபநிஷத்தின் அடிப்படைச் சான்றை வைத்தே தீர்மானிக்கிருர் என்ற கருத்தை நாம் கொள்வது மிகப் பொருத்தமாகும்.

இக்கருத்தையே கொண்டு, பரசிவமான கடவுள் உபாஸகர்களுக்காகப் பல வேடங்களைத் தரித்துப் பல தெய்வங்களாகக் காட்சி அளிக்கிருர் என்று அப்பர் சுவாமிகளும் பாடுகிருர்.

"பலவாய வேடங்கள் தானே ஆகிப்
பணிவார்க்கு அங்கங்கே பாராஞனை"

உபாசகர்களுடைய எண்ணங்களுக்கும் சுவைக்கும் தக்கவாறு வேஷங்களை எடுத்துக் கொண்டு ஒரே கடவுளான சிவபிரான் அருள் புரிகிருன் என்று சொல்லிச் சிவபரத்தை நிலை நாட்டுகிருர். அப்பரும் மக்களுக்குத் துறவறத்தினுடைய பெருமையையும் மோக்ஷத்திற்குச் சாதனமான வைராக்யத்தினுடைய தன்மையையும், தன்னுடைய உருவ மூலமாகவே எடுத்துக் காட்டும் கடவுளை எல்லாமக்களும் வழிபடுவது சென்னெறியை அடைய மார்க்கமாகும் என்பதில் ஐயமில்லை.

———



# திருக்குறளுக்கும் மறுப்பு!

திரு. ச. சிவகுமாரன், M.A.,
உயர் அலுவலர், பின்னி அண்ட் கம்பெனி லிமிடெட், சென்னை.

திருவள்ளுவரைப் பொய்யில் புலவர் என்றும், தெய்வப் புலவர் என்றும் சிறப்பித்துக் கூறுவர். இவர் தம் திருக்குறளைத் தமிழ் வேதமெனப் போற்றுத அரசியல் கட்சிகள்கூட இன்று தமிழ் நாட்டில் இல்லை எனலாம். திருக்குறளிலிருந்து முகந்து கொள்ளாத நூல்களா சீவக சிந்தாமணி, பெரிய புராணம், கம்ப ராமாயணம் முதலியன? இத்தகு பெருஞ் சிறப்பு வாய்ந்த திருக்குறளுக்கும், பல ஆண்டுகளுக்கு முன்னரே ஒரு மறுப்பு எழுந்தது என்றல் அது நமக்கு ஆச்சரியமாக இல்லையா? உலகம் போற்றும் நீதிநெறி நூலுக்கு ஒரு மறுப்பு — அதிலும் ஒரு வீரசைவர் மறுப்பு விடுத்தார் என்பதை விளக்குவதற்கு முன்னதாக ஒரு வரலாற்று நிகழ்ச்சியை நினைவு கூர்தல் நலமாகும்.

தஞ்சாவூர் ஜில்லாவில் திருவையாற்றுக்குச் சமீபம் திருப்பூந்துருத்தி என்று ஒரு அழகிய சிற்றூர். அந்த ஊருக்குத் திருநாவுக்கரசு சுவாமிகள் எழுந்தருளியிருந்தார்கள். அவரைக் காண விரும்பிய திருஞான சம்பந்த சுவாமிகள் திருப்பூந்துருத்திக்குப் பல்லக்கில் புறப்பட்டார்கள். திருநாவுக்கரசருக்கும் முன்னரே செய்தி யனுப்பப்பட்டது. திருஞானசம்பந்தர் திருப்பூந்துருத்திக்கு அருகாக வந்து கொண்டிருக்கிறர்.' ஊரின் எல்லையிலேயே தன்னைத் திருநாவுக்கரசர் சந்திக்கக் கூடும் என்று அவரைக் காணும் அவா மிகுதியால் திருஞான சம்பந்தர் பல்லக்கிலிருந்து வெளியே திருக் கூட்டத்தைக் கவனித்தார். திருநாவுக்கரசர் வந்ததாகத் தெரியவில்லை. திருப்பூந்துருத்தி மாடவீதி வந்தாயிற்று; திருநாவுக்கரசர் காணவில்லை. அப்பர் பெருமானை அவசியம் சந்நிதித் தெருவில் தரிசிக்கலாம் என்று தன்னைத் தேற்றிக் கொண்டார் திருஞான சம்பந்தர். சந்நிதி வீதிக்கும் வந்தாகி விட்டது; தங்க வேண்டிய திருமடமும் சமீபிக்கிறது; இறைவன் திருக்கோயிலுக்குச் செல்லவேண்டும். திருஞானசம்பந்தர் அண்மையி லிருந்த அடியார்களை "அப்பர் எங்கே" என்று கேட்டார்.

திருஞான சம்பந்தரின் வருகையை முன்னரே அறிந்திருந்த திருநாவுக்கரசர் தனக்கே இயல்பான எளிமையில் யாரும் தன்னைக் கவனியாத அமைதியான முறையில் மெல்லச் சாலையோரமாக நடந்து திருப்பூந்துருத்தி எல்லையில் சென்று திருஞான சம்பந்தர் திருக் கூட்டத்தை எதிர்நோக்கி யிருந்தார். திருஞான சம்பந்தக் குழந்தை அடியார் குழாம் புடைசூழ முத்துப் பல்லக்கு அசைந்துவர அதன் மீது அழகாக ஆரோகணித்து வந்து கொண்டிருக்கிறர்; திருக்கூட்டம் நெருங்குகிறது. பக்தர்கள் நெருங்குகிறர்கள். இந்தச் சந்தடியில் திருநாவுக்கரசர் ஒருக்களித்துக் கூட்டத்தினுள்ளே புகுந்து தள்ளிக் கொண்டே போய்த் திருஞான சம்பந்தரின் முத்துப் பல்லக்கின் பின்புறம் சேர்ந்தார். அவருக்குத் திருஞான சம்பந்தக் குழந்தையைத் தனது தோளில் தூக்கிவர வேண்டும் என்ற ஆசை போலும். அதுதான் முடியவில்லை என்றல் திருஞான சம்பந்தர் இவர்ந்து வரும் சிவிகையையாவது தாங்கிவர வேண்டும் என்பது வெகுநாளைய விருப்பம். இப்போது திருநாவுக்கரசருக்கு நல்ல தருணம் வாய்த்தது. முன்னுல் எண்மர், பின்னுல் எண்மர் பல்லக்கினைத் தாங்கி வருகிறர்கள். அதில் யாரோ ஒருவர் சற்று அசந்தார்; சரேலெனப் பாய்ந்து தோள்போட்டுக் கொண்டார் திருநாவுக்கரசர். திருஞான சம்பந்தரையும் அவரது சிவிகையினையும் தாங்கி வரும் திருநாவுக்கரசர் மட்டில்லா மகிழ்ச்சி கொண்டார். தனக்கு இதைவிட வேறொரு பெருவாழ்வு இல்லை என்று இறும்பூதெய்தினர்; பெருமிதம் கொண்டார்.

பல்லக்கு திருக்கோயில் வந்து சேர்ந்தது. திருஞானசம்பந்தர் அப்பர் எங்கே என்ருர். இனியும் குழந்தையை ஏமாறவிடக் கூடாது என்று நினைத்த திருநாவுக்கரசர் "இதோ இருக்கிறேன்; உம் திருவடிகளைத் தாங்கி வரும் பெருவாழ்வு பெற்றேன்" என்று கூறிக் கொண்டே பல்லக்கு தூக்குவதை விடுத்து வெளியே வந்தார். திருஞான சம்பந்தர் திடுக்கிட்டுப் போனுர். "அப்பரே! தாங்களா என்னைச் சுமந்தீர்கள்? என்ன அபசாரம் செய்து விட்டேன்." என்று தொப்பெனக் கீழே குதித்தார். திருநாவுக்கரசரோ, "தங்களைத் தாங்கிவர என்ன புண்ணியம் செய்தேனே" என்று கூறியபடியே திருஞான சம்பந்தர் திருப்பாதங்களில் வீழ்ந்தார், அதற்குள் திருஞான சம்பந்தர் திருநாவுக்கரசர் திருவடிகளில் வீழ்ந்தார். ஒருவரை யொருவர் போட்டியிட்டு வீழ்ந்து வணங்கிக் கொண்டனர்.

ஞானசம்பந்தர் தான் பிராமணக் குழந்தை; ஞானப்பால் அருந்தி மூன்றே வயதில் தேவாரம் பாடியவர் என்று நினைக்க வில்லை. திருநாவுக்கரசரும் தான் வயது முதிர்ந்தவர்; கல்லே தெப்பமாக மிதக்க அருகக் கடல் கடந்தோம் என்று இறுமாப்புக் கொள்ளவே யில்லை. அன்புக்கும் உண்டோ அடைக்கும் தாழ்? இவ்வாறு அன்புக் கடலும் அருட் கடலும் ஒன்றிய காட்சி அங்கிருந்த அடியவர் உள்ளத்தை உருக்கிற்று; அவர்கள் ஆனந்த பரவசம் ஆனுர்கள். மான் ஏந்திய மறிக்கரத்துச் சிவபெருமானுடைய அடியவர்கள் அல்லவா அவர்கள்—எனவே மகிழ்ச்சி பொங்கி மான் போல் துள்ளிக் குதித்தார்களாம்; அன்பு வென்றது; ஆணவம் தோற்றது.

திருஞான மாமுனிவர் அரசிருந்த
திருப்பூந்துருத்திக்கு
அருகாக எழுந்தருளி எங்குற்ருர் அப்பரென
உருகாநின்று உம்மடியேன் உம்மடிகள்
தாங்கிவரும்
பெருவாழ்வு வந்தெய்தப் பெற்று
இங்குற்றேன் என்ருர்.

பின்னையார் அதுகேளாப் பெருகு விரைவுடன்
இழிந்தே
உள்ளமிகு பதைப்பெய்தி உடைய அரசினை
வணங்க
வள்ளலார் வாகீசர் அவர்வணங்கா முன்வணங்கத்
துள்ளுமான் மறிக்கரத்தார் தொண்டரெலாம்
தொழுதார்த்தார்.

ஒரு நாஸ்திகனும் அந்தத் திருக்கூட்டத்திலிருந்தான். அவன் ஒருகாலத்தில் திருவள்ளுவரையே நேரில் கேள்வி கேட்டவன். ஒரு நாள் அவன் திருவள்ளுவரை மயிலாப்பூர் மாட வீதியில் சந்தித்து "பாவம் என்ருல் என்ன? புண்ணியம் எப்படி இருக்கும்" என்று கேட்டான். அது சமயம் எதிரில் ஒரு பல்லக்கில் ஒரு தனவான் சென்று கொண்டிருந்தார். திருவள்ளுவர் அதைச் சுட்டிக்காட்டி "இது என்ன" என்று கேட்டார். நாஸ்திகன் சொன்ஞன், "கொடுத்து வைத்தவன் பல்லக்கில் சவாரி போகிருன்—அவன் அதிருஷ்டம் அது. நாலு பேர் தாங்கிச் செல்கிருர்களே அவர்கள் பண்ணிய பாவம் அது" என்று இயல்பாகச் சொல்லி விட்டான். திருவள்ளுவர் இதிலிருந்து தெரிகிறதா— புண்ணிய பாவம்? பல்லக்கில் சவாரி செய்யப் புண்ணியம் பண்ணியிருக்க வேண்டும். முன்பு பாவம் செய்தவன்தான் பல்லக்கு சுமக்கிருன்-புண்ணிய பாவம் அறிந்து வாழ வேண்டும்" என்ருர்.

இப்பொழுது அந்த நாஸ்திகனுக்குப் பளிச்சென உள்ளொளி பிறந்தது. "உலக வழக்கில் புண்ணியம் பண்ணவன் பல்லக்கில் செல்வான். பாவம் செய்தவன் பல்லக்கு சுமப்பான். ஆனுல் சைவ சமய உலகில் ஞான சம்பந்தர் பல்லக்கைச் சுமப்பதே பெரு வாழ்வு, பெரும் புண்ணியம். திருநாவுக்கரசரே உம்மடியேன் உம்மடிகள் தாங்கி வரும் பெரும் வாழ்வு வந்தெய்தப் பெற்றேன்" என்கிருரே. ஞான சம்பந்தர் மற்றும் சமயா சாரியர்களுக்கு விழாச் செய்து அவர்தம் திருவீதி உலாவில் அவர்தம் விமானம் தூக்கினுலும் கூட நமக்கு மறு ஜன்மத்தில் சொந்த வாகனம், வாகன போக்கியம் உண்டாகும். ஆனுல் ஒன்று—ஞான சம்பந்தர் கூறியதுபோல திருநாவுக்கரசர் போன்ற மகான்கள் பல்லக்கு தூக்கிவர அதில் இவர்ந்து செல்லுதல் பாவம். நாமும் பெரியவர்களுக்கு எவ்வித அபசாரமும் செய்யக் கூடாது என்று யோசித்தான்,

# கரும்பினில் கட்டி போல்வார்

வித்துவான் ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்,

தலைவர், தருமை ஆதீன சமயப் பிரசார நிலையம், சென்னை.

'வைகறைத் துயில் எழு' என்பது ஔவைப் பாட்டியின் அருள் வாக்கு. வைகறைப் பொழுதாவது பின் இரவில் இரண்டு மணி முதல் ஆறு மணி வரை உள்ள காலமாகும். இதில் முன்னுள்ள இரண்டுமணி நேரத்தை விடுத்து நான்கு மணிக்கு நித்திரை விட்டு எழுதல் வேண்டும் என்று பெரியோர்கள் கூறியுள்ளனர். அந்த நேரம் பிராமியாகிய சரஸ்வதிக்கு உரிய நேரம். அப்பொழுது நீராடி வழிபாடு நிகழ்த்துவதால் உள்ளத்திற்குப் பேரமைதி கிடைக்கிறது. தியானம் கைகூடுகிறது. சித்த சுத்தி உண்டாகிறது. இதுபற்றி யாழ்ப்பாணத்து நல்லூர் ஸ்ரீ ஆறுமுக நாவலர் இரண்டாம் சைவ வினாவிடையில் கூறியுள்ளதை இங்குச் சிந்தித்தல் பொருத்தமாகும்.

"சூரியன் உதிக்க ஐந்து நாழிகை உண்டென்னும் காலம் பிராமி முகூர்த்தம் எனப் பெயர் பெறும். சிவத்தியானத்துக்கு மனம் தெளிவது அக்காலத்தேயாம். அன்றியும் அக்காலத்தே விழிக்கின் நோய் அணுகாவாம். இரா நித்திரைப் பங்கமும், வைகறை நித்திரையும் பகல் நித்திரையும் பற்பல வியாதிகட்குக் காரணம்."

"ஸ்நானம் சரீர சுத்திக்கு மாத்திரம் இன்றி, சரீர ஆரோக்கியத்துக்கும் ஒருப்பாட்டுக்கும், இந்திரிய அடக்கத்துக்கும், போக்கியத்துவத்துக்கும் காரணமாம். விடியற்கால ஸ்நானத்தினாலேயே பசி உண்டாகும். நோய் அணுகாது." என்பது நாவலர் கருத்தாகும்.

சமீப காலம் வரை வாழ்ந்த இரெட்டியப்பட்டி சுவாமிகள் என்ற பெரியாரும் இக்கருத்தையே மேற்கொண்டு ஆயிரக் கணக்கான மக்களை இவ் வழிபாட்டுத் துறையில் ஈடுபடுத்தித் தீராத நோய்களையெல்லாம் தீர்த்து வைத்துள்ளார்கள். இன்றும் இம்முறை இரெட்டியப்பட்டி சுவாமிகள் பெயரால் பெருகி வளர்ந்து வருகிறது.

விஞ்ஞானிகளும் விடியற்காலை நாலு மணி அளவில் தண்ணீரில் ஒருவகை மின்னாற்றல் இருக்கிறது என்றும், அப்பொழுது நீராடினால் அம்மின்னாற்றல் நீராடுவோரின் உடலில் பதிகிறது என்றும், அதனால் இரத்த சுத்தியும் புத்துணர்ச்சியும் ஒருமைப்பாடும் உண்டாகின்றன என்றும் கூறுகின்றனர். மேலும் விடியற்காலத்தில் பிராணவாயு அதிகமா

---

"அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தானிடையை-மறுத்தார் சம்
பந்தன் சிவிகை பரித்தார், திருவர் மற்று
உந்தும் சிவிகையினை ஊர்ந்து"

என்ற திருக்குறள் மறுப்புப் பாட்டு பிறந்தது. இந்த மறுப்பு சைவ நன்மக்கட்கு மட்டும் பொருத்தமான மறுப்பாகும் அல்லவா! கற்பனைக் களஞ்சியம், நன்னெறி நாவலர், வீரசைவ சிகாமணி துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளின் மேற்கூறிய நால்வர் நான்மணி மாலைப் பாடல், இதுகாறும் கூறிய திருஞான சம்பந்தர்—திருநாவுக்கரசரின் திருப்பூந்துருத்திச் சந்திப்புக்கு ஊற்றமான உரையாகும்.

இவ்வாறே திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும் முதன் முதலாகச் சீர்காழியில் சந்தித்தமை, பிறகு திருப்புகலூரில் சந்தித்தமை மூன்றும் முறையாக மேற்கூறிய வகையில் திருப்பூந்துருத்தியில் சந்தித்தது ஆகிய இந் நிகழ்ச்சிகளின் விவரம் சைவ உலகில் மீண்டும் சமயப் பற்று, அன்பு வளர்ச்சி, ஆன்மீக ஒருமைப்பாட்டிற்கு வழிகோலுமென இறையருளை இறைஞ்சுகின்றேன்.

கப் பரவுவதால் அப்பொழுது எழுந்து உலவுவதும், மூச்சுப் பயிற்சி செய்வதும் நலம் பல விளைவிக்கும் என்று நவில்கின்றனர்.

இவற்றையெல்லாம் ஆயிரத்து முந்நூறு ஆண்டுகட்கு முன்னர் வாழ்ந்த அப்பர் சுவாமிகள், திருக்கடவூர்ப் பெருமானைத் துதிக்கும் தேவாரம் ஒன்றால் தெளிவு படுத்துகின்றார். அப்பாடலையே இன்று சிந்திக்கிறோம். காலை என்பது சூரியன் உதிக்கும் நேரத்தைக் குறிக்கும். புலர் காலை என்பது 5 மணி அளவைக் குறிக்கும். பெரும்புலர் காலை என்பது 4 மணி அளவைக் குறிக்கும். பெரும் புலர் காலையாகிய விடியற்காலை 4மணிக்குத் தண்ணீரில் மூழ்கி நீராடிப் பித்தராகிய சிவபெருமானுக்குப்பக்தி செய்ய வேண்டும். வெந்நீரில் மூழ்குதல் நரம்புத் தளர்ச்சியை உண்டு பண்ணுமாதலால் அது கூடாது. பித்தன் என்றால் கருணையுடையவன் என்பதுபொருள். உலகினருக்கு வரும் பைத்தியம் போன்றதன்று இப்பித்து. "பெத்த மனம் பித்து பிள்ளை மனம் கல்லு" என்ற பழமொழி பித்தின் பெருமையை நன்கு விளக்கும். உயிர்களை உயர்நிலைக்கு அழைத்துச் செல்ல இறைவன் பித்தனாக—கருணையாளனாகத் திரிகிறான். உலகியலில் நின்ற சுந்தரரை இறைவன் தடுத்தாட் கொண்டு உயர்த்தியதாலும், அப்போது சுந்தரர் இறைவனைப் பார்த்து நீ பித்தனோ என்று கூறியதாலும் இவ்வுண்மை இனிது விளங்கும்.

எனவே ஆண்டவன் நம்மீது கருணையுடையவனாய் நம்மை ஆட் கொள்கின்றான். கைம்மாறு கருதாத அக் கடவுளிடம் நாம் பக்தி பூண்டு மலரும் பக்குவமுள்ள அரும்போடு மலர்களையும் கையிற் கொண்டு வெளிப் பகட்டின்றி உள்ளத்தே ஆர்வம் பொங்க விருப்பத்தோடு நல்ல விளக்கும், தூபமும் விதிமுறையுப்படி இட்டு வழிபாடு நிகழ்த்துதல் வேண்டும். அப்படி நிகழ்த்துவோர்க்குத் திருக்கடவூர் வீரட்டானத்து இறைவன் கரும்புக் கட்டியைப் போல் இனிப்பர் என்று அருளிச் செய்கின்றார் அப்பர் பெருமான். நமது வாழ்வில் கைப்பும் இனிப்பும் கலந்தே வருகின்றன. இறைவழிபாட்டை முறையாக அன்போடு ஆற்றிவரின் கைப்புக் குறைந்து இனிப்பு மேலோங்கும் என்பது இதனால் புலனாகும் உண்மையாகும்.

தூபமும் தீபமும் இடுவதால் என்ன பயன் என்று நம்மில் பலர் கருதக்கூடும். சாம்பிராணி தூபத்தாலும், கருப்பூரப் புகையாலும் நஞ்சணுக்கள் நலிவுறுகின்றன. நல்ல அணுக்கள் வலிவுறுகின்றன. வழிபடும் கோயில்களில் நல்லவர்களும் வருகின்றனர், அல்லாதவர்களும் வருகின்றனர். நஞ்சணுக்களால் விளையும் தீய சக்திகளை ஒடுக்கி, நல்ல அணுக்களால் விளையும் தூய சக்திகளைப் பெருக்குவதற்குத் தூப, தீபம் கருப்பூர ஆராதனை அவசியமாகின்றன. நச்சுக் காய்ச்சல் என்னும் ப்ளூ ஜுரம் வந்த போது சாம்பிராணிப் புகை பிடித்ததை நினைவு கூர்தல் இவ்வுண்மை விளங்க ஏதுவாகும். மேலும், நல்ல சாம்பிராணிப் புகைப் போடப்படும் அறையில் கொசு வசிப்பதில்லை என்பதும் இதனை இனிது விளக்கும்.

"காலை எழுந்து தொழுவார் தங்கள் கவலைகளைவாய் கறைக் கண்டா" என்றும், "காலையிலும் மாலையிலும் கடவுளடி பணிந்து கசிந்த மனத்தவர் பயிலும் கலைய நல்லூர்" என்றும், சுந்தரர் அருள்கின்றார். "காலை எழுந்து கருத் தறிந்து ஓதிடின், ஞாலத் தலைவரை, நண்ணுவர் அன்றோ" என்று திருமூலர் அருளியிருக்கின்றார். இவ்வருள் மொழிகளெல்லாம் விடியற் காலை விழிப்பும் வழிபாடும் வியத்தகு நன்மை விளக்கும் என்பதை வலியுறுத்துகின்றன. இவ்வரிய கருத்துகளைச் சிந்திக்கச் செய்த அப்பர் பெருமானின் அருள் வாக்கை ஓதி உயர்வோமாக.

பெரும்புலர் காலை மூழ்கிப் பித்தற்குப் பத்தராகி
அரும்பொடு மலர்கள் கொண்டாங் கார்வத்தே
உள்ளேவைத்து
விரும்பிநல் விளக்குத்தூபம் விதியினால்
இடவல்லார்க்குக்
கரும்பினில் கட்டி போல்வார் கடவூர் வீரட்டனாரே.

—திருநாவுக்கரசர்.

# சிவம் பெருக்கும் திருவாமூர் திருவாமூர்

திரு. G. M. முத்துசாமி பிள்ளை, B.A., I..AS. (Retd.,)

திருநாவுக்கரசு நாயனுர் திருவவதாரம் செய்த ஊராகிய திருவாமூர், நடுநாட்டின் ஒரு பகுதியாகிய திருமுனைப்பாடி நாட்டில் ஞானத்தை விளக்கும் வகையில் தோன்றிய பலதலங்களில் ஒன்ருகும். இவ்வூர் மக்கள் குற்றமில்லாத அறங்களைப் புரிந்து வந்தனர்; அதனுல் அறம் பெருகிற்று ; அறம் பெருகப் பாவம் தேய்ந்தது; அவர்கள் நல்வாழ்வு பெற்றனர்; எங்கும் நல்வாழ்வுகாரணமாக, அவ்வூரில் வருந்துவோரோ, ஏங்குவாரோ எவரும் இல்லாதநிலை தோன்றியது. மேலும், திருநாவுக்கரசு நாயனுர் திருவவதாரம் செய்த தலமாக இவ்வூர் அமைந்தமையால், நாயனுர் செய்தருளிய திருத்தொண்டு வழியாக ஏழுலகங்களிலும் சைவ நெறி பாதுகாக்கப் பெற்றது. சைவ நெறி இவ்வாறு பாதுகாக்கப் பெற்றமையால், இவ்வூர் சிவசம்பந்தமாகிய அருளே திருவுருவாகி எக்காலத்திலும் நிலை பெற்று விளங்கும் தன்மை பெற்றது. இத்தகைய கருத்துக்களை யெல்லாம் சேக்கிழார் தாம் பாடியருளிய பெரிய புராணத்தில் குறிப்பிட்டுக் காட்டுகின்ருர். இவ்வகையில் அருமையான உண்மையை எடுத்துக்காட்டும் பாடல்,

''இவ்வகையதிரு நாட்டி
லெனைப் பலவூர்களும் என்றும்
மெய்வளங்க ளோங்கவரு
மேன்மையன வாங்கவற்றுள்
சைவ நெறி யேழுலகும்
பாலிக்கும் தன்மையினல்
தெய்வநெறிச் சிவம் பெருக்கும்
திருவாமூர் திருவாமூர்''

திருவாமூர் ஏழுலகங்களிலும் எவ்வாறு சைவ நெறியைப் பாலித்தது என்பதைக் காண்போம். உலகங்கள் ஏழுஎன்பது ஒரு முறை. நாம் வாழும் நிலவுலகத்தோடு மேலுலகத்தையும் கீழுலகத்தையும் சேர்த்து உலகங்கள் மூன்றென்பது மற்ருெருமுறை. திலகவதியாரும் திருநாவுக்கரசரும் சைவநெறியை இந்நிலவுலகினில் பாலித்தது யாவரும் அறிந்ததே. இம் மண்ணுலகினில் சிவத்தொண்டு புரிந்த நாயனுருக்கு விண்ணுலகு புதியதன்று. முற்பிறவியில் நாயனுர் முனிவராகச் சிவத்தொண்டு புரிந்தனர் என்பதை ''உன்னுடன் பிறந்தான் முன்னமே முனியாகி, எமையடையத் தவம் முயன்ருன்,'' ''பண்டு புரி நற்றவத்துப் பழுதினளவிறை வழுவும் தொண்டர்'' என்னும் சேக்கிழார் வாக்கும், ''நில்லாத நிணக்குரம்பைப் பிணக்கம் நீங்க நிறைதவத்தை அடியேற்கு நிறைவித்தென்றும், செல்லாத செந்நெறிக்கே செல்விப்பானை'' என்னும் நாவுக்கரசர் தம் திருவாக்கும் மெய்ப்பிக்கும். ஒரு சமயத்தில் இராவணன் தன்தேரைக் கயிலாய மீது செலுத்துமாறு தன் தேர்ப்பாகனுக்கு ஆணையிட்டான். ''கயிலாய மீது தேரைச் செலுத்துவது தவறு'' எனத்தேர்ப்பாகன் கூறினுன். இவ்வாறு கூறிய தேர்ப்பாகனைக்கடிந்தனன் இராவணன். தேரைத் தான் விரும்பியவாறே செலுத்தினன். கயிலையம்பதி தமது திருவிரலால் அத் தேரை அழுத்தினர். அழுத்தப்பட்ட இராவணன் பல காலம் வருந்தினுன். இரக்கத்தின் சின்னமாக விளங்கிய நம் முனிவர் பிரான் இராவணனை நல்வழிப் படுத்தினர். இராவணன் சிவபெருமானைத் துதித்துத் துன்பத்திலிருந்து விடுபட்டதன்றிப் பலவரங்களையும் பெற்றனன். இந்நிகழ்ச்சிகளையெல்லாம், நம் முனிவர் அடுத்ததான இப்பிறவியில், தாம் பெற்றுள்ள தெய்வ அருள் கொண்டு, தாம் கண்டவாறே நமக்கு எடுத்துரைக்கிருர்.

''கடுகியதேர் செலாது கயிலாய மீது
கருதேலுன் வீரம் ஒழி நீ
முடுகுவதன்று தன்ம மென நின்றுபாகன்
மொழிவானை நன்று முனியா
விடுவிடு வென்று சென்று விரைவுற்றரக்கன்
வரையுற் றெடுக்க முடிதோள்

நெடு நெடு இற்றுவிழ விரலுற்ற பாதம்
நினைவுற்றதென்றன் மனனே''

என்னும் இப்பாடல், நிகழ்ச்சிகளை யெல்லாம் நேரில்கண்ட ஒருவர் திருவாக் கன்றோ ?

மேலுலகத்தில் இராவணனை நல்வழிப் படுத்தியது மட்டுமன்றி, மேலுலகத்தில் வாழ்ந்த மற்றவர்களையும் கீழுலகத்தவர்களையும் நாயனுர் சிவ வழிபாட்டில் திளைக்கச் செய்துள்ளார். இத்தகைய திருத்தொண்டை அவர் புரிந்தது அவரது உலக வாழ்க்கை இறுதி நிலையில் திருப்புகலூரில் பேரன்பு பூண்டு பணி புரிந்து, நின்ற திருத்தாண்டகம், தனித் திருத்தாண்டகம், க்ஷேத்திரக்கோவை, குறைந்த நேரிசை, தனி நேரிசை, ஆருயிர்த் திரு விருத்தம், தச புராணம், பாவநாசப் பதிகம் முதலிய எண்ணுதற்கரிய திருப்பதிகங்கள் பலவற்றைப் பாடியருளினுர். அவரது நன்னிலைமையினை உலகறியக் காட்ட நினைத்தனர் சிவபெருமான். திருப்பணி புரிந்து வந்த நாயனுரது உழவாரப்படை நுழைந்த விடங்களிலெல்லாம் பொன்னும் நவமணியும் பொலிந்து தோன்றின. அவற்றை யெல்லாம் நாயனுர் உழவாரத்திலேந்தி வாவியில் எறிந்தனர். அவர் இவ்வாறு செய்ததில் பல உட் கருத்துக்கள் உள்ளன. பொன்னும் நவமணியும் பூமியின் கீழிருந்து தோன்றியவை. மக்கள் அடையத்தக்கவை அவை அல்ல. பின்னை என்ன? மெய்ப்பொருள் ஒன்றே தான் என்பது இதில் விளங்குகிறது. மேலும், அவை உலக மக்கள் கண்ணிற் புலப்படுமானுல் அவர்களுக்குத் தீமைவிளைவிக்கக்கூடும். ஆதலின் அவை வாவியில் எறியப்பட்டன. இவ்வுலகத்தையும் கீழுலகத்தையும் இணைக்கக் கூடியது நீர்க்கால்களாகும். நீர்வடிவ மெய்தியகங்கை பாதாள உலகினிற் பாய்ந்ததென்பதை நாமெல்லோருமே அறிவோம். பொன்னையும் நவமணிகளையும் நாயனுர் வாவியில் எறிந்தமையால் வாவியின் நீர்க்கால்கள் வழியாகக் கீழுலகத்தவர்கள் நாயனுரது கருத்தைத் தெரிந்து கொள்ள முடிந்தது. கீழுலகத்தவர்களைத் தட்டி எழுப்பிச் சிவநெறியைப் பின்பற்றி வாழுமாறு அவர்களைத் தெருட்ட உதவின பொன்னும் நவமணியும் எனவும் கொள்ளலாம்.

இவ்வாறு பொன்னேடும் மணியோடும் புல்லோடும் கல்லோடும் வேறுபாடில்லாத நிலையில் நின்ற நாயனுர் முன்பாகத் தேவ அரம்பையர்கள் விண்ணுலகத்தினின்றும் இறங்கி நாயனுரை அணுகினர்; தங்கள் அலங்காரத்தாலும், தங்கள் தேவ கானத்தாலும் நுடங்கிய ஆடல்களாலும் நாயனுரது சித்தத்தைச் சிதைக்க முயன்றனர். நாயனுரோ தமது சித்த நிலையில் சிறிதும் தளராமல்,

''உங்களால் ஒன்றும் செய்ய இயலாது—யான்
திருவாரூர் அம்மானுக்கு ஆட்பட்டேன்''

என்பதான கருத்துக்களைக் கொண்ட திருத்தாண்டகங்களைப் பாடினர். அப்பாடல்களில்,

பொய்ம்மாயப் பெருங் கடலில் புலம்பா நின்ற
புண்ணியங்காள் தீவினைகாள் திருவே நீங்கள்
இம்மாயப் பெருங்கடலை அரித்துத் தின்பீர்க்கு
இல்லையே கிடந்தது தான் யானேல் வானேர்

நம்மானை தலைமகனைத் தண்ணலாரூர்த்
தடங்கடலைத் தொடர்ந்தோரை யடங்கச்செய்யும்
எம்மான்றனடித் தொடர்வானுழி தர்கின்றேன்
இடரிலேன் கெடுவீர்காள் இடறேன் மின்னே''

என்னும் திருத்தாண்டகம் அவரது உறுதியை எடுத்துரைத்தது. அரம்பையர் அவரை இறைஞ்சிப் பின் அகன்றனர். இத்திருத்தாண்டகங்களில் நாயனுர், தாம் அதுசமயம் தங்கியிருந்த புகலூரில் எழுந்தருளிய பெருமானைக் குறிப்பிடாது திருவாரூர்ப் பெருமானைக் குறிப்பிட்டதில் ஓர் உண்மை உள்ளது. தேவ அரம்பையர்கள் தேவலோகத்திற்குத் தலைவனுன இந்திரன் ஏவலுக் குட்பட்டவர்கள். அவ்விந்திரனே திருவாரூர்த் தியாகேசப் பெருமானை வழிபட்டதன்றித் திருவாரூர்ப் பெருமானுடைய அடியார் களிடம் ஏவல் செய்யத் திருவாரூரில் காத்திருப்பவன். நிலைமை இவ்வாறிருக்க, திருவாரூர்ப் பெருமானுல் நேராக ஆட்கொள்ளப்பட்ட நாயனுர் முன்பாக இந்திரன் ஏவலுக் குட்பட்ட அரம்பைகள் முயற்சிகள் பலிக்கா என்பது உணரத்தக்கது. இவ்வகையில் தேவ அரம்பையர் வழியாகச் சிவம் விண்ணுலகத்திலும் பெருகிற்று. இத்தகைய கருத்துக்களுக்கெல்லாம் இடம் தருகிறது பெரிய புராண உரை ஆசிரியர் சிவக்கவி மணியவர்கள் தந்த குறிப்புகள்.

"சிவம் பெருக்கும் திருவாரூர் திருவாரூர்" என்ற தொடரில் பொதிந்துள்ள உண்மையினைக் காண்போம், இத்தொடரை முதலில் திரு ஆம் ஊர்=திருவாரூர் என்று பிரித்துக் கொள்ளவேண்டும். ஆம் என்பது ஆகும் என்று குறைந்தது. திருஆகும் ஊர் திருவாரூர் என்பதாகக் கொள்ள வேண்டும். திரு என்னும் சொல் ஐஸ்வர்யம், வீரியம், புகழ், ஞானம், வைராக்கியம் என்பன வற்றைக் குறிக்கும் என்பர் பரிமேலழகர். இங்கு, திரு என்பது முத்திச் செல்வத்தைக் குறிப்பதாகக் கொள்ளுதல் சிறப்புடைத்து. சாதாரண நிலையில் ஆகும் என்பது எதிர்காலத்தைக் குறிக்கும் உம் என்னும் விகுதியைக் கொண்டுள்ளது எனக் கொள்வர். இவ்வாறு கொள்ளின் திருவாரூர் எதிர் காலத்தில் மட்டும் சிவத்தைப் பெருக்கும் என்னும் பொருள் பெறவேண்டியிருக்கும். திருவாரூர் சென்ற காலம், நிகழ்காலம், வருங் காலம் என்னும் முக்காலங்களிலும் சிவம் பெருக்கும் தன்மை யுடையது எனக் கொள்வதற்கு இடமிருக்கிறது. முக்காலத்திற்கும் ஒத்த பொருளைக் குறிக்க நிகழ்கால முறையை மேற்கொள்ள வேண்டும் என்பதை, "முக்காலத்தினும் மொத்தியல் பொருளைச் செப்புவர் நிகழுங் காலத்தானே" என்னும் இலக்கணச் சூத்திரம் வகுத்துக்காட்டுகிறது. எனினும், "இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்" என்னும் விதிபற்றி, தீ சுடும் என்பதில் தீ முக்காலத்திலும் சுடும் தன்மையுடையது என்பது போல, முக்காலங்களிலும் உண்மையாம் பொருளைக் கூற இங்கு ஆகும் என்னும் சொல் கையாளப் பெற்றிருக்கிறது. இவ்வகையில் காணுமிடத்து, சென்ற காலத்திலும் திருவாரூர் சிவத்தைப் பெருக்கிற்று. திருநாவுக்கரசு நாயனருக்கு அமைக்கப்பெற்ற திருக்கோயிலுக்கு இன்றைய நாளில் (14-7-63) தேதியில் குடமுழுக்கு விழா நடை பெற்றது. இதே கோயில் உட் புறத்தில் நாவுக்கரசர் தந்தையார் புகழனுருக்கும் தாயார் மாதினியாருக்கும், தமக்கையார் திலகவதியாருக்கும் சுற்றுக் கோயில்கள் அமைக்கப் பெற்றன. பல மெய்யடியார்கள், தவயோகிகள் இவ்விழாவில் கலந்து கொண்டது குறிப்பிடத்தக்கது. இதே நன்னுளில் இவ்வூர்ப் பசுபதீஸ்வரர் திரிபுரசுந்தரி ஆலயத்திற்கும் குடமுழுக்கு விழா நடை பெற்றது. எங்கும் சிவ மணம் கமழ்ந்தது.

இனி எதிர்காலத்தில் திருவாரூர் சிவம் பெருக்கும் என்பதில் ஐயமில்லை. பல திட்டங்களை வகுத்துத் திருவாரூரைத் தெய்வீக ஊராக அன்பர்கள் அமைப்பார்கள் என்பது திண்ணம். இந் நன்னுளில் திருநாவுக் கரசரை மறக்க இயலுமா?

"கதிருலாவியசபை தொறும் காலொன்று தூக்கி
அதிரவீசி நின்றுடிய தாண்டவத்தவர்க்கே
மதுரமாத்திருத் தாண்டகச் செந்தமிழ் வகுத்த
சதுரன்நாவினுக்கரையன்றன் சரணமே சரணம்"

—சிவரகசியம்.

---

ஒருகவி மீட்பான் காலற் கோலையொன் றெழுதி அச்சம்
பெருகவும் தோற்றி யுய்த்த பெருஞ்சிலை இராமன் நாணத்
தருகஅப் பூதி மைந்தன் றனை எனக் கால காலற்கு
அருகலில் பதிகம் பாடி அருளினேற் கன்பு செய்வாம்

—திருக்குடந்தைப் புராணம்.

அப்பர் துதிப்பாடல்கள் :

கந்தைமிகை யாங்கருத்தும் கையுழவா
ரப்படையும் கவின்வெண் ணீறும்
சிந்தைஇடை யறுஅன்பும் சிவஞானம்
பழுத்தொழுகும் செய்ய வாயும்
தந்தையொடு தாயிலான் திருவடி
தைவரு மனமும் தாமரைக் கண்ணும்
நிந்தையறு முழுத்துறவும் உடையபிரான்
அடிபணிந்து நீடு வாழ்வாம்

—உறையூர்ப் புராணம்.



எழுபது வெள்ளம் சேனை
எடுத்திடு பலகற் கொண்டு
செழுமணிப் பரவை ஒன்றே
கடந்தவெஞ் சிலையோர் நாண
வழுஅமண் இடுதல் ஒன்றால்
மறிகடல் பிறவி வேலை
முழுவதும் கடந்த எங்கள்
முதல்வனுக் கன்பு செய்வாம் !

—திருநாகைக் காரோணப் புராணம்.



பரசிவம்என் றடியவரைப் பகருமுறை
களிதூங்கப் பலரும் போற்றப்
பிரசநறுங் கடுக்கைமுடி அப் பரன்போல்
விடநுகர்ந்து, பெயராச் சீற்றப்
புரசைநெடுங் களிற்றினை வென்று, எழுவிடைவெண்
முழுவிடைசூல் பொலியக் கொண்ட
அரசுதிருப் பாதமலர் பரசுபுமெய்ப்
போதமுறீஇ யமைந்து வாழ்வாம்

— சூத சங்கிதை.

# திருவாமூர்

ஸ்ரீதிருநாவுக்கரசு நாயனுர் திருக்கோயில் மகா கும்பாபிஷேகம், மண்டலாபிஷேகம் முதலியவைகளுக்கு நன்கொடை வழங்கிய அன்பர்களின் விபரம்.

## நன்கொடைப் பட்டியல்.

| | | | |
|---|---|---|---|
| 1. | தருமை ஆதீனம் 25-வது கயிலைக் குருமகா சந்நிதானம் ஆசியுடன் அருளியது ரூ. | 1001 | 00 |
| 2. | திரு. K. இராஜாராம் ரெட்டியார், திருவாமூர் | 101 | 00 |
| 3. | ஸ்ரீமத் வித்வான் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள், தருமை ஆதீன சமயப் பிரசார நிலையம், சென்னை | 101 | 00 |
| 4. | திரு. T. R. அகோரம் அய்யர், ஆக்கூர் | 101 | 00 |
| 5. | திரு. R. சுவாமிநாத பிள்ளை, ஆக்கூர் | 101 | 00 |
| 6. | திரு. S. S. அருணுசலம் பிள்ளை, திருநெல்வேலி | 1000 | 00 |
| 7. | திரு. கி. இராமசாமி பிள்ளை, கொட்டார குறிச்சி, மதுரை | 10 | 00 |
| 8. | திரு. இராஜம் செட்டியார், மன்னுர்குடி | 100 | 00 |
| 9. | திரு. K. கனகசபை பிள்ளை, டிரஸ்டி, பிச்சக்கட்டளை எஸ்டேட், திருக்கடவூர் | 1001 | 00 |
| 10. | திரு. S. N. ஸ்ரீநிவாச ரெட்டியார், வைத்தீஸ்வரன் கோயில் | 101 | 00 |
| 11. | ஸ்ரீமத் இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள், வேளூர் தேவஸ்தானம் கட்டளை விசாரணை, தருமை ஆதீனம் | 51 | 00 |
| 12. | திரு. அ. மருதமுத்து பிள்ளை, கள்ளபெரம்பூர், தஞ்சாவூர் | 5 | 00 |
| 13. | ஸ்ரீசுவாமிநாத ஸ்வாமி தேவஸ்தானம், சுவாமிமலை | 500 | 00 |
| 14. | திரு. அப்பர் சுவாமி ரெட்டியார், கொண்டா ரெட்டிபாளையம் | 25 | 00 |
| 15. | திரு. இராமலிங்க ரெட்டியார், சித்தாநாங்கூர் | 5 | 00 |
| 16. | திரு. T. வீராசாமி, பு. மாம்பாக்கம் | 2 | 00 |
| 17. | திரு. D. கேசவ ரெட்டி, பு. மாம்பாக்கம் | 5 | 00 |
| 18. | திரு. இராஜாராம் ரெட்டியார், பு. மாம்பாக்கம் | 10 | 00 |
| 19. | ஸ்ரீநவநீதஸ்வாமி தேவஸ்தானம், சிக்கல் | 1000 | 00 |
| 20. | ஸ்ரீ அக்னீஸ்வர ஸ்வாமி தேவஸ்தானம், திருப்புகலூர் | 1000 | 00 |
| 21. | ஸ்ரீ ஸ்வேதாரண்ய சுவாமி தேவஸ்தானம், திருவெண்காடு | 1000 | 00 |
| 22. | திரு. வெங்கடசாமி ரெட்டியார், திருக்கண்டீஸ்வரம் | 50 | 00 |
| 23. | திரு. வெங்கட்ராம ரெட்டியார், திருக்கண்டீஸ்வரம் | 25 | 00 |
| 24. | ஸ்ரீலஸ்ரீ மாணிக்கவாசக ஞானதேசிக சுவாமிகள், சிவராஜயோக மடம் கா. மேலையூர் | 51 | 00 |
| 25. | திரு. கோவிந்தசாமி பிள்ளை, வைத்தீஸ்வரன் கோயில் | 62 | 00 |
| 26. | திரு. R. வைத்தியநாத முதலியார், சீர்காழி | 101 | 00 |
| 27. | தருமை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ 25வது கயிலைக் குருமகா சன்னிதானம் அவர்களது அருளாட்சியில் இருந்துவரும் ஆலயங்களில் இருந்து நன்கொடை | | |
| (1) | ஸ்ரீ சட்டநாதஸ்வாமி தேவஸ்தானம், சீர்காழி | 1500 | 00 |
| (2) | ஸ்ரீ தியாகராஜ சுவாமி தேவஸ்தானம், திருக்குவளை | 1500 | 00 |
| (3) | இராஜன் கட்டளை, திருவாரூர் | 1500 | 00 |
| (4) | ஸ்ரீ அமிர்தகடேஸ்வரர் தேவஸ்தானம், திருக்கடவூர் | 500 | 00 |
| (5) | ஸ்ரீ அருணஜடேஸ்வரர் தேவஸ்தானம், திருபனந்தாள் | 1000 | 00 |
| (6) | ஸ்ரீ கம்பகரேஸ்வர சுவாமி தேவஸ்தானம், திருபுவனம் | 500 | 00 |
| (7) | ஸ்ரீ வேளூர் தேவஸ்தானம், வைத்தீஸ்வரன் கோயில் | 1500 | 00 |
| (8) | ஸ்ரீ பஞ்சநத ஸ்வாமி தேவஸ்தானம், திருவையாறு | 500 | 00 |
| (9) | ஸ்ரீ உக்தவேதீஸ்வர ஸ்வாமி தேவஸ்தானம், குத்தாலம் | 500 | 00 |

| | | | |
|---|---|---|---|
| 28. | திரு. M. சுப்பிரமணியன் செட்டியார், பூவாளூர் ரூ. | 51 | 00 |
| 29. | திரு. V. இராமநாத அய்யர், மாயூரம் | 16 | 00 |
| 30. | திரு. T. S. பழனியப்ப பிள்ளை, ஆந்திரா ஸ்டேட் | 10 | 00 |
| 31. | திரு. N. தியாகராஜ முதலியார், மேல் பட்டாம்பாக்கம் | 10 | 00 |
| 32. | திரு. T. S. பக்கிரிசாமி பிள்ளை, திருவாரூர் | 51 | 00 |
| 33. | திரு O. P. இராமசாமி ரெட்டியார், வடலூர் | 100 | 00 |
| 34. | ஸ்ரீ திருக்குற்றால நாதஸ்வாமி தேவஸ்தானம், திருக்குற்றாலம் | 501 | 00 |
| 35. | ஸ்ரீ தண்டாயுதபாணி ஸ்வாமி தேவஸ்தானம், பழநி | 2000 | 00 |
| 36. | திரு. K. கமலக்கண்ணன், M.L.C. சென்னை | 200 | 00 |
| 37. | திரு. சென்னியப்ப முதலியார், பாண்டிச்சேரி | 200 | 00 |
| 38. | திரு. S. S. S. பாலகிருஷ்ண செட்டியார், பண்ருட்டி | 10 | 00 |
| 39. | திரு. C. N. நாகப்பக் கவுண்டர், கோயம்புத்தூர் | 25 | 00 |
| 40. | திரு. G. D. சிவஷண்முகம், சென்னை | 25 | 00 |
| 41. | திரு. C. N. நாகப்ப கவுண்டர், கோயம்புத்தூர் | 100 | 00 |
| 42. | ஸ்ரீமத் விஸ்வலிங்கத் தம்பிரான், திருவையாறு | 54 | 00 |
| 43. | திரு. R. S. நெல்லையப்பர், சென்னை | 5 | 00 |
| 44. | திரு. வ. இராமசாமி முதலியார், புதுப்பாளையம் | 5 | 00 |
| 45. | ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் ஆலயத் திருப்பணிக் கமிட்டி, மதுரை | 5000 | 00 |
| 46. | திரு. Dr. M. நடேச முதலியார், L.M.P. பண்ருட்டி | 10 | 00 |
| 47. | திரு விஸ்வநாத முதலியார், ஞான நிலையம், மாயூரம் | 100 | 00 |
| 48. | திரு. தங்கப்ப செட்டியார், கொரநாடு | 5 | 00 |
| 49. | ஸ்ரீ சங்கரநாராயண சுவாமி தேவஸ்தானம், சங்கரநயினார் கோயில் | 501 | 00 |
| 50. | திரு. T. M. தாண்டவராய செட்டியார், பண்ருட்டி | 25 | 00 |
| 51. | திரு. C. பொன்னுசாமி, குளித்தலை | 5 | 00 |
| 52. | திரு. T. நாகராஜன், அனந்தப்பூர் | 5 | 00 |
| 53. | ,, R. தெய்வநாயக ரெட்டியார், திருவாரூர் | 250 | 00 |
| 54. | தமிழாசிரியர், இருகூர் கழக உயர்நிலைப்பள்ளி, கோவை | 12 | 99 |
| 55. | திரு. R. இராமசாமி செட்டியார். மேல் பட்டாம்பாக்கம் | 25 | 00 |
| 56. | திரு. திருநாவுக்கரசு செட்டியார் | 5 | 00 |
| 57. | ஸ்ரீ வேதபுரீஸ்வர சுவாமி தேவஸ்தானம், திருவத்திபுரம் | 2 | 00 |
| 58. | திரு. A. இரத்தினசபாபதி செட்டியார், விருத்தாசலம் | 101 | 00 |
| 59. | ,, S. சச்சிதானந்தம் பிள்ளை, சென்னை | 20 | 00 |
| 60. | ,, தா. கோ. பார்த்தசாரதி, அரியலூர் | 10 | 00 |
| 61. | ,, வெங்கடசுப்பா ரெட்டியார், மடுக்கரை | 5 | 00 |
| 62. | ,, செல்லப்ப செட்டியார், தேவக்கோட்டை | 3 | 00 |
| 63. | ஸ்ரீ நெல்லையப்பர் சுவாமி தேவஸ்தானம், திருநெல்வேலி | 501 | 00 |
| 64. | ஸ்ரீ சிவகெங்கை தேவஸ்தானம், சிவகெங்கை | 501 | 00 |
| 65. | ஸ்ரீ கைச்சினசுவாமி தேவஸ்தானம், கைச்சினம் | 500 | 00 |
| 66. | ஈரோடு அருள் நெறித் திருக்கூட்டம் | 251 | 00 |
| 67. | ஸ்ரீ வடபழனி ஆண்டவர் தேவஸ்தானம், வடபழனி | 1001 | 00 |
| 68. | ஸ்ரீ இராமநாதபுரம் தேவஸ்தானம், இராமநாதபுரம் | 501 | 00 |
| 69. | திரு L. A. பரமன் செட்டியார், திருச்சி | 51 | 00 |
| 70. | திரு. M. S. இரத்தினசபாபதி செட்டியார், கும்பகோணம் | 20 | 00 |
| 71. | திரு. P. H. சுப்பிரமணியஞ் செட்டியார், கும்பகோணம் | 10 | 00 |
| 72. | திரு S. நடனமூர்த்தி பிள்ளை, கும்பகோணம் | 1 | 00 |
| 73. | சென்னை, மணலி லக்ஷ்மணசுவாமி முதலியார் ஸ்பெஸிபிக் எண்டோமெண்ட்ஸ் | 2000 | 00 |
| 74. | ஸ்ரீ அக்ஷயலிங்க சுவாமி தேவஸ்தானம், கீழ் வேளூர் | 500 | 00 |

